திருத்தணிகை - கந்தப்ப அய்யர்

பாடிய

# திருத்தணிகைச் சந்நிதிமுறை

[ சந்நிதிமுறைப் பிரபந்தங்கள் 12, தணிகை பற்றிய வேறு சில சிறு பிரபந்தங்கள், படங்களுடன் கூடிய தலவரலாறு, கல்வெட்டு, செப்பேடுகள் முதலியன அடங்கியுள்ளன ]



பதிப்பாசிரியர் :
மு. சண்முகம் பிள்ளை
தமிழ் விரிவுரையாளர்
சென்னைப் பல்கலைக் கழகம்

தயாரிப்பு : வெளியீடு
தி. கி. நாராயணசாமி
2, சீதாராம நகர், கடலூர்-600 001

22-9-1980

விலை ரு

உ

வேலும் மயிலும் துணை

திருத்தணிகைக் கந்தப்ப அய்யர்

பாடிய

# திருத்தணிகைச் சந்நிதிமுறை

[சந்நிதிமுறைப் பிரபந்தங்கள் 12, தணிகை பற்றிய வேறு சில சிறுபிரபந்தங்கள், படங்களுடன் கூடிய தலவரலாறு, கல்வெட்டு, செப்பேடுகள் முதலியன அடங்கியுள்ளன.]

பதிப்பாசிரியர்

மு. சண்முகம் பிள்ளை

தமிழ் விரிவுரையாளர்

திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி

சென்னைப் பல்கலைக்கழகம்

தயாரிப்பு : வெளியீடு

தி. கி. நாராயணசாமி

2, சீதாராம நகர், கடலூர் - 607 001

1980

முதற்பதிப்பு - 1980



இந் நூல் கிடைக்கும் இடங்கள் :

1. தி. கி. நாராயணசாமி
   22, ஆண்டர்சன் சாலை
   (சாஸ்திரி பவன் எதிரில்)
   சென்னை-600 006

2. பாரி நிலையம்
   பிரகாசம் சாலை
   சென்னை-600 001

பார்க்கர் அச்சகம்

சென்னை-600 001

# முகவுரை

தமிழிலக்கிய உலகில் நிலவும் நூல் வகைகளுள் ஒன்று சந்நிதி முறை. 'சந்நிதி' என்பது கடவுளின் திருமுன்னைக் குறிக்கும். குரு, பெரியோர் முதலானவர்களின் முன்னிலையையும் சந்நிதி என்பர். தெய்வமும், தெய்வத் தன்மை எய்தினோரும், தெய்வமாக மதிக்கத் தக்கவர்களும் வணக்கத்திற்கு உரியவர்களாவர். வணக்கத்திற்குரியவர்களின் முன்னிலையே சந்நிதி.

முறை அல்லது முறையிடு, தம் குறைகளை எடுத்துச் சொல்லியும் நீதி வேண்டியும் அமைவது. முதன்முதலில் முறையீடு என்பது அரசனிடம் போய் வேண்டும் வேண்டுதலையே சுட்டியிருக்க வேண்டும்.

> ' முறைவேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்
> வேண்டுவ வேண்டுவ வேண்டினர்க்கு அருளி '
>
> — பெரும்பாண் 443 - 444

என இளந்திரையனிடம் முறையிட்டுப் பேறுபெற்றோரைக் குறிக்கும் பகுதி இங்குக் கவனிக்கத் தக்கது. இவ்வடிகளுக்கு,

> ' முறைப்பாட்டை விரும்புபவர்க்கும் காரியங்களை விரும்புபவர்க்கும்
> அவரவர் விரும்புவனவற்றை விரும்வுவனவற்றை அருளிச் செய்து '

என நச்சினார்க்கினியர் உரை வகுக்கிறார். திருக்குறள் உரையில் (386), 'முறை வேண்டுநர் - வலியரான் நலிவு எய்தினோர்' என்றும், 'குறை வேண்டுநர் - வறுமையுற்று இரந்தார்' என்றும் விளக்கம் தரப்படுகிறது. எவ்வாறு நோக்கினும் முறையிடுவோர் தமக்குற்ற இடையூறுகள் நீங்கி இன்பப்பேற்றை விரும்பியே முறையிடுகின்றனர் என்பது தெரியவரும்.

சந்நிதியில் சென்று இறைவனைப் போற்றும் உரைகளும், ஒரு பயன் வேண்டி உரைக்கும் உரைகளும் முறை எனப்படும்; முறையீடு என்பதும் அதுவே. பொதுவாகச் சிவ தோத்திரமாக அமைந்த தேவாரம், திருவாசகம், திரு இசைப்பா முதலியன எல்லாம் திருமுறை என்று போற்றப்படுவன. சிவபெருமானைப் போற்றியுரைக்கும் பாடல்களாயும், அப் பெருமானிடத்து அன்பு செலுத்துவோர் தம் தாழ்நிலையையும் குறையையும் எடுத்துரைத்து அவை நீங்கி மேலான வாழ்வு பெறவேண்டிப் பாடும் விண்ணப்பப் பாடல் களாயும் இவை காணப்படுகின்றன. பாக்கள் மட்டுமல்ல; பதிகம், அந்தாதி, மாலை, உலா, பிள்ளைத்தமிழ், கலம்பகம் போன்ற பிரபந்தங்களும் திருமுறை களாகக் கணக்கிடப்பட்டுள்ளன. திருத்தொண்டர் (பெரிய) புராணமாகிய

பக்திப் பெருங்காவியமும் திருமுறையின் அங்கமாகத் திகழ்கிறது. இவ்வாறாகத் தெய்வத் தொடர்பான பாடல்களாயினும் நூல்களாயினும் அவையெல்லாம் திருமுறை என்று போற்றுதற்கு உரியனவாம்.

பன்னிரு திருமுறைத் தொகுப்பு அமைந்தபின், பின்வந்த பிற பத்தி நூல்களைத் திருமுறை என வழங்குதல் ஏற்புடையது ஆகாது. அவற்றை முறை எனலே தகும். அடைமொழி எதுவுமின்றி உலகியல் முறையீடு போலத் தனித்துத் தெய்வப் பனுவல்களை முறை எனக் கூறுதலும் பொருத்தம் ஆகாது. எனவே 'சந்நிதி முறை' என்னும் புதுப்பெயர் எழுவதாயிற்று.

சந்நிதி முறை என்னும் பெயர் முதன்முதலாகப் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகளின் தெய்வப் பனுவல்களுக்குச் சூட்டப்பட்டுள்ளது. இப் பெயரைச் சூட்டினார் சுவாமிகள் அல்லர். அவருடைய நூல்களைப் பதிப்பித்தவர்களே இப் பெயரைச் சூட்டி யிருக்கிறார்கள். ஆகவே சந்நிதி முறை என்பது அந்தாதி, கலம்பகம், உலா, பிள்ளைத்தமிழ் முதலியன போலத் தனித்தன்மை படைத்த ஓர் இலக்கிய வகை அன்று. தெய்வம் பற்றிய பல பிரபந்தங்களின் தொகுப்பே சந்நிதி முறை. திரு ஆலவாயுடையார் திருமுகப்பாசுரம் முதலாக 40 பிரபந் தங்களின் தொகுப்பாகிய 11ஆம் திருமுறையைப் 'பிரபந்த மாலை' என வழங்குவது போல, சந்நிதி முறையும் ஒரு பிரபந்தமாலையே.

தவத்திரு சிதம்பர சுவாமிகள் திருப்போரூர் முருகனுக்குத் திருக்கோயில் எடுத்துப் போற்றியவர். கல்லால் பெருங்கோயில் அமைத்த அவர், சொல்லாலும் பல தோத்திர மாலைகளை அப் பெருமானுக்குச் சூட்டி வழிபட்டார். சுவாமிகள் பாடியவற்றுள் முருகப்பெருமானைப் போற்றும் பனுவல்களுக்கே சந்நிதி முறை என்னும் பெயரை முன்னோர் கொண்டுள்ளனர். சுவாமிகள் பாடிய மீனாட்சியம்மை கலிவெண்பா, வேதகிரீசர் பதிகம், குமாரதேவர் நெஞ்சுவிடுதூது, குமார தேவர் பதிகம், பஞ்சாதிகார விளக்கம் என்னும் பிற பனுவல்களைச் சந்நிதி முறையில் உட்படுத்தாமையும் சிந்திக்கத் தக்கது. சாமி* என்னும் தனிப்பெயர் பெற்ற திருமுருகன் பெரும்புகழ் பாடும் பனுவல்களுக்கே சந்நிதி முறை என்னும் பெயரைத் தந்தனர். எச்சரிக்கை, கட்டியம் என்பவை சுவாமி சந்நிதியிற் கூறப்படுபவை. இவ் வகைப் பிரபந்தங்களை இத் தொகுப்புக் கொண்டுள்ளமையினாலும் சந்நிதி முறை என்னும் பெயரைத் தேர்ந்து எடுத்திருக்கலாம்.

திருப்போரூர்ச் சந்நிதி முறையில் இடம்பெற்ற பிரபந்த வகைகளை இனி நோக்குவோம். பிள்ளைத்தமிழ், அலங்காரம், மாலை, தாலாட்டு, பள்ளி யெழுச்சி, கட்டியம், எச்சரிக்கை, தூது (வண்டுவிடு தூது), ஊசல், பத்து

* 'கார்த்தி கேயன் கடம்பன் சுவாமி' - திவாகரம்

'கடம்பன் சாமி கார்த்தி கேயன் - பிங்கலம்

(குயிற் பத்து, கிளிப் பத்து, அடைக்கலப் பத்து) என்பன இடம் பெற்றுள்ளன. மற்றும் திருவடிப்பற்று என்பதில் தாழிசை, விருத்தங்களும் சிற்சுகம் என்பதில் கலித்துறை, விருத்தம், வெண்பா, கட்டளைக் கலித்துறைப் பாவகைகளும் உள. இப் பகுதியில் 'அட்டகம்' என்னும் பிரபந்தமும் உள்ளது.

வரலாற்று முறையில் திருப்போரூர்ச் சந்நிதி முறைக்கு அடுத்துச் சொல்லத் தக்கது திருத்தணிகைச் சந்நிதி முறை. இத் தொகுப்பில் 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கந்தப்ப அய்யர் செய்த திருத்தணிகை முருகனைப் போற்றும் பனுவல்கள் பல இடம் பெற்றுள்ளன. இவற்றைத் தொகுத்து வெளியிட்டோரும் அதற்குத் 'திருத்தணிகைச் சந்நிதி முறை' என்று பெயர் சூட்டியுள்ளனர். திருப்போரூர்ச் சந்நிதி முறையில் பிள்ளைத்தமிழை முதலில் வைத்துத் தொடங்கியிருப்பது போலவே இச் சந்நிதி முறையிலும் பிள்ளைத்தமிழை முதலில் அமைத்துள்ளனர். இத் திருத்தணிகைச் சந்நிதி முறையின் முதற்பதிப்பு 1880-ல் வெளிவந்தது.

இப் பதிப்பிற்கு முன் 1867-ல் கந்தப்ப அய்யர் பாடிய திருத்தணிகைச் சிலேடை வெண்பாமாலை சி. செங்கல்வராய முதலியார் என்பவரால் பதிப்பிக்கப்பட்டு வெளிவந்துள்ளது. இப் புத்தகத்தில் கந்தப்ப அய்யர் செய்த புத்தகங்கள் என்று தரப்பட்டுள்ள விளம்பரப் பட்டியலில் கந்தப்ப அய்யரின் நூற்பெயர்கள் தனித்தனியாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. 'இந் நூல்களை ஐயர் குமாரராகிய தி. விசாகப்பெருமாளையரைக் கொண்டு பரிசோதிப்பித்து அச்சிற் பதிப்பிக்கின்றனன்' என்று குறிப்பிட்டுள்ளமையால், அது விசாகப் பெருமாளையர் வாழ்ந்திருந்த காலம் என்பதும் தெரியவரும். கந்தப்ப அய்யர் நூற்பெயர்களுள் தொடக்கத்தில் திருத்தணிகை உலாவும், அடுத்து இரண்டாவதாகத் திருத்தணிகைச் சந்நிதி முறை என்ற பெயரும் காணப்படுகின்றன. சந்நிதி முறையில் சேர்ந்த நூல்கள் எவையெவை என்பது தெளிவாகக் குறிக்கப்படவில்லை. சந்நிதி முறை என்னும் பெயரைக் கந்தப்ப அய்யரே ஏட்டுப்பிரதியில் குறிப்பிட்டிருக்கலாம் என்று கருத இடமுண்டு. முதற் பதிப்பை வெளியிட்ட இரத்தின சபாபதி முதலியார், தோத்திரப் பிரபந்தங்களையெல்லாம் திரட்டி வெளியிட்டுள்ளார். சிலேடை வெண்பா மாலை முதலிய சில நூல்கள் முன்பே அச்சானமையினால் சந்நிதி முறையில் சேர்க்காது விட்டார் போலும். 1880 பதிப்பில் திருத்தணிகையுலா பின் இணைப்பாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதனை அவர் திருத்தணிகைச் சந்நிதி முறை என்று குறிப்பிடவில்லை. பிற நூல்களைக் குறிப்பிடும்பொழுது, 'திருத்தணிகைச் சந்நிதி முறையில் ஐங்கரமாலை' என்றாற்போலத் தலைப்புத் தந்துள்ளார். விளம்பரத்திலும் சந்நிதி முறைக்கு முன்பாக உலா நூல் தனிப்படக் குறிக்கப்பட்டிருத்தலும் கருதத் தக்கது. 1904-ல் வெளிவந்த இரண்டாம் பதிப்பு நூலில் பதிப்பாசிரியராகிய சிறுமணவூர் முனிசாமி முதலியார் உலாவையும் சந்நிதி முறை என்று குறிப்பிட்டுள்ளார்.

திருத்தணிகைச் சந்நிதி முறையில் உள்ள பிரபந்தங்கள் 12 பிள்ளைத் தமிழ்-1, மாலை-2, (ஐங்கர மாலை, தயாநிதி மாலை), சதகம்-1 (வேலாயுத சதகம்), அந்தாதி-1, கலம்பகம்-1, பத்து 5 (மயில், சேவல், வேல், சீர்பாதம், தணிகைமலை) உலா-1 ஆகியவையாம். திருப்போரூர்ச் சந்நிதி முறையுடன் ஒப்பிட்டால் பிள்ளைத்தமிழ் ஒன்றே தணிகைச் சந்நிதி முறையிலும் உள்ளமை காணலாம். ஏனைய பிரபந்தங்கள் முந்திய நூலில் இடம்பெறாத வேறுவகை இயல்பின. எனினும் முருகன் தோத்திரத் தொகை என்ற வகையில் சந்நிதி முறை என்பது கந்தப்ப அய்யர் நூல் தொகுப்பிற்கும் பொருந்துவது ஆகும்.

மேலே சுட்டிய இவ் இரு சந்நிதி முறைகளும் மிகுந்த சிறப்பு வாய்ந்தவை. முருக பக்தர்கள் பெரிதும் போற்றிப் பாராயணம் செய்பவை. இவற்றைப் போலவே இந்த 20ஆம் நூற்றாண்டிலும் முருகன் தோத்திரமாக இரு சந்நிதி முறைகள் வந்துள்ளன. (1) பர்மா நாட்டிலே இரங்கோன் நகரையடுத்து நகரத்தார் போற்றிவரும் கம்பை நகரில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமான்மீது காஞ்சிபுரம் சோணாசல பாரதியார் பாடியது கம்பைச் சந்நிதி முறை (1903). இச் சந்நிதி முறையும் பிள்ளைத்தமிழ் தொடக்கமாக நூல்களை முறைப்படுத்தித் தருகிறது. இப் பிள்ளைத்தமிழ் தவிர அலங்காரம், வெண்பா மாலை, தாலாட்டு என மூன்று நூல்களும் இதில் உள. இவை திருப்போரூர்ச் சந்நிதி முறையிலும் காணப்படும் பிரபந்தங்களே.

(2) முருகைய பங்கஜாட்சி அம்மையார் 'திருச்செந்தில் முருகன் சந்நிதி முறை' என்பதனை ஆக்கி அச்சிட்டு வெளியிட்டுள்ளார் (1963). இது அமைப்பிலும் போக்கிலும் முந்திய மூன்று சந்நிதி முறைகளுக்கும் முற்றிலும் வேறுபட்டுக் காணப்படுகிறது. இதில் உள்ள பாடல்கள் பதிகம், பத்து, தாண்டகம், ஆனந்தக் களிப்பு, சந்தப் பாக்கள், கீர்த்தனைகள், கண்ணிகள் அமைப்புடையவை. தாலாட்டு ஒன்றே முந்திய நூல்களோடு ஒப்புச் சொல்லத் தக்கது. ஆனால், அதுவும் அமைப்பு முறையில் வேறுபாடுடையது. மொத்தத்தில் 177 தலைப்புகளில் அமைந்த ஒரு துதிக் கோவையே அம்மையார் வழங்கியுள்ள சந்நிதி முறை.

(3) முருகப் பெருமான் தோத்திர நூல்களுக்கு வழங்கிவந்த 'சந்நிதி முறை' என்னும் பெயர் வழக்கினைப் பின்னால் பிற தெய்வப் பாடல்களுக்கும் வழங்கலாயினர். அரியக்குடி-நமச்சிவாய நாவலர் பாடிய 'கார் வண்ண மாலை' முதலிய திருமால் தோத்திரப் பதிகக் கோவை நூல் முதலில் வைக்கப் பெற்ற பிரபந்தமாகிய 'கார்வண்ண மாலை' என்னும் பெயரால் வழங்கப்படுவதாகும். இதனைத் 'திரு அரங்கச் சந்நிதி முறை' என்னும் பெயரில் அச்சிட்டு வெளியிட்டுள்ளனர் (1928).

(4) இராமலிங்க அடிகளின் தலைமாணாக்கர் தொழுவூர் வேலாயுத முதலியார். இவர் இராமலிங்க அடிகள் மீது பாடிய சற்குரு துதிகள்,

திருப்பள்ளியெழுச்சி முதலியவற்றைக் கொண்ட தோத்திரத் தொகுப்பிற்குச் சந்நிதி முறை என்று பெயரிட்டுள்ளார். 'திரு அருட் பிரகாசனுர் சந்நிதி முறைப் பிரபந்தங்கள்' என்னும் நூல் தொழுவூர் வேலாயுத முதலியாரின் குமாரர்களால் அச்சிடப்பட்டுள்ளது (1912).

(5) திரு. பாரத்வாஜி முகவைக் கண்ண முருகனுர் தம் குருதேவராகிய இரமணர் பேரில் பாடிய தோத்திரக் கோவையை 'ஸ்ரீ ரமண சந்நிதி முறை' என்று வெளியிட்டுள்ளார் (1933).

(6) சந்நிதி முறை என்னும் பெயர் கொண்ட தோத்திரத் தொகுப்புகள் பல அண்மைக் காலத்தில் வந்துள்ளன. அவற்றுள் (1) பலர் பாடிய பாடல் தொகுப்பாகிய ஸ்ரீ வைஷ்ணவி சந்நிதி முறை (1958), (2) சுந்தரலோகநாதர் பாடிய வீரபத்திரர் சந்நிதி முறை (1960), (3) அரங்க சீநிவாசன் பாடிய பொன்மலை பொன்னேஸ்வரி சந்நிதி முறை (1965) (4) அருட்கவி சேதுராமன் பாடிய ஜகத்குரு சந்நிதி முறை (1966) என்பவை குறிப்பிடத்தக்கன.

மேலே சுட்டியவாறு தோத்திரத் திரட்டுக்குச் சந்நிதி முறை என்னும் பெயரைப் பின்னேயோர் வழங்கிய போதிலும், 'சந்நிதி முறை' என்பது முருகப் பெருமான் நூல்களுக்கே முதன்மையும் சிறப்பும் உடைய பெயராகும் என்பது நன்கு விளங்கும். ஆகவே சந்நிதி முறை என்பது முருகன் துதிமாலேயே.

திருத்தணிகை வீரட்டானேசுவரர் திருக்கோயில் அபராஜிதப் பல்லவன் காலத்தில் நம்பியப்பி என்பவரால் கட்டப்பட்டது என்பது கல்வெட்டு வாயிலாகத் தெரியவருகிறது. பல்லவர்கள் முருக வழிபாட்டில் பேரீடுபாடு கொண்டிருந்தனர். அவர்கள் வழிபட்ட மூர்த்தம் உருத்திராக்கக் கண்டிகையும் குண்டிகையும் கையில் கொண்ட சுப்பிரமணிய மூர்த்தமாகும் இந்தப் பழைய திருவுருவம் இப்பொழுது திருத்தணிமலேக் கோயிலின் உள் பிராகாரத்தில் மேல்பால் உள்ளது. பாலசுப்பிரமணியர் என வழங்கும் மூர்த்தமே அந்தப் பழைய திருவுருவம். இந்தத் திருவுருவைக் கந்தபுராணம் பின்வருமாறு போற்றியுரைக்கின்றது :

' ஒருகரம்தனில் கண்டிகை வடம்பரித்து, ஒரு தன்
கரதலம்தனில் குண்டிகை தரித்து, இரு கரங்கள்
வரதமோடு அபயம் தரப் பரம்பொருள் மகன் ஓர்
திருமுகம்கொடு சதுர்முகன் போல் விதி செய்தான்'

— கந்த புராணம் - 1 : 16 : 17

என வரும் பாட்டால் பிரமனே ஒத்த திருவுருவமே முருகப் பெருமானுக்கு ஆதியில் ஏற்பட்டிருந்தது என்பது தெரியவரும். ஒரு திருமுகமும் நான்கு கையுமுடைய மூர்த்தியாய் ஒரு கையில் உருத்திராக்கக் கண்டிகை வடமும்

மற்றொரு கையில் நீர்க்கரகமாகிய குண்டிகையும் தாங்கியவராய், ஏனைய இரு கரங்களும் வரதமும் அபயமுமாய் அமைந்து இருக்கும் வடிவம் ஆகும். இத்தகைய திருவுருவம் திருத்தணிகையில் மட்டுமன்றிப் பல்லவர் ஆதிக்கம் நிலவிய தொண்டை நாட்டில் உள்ள பிற முருகர் தலங்களிலும் காணப்படுதல் சிந்திக்கத்தக்கது.

காஞ்சிபுரத்திலே கந்த கோட்டத்து விளங்கும் பெருமானை,

கொண்டலை அளக்கும் நொச்சிக்
குமரகோட்டத்துச் செவ்வேள்
குண்டிகை வடமும் தூநீர்க்
கரகமும் கரத்தில் ஏந்தி.
பண்டையில் அயனை மாற்றி,
படைத்து, அருள்வேடம் தாங்கி,
அண்டர்கள் எவரும் போற்ற
அருள் புரிந்து அமர்ந்தான் அன்றே.

— கந்த புரா. பாயிரம் : 6. நகர. 109

'புள்ளிமான் தோல்உடுக்கை முஞ்சிநாண்
அரைப் பொலிய, அக்க மாலை
தெள்ளுநீர்க் குண்டிகையும் கரத்தொளிரத்
திருக்குமரக் கோட்டம் என்னும்
உள்ளியோர் பிறப்பு அறுக்கும் ஆச்சிரமத்து
இனிதிருந்தான் உறுவர் போற்ற
வள்ளியார் இணைக்களப மணிக்கலச
முலைதிளைக்கும் வாகைத் தோளான்'

— காஞ்சிப் புரா. குமரகோட்டம் - 24

என முருகனைப் பிரம மூர்த்தமாகப் பாடியிருத்தலும் நோக்கத் தக்கது. திருப்போரூர் முருகன் திருக்கோயிலிலும் திருத்தணி ஆறுமுகசாமி கோயிலிலும் மூலவர்களும் எழுந்தருளும் விழாத் திருமேனிகளும் இவ்வாறே காணப்படுகின்றன. மாமல்லபுரம் தருமராசரதத்தில் கீழ்தளத்தூணில் உள்ள முருகன் திருஉருவமும் பழமையானது. ஆகவே, பல்லவர் காலத்தில் இத் திருவுருவமே தொண்டை மண்டல மெங்கும் சிறப்பாக வழிபடப்பெற்று வந்தமை தெரியவரும்.

பல்லவர் காலத்திலும் சோழ அரசர் காலத்திலும் தணிகையில் உள்ள திருக்கோயில்களுக்குச் செய்யப்பட்டுள்ள திருப்பணிகள் முதலியனவும் இங்குள்ள கல்வெட்டுகளால் தெரியவருகின்றன. இக் காலம் முதற்கொண்டே இத் திருக்கோயில் பக்தர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்க வேண்டும். இலக்கிய வழியாய் ஆராய்ந்து பார்த்தால் கச்சியப்ப சிவாசாரியர் பாடிய கந்த புராணத்தில்தான் திருத்தணிகையின் மகிமை பேசப்படுகிறது. இதற்கு முற்பட்ட நூல்களில் இத் தலம் பற்றிய குறிப்பு எதுவும் இல்லை. சிலர்,

'பல்மலிந்த வெண்தலை கையில் ஏந்திப்
பனிமுகில்போல் மேனிப் பவந்த நாதர்
நெல்மலிந்த நெய்த்தானம், சோற்றுத்துறை,
நியமம், துருத்தியும், நீடூர், பாச்சில்
கல்மலிந் தோங்கு கழுநீர்க் குன்றம்
கடல்நாகைக் காரோணம் கைவிட்டு இந்நாள்
பொன்மலிந்த கோதையரும் தாமும் எல்லாம்
புறம்பயம்நம் ஊரென்று போயினரே'

என வரும் திருநாவுக்கரசரின் திரும்புறம்பயத் திருத்தாண்டகப் பாடலை **(6 : 13 : 4)** எடுத்துக்காட்டி, இதில் வரும் 'கல் மலிந்து ஓங்கும் கழுநீர்க் குன்று' என்பது திருத்தணிகையைக் குறிப்பதாகும் என்பர். இத் தாண்டகப் பாட்டில் சொல்லப்பட்ட தலங்கள் எல்லாம் சிவ தலங்கள். முருகன் திருத்தலம் வேறு எதுவும் சுட்டப்படவும் இல்லை. இப் பாடலில் வரும் 'கழுநீர்க் குன்றம்' என்பது திருக்கழுக்குன்றத்தைக் குறித்ததாகும் என்றே பலரும் கருது கின்றனர். திரு. அருணை வடிவேல் முதலியார் தாம் எழுதிய தேவாரக் குறிப்புரையில் 'நீர்க்கழுக்குன்றம்' என்று மாற்றிக் கூட்டி, இது திருக்கழுக் குன்றத்தையே குறிக்கும் என்பர். ஆகவே, தேவாரப் பாடலில் வரும் தொடர் திருத்தணிகையைக் குறித்ததன்று என்பது தெளிவு. கந்தபுராணமே தணிகைத் தலச் சிறப்புக் கூறும் முதல் நூலாகக் கருதத்தக்கது.

தன்னைச் சேவிக்கும் மகளிருடனும் பாடுமகளிருடனும் முருகன் அவர்களுக்கு முதற்கை கொடுத்து, குரவையாடுதலைக் குன்றுதொறாடல் என்னும் பகுதியில் திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் தெரிவிக்கிறார். அந்த ஆடலின்போது முருகன் சிவப்புநிற ஆடையை உடுத்து, அரையில் கச்சை கட்டி, காதில் அசோகம் தளிரைச் செருகி விளங்குவானும். அப்பொழுது குழல், கொம்பு முதலிய இசைக் கருவிகள் ஒலிக்குமாம். இவ்வாறு குன்றுதொறாடல் என்பது எல்லா மலைகளிலும் அப் பெருமானுடைய குரவையாடலைக் குறிப்பதாகும் என்று அவர் போற்றுகிறார். இதற்கு விளக்கம் தருவார்போலக் கந்தபுராணத்தில் கச்சியப்ப சிவாசாரியர் திருத்தணிகை தொடக்கமான குன்றுகளில் என்று குறிப்பிடுகிறார்.

' மேவரும் கூடல் மேலை
வெற்பினில் அலைவாய் தன்னில்
ஆவினன் குடியில் நல் ஏ -
ரகம்தனில் தணிகை ஆதிப்
பூவுலகு உள்ள வெற்பில்
பொற்புஉறும் ஏனை வைப்பில்
கோவில் கொண்டு அருளிவைகும்
குமர கோட்டத்து மேயோன் ' —கந்தபுரா. பாயிர 6: நகர. 106

என வரும் பாடலில் காஞ்சியில் குமரகோட்டத்திலே கோவில் கொண்டிருக்கும் பெருமான் திருப்பரங்குன்றம் முதலிய படை வீடுகளிலும் காட்சி தருகிறார் என்று எடுத்துரைக்கிறார். இங்கே தணிகைமலை முதலிய மலைகளில் எனக் குன்றுதொறாடலுக்கு விளக்கம் தருகிறார். எனவே, குன்றுதொறாடலில் முதன்மையாய் விளங்குவது திருத்தணிகை என்பது கச்சியப்பரின் கருத்தாதல் காணலாம். ஆற்றுபடைவீடுகளுள் ஒன்றாகத் திகழ்வது திருத்தணிகை என்பது இதனால் தெரியவரும்.

அடுத்தபடியாக அருணகிரிநாதரின் (15-ஆம் நூற்றாண்டு) திருப்புகழ்ப் பாடல்கள் 64 இத் தலத்திற்கு உள்ளமையைக் குறிப்பிடலாம்.

சிதம்பர சுவாமிகள் (17-ஆம் நூற்றாண்டு) திருப்போரூர்ச் சந்நிதி முறையில், தணிகை முருகன் தனிப் பெருமைகளையும் ஐந்து இடங்களில் போற்றியுள்ளார்.

1. 'தணிகை வெற்பன் சரவணத்தன்
   தருக, முத்தம் தருகவே!' —முத்தம் - 10

2. 'அறையும் தணிகை மலைச்சுனைக்குள்
   அலரும் மலரும் மணக்கும் உனது அருஞ்சீரடி'
   —சிற்றில் - 4

என்று பிள்ளைத்தமிழில் பேசுகிறார்.

3. 'சமரபுரித் தேவோ, தணிகைமலைத் தேனே!'

என்று தாலாட்டுப் பாடலில் தணிகை இளமுருகனைச் சிந்திக்கிறார் (28).

குன்றுதோறும் ஆடும் குழகனின் சீர்மையை,

4. 'தடவெற் பழகா! தணிகைப் பதியாய்!
   சமரப் பதியானே!' —சிற்சுகம் 4 : 3

என்றும்,

5. 'தணிமலை முதலிய மலைதொறும் நிலவிய
   சசிபதி பணி பதனே!' —சிற்சுகம் 5 : 9

என்றும் பாராட்டுகின்றார். இவ்வாறாகத் தணிகை முருகன், முற்படத் தோன்றிய திருப்போரூர்ச் சந்நிதிமுறையிலும் காட்சி தருகிறார்.

திருத்தணிகைச் சந்நிதிமுறைப் பிரபந்தங்களைத் தந்த கந்தப்ப அய்யர் திருத்தணிகையிலேயே பிறந்து வாழ்ந்தவர். 18ஆம் நூற்றாண்டுப் புலவர்களுள் இவர் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கிறார். இவர் திரு - ஆவடுதுறை மாதவச் சிவஞான முனிவரின் மாணவர் பரம்பரையைச் சார்ந்தவர். சுவாமிகளின் மாணவர்கள் பன்னிருவர் ஆவார்: 1. கச்சியப்ப முனிவர், 2. தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் (காட்டுமன்னார்குடி), 3. மதுரை ஆதீனம் - வேலாயுத தேசிகர், 4. காஞ்சிபுரம் - சரவண பத்தர், 5. இராம

நாதபுரம் - சோமசுந்தர குரு, 6. முத்துக்குமார தேசிகர், 7. இலக்கணம் சிதம்பரநாத முனிவர், 8. கலியாணசுந்தர உபாத்தியாயர், 9. அடைக்கலம் காத்தான் முதலியார், 10. காஞ்சிபுரம் - சிதம்பர முனிவர், 11. திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார், 12. அரும்பாக்கம்—திருச்சிற்றம்பல தேசிகர். இம் மாணவர்களிடம் பயின்று புலமை பெற்றோர் பற்பலர்.

பன்னிருவரிலும் முதன்மையாய் விளங்குபவர் கச்சியப்ப முனிவர். இவர் பல சிறந்த நூல்களைத் தமிழுக்குத் தந்தவர். இவர் பாடிய நூல்களாவன : 1. விநாயகர் பிள்ளைத்தமிழ், 2. விநாயக புராணம், 3. திருத்தணிகைப் புராணம் 4. காஞ்சிப் புராணம் - இரண்டாம் காண்டம், 5. திரு ஆனைக்காப் புராணம், 6. பூவாளூர்ப் புராணம், 7. பேரூர்ப் புராணம், 8. திருத்தணிகை ஆற்றுப்படை, 9. திருத்தணிகைப் பதிற்றுப்பத்து அந்தாதி, 10. ஆனந்த ருத்திரேசர் பதிற்றுப் பத்து அந்தாதி, 11. பிரமீசர் பதிற்றுப்பத்து அந்தாதி, 12. பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி, 13. ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது, 14. ஆனந்த ருத்திரேசர் கழிநெடில். இவற்றுள் மூன்று (3, 8, 9) திருத்தணிகை பற்றிய பிரபந்தங்கள். பேரூர்ப் புராணத்தில் தெய்வயானையம்மை திருமணப் படலமும் (30ஆம் படலம், 134 பாடல்), திருத்தணிகைப் புராணத்தில் வள்ளியம்மை திருமணப் படலமும் (18ஆம் படலம், பாடல்கள் 263) பாடியுள்ளமை, முருகப்பெருமானிடத்தில் இவர் கொண்டுள்ள பெரும் பத்தியின் விளைவேயாகும். இவரைத் தமிழுலகம் 'கவிராட்சசர்' என்று போற்றிப் புகழ்கிறது. இப் பெரியாரிடம் பயின்ற மாணவர்களுள் ஒருவரே கந்தப்ப அய்யர்.

கச்சியப்ப முனிவர் காஞ்சிபுரத்தில் 1790-ல் — சாதாரண ஆண்டு, சித்திரைத் திங்கள், 11ஆம் தேதி, செவ்வாய்க்கிழமை, புனர்பூச நாள், வளர் பிறை சப்தமியில் கும்ப லக்னத்திலே — சமாதி நிலையுற்றனர் என்பது ஒரு பழம் பாடலால் தெரியவருகிறது. கந்தப்பய்யர் திருத்தணிகைப் பிள்ளைத் தமிழைப் பாடி முற்றுவித்த காலத்தைத் தெரிவிக்கும் பாடல் ஒன்றும் காணப்படுகிறது.

'சாலி வாகன சகாத்தமா யிரத்தெழு நூற்றெரு
ஏழு மாண்டிரு பத்தா ருனதுன் மதியில்
கோலுங் குண்டை ஞாயிற்றினில் பிள்ளைத்தமிழ் கொடுத்தான்
மூலவெற் பனுக்கு அடியனும் கந்தப்ப முனியே.

இப் பாடலிலிருந்து சாலிவாகன சகாப்தம் 1726-க்குச் சரியான கி.பி. 1804ஆம் ஆண்டில் கந்தப்ப முனியால் பிள்ளைத்தமிழ் செய்து கொடுக்கப்பட்டது என்பது தெளிவாம். இதனாலும் இவருடைய ஆசிரியப் பெருந்தகையின் மறைவுக் காலத்தைக் கொண்டும் இவர் 18ஆம் நூற்றாண்டில் பிறந்து 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்திருந்தார் என்பது தெரியவரும்.

'வெண்பா அந்தாதி வியன்தணிகை வேலவற்கு
பண்புஆம் தமிழ்நாறும் பாவலர்முன் — நண்பாக
ஓதினன், கச்சியப்ப ஒண்முனிவன் தாள்பணியும்
நீதியாம் கந்தப்பனே'

என வரும் திருத்தணிகை அந்தாதிச் சிறப்புப் பாயிரத்தில் ஆசிரியரிடம் இவர் கொண்டுள்ள பெரும் பக்தியைப் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

இங்குக் குறிப்பிடப்பெற்ற வெண்பா அந்தாதியின் ஒன்பதாம் பாடலில், 'தணிகைவரைத் தோன்றல் இருபாதம் பணிந்தேன், அவன் புகழ் வெண்பாவை அணிந்தேன்' என இவர் குறிப்பிடுவதால், இவர் பாடிய அந்தாதி நூலுக்கு முற்படப் பாடியது 'தணிகை வெண்பா' என்பது தெரியவரும்.

இவர் வீரசைவ சமயத்தைச் சார்ந்தவர். இவரைக் கந்தப்ப தேசிகர் என்றும், கந்தப்ப முனிவர் என்றும் குறிப்பிடுவர். இல்லறவாழ்வை மேற்கொண்டு சிறப்புற வாழ்ந்தவர். வீரசைவர் இல்லறத்தாராய் இருப்பினும் ஐயர் என்றும் முனிவர் என்றும் போற்றுவது மரபாகும். இவருக்கு வள்ளி, தெய்வயானை என்ற இரு மனைவியர் வாய்த்திருந்தனர். நீண்ட காலம் குழந்தைப்பேறு இன்றி இருந்து, தணிகை முருகன் அருளால் இவர்கள் முறையே விசாகப்பெருமாள், சரவணப்பெருமாள் என்ற இரு புதல்வர்களைப் பெற்றனர்.

இரு புதல்வர்களுக்கும் சூட்டிய பெயர்களால் கந்தப்ப அய்யருக்கு முருகன் மீது இருந்த பேரன்பு வெளிப்படக் காணலாம்.

'தந்தையர் ஒப்பர் மக்கள்' என்னும் முதுமொழிக்கு இணங்க இந்த இரு புதல்வர்களும் தமிழ்ப் புலமையில் சிறந்து விளங்கினர். 19ஆம் நூற்றாண்டில் சிறந்து விளங்கிய புலவர் பெருமக்களுள் விசாகப் பெருமாளையும் சரவணப்பெருமாளையும் தத்தம் தமிழ்த் தொண்டுகளினால் சிறப்பிடம் பெற்று விளங்குவோர் ஆவர்.

கந்தப்ப அய்யரின் பெரும் புலமை ஐங்கரமாலை, தயாநிதிமாலை, தணிகை வெண்பா நூல்களில் காணும் சிறப்புப்பாயிரக் கவிகளாலும் நன்கு விளக்கமாகும். இவற்றில்,

'பொங்குதமிழ் கற்றுணர்ந்த தூயகவிராசன் கந்தப்பன்'
'காசினி எலாம் புகழும் கந்தப்பன் என்றுரைக்கும் தேசிகன்'
'நன்று அறி கந்தப்ப முனி'

என வரும் பகுதிகள் இப் புலவரின் பெருஞ்சிறப்பினை வெளிப்படுத்துவனவாம்.

கந்தப்ப அய்யரின் வாக்கு மிக நயமானது. இவர் தணிகை முருகன் அருள்பெற்ற ஒரு வரகவியே. பாடல்களின் சந்தநடை தங்குதடையின்றிச் செல்வது படித்து மகிழத் தக்கது. சிலேடை முதலிய சொல் - அலங்காரங்களையும் உவமை முதலிய பொருள் - அணிகளையும் ஏற்ற இடங்களில்

இயல்பாய் அமையும் வகையில் நூலுள் அமைத்துள்ளார். பழமொழிகள் முதலிவற்றையும் எடுத்தாண்டுள்ளார். திருத்தணிகை உலாவில் சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய காவியங்களையும் தொல்காப்பியம், நன்னூல் முதலிய இலக்கணங்களையும் இவர் குறிப்பிடுவது கொண்டு தமிழ் நூற்கடல் முற்று மாய்க் கரைகண்டவர் என்பது தெற்றென விளங்கும்.

கந்தப்ப அய்யர் பாடிய நூல்கள் ஒவ்வொன்றாக 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அச்சில் வெளிவரத் தொடங்கின. முதலில் அச்சானவை (1) முருகன் தாலாட்டு, (2) திருத்தணிகாசல அனுபூதி, (3) வேல் - பத்து ஆகும். இம் மூன்று நூல்களும் அச்சான விவரம் 1865-ல் வெளிவந்த மர்டாக் பாதிரியாரின் 'தமிழ் நூல் விவர அட்டவணை'த் தொகுதியால் தெரிய வருகின்றன (மறு அரசு பதிப்பு பக். 92, 94, 95). எனவே, இந் நூல்கள் 1865-க்கு முன்பே அச்சானவை என்பது தெளிவு.

1867-ல் 'திருத்தணிகைச் சிலேடை வெண்பா மாலை'யின் மூலபாடப் பதிப்பு வெளிவந்தது. இதனை வெளியிட்டவர் திரு. சி. செங்கல்வராய முதலியார் ஆவர். இவர் கந்தப்ப அய்யரின் நூல்களை அவருடைய மகனாகிய தி. விசாகப்பெருமாளையரைக் கொண்டு பரிசோதிப்பித்துத் தொடர்ந்து வெளியிடப் போவதாகச் சிலேடை வெண்பா மாலையில் அறிக்கையிட்டுள்ளார். இந்த அறிக்கையில் கந்தப்ப அய்யரின் நூல்கள் என்னென்ன உள்ளன என்பது தெரியவருகின்றது. இவர் தெரிவித்துள்ள குறிப்பின்படி செய்யுள் நூல்கள் 20 என்பதும், அவர் முன்னையோர் நூல் களுக்கு எழுதிய உரைகள் 4 என்பதும் தெரியவருகின்றன.*

திருமணம் செல்வக் கேசவராய முதலியார் 1896-ல் வெளியிட்ட 'தமிழும் தமிழரும்' என்னும் நூலில் தமிழ் மாணவர் கற்கத் தகுந்த நூல்களின் பட்டியல் ஒன்று சேர்த்துள்ளார். இதில் கந்தப்ப அய்யரின் தணிகாசல அநுபூதி நூலும் திருச்செந்தினிரோட்டக யமக அந்தாதி உரை, பழமலை யந்தாதி உரை நூல்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் நூல் முதல் முதலாக 1878-ல் அச்சில் வெளிவந்தது. இந் நூலைப் பார்வையிட்டுப் பரிசோதித்தவர் சாத்தம்பாக்கம் கிருஷ்ணசாமி முதலியார் ஆவார். இவர் பரிசோதித்துத் தந்த நூலைப் பால்குரிசி சோமையர் சென்னபட்டணத்திலுள்ள தம்முடைய ஆதி கலாநிதி அச்சுக்கூடத்தில் அச்சிட்டுள்ளார். இதில் பிள்ளைத்தமிழ் பாடி முற்றுவித்த காலத்தைக் குறிக்கும் பாடல் ஒன்றும் உள்ளது (பார்க்க: சாலிவாகன பக். xi.)

---

* இவற்றின் முழு விவரத்தை இந் நூலை வெளியிட்ட கடலூர் தி. கி. நாராயணசாமி அவர்களின் மற்றொரு வெளியீடாகிய 'தணிகை வெண்பா' உரை நூல் முகவுரையில் (பக். xii, xiii) காணலாம்.

1880-ல் திருத்தணிகைச் சந்நிதிமுறை என்னும் நூல் - திரட்டு 12 சிற்றிலக்கியங்களை உள்ளடக்கியதாய் வெளிவந்தது. இதனைப் பதிப்பித்தவர் சிதம்பரம் அ. இரத்தினசபாபதி முதலியார் ஆவர். இது சென்னை ஸி. பாஸ்டர் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது. இதன் பின்னர், 1904-ல் திருத்தணிகைச் சந்நிதிமுறை சிறுமணவூர் முனிசாமி முதலியாரால் அவருடைய சென்னை-சூளைச் சிவகாமி அச்சுக்கூடத்தில் இரண்டாம் பதிப்பாகப் புதுப்பிக்கப்பெற்றது. இதன் பின்னர் இப்பொழுது 75 ஆண்டு களுக்கு மேலாகியும் இந்நூல் பதிப்பிக்கப் பெறவில்லை. முந்திய பதிப்புகளும் சிற்சிலரிடத்தில் மிகவும் அரிதாய் இருப்பதன்றி யாவரும் அறியும் வகையில் நாட்டில் நடையாடவும் இல்லை. இரு பதிப்புகளைப் பெற்ற இத் தொகுப்பு நூல் அண்மைக் காலத்தில் புதைபொருள் போல் ஆகிவிட்டது. அந்நிலையிலிருந்து புத்தெழுச்சி பெற்று இந்தப் பக்திப் பனுவல்—கோவை ஆகிய சந்நிதிமுறை-புதுப் பொலிவுடன் தமிழுலகிற்கு அறிமுகமாகிறது.

1975-ல் தணிகை ஐங்கரமாலை மட்டும் புலவர் கா. பெ. ஞானசம்பந்தம் அவர்களால் தனிநூலாக வெளியிடப்பட்டுள்ளது. இராவ்சாகிப் நல். முருகேச முதலியார் அவர்கள் திருத்தணிகைப் பிள்ளைத்தமிழைத் தாம் எழுதிய குறிப்புரையுடன் 1977-ல் வெளியிட்டுள்ளார். இவ் இரண்டு நூலும் சந்நிதி முறைத் தொகுப்பு நூல்களை முழுமையாய் ஒன்றன்பின் ஒன்றாகத் தரும் எண்ணத்துடன் எழுந்த முயற்சிகளாகக் கருதத் தக்கவை. ஆயினும் தொடர்ந்து வேறு நூல்களை இவர்கள் வெளியிடவில்லை. எல்லா நூல்களும் ஒருசேர மூன்றும் முறையாக இன்று வெளிவருகிறது.

கந்தப்ப அய்யர் பாடிய தணிகாசல புராணம் டாக்டர் உ. வே. சாமி நாதையர் அவர்களால் 1939-ல் பதிப்பிக்கப்பட்டது. இவை தவிர யமகவந்தாதி, முருகக் கடவுளுக்கும் திருமாலுக்கும் சிலேடை அந்தாதி என்பவை வெளி வந்ததாகத் தெரியவில்லை. இவர் செய்த உரை நூல்கள் நான்கின் (பொன் வண்ணத்து அந்தாதி, அபிஷேகமாலை, பழமலை அந்தாதி, திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி) நிலைமையும் தெளிவுபடவில்லை. இதுவரை வெளி வராத நூல்களைத் தேடிப் பதிப்பித்து வெளியிடுதலும் வேண்டும். இவற்றிற் குரிய சுவடிகளை வைத்திருப்போர் தந்து உதவுவார்களாக.

முதற் பதிப்பில் திருத்தணிகைச் சந்நிதிமுறை நூல்களின் வைப்புமுறை கருதத் தக்கது. சந்நிதி முறைகளுள் மூத்த நூலாகிய திருப்போரூர்ச் சந்நிதி முறையைப் பின்பற்றிப் பிள்ளைத்தமிழை முதலாக வைத்து, ஐங்கரமாலை முதலியவற்றை இடையில் வைத்து, ஈற்றில் உலா நூலை அமைத்துள்ளனர். முதற் பதிப்பில் திருத்தணிகை உலா பின்-இணைப்பாகத் தனிப் பக்க எண் தந்து சேர்க்கப்பட்டுள்ளது. ஆகவே, பதிப்பாசிரியர் நோக்கில் அமைக்கப் பட்டதே இத் தொகுதிப் பிரபந்த வரிசை என்பது கருதத் தகும்.

முதற் பதிப்பில் பிரபந்த வரிசை வருமாறு :

1. திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்
2. திருத்தணிகை ஐங்கரமாலை
3. தயாநிதி மாலை
4. வேலாயுத சதகம்
5. அந்தாதி
6. கலம்பகம்
7. மயிற் பத்து
8. சேவற் பத்து
9. வேற் பத்து
10. சீர்பாதப் பத்து
11. தணிகைமலைப் பத்து
12. திருத்தணிகை யுலா

இப் பன்னிரு நூல்களுள் ஐங்கரமாலை ஒன்று மட்டும் விநாயகப் பெருமானைப் பற்றியது. ஏனையவை தணிகை முருகனைப் போற்றுவன. இப் புதிய பதிப்பில் விநாயகர் துதியாகிய ஐங்கரமாலையை முதலில் வைத்து ஏனைய பிரபந்தங்கள் அவற்றின் அமைப்பாலும் பொருளாலும் பாடல் தொகையாலும் அடைவு படுத்தப்பட்டுள்ளன.

நூறு பாடல்களைக் கொண்டு அமைந்த துதிமாலைகளாகிய தயாநிதி மாலை, வேலாயுத சதகம் ஆகிய இரண்டும் ஐங்கரமாலை நூறு பாடல்களை அடுத்து முதலிடம் பெறுகின்றன. இவற்றை அடுத்துப் பதிகப் பாமாலைகளாய் அமைந்த ஐந்து பத்துகள் முந்திய பதிப்பின் அடைவிலேயே தரப்பட்டுள்ளன. அவை : மயில்-பத்து, சேவல்-பத்து, வேல்-பத்து, சீர்பாதப் பத்து, தணிகை மலைப் பத்து என்பனவாம். இவற்றின் பின் திருத்தணிகை அந்தாதி, பிள்ளைத்தமிழ், உலா என்னும் பிரபந்தங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவற்றுள் அந்தாதியும் பிள்ளைத் தமிழும் தோத்திர நூல்கள் ; உலா அகப்பொருள் சார்ந்த பிரபந்த இலக்கியம். கலம்பகம், அகம்-புறம் என்னும் பொருள்களும் பல்வகைப் பாக்களும் கலந்து வரும் நூல் ; ஆதலின் எல்லாவற்றிற்கும் இறுதியில் வைத்து முறைப்படுத்தலாயிற்று. தணிகாசல அநுபூதி பற்றிய ஒரு குறிப்பினை 142 ஆம் பக்கத்தில் காணலாம்.

இவற்றுள் 'வேலாயுத சதகம்' பற்றிய ஒரு செய்தி இங்குக் கருதத்தக்கது. இச் சதகப் பாடல்கள் எல்லாம் தயாநிதி மாலையில் 'தயாநிதியே' எனப் பாடல்கள் முடியுமாறு போல 'வேலாயுதா, வேலாயுதா!' என்னும் மகுடத்துடன் முடிவுறுதல் காணலாம். இவ்வகை அமைப்பில் திருத்தணிகை முருகன்மேல் மற்றொரு புலவர் பாடிய 'வேலாயுத சதகம்' ஏட்டுப் பிரதியாய்ச் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி செங்கோட்டு வேலர் அவர்களிடம் உள்ளது. நாகபட்டினத்தில் நீலாயதாட்சியம்மன் தெற்கு வீதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மெய்கண்ட வேலாயுதக் கடவுள்மேல் அழகுமுத்துப் புலவர் பாடிய ஸ்ரீ மெய்கண்ட வேலாயுத சதகம் என ஒரு நூலும் உள்ளது. இந் நூலும் 'வேலாயுதா வேலாயுதா' என்னும் விளியுடன் முடியும் நூறு பாடல்களைக் கொண்டதாகும். இந் நூல் சார்வரி ஆண்டில் நாகை 'நீலலோசனி' மானேஜர் டி. பி. ரெங்கசாமிப் பிள்ளையால் அச்சிடப்பட்டுள்ளது. இவை கந்தப்ப அய்யர் நூலின் வழிநூல்களாகவே கொள்ளத் தக்கனவாம்.

இச் சந்நிதி முறையின் முதற் பதிப்பின் (1880) நூருண்டுகளுக்குப் பின்வரும் இந்தப் பதிப்பில் இக் காலத்திற்கு ஏற்ற பல சிறப்புக் கூறுகள் இடம் பெற்றுள்ளன. முந்திய பதிப்பில் பாடல்கள் சந்தி சேர்ந்து பெரும் பான்மையும் சீர்முறை அமைதி கொண்டனவாய்க் காணப்பட்டன. பல பாடல்கள் பாடல் வடிவம் திருந்த அமைக்கப்படாமல் உரைநடைப் பத்தி போலவே காட்சியளித்தன. இந் நிலையில் கற்று வல்லோரேயன்றி ஏனையோரும் படித்து மகிழ்தல் இயலாது இருந்தது. இப் பதிப்பிலோ பாடல்கள் அவ் அவற்றின் தன்மைக்கு ஏற்ப அமைக்கப்பட்டுள்ளன. பதிப்பில் பெரிய எழுத்துப் பயன்படுத்தியிருப்பது மற்ருெரு சிறப்பு.

மேலும், பொருள் மாறுபடாத வகையில் சந்திப்பிணைப்புகள் பிரிக்கப் பட்டுச் சொல் வடிவம் வெளிப்படத் துலங்குமாறு செய்யப்பட்டுள்ளன. பொருளின் போக்கிற்கு ஏற்ப, ஏற்ற நிறுத்தற் குறியீடுகள் தந்திருப்பது எளிதில் பொருளுணர்ந்து படிப்பதற்குத் துணை செய்வதாகும். நூல் முழுமைக்கும் பாடல் தொடர் எண் அந்த அந்தப் பக்கங்களின் மேல் இடப்பட்டுள்ளமையும் ஒரு புதுமையாம். இச் சந்நிதிமுறைத் தொகுதியில் உலாவில் உள்ள 646 கண்ணிகள் உள்பட 1305 பாடல்கள் உள. நூலின் இறுதியில் பாடல் முதல் குறிப்பு அகராதி, இத் தொகுதியுள் இடம் பெற்றுள்ள 12 நூல்களுள் உலா ஒன்றைத் தவிர ஏனைய பதினென்றிற்கும் தனித் தனியாய்த் தரப்பட்டுள்ளது. இவ்வகை அகர வரிசை இப் பதிப்பில்தான் முதன் முதலாக இடம் பெறுகிறது. இதனுல் சந்நிதி முறையில் உள்ள எந்தப் பாடலையும் எளிதில் எடுத்துப் பயன்படுத்த இயலும்.

எல்லாவற்றினும் மேலாகத் திருத்தணிகைத் தொடர்பான பல செய்தி களும் சில நூல்களும் பின் - இணைப்பாகத் தரப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. கந்தபுராணத்தில் வள்ளியம்மை திருமணப்படலத்தில் காணும் திருத்தணிகையின் பெருமை கூறும் பகுதி முதல் பின் - இணைப்பு. அடுத்து அருணகிரிநாதர் இத் தலத்திற்குப் பாடிய திருப்புகழ்களின் அட்டவணையைக் காணலாம். ஒவ்வொரு திருப்புகழிலும் அருளப்பட்ட விண்ணப்பமும் தணிகைமணி அவர்கள் பதிப்பில் கண்டவாறு தரப்பட்டிருக்கிறது.

தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் பாடிய திருத்தணிகைத் திருவிருத்தம் முழுமையாய் 3ஆவது பின் - இணைப்பில் உள்ளது. காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் பாடிய சுப்பிரமணியர் க்ஷேத்திரக்கோவை பிள்ளைத்தமிழில் திருத்தணிகைமலை குறித்துச் சிறுபறை பருவத்தில் பாடிய பாடல், இணைப்பு 4-வில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. திருத்தணிகைத் திருவிழாக்கள், அங்குள்ள தீர்த்தங்கள் பற்றிய விவரங்களை முறையே 5, 6-ஆம் பின்- இணைப்பு களில் காணலாம்.

7ஆவதில் திருத்தணிகைத் தல விளக்கம் விரிவாகத் தரப்பட்டிருக்கிறது. இத் தலத்தின் அமைப்பு, ஊர்க்காட்சி, மலைகளின் தன்மையும் சிறப்பும், இத் தலம்பற்றி முன்னையோர் செய்த நூல்களின் விவரம், இத் தலத்தின் தனிச் சிறப்புகள், இதன் வேறு பெயர்கள், தணிகையை வழிபட்டுப் பேறு பெற்றோர் விவரங்கள், திருத்தணிகைக் கோயிலின் அமைப்பும் தரிசனம் செய்ய வேண்டிய முறையும் முதலியவற்றை இப் பகுதியில் காணலாம். இப் பகுதி திருத்தணிகைப் பெருமானை வழிபட வருவோருக்கு ஒரு சிறந்த வழிகாட்டி யாகும். இந் நூலுள் சேர்க்கப்பட்டுள்ள தல விளக்கப் படமும் (பக்கம் 252-253) பிற படங்களும் இதற்குப் பெரிதும் துணை செய்ய வல்லன.

திருத்தணிகையில் விளங்கும் கோயில்களில் காணப்படும் கல்வெட்டு களின் விவரமும் ஒரு தனி இணைப்பில் (8) காணலாகும். இக் கல்வெட்டு களினால் தெரியவரும் வரலாற்றுச் செய்திகளும் பிறவும் அதனையடுத்துத் (இணைப்பு - 9) தரப்பட்டுள்ளன. வேலஞ்சேரிச் செப்பேடுகளின் செய்தியும் தனி இணைப்பில் (10) இடம் பெற்றுள்ளது. 11-ல் திருத்தணிகையில் உள்ள மற்றச் சிறு கோயில்களின் விவரமும், 12-ல் கந்தபுராணச் சுருக்கத்தில் திருத்தணிகைச் சிறப்பும், 13-ல் கந்தப்ப அய்யரின் குடும்ப வரலாறும் காணலாம்.

கந்தப்ப அய்யரைப் போலவே, வேறு யார் யார் திருத்தணிகை சம்பந்த மாகத் தமிழில் நூல் செய்துள்ளனர் என்பது தெரிய 14ஆம் பின் - இணைப்பு வழி வகுக்கிறது. இவ்வாறாக இணைப்புகள் ஒவ்வொன்றும் திருத்தணிகை யின் சிறப்பினைத் தெரிவிக்கும் பகுதியாய் உள்ளமை கண்டு மகிழத் தக்கதாம்.

நூலின் இறுதியில் அருஞ்சொற்களுக்கு உரிய பொருள் விளக்கம் அகராதியாக அமைத்துத் தரப்பட்டுள்ளது. இது 15ஆம் பின் - இணைப்பு ஆகும். நூலுள் வரும் அருஞ்சொற்களின் பொருள்களைத் தமிழ்ப் பயிற்சி மிக இல்லாதாரும் தெரிந்துகொண்டு படிப்பதற்கு இந்த அகராதி பெரிதும் துணை செய்வதாகும்.

இப் புதிய பதிப்பு முருகன் திருவருளாலே உருவானதாகும். திரு. டி. கே. நாராயணசாமி நாயுடு அவர்களின் உள்ளத்தில் தணிகைப் பெருமான் புகுந்து ஓர் ஆவேசத்தையே உண்டு பண்ணினார் என்றுதான் சொல்ல வேண்டும். இப் பதிப்புக்கான ஓர் எண்ணம் எழுந்தது முதல் ஓர் ஆண்டுக் காலம், நாளதுவரை அவர்கள் அலைந்த அலைச்சல் இவ்வளவு என்று அளவிட்டு உரைக்க இயலாது. தணிகை வரலாறுகளையும் தணிகைப் பெருமான்மீது பாடப்பெற்ற நூல்களையும் தேடிப் பெறுவதற்கு அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் பல. ஒவ்வொரு காலத்து எண்ணிச் சென்ற பொருள்கள் யார் மூலமாவது கிட்டும்போது கந்தன் கருணைதான் நினைவுக்கு

வரும். திருத்தணிகைக்கே பல முறை சென்று பல நாள்கள் தங்கி ஆராய்ந்து வந்தார்கள். பல ஊர்களுக்கும் கந்தப்ப அய்யரின் நூல்களைத் தேடிச் சென்றார்கள். அன்பர்கள் சிலர் அளித்த தகவல்களைக் கொண்டு நேரிலும் கடித மூலமாகவும் சந்தித்த அன்பர்களும் பலராவர். அண்மையில் செப்பேடுகள் கண்டெடுக்கப்பட்ட ஊராகிய வேலஞ்சேரிக்கும் * சென்று வந்தார்கள். அச்சகத்திற்குச் சென்று அவர்களை ஊக்கிப் பணிகளை விரைவு படுத்த நடந்த நடைகள் எத்தனை எத்தனையோ! இவ்வளவு பேருழைப்பையும் தம் 74ஆம் ஆண்டில் அவர்கள் மேற்கொண்டது மிகு வியப்புக்கு உரிய தாகும். அழகிய உருவில் இப் பதிப்பைக் கொண்டுவருவதற்கு அயராது உழைத்த பெரியார் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையதாம்.

இந்தத் தெய்விகத் திருப்பணியில் என்னையும் ஒரு கருவியாக்கிப் பணி கொண்ட தணிகை முருகன் திருவடிகளை மனமொழி மெய்களால் வந்தித்து வாழ்த்துகின்றேன். இந் நூல் அச்சாகுங்காலத்து அச்சுத்தாள்களைப் பக்கப் புருப் நிலையில் பார்த்து நல்ல பல திருத்தங்களைத் தந்துதவியவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தின் காப்பாளர் பாலகவி திரு. மு. கோ. இராமன் அவர்களாவர். அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியும் வணக்கமும் உரியனவாகுக. கல்வெட்டுப் பகுதியையும் செப்பேட்டுச் செய்திகளையும் முறைப்பட அமைத்து எழுதி உதவிய டாக்டர் அ. நாகலிங்கத் திற்கும் டாக்டர் வ. ஜயதேவனுக்கும் என் நன்றியும் வாழ்த்தும் உரியவாம். அருஞ்சொல் விளக்கம் ஆக்குவதற்கு டாக்டர் அ. நாகலிங்கம் பெரிதும் ஒத்துழைத்துள்ளார். அவருடைய பணி பாராட்டுதற்குரியது.

நூலைச் செவ்விய முறையில் பதிப்பிப்பதற்கு ஒத்துழைத்த திருத்தணிகை முருகனையே பற்றுக்கோடாகக் கொண்ட பார்க்கர் அச்சக உரிமையாளர் திரு. பா. கோ. நடராஜ முதலியார் அவர்களுக்கும் திரு. சாரங்கபாணி முதலியார் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

---

* வேலஞ்சேரி திருத்தணியிலிருந்து 3.2 கி.மீ. தொலைவில் உள்ளது. திருத்தணி - சென்னை நெடுஞ்சாலையில் ஒரு கி.மீ. போய், பின்னர் நாகலாபுரம் சாலையில் 2.2 கி.மீ. போகவேண்டும். வேலஞ்சேரி, இந்திய நாடு மொழிவழி யாய்ப் பிரிக்கப்படுவதற்கு முன் அமைந்த சென்னை மா நிலத்தின் முதல் மந்திரி யாய் விளங்கிய பொபிலி (B) முனிசாமி நாயடு பிறந்த ஊர். வேலஞ்சேரியின் மதுரா கிராமம் வேங்கடாபுரம். இங்கே முன்னாள் குடியரசு தலைவர் சர். எஸ். இராதாகிருஷ்ணன் அவர்களின் முன்னோர்கள் இருந்தார்கள். சர். எஸ். இராதாகிருஷ்ணன் பிறந்தது திருத்தணியில் ஆகும்.

கந்தப்ப அய்யர் இயற்றிய நூல்களுள் ஒன்றாகிய தணிகை வெண்பா உரையுடன் தனி வெளியீடாக இப்பொழுது வெளிவந்துள்ளது. இது போன்றே இவருடைய பிற நூல்களையும் திருத்தணிகை முருகப் பெருமானைக் குறித்து மற்றும் பலர் செய்துள்ள நூல்களையும் வெளியிடும் அவா திருமிகு நாயடு அவர்களுக்கு உண்டு. திருத்தணிகையன்பர்கள், தமிழ்ப் பெரு மக்கள் ஆதரவு இருக்குமானால் அவர்களுடைய எண்ணம் திண்ணமாய் நிறை வேறும் என்பது உறுதி. திருத்தணிகையில் திகழும் ஞான சத்திதரர் திருவருள் பாலிப்பாராக.

'தணிகாசலத்து உறையும் சண்முகா' என்று
பணி; காசு அலம் தவிரப் பாடு; துணிவு ஆகச்
சிந்தித்திடு; — மனமே! செந்நாவே! நல் நெஞ்சே! —
வந்து உற்றிடும் பெரிய வாழ்வு.' — *திருத்தணிகை அந்தாதி*, 43

61, பாலகிருஷ்ணன் தெரு
சென்னை-33

**மூ. சண்முகம் பிள்ளை**
22-9-1980

---

## சிறப்புப் பாயிரங்கள்

ஐங்கரத்தோன் மாலை அறைந்தான் — செருத்தணிகை
தங்கு குமரேசன் தருவரத்தால், பொங்குதமிழ்
கற்று உணர்ந்த தூய கவிராசன் கந்தப்பன்,
முற்றுணர்ந்தோர் பேரவையின் முன். — ஐங்கர மாலை

பண் ஆர் தணிகை வரைப் பாலன் தயாநிதிச்சீர்
எண் ஆரும் மாலை இசைத்திட்டான் — தண் ஆரும்
காசினி எலாம் புகழும் கந்தப்பன் என்று உரைக்கும்
தேசிகனும் நூறு கவி தேர்ந்து. — தயாநிதி மாலை

வெண்பா அந்தாதி வியன் தணிகை வேலவற்கு
பண்பு ஆம் தமிழ் நூறும், பாவலர் முன், நண்பாக
ஓதினான், கச்சியப்ப ஒண் முனிவன் தான் பணியும்
நீதி ஆம் கந்தப்பனே. — அந்தாதி

## சந்நிதிமுறை மாலை



நந்தி ஆற்றின் வடகரையில் உள்ள
பல்லவர் கால வீரட்டானர் கோயில் தணிகைப் புராணம்
இதை வீரட்டகாசம் என்று கூறும்



நந்தி ஆற்றின் வடகரையில உள்ள
வீரட்டானர் கோயில் தென்சுவரில மாடத்திலுள்ள
விநாயகர் (பல்லவ சிற்பம்)

# 1. தணிகை ஐங்கர மாலை

உலகத்தைத் தந்த உமையாள் தரும் பிள்ளை, உம்பர்க்கு எல்லாம்
திலகத்தை ஒத்தவன், சிந்துரன் என்னும் திறல் அரக்கன்
கலகத்தை நீக்கிய மூஷிக வாகனன், கந்தன் முன்னோன், —
அலகு அற்ற செல்வம் தருவான்; — செருத்தணி ஐங்கரனே! 1

பாபச் சகாயரிடத்தே உறவினைப் பண்ணி, என்றும்
சோபச் சகாயம் உறாமல், நின் பாதத் துணை அளிப்பாய் —
கோபச் சகாயன் எனும் மாமுகவனைக் கொன்று எறிந்த
ஆபச்சகாய முதல்வா! செருததணி ஐங்கரனே! 2

சொன்னமும் இன்பமும் மேலான வாழ்வும் துரைத்தனமும்
இன்னமும் வேண்டும் வரங்களும் தந்து, எனையே புரப்பாய் —
கன்னலும் பாகும் அவலும் எள்ளுண்டையும் காதலுடன்
அன்னமும் ஈயும் அடியரைக் காத்திடும் ஐங்கரனே! 3

மானார் கலவி மயக்கத்தில் நாளும் மதி மயங்கி,
ஊன் ஆர் உடல் அபிமானத்தினால், இங்கு உனை மறந்தேன்;
தேன் ஆர் கமலத் திருவடி காட்டி, சிவம் அளிப்பாய் —
ஆனா அறிவு தரும் தணிகாபுரி ஐங்கரனே! 4

கல்லும் உருகும் சொல் காரிகையார் இன்பம் காதலித்து,
வெல்லும் அரசும் குறையாத செல்வமும் வேண்டி நின்றேன்;
சொல்லும் பொருளும் என நிறைந்து எங்கணும் தோன்றி
[நிற்பாய்!—
அல்லும் பகலும் மறவேன்; எனக்கு அருள் — ஐங்கரனே! 5

மானைப் பொரு விழி மங்கையர் பார்வை வலையுள் சிக்கி,
ஏனை அறிவு கலங்கி நின்றேன்; இடர் நீக்குவையோ? —
சேனை அரக்கரொடு மாமுகனைச் செருவில் வென்ற
ஆனை முகத்து அரசே! தணிகாபுரி ஐங்கரனே! 6

வண்டரொடும் திரிந்து, உன் திருப்பாத மலர் மறந்து
தொண்டர் உறவினை நீங்கிநின்றேன்; கதிதுன்னுவனோ? —
மிண்டர் எனும் அவுணக் குழுவைத் தெறும் வித்தகனே!
அண்டர் பணியும் திருத்தணிகாபுரி ஐங்கரனே! 7

கல்லாத புல்லரைக் கூடி, உன் பூசனை கையகன்று,
பொல்லாத வீண் பழி பூண்டேன்; பிழைகள் பொறுத்தருள்வாய் —
வில் ஆரும் பொன்மலைமேல் பாரதம் முன்னமே எழுதும்
அல் ஆர் களத்து இறை மைந்தா! செருத்தணி ஐங்கரனே! 8

வஞ்சப் பிறப்பில் அலைந்து, நின் பாத மலர் துறந்து,
பஞ்சப் புலன்வழிப் போய்த் திரிவேன்; வரம் பாலிப்பையோ? —
கஞ்சக் கிழவன் முதலான தேவர் கருத்தில் உறை
நஞ்சக் களத்து இறை மைந்தா! செருத்தணி ஐங்கரனே! 9

நீங்காத மாயைப் பெருங் கடல் வீழ்ந்து, நிலைகுலைந்து,
தீங்கு ஆயிரமும் புரிவேனை ஆளும் திறம் புகலாய் —
ஓங்காரத்து உள்ஒளி ஆனவனே! அன்பர் உள் இருக்கும்
ஆங்கார வேர் பறித்து ஆளும் செருத்தணி ஐங்கரனே! 10

உண்டத்தையே பின்னும் உண்டும், உடுத்ததையே உடுத்தும்,
கண்டதையே பின்னும் கண்டே உழலும் கயவனை ஆள் —
பண்டத்தையே நிகர் சொல் உமையாள் பெற்ற பாலகனே!
அண்டத்தை ஆளும் திருத்தணிகாபுரி ஐங்கரனே! 11

மண் ஆள வேண்டினும், பாதலம் ஆள மதித்திடினும்,
விண் ஆள வேண்டினும், உன் அருளே அன்றி வேறு இலைகாண் —
கண்ணுளனே! செழுங் கற்பகமே! எம் கயமுகனே!
அண்ணுமலை அருளும் தணிகாபுரி ஐங்கரனே! 12

கையால் தொழுதிலன்; கண்ணால் உன் மேனியைக் கண்டறியேன்;
பொய் ஆம் உடல் எடுத்து, ஏந்திழையார் மயல் பூண்டுநின்றேன்;—
மெய் ஆகிய தெய்வம் நீ அன்றி வேறு இலை; மேதினிமேல்
ஐயா! திருத்தணிகாசலமேல் உறை ஐங்கரனே! 13

காணவும் வேண்டும், நின் பாதாரவிந்தத்தை; கண்டு, துதி
பேணவும் வேண்டும்; ஒழியாத இன்பப் பெருங் கடல் யான்
பூணவும் வேண்டும்; — உனையே வழுத்திய புண்ணியருக்கு
ஆணவம் தீர்க்கும் செருத்தணி மால் வரை ஐங்கரனே! 14

இத்தனை நாள் உனையே இரந்தாலும், இரங்கி அருள்
வைத்து எனை ஆளும் வகை உரையாய்! இது வண்மையதோ? —
முத்து அனையாய், செம்மணி அனையாய், பச்சை மூங்கில் தந்த
அத்தனையே வலம்சூழ் தணிகாசலத்து ஐங்கரனே! 15

'உன்னை அருச்சிக்கில், எல்லாத் துயரும் ஒழிந்து, செல்வம்
மன்னும்' எனும் மறை வாக்கியம் மெய் எனில், வந்து அடுத்த
என்னை அடியரில் கூட்டாதிருப்பது இழிதகவே; —
அன்னை உமை அருள் செல்வா! செருத்தணி ஐங்கரனே! 16

நொந்து, அகம் நைந்து, உனையே நினைத்தாலும்
[கண் நோக்கு அருளி,
வந்து, 'அகம் நைந்திடல்!' என்று எனைத் தேற்றி
[நல்வாழ்வு அளிப்பாய் —
கந்து அகம் தோன்றிய மால் மருகா! வெங் கயமுகன் ஆம்
அந்தகனைத் தடிந்தாய்! தணிகாபுரி ஐங்கரனே! 17

நின் அருள் எய்திடில், வாசவன் ஆகுவன், நீசனுமே;
உன் அருள் இன்று எனில், வாசவன் நீசன் உரு எடுப்பான்;
இன்னது கண்டு உனையே அடுத்தேன்; வரம் ஈந்தருள்வாய்! —
அன்னமும் சொன்னமும் ஈ தணிகாபுரி ஐங்கரனே! 18

ஈகுவையோ வரம், ஈயாது இருப்பைகொலோ எனை யான்
மா கவலைப்படலாமோ? எனக்கு நல் வாழ்வு அளிப்பாய்! —
பாகு விலைப்படும் சொல் உமையாள் பெற்ற பாலகனே!
ஆகுவின்மேல் வரும் தென் தணிகாபுரி ஐங்கரனே! 19

கண்டிலையோ, உன் அடியேன் படும் துயர்? கண்டு, வரம்
உண்டு இலை என்று ஒரு சொல் ஆகிலும் வந்து உரைத்திலையோ?
தொண்டு இலனோ? உனக்கு எந்நாளும அன்பின்
[தொடர்பு இலனோ?—
அண்டிலையோ உயிர்தோறும செருத்தணி ஐங்கரனே! 20

கொன்றே உயிர்க்கொலை செய்தாலும், என்தன் கொலைப்பழியை
இன்றே தவிர்த்து, உன் அருள்புரிவாய் என்று
[இரந்து நின்றேன்; —
நன்றே புரியினும் தீதே புரியினும், நானிலத்தில்
அன்றே உயிர்த் துணை ஆகும் செருத்தணி ஐங்கரனே! 21

மெய் ஆன தெய்வம் என்று, உன் பாதம் நெஞ்சில் விடாது இருத்தி
பொய் ஆன செல்வமும் போக்கிநின்றேன்; அது போயிடினும்,
செய் ஆன சிந்தையில உண்டாம் கவலையைத் தீர்த்து அருள்வாய்—
ஐஆனனத்தன் அருள் தணிகாபுரி ஐங்கரனே! 22

கொடுத்தவர்க்கே பின்னும் செல்வம் கொடுத்தனை;
[கும்பிட்டு உன் சீர்
தொடுத்தவர்க்கே அருள் செய்யாதிருப்பது என்? சொல்லியிடாய்! —
கெடுத்தவர்க்கே வரும் கேடு என்பரால், மதி கெட்டவர்கள்; —
அடுத்தவர்க்கே அருள் செய்யும் செருத்தணி ஐங்கரனே! 23

காலோ கடுத்திட ஓடிவந்தேன்; உனைக் கைதொழுதேன்;
மாலோ மனத்தில் பெரிது உடையேன்; உனை வந்தித்து, என்றும்
பாலோடு அனமும் பருகேன்; இரவினில் பாய் உறங்கேன்;
ஆலோசனை செய்யவேண்டாம்; — செருத்தணி ஐங்கரனே! 24

கத்தி முகத்தில் நடிப்பவர்போல், உனைக் காதலித்தோர்
பத்தி முகத்தில் எழும் சுடரே! அருட்பார்வை அருள்—
சத்தி முகத்து இரு கண்மணியே! சிவன்தன் மகனே!
அத்தி முகத்தவனே! தணிகாபுரி ஐங்கரனே! 25

சா வேதனை சொல்லத்தான் முடியாது; சனனம் உறும்
மா வேதனையும் அம் மாத்திரமே; இடை மன்மதன் எய்
பூ வேதனை சொல்லப் போமோ? வறுமையில் புக்கு அழுந்தும்
ஆ வேதனை தவிர்த்து ஆள்வாய்! — செருத்தணி ஐங்கரனே! 26

கொம்பு உலவும் புழுக் கூடாம் உடலம், கொடுஞ் சமர் செய்
செம்புலம் ஆக்கி, தினம்தினம் போர்செய்யும் சித்தசனுர்
வம்பு உலவும் கொங்கையார் மயல் பூட்டி மயக்கியிடும்;
ஐம் புலன் என்வசம் ஆமோ? — செருத்தணி ஐங்கரனே! 27

வேள் ஆக்கிய மயல் யாவையும் போக்கி, வினை அனைத்தும்
தூள் ஆக்கி, மேல்வரும் துன்பங்கள் நீக்கி, நின் தொண்டரை என்
கேள் ஆக்கியே, நமன் கிட்டாமல் தாக்கி, நின் கீர்த்தி சொல்லும்
ஆள் ஆக்கிக்கொண்டு, எனை ஆள்வாய் — செருத்தணி
[ ஐங்கரனே! 28

தீ கண்ட பஞ்சு என வெந்திடும் யான் புரி தீமை எல்லாம்;
நீ கண்டனை எனில், மேலான வாழ்வு நிலைபெறுமே! —
பாகு அண்டு சொல் உமை பாலா! கடல்வண்ணன்,
[ பங்கயத்தோன்,
ஆகண்டலன் பணிந்து ஏத்தும் செருத்தணி ஐங்கரனே! 29

மறுகும் துயரொடு மைந்தர் இல்லாமல் வருந்தி, உனைக்
குறுகும் கொடியன் இடர் களைந்து, இன்பம் கொடுத்தருள்வாய் —
இறுகும் தயிர் உறி எட்டி உண்டோனுக்கு எழில் மருகா!
அறுகும் திருமுடி வைப்போய்! செருத்தணி ஐங்கரனே! 30

கோசாரம் என்பர், கொடுவினை என்பர், செய் குற்றம் என்பர்,
மாசு ஆரும் நாள் என்பர், மா மாயைதான் என்பர்;
[மற்று இவைகள்
தேசு ஆரும் நீ கடைக்கண் நோக்கு அளித்திடின்,
[சிந்திடும்காண் —
ஆசார ஈனர் அறியாச் செருத்தணி ஐங்கரனே! 31

நிலம் காவல் வேண்டினும், நேரிழை வேண்டினும்,
[நீண்ட செம்பொன்
தலம் காவல் வேண்டினும், சந்ததி வேண்டினும், சத்துருவின்
குலம் காத வேண்டினும், உன்னை அல்லாது ஒன்றும் கூடரிதே —
அலங்கார வேலனுக்கு அண்ணு! செருத்தணி ஐங்கரனே! 32

வீட்டுக்கு இசைந்த மனையாளும், மக்களும், வேண்டி உன் சீர்ப்
பாட்டுக்கு இசைந்தபடி உரைத்தேன்; வரம் பார்த்து அளிப்பாய் —
கோட்டுக்கு இசைந்த கரிமுகனே! செம்பொற்கூடந்தனுள்
ஆட்டுக்கு இசைந்தவன் மைந்தா! செருத்தணி ஐங்கரனே! 33

மிடியால் உயிர் படு வேதனைதானும், வினை இரண்டால்
முடியாச் சனனமும், மும் மல வாதையும், மற்றும் அற,
வடியாச் சலதி எனும் அருட்பார்வை வழங்கிடுவாய் —
அடியார் உளத்தில் குடி ஆம் செருத்தணி ஐங்கரனே! 34

கவி, காரி, இந்து, அரி, சேய், புதன், பொன்னவன், கார் அரவம்
குவி காரியங்கள் பொல்லாங்கு செய்யாது அன்பு கூர்ந்து
[அளிப்பாய் —
நவிகாரி ஆம் விழி வல்லபையோடு நயந்திருந்தும்
அவிகாரியாய் ஒளிர் தேவே! செருத்தணி ஐங்கரனே! 35

தவம் ஒருகோடி புரிந்தோர்க்கு எட்டாத தாமரைத்தாள்
பவம் ஒருகோடி புரிந்த என் நெஞ்சகம் பாய்ந்திடுமோ? —
சிவம் ஒளிர் காசியில் துண்டி விநாயகச் செல்வன் என்றே
அவமதி நீக்கிய வாழ்வே! செருத்தணி ஐங்கரனே! 36

தானம் தவம் பல செய்யேன்; நடுநிலை சார்ந்து நில்லேன்;
ஈனம் தரும் அபசாரங்களே செயும் இச்சையுளேன்;
நான் இந்த வீண்பழியால் அழியாது இந்த நானிலத்தில்
ஆனந்த வாழ்வு அளித்து ஆள்வாய் — செருத்தணி ஐங்கரனே! 37

போகாத பாவங்கள் போக்குவிப்பாய்; அறம் பூண வைப்பாய்;
சாகாத நல் வரம் ஈந்திடுவாய்; அன்பு சார வைப்பாய்;
மகாதிபரும் வணங்கச் செய்வாய்; இந்த மண்ணில் உன்னால்
ஆகாத காரியம் உண்டோ? — செருத்தணி ஐங்கரனே! 38

மாதாவும் தந்தையும் மைந்தரும் சுற்றமும் வாழ்வும் உன் தன்
பாதாரவிந்தம் அல்லால், இனி வேறு ஒரு பற்றும் இலேன்; —
வேதாவும் வாசவனும் திருமாலும் விழுந்து இறைஞ்சும்
ஆதார மூலத்து உறைவாய்! செருத்தணி ஐங்கரனே! 39

சாம் காலமும் உடல் வேம் காலமும் அதில் தங்கும் உயிர்
போம் காலமும் அயல் நீங்காது எமன் கரும்போத்தில் இவர்ந்து
ஓங்கு ஆலகாலம் என வரும்போது, எதிர் ஓடிவந்தே
ஆம் காலம் ஆக்கி அருள்வாய்; — செருத்தணி ஐங்கரனே! 40

சொன்னமும் தா; நல்ல தோகையும் தா; நல் துரைத்தனம் தா;
வன்னமும் தா; பெரு வாழ்வையும் தா; சிறு மைந்தரும் தா;
இன்னமும் சென்மம் எடுத்தால், ஒருவருக்கு ஈகையும் தா;
அன்னமும் தா; முத்தியும் தா; — செருத்தணி ஐங்கரனே! 41

பட்டாங்கு பேசும் பரமாதர் இச்சையைப் பற்று அற நான்
விட்டு, ஆங்கு நின் கழல் சேர்வது என்றோ? — கஞ்ச மென்மலர்ப்பூ
மொட்டு ஆம் குவிமுலைச் சித்தியும் புத்தியும் முன் பணிந்தோர்க்கு
அட்டாங்க யோகம் தரும் தணிகாபுரி ஐங்கரனே! 42

மீ உயர் வான் சுழல் முப்புரம் மீது வெகுண்டு, இறைவன்
மா இரு ஞாலத் திருத்தேரில் ஏறி வரும்பொழுது,
நீ இருசோடு அச்சு ஒடித்தாய் எனக் கண்டு, நின்று தொழுது
ஆயிரம் நாமமும் ஓதும்; — செருத்தணி ஐங்கரனே! 43

செம் போது நந்தவனத்துக்கு நீர் என்று தேவர் இறை
பைம் போதினால் அருச்சித்திட, காக்கையின் பாய்ந்து, சையக்
கும்போதய முனி கும்பத்தைச் சாய்த்திட, கோபம் அகன்று
அம்போதி உண்டவன் ஏத்தும் செருத்தணி ஐங்கரனே! 44

மோகாவிகாரத்தில் மூழ்கிக் கிடப்பினும், முண்டகத்தாள்
மா காதல் கொண்டனன்; மெய்யாகப் பேசி வரம் அளிப்பாய்; —
தேகாபிமானத்தைத் தீர்ந்தே அருச்சனை செய்பவர்மேல்
ஆகாமியம் செலவொட்டாய்! செருத்தணி ஐங்கரனே! 45

பஞ்சு அலங்காரப் பத மாதர்மேல் வைத்த பார்வையை நின்
செஞ் சிலம்பு ஆர் கழற் போதில் வையாது உழல் தீவினையேன்
நெஞ்சிலும் வீற்றிருந்தாய்; அடியேன் பிழை நீக்கி, இனி
அஞ்சல் என்று ஆளத் தகாதோ? — செருத்தணி ஐங்கரனே! 46

சந்தானம், கற்பகம், தண் பாரிசாதம், கடஞ் சினை சேர்
மந்தாரம், பைம் பொன் மலர் தேவதாரம், மணிநிதியா
நொந்தார் இளைப்பு ஆற வேண்டிற்று எல்லாம் தரும்
[நோக்கம் எனும்
அம் தாமரை அருள் செய்வாய் — செருத்தணி ஐங்கரனே! 47

செம்பஞ்சி ஊட்டிய நூபுரத் தாள்-மலர் சித்தி புத்தி
உம் பங்கு இருபுடை மேவிட, மூடிக ஊர்திமிசைக்
கொம்பு ஒன்றும் ஆனை முகத்தொடு காட்சிகொடுத்து
[அளிப்பாய் —
அம்பு ஐந்தினோன் மைத்துனனே! செருத்தணி ஐங்கரனே! 48

தண்டம் கரம் கொண்டு, எருமைக்கடாமிசை, தான் இவர்ந்து
சண்டன் வரும்பொழுது, அஞ்சல் என்று ஆளத் தகும்; — ஒரு நீ,
கண்டம் பலவிதமாய் இருபத்தொரு காரணத்தால்
அண்டம் படைத்து அழித்து ஆளும் செருத்தணி ஐங்கரனே! 49

சூலமும் பாசக் கயிறும் பிடித்து, எமதூதர் வந்து,
காலமும் பார்த்துக் கணக்கிட்டு உயிர் வவ்வும் காலத்தில் உன்
கோலமும் காட்டி, நின் பாதாரவிந்தம் கொடுத்தருள்வாய் —
ஆலம் உண்டோன் அருள் மைந்தா! செருத்தணி ஐங்கரனே! 50

நோ அணங்கு ஈளை, இருமல், குளிர் வெப்பு நோய், முடம், கூன்,
நா வணம் சேர் விக்கலால், இறவாமல் நயந்து அளிப்பாய் —
தூ வணம் கூர் சங்கு, முத்தம், துகிர், உப்பும் துன்னிடலால்,
ஆவணம் ஒதைக் கடல் ஆம் செருத்தணி ஐங்கரனே! 51

கற்பு அகலாத மனையாளும் மக்களும் காசினியும்
பல்பகலாய் உறும் ஆயுளும் வேண்டி, நின்பால் அடைந்தேன்;—
வெற்பு அகலா அரவின் மணிராசியின் வெங்கதிரால்
அல் பகலாகி ஒளிர் தணிகாபுரி ஐங்கரனே! 52

நம்பலன் உன் திருப் பாதாரவிந்தத்தை; நாரியர் வாய்த்
தம்பலம் உண்டு தடுமாறும் என்னைத் தடுத்து அருள்வாய் —
வம்பு அலங்கல் குழல் வேசையர், ஆடும் மயிலினம் போல்,
அம்பலம் தெற்றியில் ஆடும் செருத்தணி ஐங்கரனே! 53

பூ விரைந்தே வலஞ்செய்தாலும், தீர்த்தங்கள் புக்கிடினும்,
பா விரைந்து ஓதி உனைப் பணியார் வெம் பவம் அறுமோ? —
மா விரைக் காந்தள் அங்கை நீட்ட, வேங்கை மலருடன் பொன் -
ஆவிரையும் பொன் சொரி தணிகாசலத்து ஐங்கரனே! 54

தம் காந்தரைத் தவிர் வேசையர் போல, நின்தன்னை மறந்து,
இங்கு ஆம் துணை என்று இமையோர் பலரையும் ஏத்தி
[நைந்தேன்; —
செங்காந்தள், வானில் செலும் மதியைத் தொடர் தீயரவின்
அங்காந்து எழுந்து, மலர் தணிகாசலத்து ஐங்கரனே! 55

தரைப்பால் புரந்தரன் நாட்டிய சோலை தழைப்ப, முன்னம்
திரைக் காவிரி தந்த சீர்போல் அருள் - வெள்ளம் தேக்கியிடாய்; —
வரைச் சாரல் வேட மடவார் வதன மதியினைக் கண்டு,
அரக்காம்பல் விள்ளும் தடம் சூழ் செருத்தணி ஐங்கரனே! 56

இந்தனத்து அங்கி என உயிர்தோறும் இருந்தும், என்தன்
சிந்தனைக்கு உற்ற துயர் அறியாதது என்? செப்பிடுவாய்! —
சந்தனக்கோடு இந்து எனும் கலில் தேய்க்க, விண் சார் மடவார்
அம் தனக் கோட்டில் அணி தணிகாசலத்து ஐங்கரனே! 57

கஞ்சனை, கண்ணனை, விண்ணவர் கோனைக் கடுந்துயர் செய்
நஞ்சு எனத் தோன்று சிந்துரனைக் கொல் விறல் நான்
[மறவேன் —
தஞ்சு எனக் காளையர் நெஞ்சில் புதைபொருள்தன்னை, மின்னர்
அஞ்சனக் கோல்கொண்டு, அகழும் செருத்தணி ஐங்கரனே! 58

ஈர் - ஏழ் உலகும் பெயர்த்திடு மூடிகத்து ஏறி நின்றாய்;
ஓர் ஏழ் பவத்து உழல் என் நெஞ்ச மூடிகம் ஊர்ந்திடுவாய்! —
பேர் ஏழ் முனிவர் அருள் போலத் தீர்த்தம் பெருகி, நித்தம்
ஆர் ஏழ் சுனைகள் அழகாம் செருத்தணி ஐங்கரனே! 59

பாரத்துவாசன் மகனாய் முனிவர் பயம் தவிர்த்தாய்,
பேர் அத்துவா சம்பந்தத்தால் உழலும் என் பித்து அறுப்பாய்! —
நீரத்து உவாமதி மண்டல மீது, நிலவு வெளி
ஆர, துவாதச அந்தச் செருத்தணி ஐங்கரனே! 60

நல்ல வரேணியன் புத்திரனாய் அருள் நல்கினை; வீடு
ஒல்ல வரேணி எனும் ஞானம் ஒன்று எனக்கு ஓதியிடாய் —
வில்லவர் ஏணியின்மேல் சரம் தூண்ட, வெருண்டு துள்ளி,
அல்லவர் ஏணியைத் தாண்டும் செருத்தணி ஐங்கரனே! 61

நீ வலங்கோட்டினில் பாரதம் தீட்டினை; நித்தலும் நான்
மேவு அலங்கு ஓட்டினும் மேரு முற்றாது இடம்; வீடு அருள்வாய்! —
நாவல் அம் கோட்டுக் கனி ஊகம் நல்கி, விண் நாட்டு அரம்பை
ஆ வல் அங்கு ஓட்டும் செருத்தணிகாபுரி ஐங்கரனே! 62

நிழல் காட்டிய சிறு கண்கடை காட்டி, என் நெஞ்சில் இரு
கழல் காட்டி, உன் திருமேனியும் காட்டி, கதி அளிப்பாய்! —
தழல் காட்டிய தினை மேய்ந்து, செங்காந்தளைத் தாழ் கரிகள்
அழல் காட்டியது என அஞ்சும் செருத்தணி ஐங்கரனே! 63

நா மணக்கும் புகழ் ஓதவும், நின் உரு நாடவும் கண்,
தே மணக்கும் கழல் போற்றவும் என் கை, சிறந்து அருள்வாய்! —
பூ மணக்கும் தடஞ் சாரலில் வேங்கையைப் புல்லி எழுந்து
ஆ மணக்கும் புகழ் மேவும் செருத்தணி ஐங்கரனே! 64

எரியும் திரியும் எனவே என் நெஞ்சத்து இருப்பினும், மால்
பரியும், புரியும் கருணை என்றே உன் பதம் தொழுவேன்; —
நரியும் பரியும் ஒன்றாக்கிய கோன் தொண்டர் நற்பணியே
அரியும் கரியும் புரி தணிகாபுரி ஐங்கரனே! 65

தெரிக்கும் அடியவர்க்கு ஒன்றும் கொடாதவர் தேடு செம்பொன்
எரிக்கும் பசாசுக்கும் கள்ளர்க்கும் கொள்ளைக்கும் ஈந்து
[ அழிவார்; —
கரிக்கும் புலிக்கும் கரடிக்கும் மானின் கணத்தினுக்கும்
அரிக்கும் பகை அகலும் தணிகாசலத்து ஐங்கரனே! 66

செவ்விக் கணிகையர் மால் உழப்போர் நின் செயல் உணரார்;
கவ்விச் சருமம் தினும் நாய் அமுதத்தைக் கண்டிடுமோ? —
தவ்வுற்ற வெற்புகள் நீலம் முப்போது அலர் சத்தியத்தால்
அவ்வித்து அழுக்கு அறுக்கும் தணிகாசலத்து ஐங்கரனே! 67

வடி ஒன்று வேற்கண் மடவார் கலவிக்கள் வாய் மடுத்தேன்
மிடி ஒன்று பாவ வினை தவிர்த்து, என் உளம் மேவியிடாய்! —
துடி ஒன்று சங்கரன் கைத்தலை முத் தலைச் சூலம் என
அடி ஒன்று மூன்று உகம் ஆகும் செருத்தணி ஐங்கரனே! 68

தமரகத்தாய் என்று உனைப் பணியாது, எழில் தையலர்பால்,
கமர் அகத்து ஊற்றிய பால்போல், வறிது கழிந்தது என் நாள்; —
குமர கத்தாவுக்கு வெஞ்சினச் சூர் எனும் கோள் அரக்கன்
அமரகத்து ஆக்கும் செருத் தணிகாசலத்து ஐங்கரனே! 69

விநாயகன் என்னும் உனைப் பணியாமல், வெறுவியரை
என் நாயகன் என்று துதித்து உழல்வேன் வினை என்று
[ அறுமோ? —
செல் நாயகன் தண் சுனைக் காவி முப்போதும் செழும் பகலில்
அல் நாயகன் இன்றி அலர் தணிகாசலத்து ஐங்கரனே! 70

கரகத்தை ஒத்த முலை மடவார் எழில்-காட்டில் அலை
விரகத்தை நீக்கி, நின் பாதாரவிந்த நல் வீடு அளிப்பாய்! —
சரபத்தைத் தாக்கிடும் வெம் புலி, வேழத்தைத் தாக்கும் அரி,
அரவத்தைக் கண்டு அஞ்சி ஓடும் செருத்தணி ஐங்கரனே! 71

திடவிய மூலக் கணபதி ஆம் உனைச் சிந்தை செய்யாது
இடவிய பூதல மானிடர் யாரையும் ஏத்தி நைந்தேன்! —
தடவிய வீணை இசை கேட்டு அசுணங்கள் தங்கு சந்தத்து
அடவிகள் சூழும் திருத்தணிகாசலத்து ஐங்கரனே! 72

திங்கள், அரா, எண்ணெய், நீர், தாமரை, செச்சை சென்னி
[வைத்தும்
நுங்கு அனல் ஆசுர வெம்மைக்கு அறுகு நுகர்ந்து அணிந்தாய் —
தங்கிய சாரல் தனி வேய் நிறை மதி தாவி நிற்றல்
அங்கசன் வெண்குடைக் காம்பு ஆம் செருத்தணி ஐங்கரனே! 73

நிலம், நீர், நெருப்பு, வளி, வான், மதி, அரி, நீண்ட உயிர்
குலம் ஆன எட்டு உரு ஆம் உன்திருவடி கூட்டியிடாய் —
தலம் ஆர் திருநந்தி ஆற்றினில் மூழ்கும் தவத்தினர்க்கு
அலம் ஆர் பிறப்பு ஒழிக்கும் தணிகாபுரி ஐங்கரனே! 74

பங்கேருகன் தரு பாவையர் செங்கடைப் பார்வை தந்து, உன்
கொங்கு ஏர் உக அடித்தாமரை நீழல் குடி அளிப்பாய்! —
தெங்கு ஏர் உகக் கனி சிந்திடும் வாளை செறி தடம் சூழ்ந்து,
அங்கு ஏர் உகங்கள் அழியாச் செருத்தணி ஐங்கரனே! 75

விண்ணோரும், பாதலநாட்டு உறைவோரும், இம் மேதினி ஆம்
மண்ணோரும், நீ முதல் தெய்வம் என்றே உனை வாழ்த்திடுவார்; —
பண் ஒரும் சொல் மடவார் இடைக்கு அஞ்சி முன்பார்த்து, முழை
அண் ஒரும் கேசரி வாழ் தணிகாசலத்து ஐங்கரனே! 76

தேடற்கு இசைந்திடும் செம்பொனும் கல்வியும், சித்தி எட்டும்
கூடற்கு இசைந்திடும்; முத்தியும் வேண்டில், கொடுப்பவன் நீ! —
பாடற்கு இசைந்திடும் விஞ்சையர் வீணை பயில் இசை கேட்டு
ஆடற்கு இசைந்த மயில் சூழ் செருத்தணி ஐங்கரனே! 77

செவி, நாசி, காத்திரம், கண், வாய், எனும் பொறி சீர் கலங்கி,
குவி நாடி மூன்றும் குலைந்திடும் போது உனைக் கூட அருள் —
புவி நாடும் அம்பலம், கச்சி, அண்ணுமலை, பூங்குடந்தை,
அவிநாசி ஆகும் செருத்தணிகாபுரி ஐங்கரனே! 78

சாக்கிரம் சொப்பனத்தோடே சுழுத்தி தகுந் துரியம்
தாக்கும் அதீதம் எனும் ஐந்து அவத்தை தவிர்த்து எனை ஆள் —
போக்கருஞ் சிந்துவைச் சிந்தும்படி உயிர்போக்கி, வெற்றி
ஆக்கிடும் மாமுகனே! தணிகாபுரி ஐங்கரனே! 79

கோங்கு ஆர் அரும்பு முலையார் மயக்கில் குலைந்து, மனம்
நீங்காப் பிறப்பில் அலைவேனை ஆள நினைந்திடுவாய்! —
பாங்கு ஆரும் இந்திர தீர்த்தம் முப்போதும் பசுங்குவளை
ஆம் காலம் மூன்றும் அலர் தணிகாசலத்து ஐங்கரனே! 80

எரியைப் பலாலக்குவைக்கு ஊட்டுமாறு என் எழு பிறப்பு ஆம்
புரியைத் திருவருள் ஞானக்கினியில் பொடிபடுத்தாய்! —
கரியைப் பிறகிட வேட்டுவர் எய்த கணை, எதிர் போம்
அரியைத் துளைத்து எழுந்து ஏகும் செருத்தணி ஐங்கரனே! 81

பாட்டைப் படித்து, உன் கழற்பூசை செய்து, பவம் எனும் ஓர்
காட்டைக் கடக்கும் வகை அறியேன்; கடைக்கண் அளிப்பாய்! —
சேட்டைக் கவிகள் விளவின் கனிகொண்டு சேண் வழிப் போம்
ஆட்டைத் துரக்கும் திருத்தணிகாசலத்து ஐங்கரனே! 82

நாயைச் சிவிகையில் ஏற்றிவைத்தாங்கு ஒரு நாயினுக்குத்
தாயைப் பொருவும் கருணை செய்தாய்; நன்றிதான் மறவேன்; —
வேயைக் கரி வளைத்தே தழை தின்று, விட, குறியோன்
ஆயைப் புடைத்து உடைக்கும் தணிகாசலத்து ஐங்கரனே! 83

குமிழ் ஒக்கும் நாசி மடந்தையர் அல்குல் குழியில் விழுந்து
உமிழ் பல் கறைத் தம்பலம் நுகர்வேன், இனி உய்வது என்றோ? —
தமிழ் ஒக்கும் தீம் சொல் மறததியர் வானகத் தையலர் கை
அமுதுக்குத் தேன் விலை மாறும் செருத்தணி ஐங்கரனே! 84

சருகு ஒட்டும் சூழ்வளிக்குள்ளே சுழலும் சருகு எனவே
பெருகு ஒட்டம் ஆம் பிறப்பில் சுழல்வேன், உய்யும் பெற்றி
[சொல்லாய் —
குருகு ஒட்டும் வேட மடவார் இசைக்குக் குழைந்து அசுணம்
அருகு ஒட்டு வேங்கையை நீங்காச் செருத்தணி ஐங்கரனே! 85

பஞ்சானனத்தினுக்கு ஒப்பு ஆம் உனை விட்டுப் பாவலர்கள்
குஞ்சான நத்தையை ஒப்பாரைப் பாடிக் குறை நிரப்பார், —
மஞ்சான், அனந்தன் அடி முடி தேட, மலைத் தழல் ஆம்
அஞ்சு ஆனனத்தன் அருள் தணிகாபுரி ஐங்கரனே! 86

பழி யாவரும் சொல, மங்கையர் மோகப் படிற்று ஒழுக்கான்
மொழியா அருந்துயர் கொண்டேற்கு அருளுதி, முத்தி! — நல்கும்
கொழியா அருவி அருள் ஒழுக்கு ஆம் எனக் கொண்டு, எவர்க்கும்
அழியா வரம் தரும் தென் தணிகாசலத்து ஐங்கரனே! 87

பஞ்சு அனக் கண்கள் இருண்டு, செவ்வாயொடு பல்லும் கிட்டி,
நஞ்சு அன மேனி நமன் கையில் சிக்கும் அந் நாளில் அருள்! —
மஞ்சனம் ஆட்டி வரம் பெறுமாறு மருவுதல் போல்
அஞ்சன மேகம் புடை சூழ் செருத்தணி ஐங்கரனே! 88

வேண்டுக, யாம் உன்தன் பாதாரவிந்தத்தின் மெய்ம்மை அன்பு!
தூண்டுக, நீ அருள்! வேறு ஒன்று வேண்டித் தொழுகிலம் யாம்;
ஈண்டு உகந்து ஏறும் இளம்பிறை மல்லிகை இண்டை முடித்து,
ஆண்டுகள்தோறும் அழியாச் செருத்தணி ஐங்கரனே! 89

நீ இருந்தும், துதி பூசை செய்யாது உழல் நீசருக்கு
வாய் இருந்தால் என்ன? கை இருந்தால் என்ன? மா மரமே! —
மா இரு ஞாலத்தைத் தேர் ஆக்கும் ஈசன் வழுத்தியிடும்
ஆயிர நாமம் உடையாய்! செருத்தணி ஐங்கரனே! 90

சூதும் களவும் அழுக்காறும் வஞ்சமும் சூழ் உயிரைக்
காதும் கொலையும் உடையேனை ஆளும் கணக்கு உரையாய்! —
ஓதும் அரியும் கரியும் புல்வாயும் முழைப் புலியும்
ஆதும் பகைமை அகல் தணிகாசலத்து ஐங்கரனே! 91

மத்த மதம் பொழி வாரணம் போல மதி மயங்கி,
சித்தம்அதனில் உனை இருத்தேன், துயர் தீர்த்து அருள்வாய்! —
சத்தம் புகலும் தமிழ்ப்புலவோர்க்குச் செந்தாட் கிளிகள்
அத்தம் புகலும் பொழில் சூழ் செருத்தணி ஐங்கரனே! 92

சவ்வாது பூசிய வேசையர் ஆசைதனில் சுழல்வேன்
எவ்வாறு முத்திக் கரை அடைவேன், இனி யான்! உரையாய்! —
செவ் வானகப் பிறை நின் தனிக் கோட்டொடு சேய் உருவம்
அவ்வாறு மானும் திருத்தணிகாசலத்து ஐங்கரனே! 93

உங்கார சத்தத்தினுல் எனது ஆணவம் ஒட்டுதற்குப்
பங்கு ஆரும் வல்லபையோடு என்று நீ வரும்? பண்பு உரையாய் —
சிங்கார வேட மடவார் திணை குத்தும் சேவுலக்கை
அங்காரகன் உடல் தாக்கும் செருத்தணி ஐங்கரனே! 94

தானுக் கனிந்து தணியும் வெங்காட்டுத் தழல் எனவே
நானுப் பிறந்து இறந்து எய்த்தேனைக் காக்கும் நயம் உரையாய்! —
தேன் ஆக்கியே மொய்க்கும் ஈயினை ஓட்டி, தினமும் வெற்பர்
ஆனுச் செந்தேன் கவரும் தணிகாசலத்து ஐங்கரனே! 95

வெட்ட வெட்டத் தளிர்க்கும் காடுபோல மிகும் பிறவி
ஒட்ட ஒட்டித் தொடரும் தீவினையை ஒழித்தருள்வாய்! —
வட்டம் இட்டுக் களி மா மயில் ஆட, வருமுகில் நீர்
அட்ட, எட்டிக் கலை மான் பாய் செருத்தணி ஐங்கரனே! 96

முதலைக் கிடங்கு அலர் முண்டகவல்லியின் முட்டுறல்போல்
குதலைக் கிளிமொழியார் வயத்து ஆம் என் குறை தவிர்ப்பாய்! —
பதலைப் பொருப்பர் கவலைக் கிழங்கொடு பாய்புலியின்
அதளைத் துறவியர்க்கு ஈயும் செருத்தணி ஐங்கரனே! 97

சித்திரகுத்தன் கணக்கின்படி எமதூதர் வந்து,
குத்திரஞ் செய்து பிடியாமுன் வீட்டினில் கூட்டியிடாய்! —
சத்திர வேள்விப் புகை, ஆதவன் எதிர் சார் பகை நீங்கு
அத்திரம் ஆகி, எழும் தணிகாபுரி ஐங்கரனே! 98

மகத்திடை வந்த சனிபோல் எனைத் தொடர் வல் வினையை
நுகத்திடை வந்த கதிர் போல வந்து எதிர் நூறியிடாய்! —
பகத்திடை வந்திடு கண்ணுயிரவனும் பங்கயனும்
அகத்திடை வைத்த மலை ஆம் செருத்தணி ஐங்கரனே! 99

கொடுத்தால் எனக்கு வரம், உனக்கே புகழ் கூடும்; அன்றி
விடுத்தால், உனக்குப் பழி ஆகும்; நான் சொல்ல வேண்டுவதோ? —
தொடுத்தாலும் பாடல், உளம் நினைத்தாலும், துயர்அற வந்து
அடுத்தாலும், முத்தி தரும் தணிகாபுரி ஐங்கரனே! 100

**தணிகை ஐங்கர மாலை முற்றும்**

## 2. தயாநிதி மாலை

நீர் அணிமலர் கொண்டு அருச்சனை புரியேன்;
 நின் திருத்தாள் பணிந்து அறியேன்;
சீர் அணி தமிழால் ஏத்தவும் அறியேன்;
 தீவினை தொலைத்து, அருள்புரியாய்! —
பூரணி, உலக காரணி, இமயப்
 பொருப்பு - இறை அளித்த முக்கண்ணி,
ஆரணி, விமலை, அருள் செருத்தணிகை
 ஆறு மா முக தயா நிதியே! 1

நீதியும் அறியேன்; நெறிகளும் அறியேன்;
 நின் திருப்புகழ் அனுதினமும்
ஓதியும் அறியேன்; ஆயினும் வரங்கள்
 உகந்து எனக்கு அருள்புரிந்திடுவாய்! —
சாதியும் குரவும் வேங்கை குங்குமமும்
 சந்தனங்களும் மணம் குலவும்
ஆதி எம் பரமன் அருள் திருத்தணிகை
 ஆறு மா முக தயா நிதியே! 2

எண்ணிலேன், உனது சடக்கரம் அதனை;
 இருந் தவம், நோன்பு, நல் விரதம்
பண்ணிலேன்; துதிகள் படித்திலேன்; அதிக
 பாவியேன் தனக்கு அருளுவையோ? —
விண்ணில் வானவர் தம் சிறைதனைத் தவிர்த்து,
 வேண்டிய வரங்களை அளித்த
அண்ணலே! தணிகைப் பதிதனில் உறையும்
 ஆறு மா முக தயா நிதியே! 3

முன் செய் தீவினையோ; பின் செய் தீவினையோ
மூண்டது? நல்குரவு-அதனுக்கு
என் செய்கேன், அடியேன்! துயர்களைந்து உயர்வீடு
எனக்கு அருள் செய்யும் நாள் உளதோ? —
மின் செய் நூல் இடையாள் வேடர்தம் சிறுமி
விரும்பி வாழ் தினைப்புனம்-அதனில்
அன்பு சேர் கணியாய் நின்றிடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 4

காதரம் அனைத்தும் தொலைத்து, உனது அடியைக்
காட்டி, உன் அடியரில் கூட்டி,
சீதரன் பிரமன் அறியொணு வீட்டில்
சேர்த்தி ஆட்கொள்ளும் நாள் உளதோ? —
பூதரம் அனைய சிங்க மா சூரன்,
பொரு கரிமுகன், அசுரேசன்
ஆதரம் அனைத்தும் தொலைத்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 5

மேருவைச் சேரும் காகம் பொன் நிறமாய்
விளங்கல் போல், உன் அடிக் கமலச்
சாருவைச் சேரும் எனையும் நின் அடியார்-
தம்மொடும் கூட்டி ஆண்டருள்வாய்! —
தாருவைச் சேரும் வல்லிபோல் இருவர்
தனம் பட விளங்கு திண் புயனே!
ஆர் உவப்புடன் வாஞர் பணி தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 6

சிவனடியவருக்கு இடர் புரிந்தாலும்,
தீவினை பல புரிந்தாலும்,
பவ நெறிக்கு உரிய பாவமே செயினும்,
பஞ்ச பாதகங்கள் செய்தாலும்,
தவ நிலை குலையத் தாழ்வு செய்தாலும்,
சமித்து, எனைப் புரந்து அளித்திடுவாய்! —
அவன் அவள் அதுவாய் அமர் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 7

சிறப்பொடு பூசை புரிகிலேன் எனினும்,
சினகரம் வலம்புரியாமல்
மறப்பொடு நிலத்தில் துட்டரோடு இணங்கி
வாய்மையைப் புகல்கிலேன் எனினும்,
பிறப்புடன் இறப்பு ஆம் கடல் அழுந்தாமல்,
பிரச மா மலர்ப்பதம் தருவாய்!
அறப்பணி புரிவோர்க்கு அருள் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 8

பஞ்ச பாதகமே புரிகினும், முன்னைப்
பவம்தொறும் தீமை செய்திடினும்,
தஞ்சம் நீ என வந்து, அடைந்திடும் கொடியேன்-
தன் பிழை பொறுத்து நல் வரங்கள்
விஞ்சவே அருளி எனைப் புரந்திடில், உன்-
மேல் பிழை சொல்பவர் உளரோ? —
அஞ்சவாகனனுக்கு அருள் திருத்தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 9

மழை இலாப் பயிர்போல் வாடினேன் கருணை
மழை பொழிந்து, யான் முனம் புரியும்
பிழை எலாம் பொறுத்துப் பெருவரம் அளித்து,
பேயனேன் காண வந்து அருள்வாய்! —
தழை எலாம் கீழாய் விண்ணில் வேர் ஓட்டும்
சலதி மாமரம்தனைப் பிளந்த
அழகனே! தணிகை மலையில் வீற்றிருக்கும்
ஆறு மா முக தயாநிதியே! 10

மந்தரம் அனைய பாவமே செயினும்,
வல் வினை பல புரிந்திடினும்,
பந்தனைப் பிறப்பில் அழுந்தினும், உனது
பங்கயப் பாதம் நான் மறவேன் —
சுந்தர முகுந்தன் மருகனே! அடியர்
துயர் எலாம் தவிர்த்த சற்குருவே!
அந்தரத்தவர் நின்று அருச்சனை புரியும்
ஆறு மா முக தயாநிதியே! 11

துக்க சாகரத்தில் அழுந்தி எந் நாளும்
தொலைவு இலாக் கவலை நோய் அடைந்து,
மிக்க பேர் அறிவு குலைந்து நான் புவியில்
வீணிலே திரிவதும் அழகோ? —
தக்க வாழ்வு அருளி, உலகு எலாம் மதிக்கும்
தனி - அரசு எனக்கு அருள்புரிவாய்! —
அக்குமாலையன் ஈன்றருள் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 12

இந்திரன் பதமும் இமையவர் பதமும்
எண் திசைக் காவலர் பதமும்
சந்திரன் பதமும் சூரியன் பதமும்
சக்கர மாயவன் பதமும்
கந்த மா மலரோன் பதவியும் உனது
கடைக்கணல் உதவிய பதமே;
அந்தவாறு எனக்கும் அருள் — திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 13

வேண்டிய வரங்கள் பற்பல உதவி,
வேண்டிய செல்வமும் அளித்து,
சேண்தரும் உனது பாதபங்கயத்தில்
செலுத்திடு பத்தியும் அருளாய்! —
தூண்தரு செம்பொற் புயங்கள் பன்னிரண்டும்
துதிப்பவர் பகை அறுப்பவனே!
ஆண்டலைக் கொடியைப் பிடித்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 14

பெரியவர்தமக்குப் பிழை புரிந்தேனே?
பிறர் மனைதனை விழைந்தேனே?
குரு மொழி இகழ்ந்து, பழித்து உரைத்தேனே?
கொடிய மா மிடியன் நான் மெலிவேன்!
திருவருள் புரிந்து, தீவினை அகற்றிச்
செல்வமும் கல்வியும் தருவாய்! —
அரி அயன் பணியும் ஒரு திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 15

மட்டு இலாப் பாவம்தனைப் புரிந்தாலும்
மலர் அடிக்கு அன்பு இலாது உழலும்
துட்டரோடு உறவு செய்திருந்தாலும்
தூய நின் சந்நிதி அடுத்தால்,
விட்டிடாது இன்னும் இருக்குமோ? இதனை
விரித்து நீ எனக்கு உரைத்திடுவாய்! —
அட்ட மாசித்தி அருள் செருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 16

வாசவன், மலரோன் வேண்டு நல் வரமும்
வாழ்வும் நீ தந்தனை, முன்னம்;
நீசனேன் வேண்டும் வரம் உதவாமல்
நிற்பது நீதியோ? உரையாய்!
பேசியே கலியில் வரம் தரும் தெய்வம்
பிறர் இலை என உனை அடுத்தேன் —
ஆசு அறு முனிவர் தவம் செயும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 17

வெந்த நீறு அணியும் வேதியர் மறையுள்
விதித்திடும் விதிவழி நடப்பது
எந்த நாள்? உனது திருவடிக்கு அன்பாய்
இருப்பதும் எந்த நாள்? உரையாய்! —
இந்துசேகரனுக்கு ஓம் எனும் பொருளை
இருஞ் செவியிடைப் புகல் குரவா!
அந்தம் ஆதியும் நீங்கிடும் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 18

மனம்தனில் உனது திருஉரு நினைக்க,
வாயினால் உன் புகழ் வழுத்த,
கனம் தரு தலையால் உன் கழல் இறைஞ்ச,
கசடனேற்கு என்று அருள்புரிவாய்! —
தனம் தரும் அளகைக்கு அதிபதி தோழன்
தந்தருள் மயூர வாகனனே!
அனந்தனும் பணியும் ஒரு திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 19

பாயும் மா மதம் சேர் மதகரி போலப்
பற்பல தீங்கு செய்திடினும்,
நீயும் ஓர் அறிவு ஆம் அங்குசம் அதனால்
நிறுத்தி, ஆட்கொள்ளும் நாள் உளதோ? —
தாயுமாய் உயிர்க்குத் தந்தையாய் உலகம்-
தனைப் புரந்து அருள் குருபரனே!
ஆயும் மா மறைகள் தேட அருந் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 20

காலமே எழுந்து, உன் திருவடி நினைந்து,
கர மலர் பறித்து, நின் பூசை
சாலவே புரியாது உழலும் நாயடியேன்-
தனக்கு அருள்புரிவது என்று? உரையாய்! —
நீல மா மயில்மேல் ஏறி, ஓர் நொடியில்
நிலவுலகு எலாம் வலம் வருவாய்!
ஆல மா மிடற்றோன் அருள் செருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 21

மா இரும் புவியில் மனிதராய்ப் பிறந்து,
வண்டரை மதன் எனப் புகழ்ந்து,
போய் இரந்து உண்ணும் புலவர் நின் கமலப்
பொன் அடி காண்பதற்கு எளிதோ? —
தாய் இரங்காத பிள்ளைபோல் அடியேன்
தவிப்பது நீதியோ? உரையாய்! —
ஆயிரம் கதிரோன் பணி திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 22

சாத்திரம் அறிந்து, உன் திருவடிக் கமலம்-
தன்னையும் அருச்சனை புரியேன்;
பாத்திரம் அறிந்து பிச்சை இட்டு அறியேன்;
பாவியேன் உய்யும் நாள் உளதோ? —
காத்திரம் படைத்த சிங்கமாசூரன்
கவிழ்ந்திட, அயில் விடுத்தவனே!
ஆத்திரள் மேய்த்தோன் மருகனே! தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 23

காகமும் நரியும் தமது எனும் உடலைக்
காதலித்து உலகு எலாம் அலைந்து,
சோகமும் துயரும் படைத்த நாயடியேன்
துயர் கெட, அருளும் நாள் உளதோ? —
மாகமும் சுரரும் வாழ்ந்திட, சூரன்
மடிந்திட வேல் எறிந்தவனே!
ஆகமம் புகலும் உயர்திருத் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 24

நிலை இலாப் பொன்னும் நிலை இலா மண்ணும்
நிலை இலாப் பெண்ணையும் நினைந்து,
கலை இலா உணர்வோடு எங்கணும் மயங்கும்
கசடனேன் உய்யும் நாள் உளதோ? —
தலை இலாக் கவந்தம் எண் இல நடிப்ப,
தகுவர்தம் சென்னியைத் தடிந்தோய்!
அலை உலாம் சுனை சேர் தணிகை மால்வரை வாழ்
ஆறு மா முக தயா நிதியே! 25

திக்கு வேறு இலை, உன் திருவடி அல்லால்;
தீயனேன் குறை எலாம் புகன்றும்,
மிக்க பேர் அருளைப் புரிந்திடாது இருந்தால்,
மெய் அருள் பொய் எனப்படுமால்;
இக்கணம்தனிலே வேண்டிய வரங்கள்
ஈந்து, நல் வாழ்வு தந்து அருள்வாய்! —
அக்கம் ஈராறு படைத்திடும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 26

உனது மா மலையைத் தினம் வலம்புரிந்தும்,
உபாசனை செய்து இரந்திடினும்
எனது தீவினையைத் தடிந்து அருள் புரியாது
இருப்பதும் உனக்கு அழகியதோ? —
சனகனே முதலாம் முனிவரும் கமலத்
தவசிரேன் ஆதி விண்ணவரும்,
'அனகனே!' என வாழ்த்து எடுத்திடும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 27

பழி இலா உடலும், பயம் இலா மனமும்,
பாதகத்து உடன்படாச் செயலும்,
கழிவு இலா வயதும், குறைவு இலாத் தனமும்,
கடும்பகைதான் இலா அரசும்,
ஒழிவு இலா அறமும் இழிவு இலாக் கதியும்
உனது அடி நம்பினேற்கு அருள்வாய்! —
அழிவு இலாப் பதவி அருள் செருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 28

படைக்கலம் சுமந்து, பகைவரைத் தடிந்து,
பார் எலாம் ஒருதனி ஆண்டு,
மடைக்கலம் சுமந்த மகளிரைப் புணர்ந்து
மைந்தரும் வாழ்வுமே சிறந்து,
கொடைக்கு அலம் இலாது கொடுத்திடு நிதியும்
குலவும் உன் கருணை என்று அறிந்து, உன்
அடைக்கலம் புகுந்தேன்—அருள்புரி தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 29

காலையில் எழுந்து, மஞ்சனம் ஆடி,
கால்களால் வலம் செய; உச்சி
வேலையில் அடியார் பசி கெடச் சமைத்து,
விருந்து செய்வித்திட; அந்தி
மாலையில் தூபம் தீபமும் ஏற்றி
மகிழ்ந்திடும் பேறு எனக்கு உதவாய்! —
ஆலை அம் கழனி சூழ் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 30

குங்குமம் புனுகு சந்தனம் அகரு
குற்குலு கற்புரம் மருவேர்
பைங் கருங்குவளை தண்புனல் கொடு நின்
பதமலர் அருச்சனை புரியும்
புங்கவர் அடிக் குற்றேவல் செய்து ஒழுகும்
புண்ணியம் எனக்கு வந்து உறுமோ? —
அங்குசபாசன் தம்பி ஆம் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 31

நீதியோ உனக்கு? நான் வெகு நாளாய்
நின் திருச் சந்நிதி அடுத்தேன்;
சேதி யாவையுமே செப்பினும் கேளாச்
செவிடர்போல் இருப்பது இங்கு அழகோ?
ஓதுவாய் ஒரு சொல், உண்டு இலை என்ன!
உனக்கு நான் அடிமையும் அலவோ? —
ஆதியே! நடுவே! அந்தமே! தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 32

கார்த்திகை விரதம்தனை மறந்தேனோ?
கந்த சஷ்டியில் பிழைத்தேனோ?
தோத்திரம் செய்யும் தொழில் மறந்தேனோ?
துணை அடிக்கு அன்பு ஒழிந்தேனோ?
பாத்திரம் கொண்டு பலிக்கு உழலாமல்
பாவியேன் துயர் களைந்திடுவாய்! —
ஆத்தர்கள் துணையாய் வளர் திருத்தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 33

கொடியவர் உறவே கொண்டிருந்தேனோ?
கொடு வழக்கிடை தவறினனோ?
குடி மனையவள் கற்பினை அழித்தேனோ?
குற்றங்கள் பல புரிந்தேனோ?
மிடி உறு தமியேன் துயர் எலாம் தவிர்த்து
வேண்டிய செல்வம் நீ அருள்வாய்! —
அடியவர் துணையாய் வரும் திருத்தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 34

செங்கதிர் உலவும் உலகு எலாம் உலவித்
திரிந்து, ஒருசாண் வயிற்றினுக்குக்
கங்குலும் பகலும் இரையினைத் தேடும்
கயவனேன் உய்யும் நாள் உளதோ? —
சங்கரன் மகனே! சதுமுகன் குருவே!
தயித்தியர் தம் குலப் பகையே!
ஐங்கரன் துணையே! உயர் திருத்தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 35

நாரியர்க்கு இரங்கி, மதன நூல் படித்து,
நயம்பெறு சன்னைகள் பேசி,
போர் இயல் கலவிக்கு ஒரு பெரும் புலி ஆம்
புல்லியன் உய்யும் நாள் உளதோ?—
நீர் இயல் கமல மலரினேன் சிரத்தில்
நீண்ட அங்குலியினுல் புடைத்தாய்,
ஆருயிர்க்கு உயிராய் வளர்திருத் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 36

குமரனுய் விருத்தக் கிழவனுய் உடலம்
கூனெடு நரை திரை கொண்டு,
தமர் எலாம் இகழ, உயிர் அகல் பொழுதும்,
'சரவணபவ!' எனுர் உடலம்
கமரிலே புகும் பால் எனப்படும்; அவர்க்கு ஓர்
கதியுமே இலை எனப்படுமால்; —
அமர் எலாம் கடந்த தணிகை மால் வரை வாழ்
ஆறு மா முக தயா நிதியே! 37

கருவி ஓர் முப்பத்தாறினுல் விளங்கும்
காயமோடு இருநிலம் சுவர்க்கம்
மருவியே திரிந்து பிறந்து இறந்து, உழலும்
மடையனேன் உய்யும் நாள் உளதோ? —
குருவி ஓட்டிய வேட்டுவக் குலமகளிர்
குலவிய சாரலில் செந்தேன்
அருவி பாய்ந்து இழியும் தணிகை மால் வரைவாழ்
ஆறு மா முக தயா நிதியே! 38

மா விருந்தினர்தம் பசிகெட உதவும்
வண்மை தந்து, உடல் விடும் பொழுது,
பூவிருந்தவனும், மாயனும் காணுப்
பொன்அடி நீழல் தந்தருள்வாய்! —
கோவினம் பயில் செந்தூர், பரங்குன்று,
குன்றுதோருடல், சோலைமலை,
ஆவினன்குடி, ஏரகம் பயில் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 39

கெறுவியாய் அகந்தை பல புரிந்திடினும்
கெண்டை வாள் விழியினர் கலவி
உறு வியாதியினால் உனை மறந்திடினும்,
உறுபிழை பொறுத்து அருள்புரிவாய்! —
மறு இலாக் கற்பின் வள்ளி தெய்வானை
மணந்திடு மணி வரை மார்பா!
அறிவினோர் அறிவாய் ஒளிர் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 40

தேன் இலங்கிய சொல் மாதரார் வயிற்றில்
திங்கள் ஈரைந்தும் உள் தங்கி,
நானிலம்தனிலே இனிப் பிறவாமல்
நாயினேற்கு அருள்புரிந்திடுவாய்! —
ஊன் இலங்கிய வானவர்களும் அறியா
யோகியர் மனத்திலே விளங்கும்
ஆனில் ஐந்து ஆடும் அரன் அருள் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 41

மன்னவன் மகனை அடுத்திடின், பெரிய
வாழ்வினை அடுத்த போது அளிப்பான்;
பின்னல் அம் சடை உன் பிதாவினை அடுத்தால்
பெரிது நாள் செல்லும் என்று அறிந்தே
உன்னை வந்து அடுத்தேன்; ஆதலால் செல்வம்
உரைத்திடும் முன் எனக்கு அளிப்பாய்! —
அன்ன மென் நடையார் பயில் செருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 42

பகலினும் இரவும் உண்டு உடுத்து உறங்கும்
பயன் அலாது ஒரு பயன் அறியேன்;
புகல் அரும் பரமானந்த வாரிதியில்
புகுவது எக்காலமோ? உரையாய்! —
இகலும் முப்புரங்கள் தழல் எழச் சிரித்த
இறையவன் நுதல்விழிப் பிறந்தோய்!
அகில் இடும் தூபம் முகில் நிகர் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 43

குருபரன் எனும் பேர் உனக்கு அலாது எவர்க்குக்
கூறும் நான்மறைகள்? ஆதலினால்,
திருவடி நிழலில் எனை விடாது இருத்தத்
திருவருள் புரிகுவது அரிதோ? —
பொருகரிவதனனொடு கிரவுஞ்சம்
பொடிபட அயில் எறிந்தவனே!
அருவுடன் உருவாய் ஒளிர் திருத்தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 44

நித்திரைதனிலும் குத்திரம் புரியும்
நினைவுளேன், உன் திருவடியைப்
பத்திரம் புனல்கொண்டு அருச்சனை புரிந்து
பரகதி அடையும் நாள் உளதோ? —
சித்திரக் கலாப மயில்மிசை ஏறிச்
செகம் எலாம் நொடி வலம்புரிவோய்!
அத்திர விழியார் நடம் செயும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 45

கணு முதிர் கருப்பஞ் சிலையினை வளைக்கும்
காமனை வென்ற மாதவர்கள்
நணுகு இரு சரண பங்கய மலரின்
நறவினைப் பருகும் நாள் உளதோ? —
எணும் ஒரு நொடியில் மேருவை அணுவாய்
இயற்றுவை; இதற்கு மாறாக
அணுவையும் மேரு ஆக்கிடும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 46

மறுதி ஐம்பொறியின் வழிக்கொடு நடந்து
மருவும் ஐம்புலன் நுகர்ந்திடினும்,
கனவொடு பேய்த்தேர் எனப்படும் உலகைக்
கண்டு மெய் என மயங்குறினும்,
எனுதி என்று உனையே நினைத்து அனுதினமும்
ஏத்திடும் செல்வமே அருள்வாய்!
அனுதியே உயிர்க்குத் துணையதாம் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 47

வையம் முற்றினும் போய், கங்கையே முதலாம்
மா நதி பல படிந்திடினும்,
துய்ய நல் தலங்கள்தொறும் இனிது அடைந்து,
துணைக் கையால் தொழுது வாழ்த்திடினும்,
செய்ய நின் தணிகைக் கிரியிணை அணேயார்
சிவகதி அடைகுவது அரிதே; —
ஐயம் இட்டு உணும் மா தவர் உளத்து இருக்கும்
ஆறு மா முக தயாநிதியே! 48

முந்தை நல் வினையால் வந்து மானிடராய்
முது நிலம்தனில் அவதரித்தும்,
வந்தனை புரியாது, உண்டு உடுத்து உழலும்
மக்களில் வானரப் பிறப்பே
நிந்தனை அறியா நல் பிறப்பு ஆகும்,
நீதி ஒன்று அறிகிலாமையினுல்; —
அந்தணர் மகம் செய் தணிகை மால்வரை வாழ்
ஆறு மா முக தயாநிதியே! 49

வேரலில் பிறந்த செந்தழல் அந்த
வேரலே முருக்கிடும் செயல்போல்
பேர் உடற் பிறந்த காமம் இவ் உடலேப்
பிணிபட முருக்குது, என் செய்வேன்! —
சாரலில் குறவர் கிழங்கு அகழ் குழியில்
தரளமொடு அணி கொள் வச்சிரமும்
ஆரவே நிறைக்கும் அருவி தாழ் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 50

பிறந்து இறந்து உழலும் பெரு வியாதியையும்,
பெரும் பசி நோய் சுடத் தளர்ந்து
நிறம் குலேந்து ஒருவர் பின் திரிந்து உழலும்
நிரப்பு எனும் குறு வியாதியையும்,
திறந்து அருள் கடைக்கண் பார்வை ஆம் மருந்தால்
தீர்த்து அருள் புரியும் நாள் உளதோ? —
அறம் பொருள் இன்பம் வீடு அருள் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 51

திரைக் கடல் உடுத்த நிலத்திடை அழியாச்
செல்வமும் கல்வியும் அறிவும்
இரப்பவர்க்கு இலை என்று உரைத்திடாது உதவும்
ஈகையும் எனக்கு அருள்புரிவாய்! —
புரக்கும் ஐந்தரு, மா நிதி, மணி கவர்ந்து
புலவருக்கு இடுக்கணே புரிந்த
அரக்கரை அழித்த செருத்தணி மலைவாழ்
ஆறு மா முக தயா நிதியே! 52

பனித்து உடல் வெதும்பும்படி தவம் புரிந்து
பார் எலாம் வலம் புரிந்து உழல்வோர்
தனித்து இருந்து உனது திருவடி நினைந்து,
'சரவணபவ!' என உரையார்,
கனிப்பழம் இருப்ப விடுத்து அருகு இருந்த
காயினைப் பறித்து அருந்துவரே! —
அனித்தமும் கடந்து நித்தம் ஆம் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 53

விடுத்திடற்கு அரிய பஞ்ச பாதகமே
விளைத்திடும் எனக்கு மெய் வரங்கள்
கொடுத்திடில், உனை யார் தடுப்பவர்? புரளும்
குரைகடல்தன்னை யார் தடுப்பார்? —
முடுக்கருள் தவம் செய் யோகியர் தமக்கு
முசுக்கலை ஏவல் செய்து ஒழுகும்
அடுக்கலில் சிறந்த திருத்தணி மலை வாழ்
ஆறு மா முக தயா நிதியே! 54

குவி கரம் கொடு நின்தனை வலம்வரவும்,
குரைகழல் மனம் நினைந்திடவும்,
கவி அறிந்து உன் சீர் பாடவும் எனக்குக்
கருணை நீ புரியும் நாள் உளதோ? —
புவியில் அந்தணர்கள் அனைவரும் சாரல்
புறத்திலே அணைந்து, அனுதினமும்
அவி சொரிந்து யாகம் விளைத்திடும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 55

நச்சு மாமரமே ஆயினும், ஒருவர்
நானிலம் தன்னிலே விழைந்து
வச்ச மாமரமே ஆயிடின், தண்ணீர்
வார்த்திடாது உலர்த்திடுமவர் யார்?
துச்ச மா மாயை விணை உடல் அடுத்தாய்,
சுத்த வீடு அருள்புரிந்திடுவாய்! —
அச்சனோடு அனையாய் துணைசெயும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 56

விலங்கலை, கடலை, வெய்ய சூர் உரத்தை,
விழுங்கிட வென்றிடும் அயிலால்
கலங்கலைப் புரியும் ஆணவம் மாயை
கன்மம் மூன்றையும் அழித்திடுவாய்!
உலம்-கலைத் தகர்க்கும் பன்னிரு புயத்தின்
உம்பர் நாடு இறை தரும் கழுநீர்
அலங்கலைப் புனையும் ஒருதிருத் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 57

முகத்து இரு விழியும் மூக்கிடை இருத்தி,
மூடி வாய், மூச்சை உட் செறித்து,
பகைத்த ஐம்பொறியும் அடக்கி, நெஞ்சிடை உன்
பதமலர் இருத்தும் நாள் உளதோ? —
சகத்து இருள் கடியும் உதைய மால் வரைபோல்
தணிகை மால் வரைமிசை அடியர்
அகத்து இருள் கடியும் ஞானசூரியன் ஆம்
ஆறு மா முக தயாநிதியே! 58

நாண் துறந்து எழில் சேர் நாரியர் கலவி
நறவிணை அனுதினம் நுகர்ந்து,
மாண்டு இறந்து உலகில் இனிப் பிறந்திடினும்,
மலர்அடிக்கு அன்பு எனக்கு அருள்வாய்! —
கோண் தரும் உலகம் நிலைகுலைந்து அழிந்து,
குரை கடல் மேருவும் அழியும்
ஆண்டு உகம் பலவும் அழிவு இலாத் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 59

வெங் கொலை, களவு, காமமோடு, அரும் பொய்,
விளங்கு அறிவு அகற்று கள் அருந்தல்
இங்கு ஒரு தினமும் ஒழிந்திடாக் கொடியேன்
இடர்க்கடல் ஏறும் நாள் உளதோ? —
பைங் கருங் குவளை அனுதினம் மூன்று
பாகசாதனன் சுனை அலரும்
அங்கு அதிசயம் சேர் அண்ணல் அம் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 60

வெஞ் சிறைப் பிறவி வேதனை ஒழித்த
மெய்த்தவர் சேரும் நின் பதத்து, என்
நெஞ்சு இறைக்குடியாய் நின்றிடும்படிக்கு
நீடு அருள்புரியும் நாள் உளதோ? —
மஞ்சு-இறை அளித்த மகள்தனக்கு இறையாய்
வானுலகு எலாம் வலம் வருவாய்!
அம் சிறைக் கோழிக் கொடியனே! தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 61

செம் புயம் பனிரெண்டு, இரு பதம், ஆறு
திருமுகம், மயில், அயில், சேவல்,
பைம்புயல் கூந்தல் வள்ளி தெய்வானை
பாகமும் காணும் நாள் உளதோ? —
கம்பு உயர் பருதி கரம் கொளும் முராரி
கவின் பெறு மார்பினில் பிரியா
அம்புய மலராள் மருகனே! தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 62

பிழைத்தவை பொறுத்தல் பெரியவர் கடன் ஆம்;
பேயனேன் பிழை எலாம் பொறுத்து,
தழைத்து அருள்புரிந்து உன் தாமரை மலர்த்தாள்
தலைமிசை இருத்தும் நாள் உளதோ? —
கழைத்தலை வளியின் அசைந்திடல், வரைதான்
கை எடுத்து அன்பரைக் கடுகி
அழைத்து அருள்புரிவது எனப்படும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 63

எவ் உலகமும் ஆண்டு இறந்திடாச் சூரன்
இருந்திடு மயேந்திரபுரி ஆம்
தெவ் உலகத்தை அழித்த நின் கருணைச்
செழுங் கடைப் பார்வை தந்து அருள்வாய்! —
இவ் உலகத்தோர் பணிந்து எழுந்து ஏத்தும்
இது அலால் இந்திரன் உறையும்
அவ் உலகத்தோர் தொழ வளர் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 64

பரி கரி இரதம் பதாதிகள் சூழ,
பகைவரைத் தடிந்து, செங்கோல் கொண்டு,
ஒரு குடை நிழலில் உலகு எலாம் புரக்க
உனது அருட்பார்வை தந்து அருள்வாய்! —
பொரு கரிமுகனுக்கு இளையவன் ஆகி,
பொன்னுலகினைப் புரந்து அளித்தோய்!
அரி கரி முனிவர்க்கு ஏவல் செய் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 65

மா திரைக் கடல்சூழ் மண்ணக வரைப்பின்
வாய்மையைத் துறந்து, சாண் வயிற்றின்
தீது இரைக்கு உரிய பொய்ம்மையே பேசி,
திரியும் என் பவம் ஒழிந்திடுமோ? —
மீது இரைத்து எழுந்து வரு நிசாசரரை
வென்று அமராபதி அளித்தோய்!
ஆதிரைக்கு இறைவன் அருள் செருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 66

கருக்குழி படிந்து பிறந்திடு துயரும்
கண்கள் பஞ்சடைந்து, வாய் குழறி,
நெருக்கிய கபத்தால் இறந்திடு துயரும்
நீசனேன் ஒழியும் நாள் உளதோ? —
தருக்களில் உதிரும் பொன்மலர் கஞலித்
தமனிய மலே எனக் கருதி,
அருக்கனும் மதியும வலம்வரும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 67

தீர்ப்பதற்கு அரிய உடல் அபிமானம்
தீர்ந்து, அருந்தவம் புரிந்தவரும்
பார்ப்பதற்கு அரிய பங்கய மலர்த்தாள்
பாவியேற்கு உண்டுகொல்? — கதிரோன்
தேர்ப் பரித் திரளை, வேங்கை மீது அகவும்
செம்முக மந்தி வால் நீட்டி,
ஆர்ப்பரித்து அடித்து நடத்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 68

வெம்பி ஆய் வயிற்றில் ஐயிரு திங்கள்
மேவி, இப் புவிதனில் உதித்து,
நம்பி ஆயிழையார் கலவியில் திளைக்கும்
நாயினேற்கு அருள் — இபமுகத்தோன்
தம்பியாய் அடுத்த நீ இருத்தலினால்,
தரணியோர் பிறவியங் கடலுக்கு
அம்பியாய் அடுத்து வளர் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 69

வாள் இகல் புரியும் வடுவகிர் நெடுங்கண்
மங்கையர் போகமே நுகர்ந்து,
நாள் இகந்து ஒருவி: நரகிடை விழாமல்
நாயினேன் தனக்கு அருள்புரிவாய்! —
கூளிகள் துரக்கும் தானவக் குழுவில்
குஞ்சரக் குழு இரிந்து ஓட,
ஆளிகள் துரக்கும் சாரல் அம் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 70

மெய்க்கு இனியனவே செய்து, நல் விரதம்
விடுத்து, உழல் மடமையேன், வீட்டில்
புக்கு இனிது இருக்கும் அடியவர் கமலப்
பொன் அடி கருதும் நாள் உளதோ? —
கொக்கு எனத் தினமும் கொலை குறித்து ஒழுகும்
கொடிய தானவர்களைத் துணிக்க,
அக்கினி கரத்தில் உதித்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 71

கருடனை நினைக்கத் தொலைந்திடும் விடம்போல்
　　கானகத் தினைப்புனக் குறத்தி
திருடன் என்று உன்னைச் செப்புவோர் பிறவித்
　　தீவிடம் அக்கணத்து அறுமே! —
ஒரு கணப் பொழுதின் மதுரையர் பெருமான்
　　உடல் உறு வெப்பு எலாம் அகற்றி,
அருகரைக் கழுவில் ஏற்றிடும் தணிகை
　　ஆறு மா முக தயாநிதியே! 72

கொங்கை அம் குவடும் கருவிழிக் கடலும்
　　கூந்தல் அம் காடும் சென்று உலவி,
மங்கையர் அல்குல்-பணி விடம் தீண்டி
　　மயங்கும் என் உயிர்தனைப் புரப்பாய்! —
சங்கை ஒன்று இல்லாப் பிரணவப் பொருளைத்
　　தமிழ்வரைக் குறுமுனிவனுக்கு
அங்கையின் நெல்லி எனப் புகல் தணிகை
　　ஆறு மா முக தயாநிதியே! 73

வானகம் புரக்கும் வாழ்வையும் விரும்பேன்;
　　மண்ணக வாழ்வையும் விழையேன்;
கானகக் குறவர் போற்று நின் பாத-
　　கமலமே கருதுவன், தமியேன் —
போனகம் பதினுல் உலகமும் ஆக்கும்
　　பூவை வண்ணன் திருமருகா!
ஆனகம் துடியோடு ஆர்த்திடும் தணிகை
　　ஆறு மா முக தயாநிதியே! 74

கொவ்வை அம் கனிவாய் மகளிரை அணைத்து,
　　கொம்மை வெம் முலைத்தடத்து அழுந்தி,
நவ்வி அம்பகம் ஆம் கூற்றினுக்கு இரையாய்
　　நான் அழிந்து ஒழிகுவது அழகோ? —
செவ்விய மறையோர் சோலைகள்தோறும்
　　தீயின் ஆகுதி மகம் புரியும்
அவ்விய கவியம் நுகர் திருத்தணிகை
　　ஆறு மா முக தயாநிதியே! 75

கூம்பல் அம் கரமும் குழைந்திடு மனமும்
கொண்டு அனுதினம் வலம்புரிவோர்
தாம் பலன் பெறும் பேறு அரி அயன்தனக்கும்
சாற்றரிது என மறை உரைக்கும்; —
பாம்பு அலங்காரப் பரன் என முத்தம்
பற்பல சொரிந்து, வான் ஓங்கும்
ஆம்பல் அம் சாரல் வளர் திருத்தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 76

விடம் கலந்திடு தீம்பால் என உயிரை
விரவும் ஆணவத்தினைப் போக்கி,
நடம் கலந்திடும் உன் சீறடிக் கமல
நன் மருந்து அளித்து, எனைப் புரப்பாய்! —
மடங்கலும் கரியும் உழுவையும், தவம் செய்
மாதவர் தமக்கு வானரங்கள்
அடங்கலும் பணிசெய்து அகம் மகிழ் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 77

விடைமிசை வரு நின் தந்தைதன் செவியில்
விளம்பிய பிரணவப் பொருளை
கடையனேன் செவியில் புகன்று, நின் கமலக்
கழல்துணை நீழல் என்று அருள்வாய்! —
தடை அறு கதிர்த்தேர்ச் சாரதி பரியைத்
தாக்கும் முட்கோல் பட, வேய்த் தேன்
அடை கிழிந்து உகு தேன்-அருவி தாழ் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 78

வல்ல காத்திரம் சேர் மதகரி எனவே
மறை நெறி கடந்து தீவினையால்,
பல்ல காத்திரமாய்ப் பிறந்து இறந்து உழலும்
பாவியேன் உய்யும் நாள் உளதோ? —
நல்ல காத்திரியாய் இந்திரன் தொட்ட
நறுஞ் சுனை நீலம் மேவுதலால்,
அல்லகாத்திரி ஆம் பெயர் பெறும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 79

நந்தினைப் பதும நிதியினைப் பழித்த
நறுங் கள முகத்தியர் கலவித்
தந்தினைப் படித்து, விடரொடும் திரியும்
தமியனேன் உய்யும் நாள் உளதோ? —
சந்தினை அகிலை வேங்கை குங்குமத்தைத்
தடிந்து எரிகொளுவி வேட்டுவர்கள்
அம் தினை விதைக்கும் சாரல் அம் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 80

மாடகத் திவவு யாழ்முனி உரைப்ப,
வள்ளி மால் வரைப்புறத்து அடைந்து,
காடு அகக் குறமான் தனைப் புணர் வேடம்
கனவிலும் நனவிலும் மறவேன்; —
ஏடு அகக் கழுநீர் என்று மூன்று அலர,
எனக்கு இலை எனத் தலை இறங்கி,
ஆடகக்கிரி நாண் உறும் திருத்தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 81

சமயம் மூவிரண்டில் சார்ந்தவர் புகலும்
சமுசயப் பொருள் எலாம் நினைந்து,
கமை அறு பிறப்பில் அழிந்திடாது, உனது
கழல்-இணை கருதும் நாள் உளதோ? —
இமையவர் வேடர்க்கு அமுதம் ஈந்து, இருலின்
இரும் பிழி கவர்ந்து, எதிர் விருந்தாய்
அமைவு உற விசும்பின் வளர்ந்து எழும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 82

பொருந்திடு கற்பின் மனைவியும் பொருளும்
புதல்வரும் இம்மையில் அளித்து,
திருந்தும் ஒண் கதியை அம்மையின் அளிக்கும்
திறத்தினைக் கண்டு, உனை அடுத்தேன்; —
வருந்துறு பிறப்பில் அழுத்தும் ஆணவம் ஆம்
மலி பெரும் பகை கடிந்து ஓங்கும்
அருந்தவர்க்கு அரணமாய் அமர் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 83

கூனையும் தெரியாக் குருட்டையும் பணிவோர்
கொடிய வெம் பிறப்பையும் நீக்கி,
வானையும் சிந்தாமணியையும் வேண்டும்
வரத்தையும் தருதல் கண்டு அடுத்தேன்; —
தேனையும் மறையோர்க்கு அரசர் ஈந்திடு பொன்
திரள் உறு தானநீர் தனையும்
யானை மும் மதநீர் கொண்டு இழி தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 84

முன்னை எத் தவத்தோ வந்து மானிடத்தின்
முழுது உடல்தன்னை யான் எடுத்தும்,
பின்னர் உற்றிடுதற்கு அரிய இப்பொழுதே
பெருந் தவம் புரிந்து உனை நினையேன்; —
தென் இசைக் களி வண்டினங்கள் பற்பல ஆம்
தேனடை மொய்ப்ப, ஆதுலர் சேர்
அன்ன சத்திரங்கள் நிகர்த்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 85

விரிந்திடும் பிறவிக் கடல்அகத்து அமுந்தி,
வினை எனும் திரைகளால் அலைந்து,
திரிந்திடு காமச் சுறவினுல் அயரும்
தீயனேன் துயர் களைந்திடுவாய்! —
வருந்திடும் பகையை மாய்க்கும் மன்னவர்போல்
வனசரர் விதைத்த செந்தினையை
அரிந்திடக் கணிகள் அலர்ந்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 86

தத்து அலைக்கடலின் வேறு வேறு ஆகும்
சமுசயச் சமய நூல் பலவும்
கத்தலை விடுத்து, உன் கழல் தலைச் சூட்டி,
கசிதலை அடையும் நாள் உளதோ? —
முத்தலை ஏக பாத ருத்திரன் போல்
முத் தலை பொன் மை வெண் நிறமாய்
அத்தலை முதல் ஒன்றாய் எழும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 87

வரம் பெறு மகவான் முதலியோர் ஒருபால்
வணங்க, மா முனிவரர் ஒருபால்
சிரம் பெறு கரங்கள் கூப்பு நின் அவையில்
சிறியனும் வர அருள்புரிவாய்! —
மரம் பயில் சாரல் வளர் கழை வெடித்த
மணிகள், வாசவன் எதிர் ஆடும்
அரம்பையர் முலைமேல் தெறித்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 88

சுந்தரம் தனக்கோ, நினது தோள் வலிக்கோ,
சொற்கலை வல்லபம்தனக்கோ,
சந்ததம் எனது ஆர் உயிர் எனும் மடந்தை,
சாமி! நின் கலவியே விழைந்தாள்;
மந்தரம் இமையம் கயிலை நீள் கந்த-
மாதனம் கண்டு அழுக்கறுப்ப,
அந்தரங்கமதாய் இருந்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 89

குறித்து ஒரு கவி நீ பாடு என, பாடாக்
கொள்கை நக்கீரனை வேண்டி,
மறித்து ஒரு கவிக்கா இரந்த நின்தனை யான்
வலுவினில் பாடவும் இரங்காய்! —
கறிக் கொடி மிளகைத் தின்று இள மந்தி
கலங்கிட, கடுவன் மாங்கனியை
அறுத்து வந்து அளிக்க, மகிழ் திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 90

நெல் விளைந்திடு தண் பணைதொறும் அறுப்பும்
நெல் முதல் நடவும் ஆறுபோல்,
புல்லி அம்புயனால் பிறப்புடன் இறப்புப்
பொருந்து தீவினை துலைத்திடுவாய்! —
எல்லியும் பகலும் கழை உதிர் முத்தம்
இளநிலாக் கதிர் பரப்புதலால்,
அல்லியும் குவளையொடும் அலர் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 91

வேனில் வேள் எனவும் விசையனே எனவும்
வீமனே எனவும் ஈகில்லாப்
பா நலம் தெரியாச் சிதடரைப் புகழும்
பாவலர் பவப்பிணி அறுமோ? —
தேன் இறுல் வருடை பாய்தரக் கிழிந்து
செங்கழுநீர்ச் சுனை பரப்பி,
யானை வீழ் குழியும் நிரப்புறும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 92

கார் இருட் குழலார் கண்வலை துடக்கும்
கசடனேன் சிற்றறிவு ஒழித்து, உன்
பேர் அருட் பார்வைக் கடலகத்து அழுத்தி,
பிரிவு இலா வாழ்வு எனக்கு அளிப்பாய்! —
கூர் இருள் படைத்த கிரவுஞ்ச கிரியுள்
குறுமுனி குறுகல்போல் முனிவர்
ஆர் இருட் குகையுள் புகுந்திடும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 93

கரவினில் அருநூல் கற்பவர் உறவைக்
கடிந்து, மெய்த் தொண்டர்பால் மிகும் ஆ-
தரவினை மருவி, உடல் அபிமானம்-
தனை ஒழிந்திடு நெறி அருள்வாய்! —
இரவினில் கரடி குரும்பி தேர்ந்து அளையை
இடத்தலும் உற்கைபோல் எரியும்
அரவின் மா மணி கண்டு அஞ்சிடும் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 94

வாரி அம் கடல் சூழ் மலர்தலை உலகில்
வயிறு சாண் வளர்த்திடும்பொருட்டு,
பாரி என்று ஈயாதவரை யான் புகழாப்
பணிவிடை எனக்கு அருள்புரிவாய்! —
வீரியம் பெறு வெம் புலியினோடு இரலை,
வேழமோடு அரிபகை ஒருவி,
ஆரியம் புகல்வோர்க்கு ஏவல் செய் தணிகை
ஆறு மா முக தயா நிதியே! 95

மலை என வளரும் ஆணவ மலத்தை
வளம் பெறு நின் அருட்பார்வை
இலை மலி வேலால் எறிந்து அதைப் போக்கி,
எனது உயிர்தனைப் புரந்து அளிப்பாய்! —
கொலை அரி முழக்கும் குஞ்சர முழக்கும்
குலவும் அந்தணர் மறை முழக்கும்
அலை கடல் முழக்கின் எதிர் எழும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 96

கமல வேதனை முன் கற்சிறைப்படுத்தும்,
காங்கெயன் ஆம் உனை வணங்கா
முமல வேதனையும் ஒருசிறைப்படுத்தி,
முண்டகப் பதம் எனக்கு அளிப்பாய்!
விமல வேதியர் செய் வேள்வி ஆகுதியில்
வீசு நெற்பொரி எனச் சாரல்
அமல வேய் முத்தம் சொரி திருத்தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 97

சந்திரன் கறைபோல், இந்திரன் விழிபோல்,
சந்தன மரத்து உறும் அகிபோல்,
மந்திரம் பயிலும் உனது சன்னிதியில்
வரும் கொடியேனையும் புரப்பாய்!
இந்திர நீலம் மருவலால், கருமை
ஏந்தலால், செவி அடுத்திடலால்,
அந்தில் தெய்வானை விழி நிகர் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 98

பிணியினுல், அழலால், அலகையால், விலங்கால்,
பில்லி சூனியத்தினுல், பித்தால்,
பணியினுல், நீரால், கள்ளரால் மருவும்
பருவரல் அகற்றி, ஆண்டு, அருள்வாய்!—
கணியினுல் ஆரம் புடை பரந்து எழலால்
காம்பினுல் வம்பினுல் காந்தள்
அணியினுல் குறமான் முலை நிகர் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 99

வள்ளியும் தெய்வயானையும் இருபால்
மருவிட, செங்கை வேல் ஏந்தி,
துள்ளிய மயில்மீது ஏறி நீ, அடியேன்
துணை விழி காண, வந்து அருள்வாய்! —
வெள்ளியங்கிரிபோல் நாரதன் தினமும்
வீணையின் கானம் ஆம் அமுதம்
அள்ளி அஞ்செவியில் நிறைத்திடும் தணிகை
ஆறு மா முக தயாநிதியே! 100

**தயாநிதி மாலை முற்றும்**

# 3. வேலாயுத சதகம்

## காப்பு

*மேலாம் திருத்தணிகை வேலாயுத சதகம்*
*மால் ஆகி நாயேன் வழுத்தவே — நால் ஆம்*
*சிரத்தான், நத்தான், ஐமுகன் சேவிக்கும் ஐந்து*
*கரத் தானத்து ஆனைமுகன் காப்பு.*

—o—

சீர் பூண்ட செந்திரு நோக்கமும் திருமால் மருமகள் நோக்கமும்
பேர் பூண்ட சங்கரி நோக்கமும் பிரியாமலே எனை ஆளுவாய்! —
கார் பூண்ட பன்னிரு கைத்தலா! கருணைகரா! தணிகாசலா!
வேர் பூண்ட மும்மல காலனே! வேலாயுதா! வேலாயுதா! 1

மாண்டும் பிறந்திடு வல்வினை வலையுள் படாவகை என்னை வந்து
ஆண்டும் குறை உளதேல், எனக்கு அதையும் தவிர்த்து,
[அருள்செய்குவாய்! —
தாண்டு பரிமயில் வாகனை! தணிகாசலத்து உறை சண்முகா!
வேண்டும் குறமகள் நண்பனே! வேலாயுதா! வேலாயுதா! 2

கோணுகழி பல பேசியும் குரவோர்களை மிக ஏசியும்
நாணுமல் நங்கையர் மோகமாய் நற்புத்தி போய், துர்ப்புத்தியால்
மாணாத வெம்பிணி ஆகினேன்; மாயாமலே இனி ஆகிலும்
வீணாள் படாவகை ஆளுவாய் — வேலாயுதா! வேலாயுதா! 3

பூதம் குகைதனில் வைத்திடும் போது, உன்னையே புகழ் கீரனர்
ஏதம் தவிர்த்து அருளும்படி எனை ஆளுவாய்! உனை நம்பினேன்;—
மாதங்கள் ஆண்டு உகம் மாறினும் மாருமல் எவ்வனம் ஆனவா!
வேதம் புகழ் தணிகாசலா! வேலாயுதா! வேலாயுதா! 4

கோள் ஏது சொல்லினும், ஆதர்பால் குறை ஏது சொல்லினும்,
[உன் இரு
தாளே சரண் என அண்டினேன்; தவிராமலே எனை ஆளுவாய்! —
தேளே விருச்சிகம் என்று மந்திகள் அஞ்சிடும் தணிகாபுரி
வேளே! சிவன் பெறு மைந்தனே! வேலாயுதா! வேலாயுதா! 5

கண்ணுடியின் நிழல் என்ன எங்கணும் உற்ற நின் கருணைத் திறம்
எண்ணுமலே உழல்கின்ற நான், இனியாகிலும் உனையே துதி
பண்ணுமல் எப்படி உய்குவேன்? பகராய்! — திருத்தணிகாசலா!
விண்நாடு காத்தருள் அண்ணலே! வேலாயுதா! வேலாயுதா! 6

துதியாமலும், பணியாமலும், துகள் தீரும் நின் பதபங்கயம்
மதியாமலும் திரிகின்ற என் மனம் என்று நின் வசம் ஆகுமோ?—
கதி ஆகும் 'ஓம்' எனும் மந்திரம் கழறும் பொருள் அறியேன் எனும்
விதி காலிலே தளை பூட்டிடும் வேலாயுதா! வேலாயுதா! 7

ஞானக்கலை உணர்வாருடன் நண்ணுமல், உண்டு, உடையும்
[புனைந்து,
ஊனைச் சுமந்து உழல்கின்ற நான், உனை நண்ணிடும் வகை
[கண்டிலேன் !—
மானுக்கு ஒரு மருகா! திரு மருகா! அரி மருகா! குகா!
மீனக்கொடியவன் மைத்துனு! வேலாயுதா! வேலாயுதா! 8

குரு, லிங்க, சங்கம நிந்தை சொல் கொடியோன்
[மடிந்திடுமாறுபோல்,
வரு துன்பம் யாவையும் நீக்கி, நல் வரம் ஒன்று எனக்கு
[அருள்செய்குவாய்! —
தரு ஐந்து நீழலின் வைகு வாசவன் மா மகள் மணவாளனே!
வெருவும் சுரர் பயம் நீக்கிடும் வேலாயுதா! வேலாயுதா! 9

கரவு ஆகும் நூல் சில கற்றிடும் கன வஞ்சகக் கவிவாணரை
இரவாமலே பல ஞான நூல் இனிது ஓதிவைத்து, எனே
[ஆளுவாய்! —
சரமாரியே பொழி சூரனுர் தலை வெட்டி, மாமயில் கோழியாய்,
விரைவாக ஏறிய செல்வனே! வேலாயுதா! வேலாயுதா! 10

குடல்வாதமும், தலைநோயுடன் குருடுஆனதும், செவிடுஆனதும்,
உடல்கோணலும், மலடுஆனதும், உழல் பித்தமும், பெருவிக்கலும்,
முடம்ஆனதும், வலியும் பெருமூச்சோடு குன்மமும், ஊமையும்,
விடம்ஆனதும் கடிது ஓட்டிடும் வேலாயுதா! வேலாயுதா! 11

கோடிக்கு மேல் உறினும் தனம் குறை என்று பற்பல வேலையும்
தேடித் திரிந்து, உண்ணுமலும் சென்று ஏற்பவர்க்கு
[உதவாத நிர்ம-
மூடற்கு உறும் பயன் என்கொலோ? முருகா! — அரி மருகா! குகா!
வேடச்சி மால் கொளும் ஐயனே! வேலாயுதா! வேலாயுதா! 12

காடு ஏகியும், மலை ஏறியும், கடிது ஆம் அருந்தவம் ஆற்றியும்,
நாடு ஏகியும், நதி மூழ்கியும், நல் காய் கிழங்கு இலை மாந்தியும்,
ஓடு ஏந்தியும், செங் காவி தோய் உடை சூடியும், சடை நீடியும்
வீடு ஏது, உனைப் பணியார் எனில்? — வேலாயுதா! வேலாயுதா! 13

கல்லாதவர் உறவு ஆவதின் கற்றுருடன் பகை நல்லதே;
இல்லாத கற்பு இல்லாளினும் எழில் வேசையால் உறல் நல்லதே;
பொல்லாத வீண்பழி கொள்வதின் பொறை ஆம் உடல் விடல்
[நல்லதே; —
வெல்லாத சூரனை வென்றிடும் வேலாயுதா! வேலாயுதா! 14

நாள் என் செயும்? வினை என் செயும்? நமன் என் செயும்?
[விதி என் செயும்?
கோள் என் செயும்? பிணி என் செயும்? குறையான வற்கடம்
[என் செயும்?
ஆள் என்று உனக்கு எழுதும் முறி அறியார்களோ
[உலகோர்கள்? — செவ்
வேள் என்று நான்மறை ஓதிடும் வேலாயுதா! வேலாயுதா! 15

பொய் ஆம் உடல் மெய் ஆம் எனப் பொருள் தேடி, உன் அருள்
[தேடிலார்
ஐயோ, கொடுவினையோ? முனாள் அயனார் விதித்ததுவோ?
[சொலாய்! —
கை ஆறிரண்டு உடையாய்! திருக்கயிலாயம் நேர்தணிகாசலா!
வெய்யோன் எனக் கதிர் வீசிடும் வேலாயுதா! வேலாயுதா! 16

தண்டு ஊன்றி, மெல் உடல் கூனியே, தள்ளாடி, ஈளையும் நீடியே,
மண்டு ஊன் தளர்ந்து, உரை தப்பியே, மாயா முனே
[நீ ஆளுவாய்! —
பண்டு ஊன்றும் மல வித்தின் ஆம் பல வெம் பவம் வினை
[துன்பு எலாம்
விண்டு ஊன்று ஞானியர் நெஞ்சில் வாழ் வேலாயுதா!
[வேலாயுதா! 17

ஒளியாய், இருசுடராய், உடல் உயிராய், அயன் அரி ஈசனாய்,
அளியாய், மலை கடல் ஆறு காடுஅகமாய், அணு மக மேருவாய்,
வளியாய், அனல் புனல் எண்திசை வடிவாய், மறை முடியாய், பர
வெளியாய், எலாப் பொருள் ஆகி வாழ் வேலாயுதா! வேலாயுதா! 18

அற்பர்க்கு உலாக் கவிபாடி நான் அலையாமலே நல ஞானம் ஆர்
சற்பத்தர் போற்றிய நின் திருத்தாளைப் புகழ்ந்திட, நல்குவாய்! —
கற்பத் தருக்குடி வாழவும் கருதாத ராக்ஷதர் தாழவும்
வெற்பைத் துளைத்து எழு விக்கிரம வேலாயுதா! வேலாயுதா! 19

கலை ஆய்ந்து, பூ நீர் கொண்டு, நின் கழல் பூசை செய்து,
[அழல் சேர்தரும்
உலைவாய் மெழுகு என நெஞ்சம் நெக்கு உருகாதவர்க்கு
[உறுமோ கதி? —
அலைவாய், பழமுதிர்சோலை, ஏரகம், ஆவினன்குடி, பல்நகம்,
விலை ஆர் பரங்கிரி வாசனே! வேலாயுதா! வேலாயுதா! 20

மாறு அக்கரம் பல தேவரும் வசி ஆகருஷண மோகனம்,
வீறு அக்கரம் உச்சாடனம், வித்வேட தம்பன பேதம் ஆம்
ஆறு அக்கரம்தனை எண்ணி வீடு அடையும் திரு அடியார்க்கு எலாம்
வேறு அக்கரத்தால் ஆவது என்? — வேலாயுதா! வேலாயுதா! 21

பழி பூணினும் புகழ் பூணினும், பல பேசினும் பல கேட்பினும்,
வழி ஏகினும் தனி நிற்பினும், மற்றென்று காண்கினும் உண்கினும்,
அழிவு ஆகினும் மிக வாழினும், அரும்மாதரைப் புணர்கிற்பினும்,
விழி கூரினும் மறவேன் உனை — வேலாயுதா! வேலாயுதா! 22

மாருத அன்புடையார், முனே மருவும் திருப்புகழ் பாடியே,
பேறு ஆன முத்தியில் மேவினர்; பேயேன் தவிர்ந்திடலாகுமோ? —
ஆருறு தத்துவம் ஆகியும் அயல் ஆகியும் திகழ் சண்முகா!
வேறு ஆர், எனக்கு உனை அன்றியே? வேலாயுதா! வேலாயுதா! 23

காடிக்கும் நீள் கந்தைக்கும் ஓர் கவிபாடியே கனமூடரைக்
கூடிக் குலைந்து அலையாமல், உன் குளிர் தாமரைப் பதம்
[நல்குவாய்! —
நீள் திக்கு எலாம் வலம் ஆகி ஓர் நிமிடத்தில் மாமயில் ஏறியே
வேடிக்கையாய் வரும் ஐயனே! வேலாயுதா! வேலாயுதா! 24

மட்டு ஒன்று கோதையர் மாயையால், மறை ஆகமம்தனை
[நிந்தை சொல்
துட்டன்தனை நமனர் விடும் தூதன் கொடுபோய் விட்டபின்,
கட்டு என்பனோ? பிடி என்பனோ? கடி என்பனோ? அடி என்பனோ?
வெட்டு என்பனோ? குத்து என்பனோ?—வேலாயுதா வேலாயுதா! 25

வளம்பாடுவேன்; மயில்பாடுவேன்; வளர் வாரணக்கொடி பாடுவேன்!
தளம் பாடுவேன்; கழல் பாடுவேன்; தரிக்கும் கடம்புஅலர்
[பாடுவேன்;
அளம் பாய் துரும்பு எனும் ஞானம் ஆம் அமுதத்தை
[உன் திருவாயினல்
விளம்பாய்! — திருத்தணிகைக்குள் வாழ் வேலாயுதா!
[வேலாயுதா! 26

காய் முற்றிய கதிர் மென் தினை காக்கும் குறமகள் தன்புடை
போய், முத்தர்போல் மிகவாடியே, பொருமித் தினை மாவும்
[உண்டபின்
வாய் முத்தம் உண்டிட எண்ணியே மணவாளனய் அடி
[வீழ்ந்தவா! —
வேய் முத்தம் ஈன்றருள் முத்தமே! வேலாயுதா! வேலாயுதா! 27

பரியும் கவிகையும் நீள் பெரும் பாரும் புதல்வரும் மாதரும்
கரியும் சிவிகையும் வித்தையும் காலாளும் ஆடையும் அன்னமும்
புரியும் கனகமும் வெற்றியும் புகழும் தருமமும் ஈகுவாய்! —
விரியும் கடம்பு அணி மார்பனே! வேலாயுதா! வேலாயுதா! 28

மாசம்தொறும் வரும் கார்த்திகை, வரம் வேண்டியே உனை
[நம்பி, இத்
தேசங்கள் எங்கணும் உற்ற பேர் சிந்தாகுலம்தனை நீக்கி, நல்
வாசம் கமழ் குழலாரொடு மகவும் பெருமையும் ஈகுவாய்! —
வீசும் கலா மயில் ஏறிடும் வேலாயுதா! வேலாயுதா! 29

முப்போதும் உற்பலம் ஆம் மலர், முப்போதும் இந்திரனர் சுனை,
தப்பாது பூத்து, உலகு எங்கணும் தணவா அதிசயம் மேவலால்,
எப்போதும் விண்ணவர் மண்ணவர், இனிது ஏத்தி, நல்
[வரமே பெறும்
வெற்பு ஆம் திருத்தணிகைக்குள் வாழ் வேலாயுதா! வேலாயுதா! 30

எந்நாளும் உன் கழல் நாடவும், எந்நாளும் உன் புகழ் பாடவும்,
எந்நாளும் உன் எழில் நோக்கவும், எந்நாளும் உன் கதை
[கேட்கவும்,
எந்நாளும் உன் பணி செய்யவும், எளியேன் தனக்கு அருள்
[செய்குவாய்! —
மின்னுள் உமை தரு மைந்தனே! வேலாயுதா! வேலாயுதா! 31

ஆதிக்கு அனுதியும் ஆகியே, அந்தத்தின் அந்தமும் ஆகியே,
பாதிக்குப் பாதியும் ஆகியே, பரத்துக்கும் ஓர் பரம் ஆகியே,
சோதிக்குளே ஒளி ஆகியே, தோன்றும் திருத்தணிகாபுரி
வீதிக்குளே மயில் ஊர்ந்திடும் வேலாயுதா! வேலாயுதா! 32

நெடியோற்கும் நான்முகனுர்க்கும் வான் நிலையோர்க்கும்
[வெல்லரு சூரனைப்
பொடியாக்கி, வாசவனே முதல் புலவோரை ஐந்தரு நீழலில்
குடியாக்கி, மாதவர் அந்தணர் குறை நீக்கி, ஆகம வேதம் நால்
மிடி போக்கி, ஆள் மயில் வாகனு! வேலாயுதா! வேலாயுதா! 33

அரவின் படம் நிகர் அல்குலார் அனுராக போகமும் நீங்கியே
இரவும் பகலினும் உன் கழல்-இணை பாடுவார் அவர் நித்தரே; —
கிரவுஞ்ச வெற்பொடு தாரகன் கிழிபட்டு வானவர் உய்ந்திட,
விரவும் சமர் புரி வீரனே! வேலாயுதா! வேலாயுதா! 34

சங்கு ஒலிடும் பழனங்களும் தனதன் படைத்திடு செல்வமும்
இங்கு ஒலம் என்று உனை நம்பி வந்து ஏற்போர்க்கு எலாம்
[எளிது ஈகுவாய்: —
செங்கோல் செலுத்திடு வாசவன் சேயைச் சிறை புரி சூரனுர்
வெங்கோல் அழித்தருள் செல்வனே! வேலாயுதா! வேலாயுதா! 35

இல்லம், புவி, மனை, மக்கள், பொன் இவை நம்பி, உனது
[இருதாள் எனும்
நல் அம்புய மலர் சிந்தியா நாயேன், பிறந்து உழல்வேன்
[அகோ? —
மல்லம் புய அரிமாமுகன் மடிய, பெரு முடி அற்றிட,
வில் அம்பு தொட்டிடு கையனே! வேலாயுதா! வேலாயுதா! 36

தகு நாரதன் புரி வேள்வியில் தழல் ஓங்கிடும் தருணத்திலே
சகம் யாவும் நுங்கிடு ஆற்றலின, தறுகண் கனற்பொறி சிந்திட,
வெகு கோபமாய் எழு மேடமேல் விரைவாக ஏறிய மன்னவா!
மிகு வீரவாகுவின் முன்னவா! வேலாயுதா! வேலாயுதா! 37

காது ஆர்ந்த வேல்விழியார் செயும் காமாந்தகாரமும் நீங்கி, உன்
தாது ஆர்ந்த தாயரை மென்மலர்த் தாள் என்தனக்கு அருள்
[செய்குவாய் —
நாதாந்தனே! போதாந்தனே! நவிலும் கலா யோகாந்தனே!
வேதாந்தனே! சித்தாந்தனே! வேலாயுதா! வேலாயுதா! 38

மசானத்து இறந்திடு துன்பமும், மறித்தும் பிறந்திடு துன்பமும்
விசாரித்து, அருந்தவம் ஆற்றி, நல் வீடு உற்றிடும் வகை
[கண்டிலேன் —
பசாசுக்கு எலாம் இடம் ஆகும் வெம் பகையாளி ஊர் புகையாகவே,
விசாகத்தில் உற்பவமாய் வரும் வேலாயுதா! வேலாயுதா! 39

கலங்கா உளத்தொடு நின் முருகாற்றுப்படையுடன் நின் புகழ்
அலங்காரமும் அனுபூதியும் அறியாத மானிடர்தம்மினும்,
பலம் காய் இலை தளிர் பூத் தினும், பல கான் திரிதரும், மர்க்கடம்
விலங்காய்ப் பிறந்திடல் நல்லதே — வேலாயுதா! வேலாயுதா! 40

கருந் தாரை வேல் விழியார் செயும் கலவிப் பெருமது உண்டு, நின்
பெருந் தாமரைப்பதம் அர்ச்சியாப் பேயேன் பவம்தனை
[நீக்குவாய்! —
பொருந்தாரை வென்று, ஒரு வாசவன் புதல்விக்கு
[மாப்பிளை ஆகி, நல்
விருந்து ஆகி, வெண்கரிமேல் வரும் வேலாயுதா! வேலாயுதா! 41

'குமரா, சரண் சரண்!' என்று உனைக் கோடித்த பேர்தமை நாடியே
எமராசன வந்திடில், அங்கு அவன் இரு தாளுமே அற
[வெட்டுவார்;—
அமராபதிக்கு இறை தேவி ஆம் அயிராணி மங்கிலியம் தரும்
விமலா! திருத்தணிகைக்குள் வாழ் வேலாயுதா! வேலாயுதா! 42

கரும்பு ஆகும் வில், கணை ஆம் மலர், கடல் ஆகும் மா முரசங்களும்,
சுரும்பு ஆகும் நாண், மதனுர் விடும் தூலையாத போர்க்கடல்
[வெம்பியே
அரும்பு ஆம் முலை மட மாதர்பால் அலையாமலே எனை ஆளுவாய்! —
விருப்பாரகள் சென்னியை வீழ்த்திடும் வேலாயுதா! வேலாயுதா! 43

தீண்டாத நீசர்கள் ஆயினும், சேவித்த பேர்தமை வானுலகு
ஆண்டார் வணங்குவர்; உன் கழற்கு அன்பு அற்ற
[வணணவர் நீசரே;—
மாண்டார் எலும்பு அணி சங்கரன் மைந்தா! திருத்தணிகாசலா!
வேண்டாதவர உயிர் வாங்கிடும் வேலாயுதா! வேலாயுதா! 44

அகழ்ந்தார்தமைத் தாங்கும் புவியதுபோல், இடர் புரிவோரை யான்
புகழ்ந்தே பொறுத்திடுமாறு நீ புகலாய்! — திருத்தணிகாசலா!
இகழ்ந்தார் தலை அற வெட்டியே எமன் ஊர் விடுத்திடு சண்முகா!
மிகும் தாரகன் வலி மாய்த்திடும் வேலாயுதா! வேலாயுதா! 45

மொழி பாலினும் இனி மாதரார் முயங்கும் பட அரவு அல்குல் ஆம்
குழி வீழினும், தனம் ஆம் மலைக்கோடு ஏறினும், மறவேன் உனை;—
அழியாத மாதவர் ஏத்திடும் அமலா! திருத்தணிகாசலா!
விழி ஆயிரம் உடையான் தொழும் வேலாயுதா! வேலாயுதா! 46

கண்டார் எலாம் மிக ஏசிட, கபம் மீறி, வாய் குழறுமுனே
தண் தாமரைப் பதம் நல்குவாய்! — தழை கானில் ஆயிழை
[போனபின்,
வண் தாரை இன்புறு வாலியின் வலி சிந்து மால் மருகா! குகா!
விண்டாரை வேர் அற மாய்த்திடும் வேலாயுதா! வேலாயுதா! 47

பூ ஆரும் இந்திர நீலம் முப்போதும் புனைந்திடு நின் கழல்
ஓவாது அருச்சனை செய்து, நெஞ்சு உருகும்படி
[அருள்செய்குவாய்!—
தேவாதி தேவர்க்கு 'ஓம்' எனும் திருமந்திரம் புகல் தேசிகா!
மேவார மடிந்திட மோதிடும வேலாயுதா! வேலாயுதா! 48

பாழ் இக்கு வேள் மதனுர் விடும் பாணத்தினுல், உடல் வெம்பியே
தாழிக்குள் வைத்திடும் மத்து உடை தயிர் என்ன நெஞ்சு
[அலையா மல் ஆள் —
காழிக்குள் வாழ் சம்பந்தராய்க் கவி பாட நல்வழி காட்டிடும்
வீழுக் கனி நிகர் வாயனே! வேலாயுதா! வேலாயுதா! 49

கந்தா! உமை மைந்தா! செழுங்கடம்பா! முருகா! என்று உனைக்
கொந்து ஆர மலர் கொடு பூசை செய் குணம உள்ள
[மானிடர் ஈசரே;—
செந்தூர், பரங்கிரி, ஏரகம், திருவாவினன்குடி வாசனே!
விந்தாசலம் புரையும் புயா! வேலாயுதா! வேலாயுதா! 50

சேந்தா நமோ! குமரா நமோ! சேயே நமோ! வன வள்ளிதன்
காந்தா நமோ! வணிகா நமோ! கந்தா நமோ! கடம்பா நமோ!
சாந்தா நமோ! முருகா நமோ! தணிகாசலத்து இறைவா நமோ!
வேந்தா நமோ! என ஓதுவேன்—வேலாயுதா! வேலாயுதா! 51

கள் ஆர் கடம்பு அணியும் திருக்கழலும், சதங்கையும், மஞ்ஞையும்,
புள் ஆன குக்குடமும், திருப்புயம் ஆறுமே துணை ஆகுமே;
நள்ளார் உரம் கிழிபட்டு நாய் நரி தின்றிடும்படி செய்குவாய்!
விள்ளாத அன்புடையேனை ஆள், — வேலாயுதா! வேலாயுதா! 52

நம்பும் திருஅடியார்கள்மேல் நட்பு ஆகி, உட்பகைகொண்டு போய்
வம்பும் பிணிகளுமே செயும் வசி ஆகருஷணம் ஆதி ஆம்
பப்பும் பசாசையும் ஏவினோர், பல சூனியங்களை ஏவினோர்,
வெம்பும் குடர்த்தொடை வேய்ந்திடும் வேலாயுதா! வேலாயுதா! 53

தாய்க்கும் பிதாவுக்கும் கொடாதவர் தேடி வைத்திடு காசு எலாம்,
தீய்க்கும், பல பேய்க்கும், பொருஞ் செறுநர்க்கும், நீள்
[திருடர்க்கும் ஆம் —
தோய்க்கும் தயிருடன் மாமியார் துவர்வாய் இதழ் அமுது
[உண்டு, கோ
மேய்க்கும் பிரான் மருகா! குகா! வேலாயுதா! வேலாயுதா! 54

கொட்டும் பறையுடன் என்கினை 'கூகா' என, எம தூதுவர்,
'கட்டும் பிடித்திடும்' என்று உயிர் கவராமலே எனை ஆளுவாய்! —
முட்டும் தகர்மிசை ஏறியே முடுகித் தயித்தியர் சென்னியை
வெட்டும் திருக் கர வாளனே! வேலாயுதா! வேலாயுதா! 55

பொரு வாது செய் சமயம்தொறும் பிதற்றும் பொருள்
[அறுமாறு, நின்
திருவாயினால் ஒரு வான் பொருள் தெளியும்படி
[அருள்செய்குவாய்! —
மருவார் சிரம் கரம் நாசி தோள் வாய் காது கண் செவி பாறு உண,
வெருவாது அரிந்திடு வீரனே! வேலாயுதா! வேலாயுதா! 56

அழலுக்குள் வீழ் மெழுகு ஆம் என அகம் நைந்துநைந்து
[உருகி, சிறு
கழலுக்கு மா மலர் இட்டு, உனைக் கருதாமலே, மடவார் கருங்
குழலுக்கும் வாய்-இதழுக்கும் வார் கொங்கைக்கும்
[மால உழுவோர் எலாம்
விழலுக்கு இறைத்திடு வீணரே! — வேலாயுதா! வேலாயுதா! 57

மண் குத்து கோட்டு இமில் ஏறு என மதம் மீறினும் எனை
[ஆளுவாய்! —
கண் குத்து கைவிரல்தன்னை யார் களைவார்கள், இவ் உலகத்திலே?
எண்கு உத்து வன்மீகத்தினை இடர்க்கும்தொறும் மணி சிந்திடும்
விண் குத்து நீள் தணிகாசலா! வேலாயுதா! வேலாயுதா! 58

இழை ஆகும் நுண் இடையார் வயிறு எனும் பண்ணையின்
[விளைவு ஆகியே
கழை ஆலை இட்டது போல வெம் கரி யோனிவாய் வரல்
[நீக்குவாய்! —
மழை யானை என்று அரி தாவியே மருளும் திருத்தணிகாசலா!
விழையார் உரம் கிழிபட்டிடும் வேலாயுதா! வேலாயுதா! 59

தேருக்குள் அஞ்சுராணிபோல் தேகத்தில் ஆருயிர் விண்டபின்,
பாருக்குளே புதை என்பதும், படு கானிலே சுடும் என்பதும்,
நீருக்குளே முழுகு என்பதும், நினையாமல் இன்புறல் ஆகுமோ? —
மேருச் சிலையவன் மைந்தனே! வேலாயுதா! வேலாயுதா! 60

குறி காட்டி, அந்தகன், ஆருயிர்க் கொலை காட்டி வந்து
[அழையாமுனே,
முறி காட்டியே உனது ஆறு மா முகம் காட்டி வந்து அருள்
[செய்குவாய்! —
செறி காட்டிலே கிளி ஓட்டியே தினை காத்த மான் அணை
[பார்த்திபா!
வெறியாட்டிலே மகிழ் பூத்திடும் வேலாயுதா! வேலாயுதா! 61

கட்டாரி வேல் விழியார் செயும் கலவிக்கு இசைந்திடு காமனும்,
ஒட்டார் எலாம் திறை நல்கிட, உலகு ஆளும் மன்னவரும் தழல்
பட்டார், உயிர் விளிவார்கள்; உன் பத நீழலே நிலை என்று, எலாம்
விட்டார்களே விளியாதவர்; — வேலாயுதா! வேலாயுதா! 62

நீல் தத்து உவா இரவு என்னவே நீளும் கருங்குழல் மாதர்பால்
கால் தத்து வாம் பரிதன்னினும் கடிது ஓடு நெஞ்சு அசைவு
[அற்றவர்
ஆறு அத்துவாவினையும் கடந்து அந்தத் துவாதச உச்சியின்
வீறத் துவாதச கைத்தலா! வேலாயுதா! வேலாயுதா! 63

பேரைத் தொலைத்து, உயர் தாரகன் பெரு மாய வெற்பினையும்
[தொலைத்து,
ஊரைத் தொலைத்து, அரிமாமுகன் உரமும் தொலைத்து,
[ஒழியாத வெம்
சூரைத் தொலைத்து, எழுமாதவர் துயரும் தொலைத்து,
[அலை மோதிடும்
வீரைக்குளே முழுகாவரும் வேலாயுதா! வேலாயுதா! 64

பட்டிக் கடாமிசை அந்தகன் பாசம் கொடுவரு முன்னமே,
வட்டிச்கு வைத்திடு காசு எலாம் வறியோர்க்கு அளிப்பவர்
[உய்குவார்;
எட்டிக் கனி என அண்டினோர்க்கு ஈயாத லோபிகள், வேசைபால்
விட்டிற்கு இசைந்திட மாய்வரே; — வேலாயுதா! வேலாயுதா! 65

சடி யாழின் நாரத மா முனி கழுருமுனே தினை காத்திடும்
கொடியான வள்ளியின் மால்கொடு குறுகி, கணிமரம் ஆகியே,
இடியான சொல் வன வேடர் துஞ்சு இரவின்கணே திருடிக்கொடு
விடியாமுனே வரு கள்வனே! வேலாயுதா! வேலாயுதா! 66

காலைக்கும் நண்பகலைக்கும் இக் கலி காலர் அற்புதம் எய்தவே
மாலைக்கும் இந்திர நீல மா மலர் மூன்று அணிகழல் நல்குவாய்' —
ஆலைக்குள் வைத்து அடு கன்னலின் அபர் ஆடி, அப்புறம் முற்றிய
வேலைக்குள் மூழ்கிய கொக்கு அடும் வேலாயுதா! வேலாயுதா! 67

அஞ்சக் கொடுந்துயர் செய்து, நின் அடியார்கள்மேல் விடும்
[அம்பு எலாம்
பஞ்சில் படும் தணல் என்னவே பட நூறி விட்டவர் தம்மையும்
நெஞ்சைப் பிளந்து, உதிரத்தொடு நிணம் உண்டு தேத்து எறி
[வாளனே!
விஞ்சைக்கு இறை பணி சுந்தரா! வேலாயுதா! வேலாயுதா! 68

நனவில் புரிந்திடு காரியம் நாள்தொறும் செய்பவராயினும்,
கனவில் புரிந்திடு பொய் எனக் காணுர், உனைக் காணுர்களே! —
சினவித் தயித்தியர் சேதியைத் தெரியார் என, குருவின்புடை
வினவிப் பொருதிடு செந்தில் வாழ் வேலாயுதா! வேலாயுதா! 69

புத்து ஆர் அமுது உணும் இந்திரன் புனல் ஆடி, மந்தாரம் தரும்
தொத்து ஆர் மலர்கொடு தாழவே, துணை மா மலர்ப்பதம்
[ஈகுவாய்! —
கொத்து ஆர் கடம்புடன், ஆசு சீர் குறையாத மதுரம் சித்திரம்
வித்தார வண் கவியும் புனை வேலாயுதா! வேலாயுதா! 70

பிறித்து ஆருயிர் கொடு போய், நமன் பெரிதான தண்டனை
[செய்திட,
மறித்து ஆக்கையில் சேராமுனே, மயில் ஏறிவந்து, எதிர்
[நின்றிடாய்! —
பொறுத்தால், குறை உளதோ? முனுள் புலையேன் செயும்
[பிழை நாடியே
வெறுத்தால், துணை வேறு இல்லையே! — வேலாயுதா! வேலாயுதா! 71

தொடை ஏறு செந்தமிழ் பாடியே தொழுதும் கொடாதவர்
[வாழ் தலைக்-
கடை ஏறி இங்கு இரவாமலே கழல் ஆர்ந்த சிற்றடி நல்குவாய்! —
மடை ஏறி நந்துஇனம் ஊர்ந்திடும் வயல் சூழ் திருத்தணிகாசலா!
விடையேறி இன்புறு பாலனே! வேலாயுதா! வேலாயுதா! 72

அழுங்கும் துயர் பலவும் புரிந்து அணி ஆயிரத்து எட்டு அண்டமும்
வழங்கும் கொடுங்கோல் ஓச்சியே வாழ் சூரபன்மாவின் புடை
முழங்கும் தயித்தியர் போரிடை முடுக்கும் படைக்கலம் யாவையும்
விழுங்கும் குறள்-திரள் சூழ்தரும் வேலாயுதா! வேலாயுதா! 73

அடுத்தார்க்கு எலாம் அருள் செய்பவன் அறுமாமுகன் எனும்
[வாய்மையால்,
தொடுத்தேன் பல கவி ஆதலின், துன்மார்க்கன் என்று
[இகழாமலே
தடுத்து ஆட்கொளத் தகும் என்னை நீ! தனியாக இச் சகம்மீதிலே
விடுத்தால் பழி உனை மேவுமே? — வேலாயுதா! வேலாயுதா! 74

பொன்னும் மலை பொடிபட்டிட, புனல் ஏழ்கள் உடைபட்டிட,
துன்னுர் எலாம் அசுணத்திரள் துஞ்சும்படி உயிர் சோர்ந்திட,
அந் நாள் அயன் புனை அண்டமோடு அரு மா நிலம் கிழிபட்டிட,
வில் நாண் எறிந்து ஒலி செய்திடும் வேலாயுதா! வேலாயுதா! 75

கண்டு ஏரை வாய் எழில் மஞ்ஞைவாய் கவ்வும் படப் பொறிப்
[பாம்பின் வாய்
உண் தேரை வாய் உறு தும்பியின், ஒளிர் செம்பொன்
[ஆபரணம்தனை,
மண் தேரை, மாதரை நம்பியே மகிழ்வார். உனைப் புகழாமலே,
வெண்டேரை நீர் எனுமாறு போல், — வேலாயுதா! வேலாயுதா! 76

மாக் குன்றமும் தொளை இட்டிட, வரு தாரகன் வலி அற்றிட,
தேக்கும் கடற்புனல் வற்றிட, திகழ் மாது அவத்தம் உற்றிட,
தாக்கும் சுரர் நிலைபெற்றிட, தகுவோர் கருந்தலை இற்றிட,
வீக்கும் கழற்கால் அண்ணலே! வேலாயுதா! வேலாயுதா! 77

மோகம் தரு மா மாயையில் முழுகிக் கிடந்து அயர்கின்ற என்
சோகம் தவிர்த்திடுமாறு நின் துணை மா மலர்ப்பதம் ஈகுவாய்! —
மா கந்தமாதனம், வேள்வி மாமலை, வேங்கடாசலம், ஏரகம்,
மேகம் தவழ் தணிகைக்குள் வாழ் வேலாயுதா! வேலாயுதா! 78

நன்மைக்கு நன்மையும் ஆகுவாய், நலம் ஒன்று இலாப்
[பல துன்பம் ஆம்
துன்மைக்குத் துன்மையும் ஆகுவாய்; துகள் தீர எங்கணும்
[உற்றிடும்
வன்மைக்கு வன்மையும் ஆகுவாய்; வலி ஒன்று இலாது
[அற நுண்மை ஆம்
மென்மைக்கு மென்மையும் ஆகுவாய்; — வேலாயுதா!
[வேலாயுதா! 79

கரகத்தில் உற்பவம் ஆகி, ஏழ் கடல் உண்டு, காவிரி தந்து, பைந்
துரகத்தை முட்டிய விந்தையைத் துகள் செய்து, வில்வலன்
[ஆவி உண்டு,
உரகத்தின் ஆபரணத்தினன் உதவும் தமிழ்க்கு இறை ஆயினோன்
விரகத்தை நீக்கிய தேசிகா! வேலாயுதா! வேலாயுதா! 80

நகுமோ, நினைத்திடுமோ, உடல் நனி வாடுமோ, துனி நீடுமோ,
தகுமோ, மறத்திடுமோ, இதழ் தர நாணுமோ, மயல் பூணுமோ,
புகுமோ குறிச்சியில், இத் தினைப் புனம் மேவுமோ, குறமான் என
வெகு மோகமாய் வனமே செலும் வேலாயுதா! வேலாயுதா! 81

மண், அப்பு, அனல், வளி, வான் என வளர் பூதம் ஐந்தினும் [ஆரணன்
நண்ணப் படைத்திடும் இவ் உடல் நாயேன் சுமந்திடல் [ஆகுமோ? —
வண்ணப் பதமலர் ஈகுவாய்; மயில் ஏறி வந்து அடியேன் சொலும்
விண்ணப்பம் ஒன்று இது கேட்டருள்! — வேலாயுதா! [வேலாயுதா! 82

கைத்து ஓர் பொருள் உறு காலேயே, கழியா அறம் புரியாது, பொன்
வைத்தோர் செழும் தேனீ என மடிவார், பொருள் பிறர் கொள்ளவே; —
பொய்த் தேவரால் அறியாத வெண்பொடி பூசி ஓர் விடைமேல் வரும்
மெய்த் தேவன் ஈன்றருள் சண்முகா! வேலாயுதா! வேலாயுதா! 83

மாதா, பிதா, குரு, தெய்வதர், மனுமக்கள் ஆகிய சுற்றமும்
நீதான் எனும்படி எண்ணியே நினைவார்க்கு அருந்துணை ஆகுவாய்! —
'தா தா, வரம்தனை; யான் செயும் தவறும் பொறுத்தருள்' என்று முன்
வேதா வழுத்திய செல்வனே! வேலாயுதா! வேலாயுதா! 84

கட்சிக்குள் அந்தியில் மேவியே கண் துஞ்சி வைகறையில் செலும்
பட்சிக்கு நேர் உடலோடு உயிர் பல உற்று நீங்கிட நல்லதோ? —
குட்சிக்குளே அகிலாண்டமும் குலவும் திருவுருவத்தனே!
வெட்சித் தொடை அணி மார்பனே! வேலாயுதா! வேலாயுதா! 85

பசி, தாகம், அக்கினி, மந்தம், நீர், படர், சீதம், நஞ்சொடு, [தீவிடம்,
அசி, வாதம், நீள் சனி என்னும் அன்னவை பன்னிரண்டு [உயிர் வேதனை
நசியாமல் என்தனை ஆண்டருள் — நவ வீரர் முன்னவன் ஆகவே
விசுவாசமாய் வரு காங்கெயா! வேலாயுதா! வேலாயுதா! 86

மதனத்தை உட்கொளும் நங்கைமார் மருமத்தை ஆகனம்
[உற்று எழுந்-
த தனத்தை, வாய் அமுதத்தை உண் சரசத்தை. வார்
[அளகத்தை, வாள்
வதனத்தை, ஆல் உதரத்தை, நல் வசனத்தை மாலறு
[கொச்சையேன்
விதனத்தை நீக்கிடும் அத்தனே! வேலாயுதா! வேலாயுதா! 87

கூம்பாத நண்பினர் இல் உணும் கூழ் காடி வான் அமுது
[ஆகுமால்;
பாம்பாக வஞ்சனை உட்கொளும் பகையாளி இல்லிடை உண்டிடும்
தீம்பாலும் இன் அமுதும் சுவை செறியும் பொரிக்கறியும் கடும்
வேம்பாய்க் கசந்திடும் என்பரே — வேலாயுதா! வேலாயுதா! 88

கண் பாவு கானக வேடன்ஆய், கை அம்பு வில்லொடு மேவியே,
'பண் பாவும் என் பெயர் மட்டை. நீ பாடாய் ஒரு கவி' என்னலும்,
புண் பாவு வெஞ்சுர வண்மையால் பொய்யாமொழிப்
[புலவோன் சொலும்
வெண்பா உகந்து அணி மார்பனே! வேலாயுதா! வேலாயுதா! 89

முதிராத பேர் அழகு ஆன சண்முகமும், கரம் பனிரெண்டும், என்
எதிராக வந்து அருள் செய்குவாய்! — இனிது ஆன முத்தமிழ் ஓதிடும்
மதுராபுரிக்கு இறை தென்னவன் மகன் ஆகி உக்கிரன் என்று வாழ்
விதுரா! திருத்தணிகைக்குள் வாழ் வேலாயுதா! வேலாயுதா! 90

வானத்தினும் புவிமீதினும் மற்றும் எங்கும் நீ துணை என்று கொள்
ஞானத்தினுல் உறுவோர்க்கு எலாம் நவில் ஒன்பதில் குரு
[ஆகுவாய்;
ஈனச் செருக்கினை நண்ணியே, எண்ணுதை மானிடருக்கு எலாம்
மீனச் சனி என நின்றிடும் வேலாயுதா! வேலாயுதா! 91

சூழ்விப்பையோ, பல துன்பு எலாம் தொலைவிப்பையோ,
[நிலைபெற்றிட
வாழ்விப்பையோ, தாழ்விப்பையோ, மறித்தும் பிறப்பு எனும்
[ஆழியின்
ஆழ்விப்பையோ, அகல்விப்பையோ, அருள் என்கொலோ?
[அறியேன், ஐயா!
வேழ்விப் பொருப்பிடை வாசனே! வேலாயுதா, வேலாயுதா! 92

வாட்கோரை, தாமரை, வெங்கரா மருவும் கிடங்கிடை வீழ்ந்தவன்
கோட்பாடுபோல், உலகு ஆசையில் கொடியேன் விழும் துயர்
[நீக்கி, உன்
தாட்கு ஏவல் செய்திடுமாறு நீ தமியேனை ஆண்டு அருள்
[செய்குவாய்! —
வேட்கோவனுய் உலகம் தரும் வேலாயுதா! வேலாயுதா! 93

தொகு தாரகைக் குலம் எண்ணினும் தொலையாத வெம்
[பிறவிக்குளே
புகுதாமல், உன் இரு தாள் எனும் புணை நல்கி, என்தனை
[ஆண்டிடாய்! —
'திகு தீ திமித் திமி தீ' எனச் சென்று ஆடு மா மயில்மேல் வரும்
விகிர்தா! திருத்தணிகைக்குள் வாழ் வேலாயுதா! வேலாயுதா! 94

மனை தீப்படும் பொழுது, அந்த மா மனையில் துயில்கொள
[நாடல்போல்,
புனை யாக்கை விட்டு உயிர் நீங்கிடும் பொழுதும் சகமயல்
[நீங்கிடார்! —
சுனைபூத்த செங்கழு நீர்மலர்த் துகள் போர்த்த சேவடி நல்கி, என்
வினை தீர்த்திடும் தணிகாசலா! வேலாயுதா! வேலாயுதா! 95

தொடல் ஆகுமோ, பிறர் மாதரை? தொழல் ஆகுமோ,
[பல தேவரை?
அடல் ஆகுமோ, பல சீவனை? அறல் ஆகுமோ, உனது அன்பினை?
படல் ஆகுமோ, மிகு துன்பினை? படிமீதில் இப்படி என்னை நீ
விடல் ஆகுமோ? — தணிகைக்குள் வாழ் வேலாயுதா!
[வேலாயுதா! 96

நாளும் பிறந்து இறவாமலே, நாயேன் முனே, உனது ஆறு-இரு
தோளும் கழுநீரும் புடைத் துணை மாதரும் மயில் கோழியும்
தாளும் சதங்கையும் ஆகவே தணிகாசலத்திடை நின்று நீ
மீளும்படி அருள்செய்குவாய்! வேலாயுதா! வேலாயுதா! 97

திரை சேர் இருவினை மல்கிடும் சென்னக் கடலிடை வீழும் நான்
கரை சேர உன் இரு கால் மரக்கலம் ஈகுவாய்; உனை நம்பினேன்! —
நரை சேர் கிழவனும் ஆகியே நலம் ஆர் தினைப் புனம் மேவிய
விரை சேர் கடம்பு அணி மார்பனே! வேலாயுதா வேலாயுதா! 98

நீள் ஆண்மையும் புகழும் பெரு நிலையும் பல கலையும் திகழ்
தாளாண்மையும் பெறுவார், திருத்தணிகாசலா என ஓதுவார்; —
வாள் ஆண்மையால் உயர் சூரனர் வலி சிந்தி, மன்னுயிர்கட்கு [எலாம்
வேளாண்மை செய்திடு வள்ளலே! வேலாயுதா! வேலாயுதா! 99

ஈராறு காதினில் ஓர் செவி, எளியேன் புகல் மொழி கேட்குமே?
ஈராறு கண்களில் ஓர் விழி, எளியேன்தனக்கு அருள்செய்யுமே?
ஈராறு கைதனில் ஓர் கரம், எளியேனை அஞ்சல் என்னுமே? —
வீரா! திருத்தணிகாதிபா! வேலாயுதா! வேலாயுதா! 100

**வேலாயுத சதகம் முற்றும்**

## நூற்பயன்

### வெண்பா

உண்மை தரும் வேலாயுதசதகப் பா நூறும்
வண்மை பெற நாளும் வழுத்துவோர் — எண்ணம் எலாம்
சித்திக்கும்; சத்துருவைச் சேதிக்கும், சாதிக்கும்
எத்திசைக்கும் நன்மை தருமே.

## 4. மயில் - பத்து

வட்டக் கலாப மயிலே! —
வந்து, என் பழவினை தீர்த்து,
வெட்ட வெளியினில் என்னை
விடுத்து, 'சும்மா இரு' என்றோன்;
துட்டக் கிரவுஞ்ச வெற்பை,
சூரனை வேர்அற மாய்த்தோன்;
சட்டப் புழுகு அணி மெய்யன்;
தணிகேசனை — நீ கொண்டு வாராய்! 1

நஞ்சு உள்பொலியும் அரவை
நடுங்கப் புடைக்கும் மயிலே! —
கஞ்சக் கிழவன் சிரத்தில்
கைவிரலால் குட்டும் ஐயன்,
பஞ்சில் படு நெருப்பு என்னப்
பாவங்களைத் தவிர்த்து ஆண்டோன்,
தஞ்சத் தணிகையில் வாழும்
சதுரனை — நீ கொண்டு வாராய்! 2

நீலக் கலாப மயிலே! —
நினைப்பவர் உள்ளத்தில் வாழும்
கோலக் குறத்தி மணாளன்,
குமரன், அமரர்கள் நாதன்,
சீலச் சிலம்பு அணி பாதன்,
சேவற்கொடி வலம் கொண்டோன்,
வேலுக்கு இறைவன் தணிகை
விசாகனை — மேற்கொண்டு வாராய்! 3

வன்னக் கலாப மயிலே! —
மாய மலப்பிணி நீக்கி,
தன்னை அளித்து என்னை வாங்கும்
சற்குரு ஆம் முருகோனை,
முன்னைப் பழமறை காணு
முதல்வனை, விண்ணவர் கோனை,
கொன்னைத் தணிகையில் மேவும்
குமரனை — நீ கொண்டு வாராய்! 4

குன்றில் சிறை விரித்து ஆடிக்
குலாவும் கலாப மயிலே! —
மன்றில் சிறந்து இனிது ஆடும்
வரதன் அளித்தருள் செல்வன்,
மன்றல் குறத்திக்கு இசைந்த
மணாளன், தணிகையில் வாழும்
வென்றித் தனி இலை வை வேல்
விமலனை — நீ கொண்டு வாராய்! 5

தேரின் பொலியும் கலாபச்
சிறை விரித்து ஆடு மயிலே!—
பாரில் தடுத்து எனை ஆண்டு,
பங்கயச் சேவடி காட்டும்
கூரின் பொலிந்திடும் செவ் வேல்
கொற்றவன் நல் தணிகேசன்
தாரின் பொலிந்த கடப்பந்
தாரவனை — கொண்டு வாராய்! 6

அண்டச் சுவரினுக்கு அப்பால்
அரைக் கணத்து ஓடி உலாவும்
சண்டக் கலாப மயிலே! —
தாயின் சிறந்து எனை ஆண்டோன்,
தொண்டருக்கு ஆர் அமுது அன்ன
சுந்தரன், ஞான விநோதன்,
கொண்டல் தணிகையில் வாழும்
குருபரனைக் கொண்டு — வாராய்! 7

தூவி அம் தோகை மயிலே! —
சொல்லுவன் யான் ஒன்று; கேண்மோ:
பாவியருள் எனின் மிக்கோர்
பாரிடை யாவரும் இல்லை;
கூவி வலிய வந்து ஆளும்
கொள்கை எந்நாள் என்று கேட்போம்;
காவியந் தண் கிரி மேய
காங்கேயனைக் — கொண்டு வாராய்! 8

மேகத்தைக் கண்டு சிறகை
விரித்து நடிக்கும் மயிலே! —
சோகப் பிறப்பை அறுப்பான்
துதித்துப் பணியும் எனக்குத்
தேகத்தைப் பொய் எனக் காட்டிச்
சிதம்பரம் ஆக்கிவைத்தோனை,
போகத் தணிகையில் வாழும்
புனிதனைக் — கொண்டோடி வாராய்! 9

வண்ணப் பிணிமுகம் என்பேன்;
மஞ்ஞை என்பேன்; மயில் என்பேன்;
கண்ணின் பொலிந்த சிகண்டி
கலாபி மயூரமும் என்பேன்;
பண்ணின் சிறந்த ஞமலி,
பசுந் தோகை என்றும் பணிவேன்;
அண்ணல் தணிகையில் வாழும்
அறுமுகனைக் — கொண்டு வாராய்! 10

மயில் - பத்து முற்றும்

## 5. சேவல் - பத்து

செஞ் சூட்டும் இரு சிறையும் பொன்பதா-
யுதமுமுடைச் சேவலே! நீ —
பஞ்சு ஊட்டும் தழல் என என் பவம் தொலைத்து,
பரகதி தந்து ஆள, இன்று,
மஞ்சு ஊட்டும் மழை தவழும் மதில் தணிகை-
வரை வாழும் மன்னன் தன்னை,
குஞ்சு ஊட்டும் பெடை மணந்த மயில் ஏறும்
பெருமானை — கூவுவாயே! 1

என்றும் உனக்கு அடிமை என முறி எழுதித்
தருகுவன்; ஈது இயம்பக் கேண்மோ,
துன்று சிறைச் சேவல் எனும் குக்குடமே!—
எழு பிறவிதொறும் நீங்கானை,
மன்றில் நடித்திடும் ஒருவன் மகன் ஆகி,
உபதேசம் வழங்கினானை,
குன்றில் உயர் தணிகைவரைக் கோமானை, வர, —
ஒருகால் கூவுவாயே! 2

புறத்து இருளை அகற்றுதற்குப் புணரி எழும்
சூரியனைப் புலரிக் காலை,
சிறக்கும் இரு சிறை அடித்து, தினந்தினமும்
அழைத்து உலவும் சேவலே! — நான்
துறப்பரிய அகத்து இருளைத் துலைப்பதற்கு,
நீ ஒருககால், சுடர் வேலானை,
குறத்தி அணையும் தணிகை வரு ஞான
சூரியனை, — கூவுவாயே! 3

அண்டம் எலாம் முட்டை என இரு சிறையினுள்
அடக்கி, அபயங் சாத்து,
திண் திறல் சேர் அவுணர் குலம் சிதைய இடிக்
குரல் காட்டும் சேவலே, கேள்! —
பண்டைய ஆம் மலம் அறுத்து, நலம் உறுத்தி,
எனை ஆண்ட பாலன், நீலக்
கொண்டல் உலாவும் தணிகைக் குருநாதன்
இங்கு வர, — கூவுவாயே! 4

யாமங்கள்தொறும் துயிலும் மனிதர்கள்தம்
வாணுள் வீணுயிற்று என்று
சேமம் கொள் சிறை அடித்து, குக்கூகூ
கூ என்னும் சேவலே, கேள்! —
காமம் கைம்மிக்கு ஒருநான் விடியளவும்
துயிலாத கணக்கு ஈது என்னே?
கோ மங்கை வள்ளி புணர் தணிகையான்
இங்கு வர, — கூவுவாயே! 5

திக்கு அரிக்கும் தானவரைச் செயங்கொளும்
சேவற்கொடியே! — திருமால் போற்றும்
நக்கருக்கும் உமையாட்கும் ஒரு மகனுய்
வரும் இளைய நாதன் தன்னை
அக் கரிக்கும் மிக்க அரிக்கும் மருமகனை,
வள்ளி-தெய்வானை கோனை,
கொக்கரிக்கும் கொக்கு அரிக்கும் தணிகைவரை
வேலோனை, — கூவுவாயே! 6

சோதிடங்கள் பொய்ப்பினும், நின் தூமொழி பொய்
யாது எனவே சொல்வர், நல்லோர்;
தீது அற ஓர்கால், இருகால், முக்கால், நாற்கால்
யாமம் தெரியச் சொல்வாய்;
ஆதலினுல், உனக்கு உரைப்பேன் ஆண்டலைச்
சேவற்கொடியே! — அறுமீன் ஆகும்
கோதையர் பால் உணும் தணிகைக் கோமானை
இங்கு வர, — கூவுவாயே! 7

துண்டத்தால் உரம் கிழித்துத் தானவர் செங்
குடலினை மேல் சூடலேபோல்,
கண்டத்து ஆர் ஊன் குலவும் செஞ் சூட்டுச்
சேவல்! ஒன்று கரைவன் கேண்மோ! —
அண்டத்தார் வையகத்தார் அரவு உறையும்
பாதலத்தார் அகலாது ஏத்தும்
கொண்டல் தாரகை குலவும் தணிகை இளை-
யோன் வர, — நீ கூவுவாயே! 8

தாரகை நெல்லாக் கொறித்து, சமுத்திர நீர்
அறக் குடித்து, சமரில் வந்து,
சேர் அவுணர் பட, இடிநேர் குரல் காட்டும்
சேவல்! ஒன்று செப்பக் கேண்மோ! —
கீரன் உரையுடன் அருணகிரி நாதன்
துதியின் மிகு கேண்மையானை,
கூர் அயில்வேற் கரத்தானை, தணிகை
வரையானை வர, — கூவுவாயே! 9

வந்திப்பேன்; அனுதினமும் வாழ்த்திடுவேன்;
உனது திருவடிவை நாளும்
சிந்திப்பேன்; முப்பொழுதும் சேவிப்பேன்;
செஞ் சூட்டுச் சேவலே, கேள்! —
பந்திப்பேன் எனது வலி பார் என்னும்
ஆணவம் ஆம் பகை விண்டு ஓட,
கொந்தில் தேன் பொழி சாரல் தணிகை
வரையான் வர, — நீ கூவுவாயே! 10

**சேவல் - பத்து முற்றும்**

## 6. வேல் - பத்து

பேரா வினையின் திரை எறியும்
  பிறவிக்கடல் வற்றிடச் சுவற்றி,
ஆரா மாயைத் திரை புணரா
  அமுதக்கடலின் அழுத்தியிடாய்! —
போர் ஆர் அவுணக் கடலொடு நீர்ப்
  புணரி ஏழும் அற உறிஞ்சி,
ஏர் ஆர் தணிகைப் பெருமான் கை
  இருந்த ஞானச் சுடர் வேலே! 1

நீங்கா மாயைப் பொருள் பலவும்
  நெருங்கும் பிறவிக்கிரி சாடி,
ஓங்காரத்துள் ஒளிக்கிரிமேல்
  உயர் ஞானத்தின் முடி இருத்தாய்! —
வாங்கா மாயம் பல புரிந்த
  வஞ்சக் கிரவுஞ்சம் துளைத்து,
பாங்கு ஆர் தணிகைப் பெருமான் கைப்
  பயிலும் ஞானச் சுடர் வேலே! 2

மூல மல வேர் மேல் போக்கி,
  முளைத்த பவமாமரம் துளைத்து,
சீல அமல மரக் கோட்டில்
  செறியும் ஞானத் தேன் அருத்தாய்! —
கோலம் மருவும் புறக் கடலில்
  குலவும் சூர் மாமரம் தடிந்து,
நீல வரையின் இளையோன் கை
  நின்ற ஞானச் சுடர் வேலே! 3

கானப் பிறவி வேர் முழுதும்
களைந்து, உன் அருள்-ஏர் கொண்டு உழுது,
ஞானக் கரும்பை மனப் புலத்தில்
நாட்டி, விளையும்படி பாராய்! —
வானத்து இறையைக் குடி ஏற்றி,
வானோர் சிறை எலாம் தவிர்த்து,
மோனத் தணிகைப் பெருமான் கை
முடுகு ஞானச் சுடர் வேலே! 4

காமம் வெகுளி மயக்கம் எனும்
கடியோர் வாழும் முப்புரத்தின்
நாம ரூபக் கிரியை அற,
நாயேன் பிறவிநோய் தவிர்ப்பாய்!
தீமை அரக்கர் மூவரொடு
சேரும் புரங்கள்தமை அழித்து,
பூ மன் தணிகைப் பெருமான் கைப்
பொலியும் ஞானச் சுடர் வேலே! 5

மல வேதனையும் மடித்து உடலம்
மருவா வழியும் காட்டி, பின்
நல வேதத்தின் சிரப்பொருளை
நாயேற்கு அருளும் நாள் உளதோ? —
அலர் வேதனையும் புடைத்து, உலகம்
ஆக்கும் தொழிலும் கைக்கொண்டு,
பொலம் ஆர் தணிகை அமர்ந்தான் கைப்
பொலியும் ஞானச் சுடர் வேலே! 6

சூழும் நரம்பு செந்தசை தோல்
சுக்கிலம் மூளை எலும்பு உதிரம்
ஆழும் மெய்யைப் பொய் எனக் காண்
அகண்ட ஞானம்தனை அளிப்பாய்! —
தாழும் அலையும் பிளந்து, அவற்றில்
தங்கும் அசுரன் உரம் பிளந்து,
வாழும் தணிகைப் பெருமான் கை
மருவும் ஞானச் சுடர் வேலே! 7

அஞ்ஞானத்தின் வசம் ஆகி,
அழியும் பிறவிதனை அகன்று,
மெய்ஞ்ஞானத்தின் மயம் ஆகும்
வீட்டில் குலவும் நாள் உளதோ? —
பொய்ஞ்ஞானத்தின் வயத்து இருள் சேர்
பூதப் படையை வெளிப்படுத்தி,
மைஞ்ஞானத்தைப் புனை தணிகை
வரதன் குடங்கை அமர் வேலே! 8

ஐம் பூதத்தான் ஆகியது ஓர்
ஆக்கைக் குகையுள் படும் உயிர்தான்
கம் பூதத்தில் செயும் வினையால்
கடுகும் துயர் தீர்த்து அருள்புரிவாய்! —
வெம் பூதத்தைத் தடிந்து குகை
மேவும் புலவன் தனைப் புரந்து,
செம் பூதரம் ஆம் தணிகை அமர்
செவ்வேள் கரத்தில் சேர் வேலே! 9

விச்சு ஆர் அசுத்த மாயையினில்
விளையும் ஞானக் கிரியையொடு
நச்சு ஆர் இச்சா சத்தியினால்
நணுகும் பிறவித்துயர் களைவாய்! —
இச்சா ஞானக் கிரியையும் மூ -
இலையாய்ப் படைத்துக் கதிர் பரப்பி,
மைச் சார்ந்து ஒழுகும் தணிகைவரை
வள்ளல் மலர்க்கைத் தனி வேலே! 10

வேல் - பத்து முற்றும்

## 7. சீர்பாதப் பத்து

புல் ஆகி, மரம் ஆகி, புழுக்கள் ஆகி,
　　புள் ஆகி, விலங்கு ஆகி, பூதம் ஆகி,
கல் ஆகி, தானவர் வானவரும் ஆகி,
　　காசினியில் மனிதரும் ஆய்க் கலங்கும் தீயேன் —
சொல் ஆகி, பொருள் ஆகி, விரைப்பூ ஆகி,
　　சுடர் ஆகி, ஒளி ஆகி, அனைத்தும் ஆகி,
இல் ஆகித் தணிகை வரை இருந்தான் பாதம்
　　எண்ணினேன், பேரின்பம் நண்ணினேனே! 1

மண் ஆசை, பொன் ஆசை, மக்கள் ஆசை,
　　வயது ஆசை, வடிவு ஆசை, மணியின் ஆசை,
பெண் ஆசை, மனை ஆசை, உலகை ஆளும்
　　பேராசை, கொண்டு பிறந்து இறக்கும் தீயேன் —
விண் ஆசைப்படும் தேவர் பகையைச் சாடி,
　　விண்ணுலகம் அளித்தருளும் விசாகன், வீணைப்
பண் ஆசைப்படும் தணிகைக் குமரன் பாதம்
　　பாவித்தேன், என் பிறப்பைக் கோவித்தேனே! 2

வார் படைத்த முலை மடவார் கலவிக் கள்ளின்
　　மயல் படைத்து, நோய் படைத்து, வருந்தி, நாளும்
ஊர் படைத்த தெருக்கள்தொறும் உழலும் தீயேன் —
　　உருப் படைத்த சராசரங்கள் உறைந்து வாழப்
பார் படைத்து, விண் படைத்து, சேடன் தங்கும்
　　பாதலமும் படைத்து, எவையும் படைத்து, காக்கும்
சீர் படைத்த தணிகை வரை மேயோன் பாதம்
　　சிந்தித்தேன், ஐம்புலனும் பந்தித்தேனே! 3

செப்பு எழுது முலை மடவார் கலவிக் கள்ளைத்
திருடரைப் போல் தினந்தினமும் மறைத்து, மாந்தி,
ஒப்பு எழுதும் படம் ஏந்தி மடல்மா ஏறி,
ஓயாது தெருக்கள்தொறும் உழலும் தீயேன் —
எப்பொழுதும் வள்ளி தெய்வயானை மாதர்
இருபுறமும் அகலாத இறைவன், நீலம்
முப் பொழுதும் அலர் காவி வரையான் பாதம்
மொழிந்திட்டேன் சஞ்சிதத்தை ஒழிந்திட்டேனே! 4

பாலே சொல், வேயே தோள், பவளமே வாய்,
பங்கயமே முகம், அரவின் படமே அல்குல்,
சேலே கண், என உரைத்து, மட நல்லார் தம்
சிற்றின்பப் பித்து ஏறித் திரியும் தீயேன் —
வேல் ஏவிக் கொக்கை மயில் சேவல் ஆக்கி,
மேல் ஏறிக் கைப்பிடித்த விசாகன், வேத
நூல் ஓதும் தணிகைவரை மேயோன் பாதம்
நோக்கினேன், கூற்றுவனைத் தாக்கினேனே! 5

பேய்த்தேரை நீர் எனும் மான் கணமே போலப்
பேதையர் சிற்றின்பே பேரின்பாம் என்று
வாய்த் தேனைப் பருகி, அறிவு அழிந்து, நல்ல
வழி அறியாத் தூர்த்தரொடு மருவும் தீயேன் —
காய்த்து ஏனல் கதிர் விளையும் புனத்து வேடக்
கன்னி வள்ளி திருவேளைக்கார, நாளும்
போய்த் தேவர் தொழும் தணிகை மேயான் பாதம்
புல்லினேன், ஆணவத்தைக் கல்லினேனே! 6

உய்யாத பாதகங்கள் செய்து காமக்கு
உழன்று மனோ வாக்கு உடலம் வேறாய், நன்மை
செய்யாத மூடரொடும் கூடி, மாதர்
சேய் இதழ் வாய் அமுது உண்டு திரியும் தீயேன் —
நையாது மன்னுயிரைப் புரப்பான் எண்ணி,
நாள்தோறும் முப்பொழுதும் நறிய நீலம்
பொய்யாது மலர் தணிகை அமர்ந்தான் பாதம்
போற்றினேன் ஏடணையை மாற்றினேனே! 7

தேன் ஆரும் மலர் அயனர் படைப்பும், ஈற்றில்
சித்திரகுத்தன் கணக்கும், தினங்கள்தோறும்
ஊன் ஆரும் உயிர் வாங்கும் கலவி மாதர்
உருவமும் கண்டு, உளம் நடுங்கி, உழலும் தீயேன் —
மீன் ஆரும் கொக்கு எனவே அமரர்தம்மை
மிகுகொலை செய்திடும் அவுணக்குழுவைச் சாய்த்தோன்
வான் ஆரும் தணிகைவரை இறைவன் பாதம்
வாழ்த்தினேன், தீவினையைத் தாழ்த்தினேனே! 8

ஈயாத முழுமூடரிடத்தில் சென்றே
இந்திரரே என்று பல பொய்யும் கூறி,
ஏயாது, சாண்வயிற்றுக்கு இரையும் தேடி,
ஏந்திழையார் உருவினைக் கண்டு உழலும் தீயேன் —
ஓயாது தயிருடன் பால் வெண்ணெய்தாமும்
ஒளித்து உண்டு கட்டுண்டோன் மருகன், என்றும்
மாயாத புகழ்த் தணிகை வள்ளல் பாதம்
வணங்கினேன் அன்பரொடும் இணங்கினேனே! 9

வாள்-தடங் கண் சிறிது, நகை சிறிது, மின்னர்
வாயின் இதழ் சிறிது, முலை சிறிது, மையைக்
கூட்டியன குழல் சிறிதும் ஆகி, நாளும்
கொள்ளைகொள, அறிவு பறிகொடுக்கும் தீயேன் —
காட்டில் வளர் தினை காத்து, கிளியை ஓப்பும்
கன்னிதனைச் சேர நரர் வடிவம் கொண்டோன்,
நாட்டு புகழ்த் தணிகை வரை முருகன், பாதம்
நாடினேன், முத்திநெறி கூடினேனே! 10

**சீர்பாதப் பத்து முற்றும்**

## 8. தணிகைமலைப் பத்து

பங்கயாதனன் மால் வாசவன் முதலாம்
பண்ணவர்க்கு இடுக்கணே புரியும்
சிங்கமா முகத்தன், கசமுகன், சூரன்
சிரம் அறுத்தவன் உறை இடம்தான் —
மங்குல் நேர் வேட மகளிரும் அரம்பை
மாதரும் உவந்து இனிது ஆடும்
கங்கை நேர் சுனைகள் பற்பல மருவும்
கைலை நேர் தணிகை மால் வரையே. 1

வஞ்சமே புரியும் மாயையால் அவுணன்
வளர்தரு கிரவுஞ்ச வரையின்
நெஞ்சமே பிளந்த நெட்டிலை வேலோன்
நெடுஞ் சினம் தவிர்ந்த நல் இடம்தான் —
தஞ்சம் நீ என்று வாணியோடு அணுகி,
தண் சுனை ஒன்று அகழ்ந்திட்டுக்
கஞ்சம் மீது உறையும் நான்முகன் போற்றும்
கைலை நேர் தணிகை மால் வரையே. 2

ஆயிரத்துடன் ஓர் எட்டு எனும் அண்டம்
அளித்து, உடல் ஒருவரால் அழியாச்
சூரனைத் தடிந்த சேயிலை வேலோன்
சுடு சினம் தணிந்த நல் இடம்தான் —
மீ உயர் தருவின் நறுமலர் அளித்து,
வேடர் கை வேங்கை மா மலரைக்
காய் அயில் வேற்கண் அரம்பையர் வாங்கும்
கைலை நேர் தணிகை மால் வரையே. 3

வியம் கெழு பூதப் படையொடு நடந்து,
வேலை சூழ் மயேந்திரம் அழித்து,
சயம் கெழு தேவர் சிறை எலாம் தவிர்த்த
சரவணபவன் அமர் இடம்தான் —
வயம் கெழு விஞ்சை மாதரார் வீணை
வழங்கும் இன்னிசைகள் கேட்டு உவந்து,
கயம் கெழு பிடியோடு உறங்குறும் சாரல்
கைலை நேர் தணிகை மால் வரையே! 4

மா உரு எடுத்துப் பெரும்புறக் கடலில்
மறைந்திடும் சூர் உரம் கிழித்துச்
சேவலும் மயிலும் ஆக்கிய முருகன்
சினம் தவிர்ந்து உறையும் நல் இடம்தான் —
மூ-உரு எடுத்த ஒரு பரம் பொருள்போல்
முத்தலைச் சிகரியாய் ஓங்கி,
கா உருவெடுத்த சந்தனம் அகில் சூழ்
கைலை நேர் தணிகை மால் வரையே! 5

மந்தரம் அனைய காத்திரம் படைத்த
வல்லை வாள் அசுரரைத் தாக்கி,
அந்தரத்து அமரர் செல்வம் ஈந்து அருளும்
அறுமுகன் சினம் தவிர் இடம்தான் —
சுந்தர முருகன் தனை மனம் இருத்தி,
சுழுமுனை தனில் வளி அடக்கி,
கந்தரம் தொறும் மா முனிவரர் தவம் செய்
கைலை நேர் தணிகை மால் வரையே! 6

மன்னிய அண்டம் அனைத்தினும் சென்று
மலையொடு கடல் என வரும் சூர்
தன்னொடு ஈரிருநாள் பொருது அழித்திட்ட
சடானன் சினம் தவிர் இடம்தான் —
தின்னிய புனத்தில் வரும் கிளி ஒப்பும்
தெறு சின வேட்டுவக் குலம் சேர்
கன்னியர் கவண் கல் கற்பகம் அலைக்கும்
கைலை நேர் தணிகை மால் வரையே! 7

சூரனை, அவுணக் கடலினை, வெய்ய
துயர் செயும் மாயையின் இருளை
கீரனைக் கொடு போம் பூதத்தை அடு வேல்
கிரீசன் வெஞ்சினம் தவிர் இடம்தான் —
தாரகைக் கணத்தின் ஒளிரும் வேய் மணியும்
சந்தன மரமும் குங்குமமும்
கார் அகில் துணியும் வரன்று இழி அருவிக்
கைலை நேர் தணிகை மால் வரையே! 8

எரி விழித் தோன்றி, எரியினுல் சென்றே,
எரிமுலை உண்டு, எரி உதித்த
வருடை மீது ஏறி, உலகினை வலம்கொள்
மன்னவன் சினம் தவிர் இடம்தான் —
குரு முலைக்கு உவமை என வரச் சினவி,
குறத்தியர் கிம்புரிப் பூண் செய்
கரிமருப்பு உலக்கையாத் தினை குற்றும்
கைலை நேர் தணிகை மால் வரையே! 9

வீரர் ஒன்பதின்மர், தலைவர் ஓர் இலக்கர்,
வெள்ளம் ஈராயிரம் என்னும்
சாரதரொடும் சென்று, அவுணரை அழித்த
சண்முகன் சினம் தவிர் இடம்தான் —
பாரில் எந்நாளும் அதிசயம் பயப்ப,
பைஞ்சுனை தன்னில் முப்பொழுதும்
கார் நறு நீலம் மலர்ந்து எழில் காட்டும்
கைலை நேர் தணிகை மால் வரையே! 10

**தணிகைமலைப் பத்து முற்றும்**

## 9. திருத்தணிகை அந்தாதி

### காப்பு

*ஆறு முடியோன் அழற்கண் தனில் உதித்த*
*ஆறுமுடியோன் அரும் புகழே—வீறும்*
*திருத்தணிகை அந்தாதி சேவிக்கும் என்தன்*
*கருத்தில் உறை யானைமுகன் காப்பு.*



திருவும் அருளும் செழிக்கும்; இன்ப வீடு
மருவும்; — தணிகைவரை வாழும் முருகன்
திருப் பாதபங்கயத்தைச் சென்று இறைஞ்சி, ஏத்தி,
விருப்பா நினைக்க மனமே. 1

மேவித் தணிகைவரை வேந்தன் இரு தாள்மலரைச்
சேவித்து, நம் குறையைச் செப்பினல், கோவித்-
திடுமோ? குறையது தீர்த்து, எய்தரிய வீட்டில்
விடுமோ? — மனமே, விளம்பு! 2

விளப்பாய், தணிகைவரை வேலோனை, அன்பர்
உளம் பாயும் இன்ப உருவானை, அளம் பாய்
துரும்பு என ஞானக்கடலில் தோய்ந்திடாய், என்னே! —
இரும்பு அன நெஞ்சே! — இயைந்து. 3

இயலும் இசையும் எழில் நாடகமும்
முயலும் தமிழ்செய் முனிவன் பயில, வரம்
ஈந்த தணிகை எழில்வரைமேல் வீற்றிருக்கும்
வேந்தன் இரு பதமே வீடு. 4

வீட்டை அடைவான் விரும்பினையேல், — நல் நெஞ்சே! —
நாட்டில் உயர் தணிகை நாயகனை, காட்டில்
குறத்தி பதம் பணியும் கொற்றவனை, நாளும்
அறத்தினொடு பூசித்து அறி. 5

அறியாச் சிறியேன் அரட்டை அறுத்து, என்றும்
மறியாச் சிறுதாள்மலரைக் குறியாகக்
கொள் என்றான், தென் தணிகைக் கொற்றவனும்; இக் கணமே
விள் என்றான, யேலை வினை. 6

வினை அகற்றி, நாயேனை மெய்யடியார் கூட்டம்-
தனில் இருத்தி, நாளும் தணவாது, எனை நினைந்து
நில் என்றான், — தென் தணிகை நீலகிரியான் — பிறப்பை
வெல் என்றான், அன்பு மிகுத்து. 7

மிகுத்த அவுணர் எனும் வேலைதனை வேலால்
செகுத்த திருத்தணிகைத் தேவே! — பகுத்தறிவு
இல்லேற்குப் பேரின்பம் ஈந்திடுவது என்றோ? நீ
சொல்லாய், நின் வாயால் துணிந்து. 8

துணிந்தேன்; தணிகைவரைத் தோன்றல் இரு பாதம்
பணிந்தேன; அவன் புகழ் வெண்பாவை அணிந்தேன்; மற்று
என்னைப் பிறப்பில் இருத்தாமல், பேரின்பம்-
தன்னைக் கொடுத்திட்டான், சார்ந்து. 9

சாரும் அடியேன்தனக்குச் சஞ்சிதம் முன்னும் மலத்தின்
வேரும களைந்து, இன்ப வீடு உதவ, — யாரும்
தணிகாசலம் என்று சாற்ற, அருள் செய்யும்
வணிகா! — மயில்மசை நீ வா. 10

வா வா, மயிலே! — எம் மங்கை உயிர் நீங்காமுன்,
தேவாதி தேவன் திருத்தணிகை ஓவாமல்
உற்றவனை, தன் இரு தாள் உற்றவரைக் காத்தளிக்கும்
கொற்றவனை, நீ சுமந்துகொண்டு. 11

கொண்டேன், அவன் அருளை; கூடினேன், தொண்டரொடும்;
விண்டேன், பிறவி எனும் வேலைதனை; — கண்டேன்,
தடம் பலவும் சூழும் தணிகைவரை மேய
கடம்பமலர்த் தாரான் கழல். 12

கழல் அணியும் தாளும், கனகநிற மேனி
அழகு மயிலும், அயிலும், மழலைமொழி
மாதர் இருபுறமும் வாய்ந்த தணிகைவரை
நாதனை — என் நெஞ்சகமே — நாடு. 13

நாடும் அடியார் இடமும், நங்கை குறமான் உறையும்
காடும், தணிகைவரைக் கல்லகமும், தேடும்
மறை நான்கின் ஈறும், மருவும் நின் தாள், — மஞ்ஞைக்கு
இறைவா! — என் சென்னிமிசை ஏற்று. 14

ஏற்றுக்கொடியான், எகின் கொடியான், புள் அரசு ஆம்
பாற்றுக் கொடியானும் பார்த்திருப்ப, கூற்றின்
கொடியானைக் கோழிக் கொடியாகக் கொண்டான் —
செடி ஆர் தணிகைவரைச் சேய். 15

சேயோன், கொடியவர்க்குச் சேயோன், அடியவர்க்குத்
தாயோன், தணிகைச் சயிலத்தோன், — நாயேனை
மாளாத பேரின்ப வாரி படிவித்தே
ஆளாகக் கொண்டான் — அவன். 16

அவனே அனைத்து உலகும் ஆக்கி அழிப்பான்;
அவனே தணிகைவரை அண்ணல்; அவனே என்
சிற்றறிவைப் பேரறிவாய்ச் செய்தான்; அவனுக்கு
மற்று அறியேன், ஆற்றும் கைம்மாறு. 17

கைம்மாறு வேண்டாத கார்போல் தடுத்து என்னை
உய்ம்மாறு செய்து, என் உளம் புக்கான்; — மைம் மாறுக்
கண்ணார் விரும்பும் கடம்பு அணியும் தீன் புயத்தான்,
விண் ஆர் தணிகைவரை வேந்து. 18

வேந்தன், தணிகைவரை வேலோன், எழில் குறத்தி
காந்தன், குகன், குமரன், காங்கேயன், சேந்தன்,
அறுமாமுகன், தெய்வயானை மணவாளன் —
உறுவான், என் நெஞ்சத்தின் உள். 19

உள்ளும் புறம்பும் உறைந்து வினை தீர்த்திடுவான்,
தெள்ளு மறை நாடரிய சீரியோன்; — கள் உமிழும்
நீலச் சுனை சேர் நெடுந்தணிகை வெற்பாளன்
கோலத்தை ஏத்தின் அவர்க்கு. 20

குன்றம் பிளந்த அயில் கொற்றவா? நல்தவர் சேர்
மன்றம் பொதியும் மயில் வாகனு! என்றும்
தணிகாசலத்து உறையும் தற்பரா! என்று
பணியாதவர்க்கு என் பயன்? 21

பயந்தேன், இருவினைக்கும் பாழ்த்த பிறவிக்கும்;
வியந்தேன், நின் பாதாரவிந்தம்; நயந்தேன் —
முருகா! தணிகைவரை முன்னவா! மாலின்
மருகா! என்பாரை மகிழ்ந்து. 22

மகிழ்ந்து மனைவாழ்க்கைதனில் மாய்ந்திடும் என் நெஞ்சம்
நெகிழ்ந்து, நினை நினைப்பது என்றோ? — புகழ்ந்து அமரர்
போற்றும் தணிகைவரைப் புண்ணிய! — நின் வாய் திறந்து ஓர்
மாற்றம் கொடுத்திடுவாய் வந்து. 23

வந்தாள், உனைப் பிரிந்த மாது; மதன் பூங்கணையால்
வெந்தாள்; பசலை புலைமேல் கொண்டு நொந்தாளைத்
தந்து ஆள், அணி கடப்பந் தார்அதனை; — சண்முகவா!
கந்தா! தணிகைக் குகா! 24

காக்கும் அரி, மான் மருகா! கார்அதனை ஊர்தி என
ஆக்கும் அரிமான் மருகா! அறுமுகவா! நோக்கரிய
பன்னிரண்டு தோளா! பகர் தணிகை வெற்பா! உன்-
தன் இரண்டு தாள் எனக்குத் தா. 25

தாது ஆர் கடம்பு அணியும் சண்முகா! நல் தணிகை
நாதா! குறத்தி வள்ளி நாயகா! வேதாவைக்
குட்டிச் சிறை வைத்த கோமளா! வந்தருள், என்
திட்டிக்கு நேரே தினம். 26

தினமும் தணிகைச் செழுங்கிரியும், அன்பர்
மனமும் குடிகொண்டு வாழ்வோன்; கனக நிற
வள்ளியோன்; நான்மறைகள் வாழ்த்து மலர்த்தாளுடைய
தெள்ளியோன்-தன் புகழே செப்பு. 27

செப்பும் முடியில் சிறுபிறையும் கோள் அரவும்
அப்பும் தரித்தோன் அருள் குமரா! இப் புவியில்
நல்லோர் தொழும் தணிகை நாயகா! நின் புகழைக்
கல்லாதார்க்கு உண்டோ, கதி? 28

கதி செய் அலைவாய், ஏரகம், பரங்குன்று, அன்பர்
துதி செய் பழமுதிருஞ்சோலை, அதிசெயம் செய்
நல் குன்றுதோருடல், நல் ஆவினன்குடியும்
நிற்கும் — தணிகை நிமலன். 29

நிமலன், கமலம் நிகர் விழி ஈராறன்,
அமலன், அமலம் அறுத்து ஆண்டான், விமலன்,
கருணைகரன், தணிகைக் காங்கெயன், செவ்வேலன்
சரணம்புயம், மனமே! சாற்று. 30

சாற்றும் தணிகைவரைச் சண்முகனை, அன்பர் உளம்
தோற்றும் முடி ஆறுடைய சுந்தரனை, போற்றுகிலாய்;
என்னே கலகவிழி ஏந்திழையார் பால் கொண்டாய்,
அன்னே — என் நெஞ்சே! — அழிந்து. 31

அழிந்து பிறந்து உழலும் ஆக்கை தரும் துன்பம்
ஒழிந்து நினை உறுவது உண்டோ? — வழிந்து
மது ஒழுகும் கல்லார மார்பா! தணிகைப்
பதி உறையும் சேயே! — பகர். 32

பகராய் ஒரு வசனம், பாவியேன் உய்ய; —
நிகர் ஆரும் இல்லாத நித்தா! நகர் ஆம்
தணிகைவரை மீது உறையும் தற்பரா! வைவேல்
அணி கை அகலாத அமரா! 33

அமராபதி காத்து, அவுணர் எலாம் மாள,
சமர் ஆடியே தணிகை சாரும் குமரா!
குறிஞ்சிக்கு இறைவா! நின் கோலத்தைக் காட்டாய்;
பிறந்து இறக்கமாட்டேன், பிரிந்து. 34

பிரியேன் உனை யான்; பிரிந்து, ஓர் கணமும்
தரியேன்; உடல் பிரிந்து, சாவேன்; — கரியோன்
மருகா! தணிகைவரை மன்னு! வடிவேல்
முருகா! வருவாய், என் முன். 35

முன்னும், இரு புறமும், மூதறிவு இலாச் சிறியேன்
பின்னும், துணை ஆகிப் பேசுமே; — பன்னு மறை
நாலும் எழுந்து, ஓலம் இடு நல் தணிகை மால் வரையின்
மேல் உறையும் காங்கெயன் கை வேல். 36

'வேலா! குமரா! விசாகா! உமை அளித்த
பாலா! தணிகைவரைப் பார்த்திபா! தோலாத
தாருகனைக் காய்ந்தருளும் சண்முகா!' என்று, இரு கண்
நீர் உக, — நெஞ்சே! — உருகி நில். 37

நில்லாமல் ஓடி உழல் நெஞ்சே! தணிகை வரை
செல்லாய்; அறுமுகனைச் சேவியாய்; பொல்லாத
தீயன் குறை களையச் செப்பாய்; இம் மாத்திரம் செய்-
யாயேல், இறந்திடுவல் யான். 38

யானும் பிரிந்திருக்ககில்லேன்; தணிகை வரை-
யானும் எனை நீங்கி அமர்கிற்றிலான்; — கான வரை
போலும் அவன் தோள் அழகும், பொற்சதங்கை தண்டை அணி
கால் அழகும், வேல் அழகும் கண்டு. 39

கண்டாள், தணிகைவரைக் காவலனை; கண்டு, மையல்
கொண்டாள்; அவன் பெயரே கூறுவாள்; வண்டு ஏறும்
தாது ஏய் கடம்பமலர்த் தார்அதனைக் கைக் கொண்டாள்; —
மாதே! யான் பெற்ற சிறு மான். 40

மானே! அஞ்சேல்; தணிகை மால் வரை வாழும் குமரன்-
தான் நேயம் கொண்டு, நினைச் சாருமே; தூ நீரும்
தண் மலரும் கொண்டு, அவன் நல் தாள் மலரை அர்ச்சனைசெய் —
கண்மலர் நீர் சோர, கசிந்து. 41

கசிந்து, மனம் உருகி, கண்ணீர் பெருகி,
ஒசிந்த உடல் புளகம் உற்றே, இசைந்து நினைப்
போற்றுது உழலும் புலையனேன், உய் வகை என்? —
சாற்றுய், தணிகாசலா! 42

'தணிகாசலத்து உறையும் சண்முகா!' என்று
பணி; காசு அலம் தவிரப் பாடு; துணிவு ஆகச்
சிந்தித்திடு; — மனமே! செந்நாவே! நல் நெஞ்சே! —
வந்து உற்றிடும், பெரிய வாழ்வு. 43

வாழ்த்துநரும், தென் தணிகை மால்வரையைக் கண்டு, முடி
தாழ்த்துநரும், தீவினையைத் தாழ்த்துநரே; — கேழ்த்த மயில்
செய்யோன், அமரர் சிறை மீட்ட மூவிலை வேல்
கையோன், திருப்புகழைக் கற்று. 44

கல்-தவரைக் கைக் கொண்ட கண்ணுதலோன் சேய் புகழைக்
கற்று, அவரைச் சேராய், — எம் கல் நெஞ்சே! — மற்று அவன் வாழ்
ஓங்கல் தணிகைதனை ஓர் கணம் உன்னுய், பிறவி
நீங்க, கசிந்து உருகி நின்று. 45

நின்ற பொழுதும், அவண் நீங்கி நெடுந் தூரம்
சென்ற பொழுதும், திருத்தணிகைக் குன்று உறையும்
கோமானை நெஞ்சில் குடியேற்றினேன்; — குறத்தி
பூமானுக்கே அடிமை பூண்டு. 46

பூண்டிலையே, நல் தணிகைப் புண்ணியனுருக்கு அடிமை;
மாண்டிலை நீ; என் பெறுவான் வாழுதியோ? — கோண் தவழும்
என் நெஞ்சே! வன் நெஞ்சே! ஏது உரைத்தாலும் கேளாக்
கல் நெஞ்சே! இத் தரையின்கண். 47

கண் ஆறிரண்டும், ஒளிர் கைத்தலம் ஓர் ஆறிரண்டும்,
பண் ஆர் பதம் இரண்டும், பாவையர் மால் நண்ணும்
வதனம் ஒரு மூவிரண்டும், வண் தாமரையே —
முதிர் தணிகை வாழ் முருகற்கு. 48

முருகன், குகன், குமரன், முன்னவன் நம் சேய் தன்
உருவம் கவர்ந்தான் என்று ஓர்ந்தே, மரு அமரும்
பூங்கணையினனைப் பொடியாக்கிற்றால் — விமலன்
தீங் கணை ஆம் நெற்றிவிழித் தீ. 49

'தீம் கவிதை செந்தமிழால் செய்து அணியும் பாவலரைத்
தாங்குவன் யான்' என்று எவரும்தாம் அறிதற்கு, ஓங்கு முருகு -
ஆற்றுப்படை இயம்பும் அப் புலவனைப் புரந்தான் —
சாற்றும் தணிகை அரசன். 50

அரசன் தணிகை அறுமுகற்கு, நெஞ்சே!
உரைசெய் ஒரு சொல்: — 'உனை உள்ளி, கரைசெய்
விழி நீர் பொழிவானை மேவாயேல், துஞ்சும்
பழி சாரும் உன்னை' எனப் பார்த்து. 51

பாரோர் புகழ் தணிகைப் பண்ணவனுர் செய்பரிசு அங்கு
ஆரே அறிகுவர்? ஈது அற்புதம் — முன், நீர் மேவு
கொக்கை மயிலும் உயர் கோழியும் ஆகக் கொண்டான்,
மிக்க கதிர் வேல்அதனை விட்டு! 52

விட்டாயிலை மயலை; வேள் தணிகையார்க்கு அடிமைப்
பட்டாயிலை; — எனது பாழ் நெஞ்சே! — கெட்டாய்; கேள் :
மா தெற்கு இருந்து நமை வந்து அழைக்கும் தண்டதரன்
தூதற்கு என் செய்வதுதான், சொல்? 53

சொல்லுவது எலாம் தணிகைத் தோன்றல் திருப்புகழை;
புல்லுவது எலாம் அவன்தன் பொற்கழலே; கல்லுவது,
மேலைப் பிறந்து உழலும் வெய்ய வினைக்கு ஆதரம் ஆம்
மூலத்தை — நெஞ்சே! — முனிந்து. 54

முனி நாரதன் மொழிய, மொய்குழலாள் வள்ளி
தனியே தினை காக்கும் சாரல்-புனம் மேவும்
செங்கமலத் தாள் தா — திருத்தணிகை வெற்பா! — என்
பங்க மலம் தீரப் பரிந்து. 55

பரி மா மயில் ஆடு பண்ணவர் கோன், வெள்ளைக்
கரிமாவும் ஊர் தணிகைக் கந்தன், — அரிமான்
வதனன், கரிவதனன், மான வேல் சூரன்
சிதற உயிர் போக்கினான், சென்று. 56

செல்லும் முகிலே! திருத்தணிகை வெற்பினில் போய்
நில்லும்; அறுமுகன் தாள் நேர்பட்டுச் சொல்லும் —
அடியேன் படும் துயரம் அத்தனையும் இன்னே
பொடியாகிப் போகும் பொருட்டு. 57

பொருள் சேரும் பொன்னுலகப் பூவை இடமாய்,
மருள் தீர் குறமான் வலமா, அருள் சேரும்
நீயும் உயர் தணிகை நின்றும், எவனோ — கொடியேன்
வாயும் உனை வாழ்த்தாதவாறு? 58

வாழ்த்தாதவாறு உரிய வாயும், அவன் அடியில்
தாழ்த்தாத் தலையும், அவன்தன் உருவை ஆழ்த்தா
மனமும் எனக்கு விதி வைத்தான் — தணிகைப்
புனிதன் திருக்கோயில் புக்கு. 59

புக்க, துயரம்; பொருந்தா, விழி இமை கண்;
மிக்க கன வேள் கணைகள், மேனி எலாம்; — முக்கண் -
பரமன் அருள் தணிகைப் பாலகன்மால் கொண்டு, ஆங்கு
இரவும் பகலும் இவட்கு. 60

இவளும் மதன் அம்பால், ஈர்ங்கவுள் மா உண்ட
கவள விளவின் கனிபோல், துவளும்; —
'குமரா! அறுமுகவா! குன்று ஆர் தணிகை
அமரா! குகா!' என்று அழைத்து. 61

அழைத்து நமன் தூதுவர்கள் ஆங்கு கொடுபோம் முன்,
தழைத்த திருவருளைத் தாராய் — புழைக்கை
மத வாரணம் திரியும் வண் தணிகை மேலாய்
உதவு ஆரணவா! உவந்து. 62

உவந்து, ககனமிசை ஊர் வெண் மதியே!
இவர்ந்து தணிகைவரையில் போய், சிவந்த கழல் -
பைந்தோகை மேலான் படிவம் முனம் தீண்டி, என்தன்
செந்தோளை நின் கரத்தால் தீண்டு. 63

தீண்டற்கு அரிய திருமேனிப் பூச்சும், மலம்
மாண்டற்கு உரிய திருவண் நீறும் ஈண்டு எனக்குத்
தந்தான்; அவன் அடியில் தாழ்ந்து, தரித்து, உட்கொண்டேன்; —
கொந்து ஆர் தணிகைவரைக் கோ. 64

கோட்டு அமரும் பைங்கிளியே! — கூறாய், தணிகைவரைக்
கோட்டு அமரும் நங்கள் குமரேசன் தாள்-துணைக்கண்
அன்பு ஆம் அருணகிரிநாதன் அறைந்த புகழ்! —
இன்பாய் என் கை வந்து இருந்து. 65

இருந்தாம், தணிகை இளையான் அடிக்கீழ்;
பொருந்தாம், இனிப் பிறவி; புக்கு வருந்தாம்,
முருந்து ஆம் நகையாரை முன் நின்று, 'எடுத்த
அருந்தாய்!' என நெஞ்சு அடுத்து. 66

அடுக்கிய அண்டங்கள் ஆயிரத்தோடு எட்டும்
தொடுக்கும் அரசுடைய சூர்மேல் எடுத்து எறிந்த
சத்திதனக்கு, — தணிகையாய்! — என் வினையைக்
கொத்தி எறி என்று ஒருசொல் கூறு. 67

கூறு முகங்கள் எலாம் கோணை பெறு நல் தணிகை
ஆறுமுகவன் அடி தொழ, யாம் சேறும்; —
கொதிக்கும் எமது கொடுவினைகாள்! — நீவிர்
இதற்கு முனம் செல்மின், எழுந்து. 68

எழுந்து புடை பரந்து ஈர்க்கும் இடை போகாது
அழுந்து மணி முலையார் ஆசை ஒழிந்து, முனம்
சொற்கம் தனைப் புரந்த தூயவனை, தென் தணிகை
நல் கந்தனை, — மனமே! — நம்பு. 69

நம்பிச் சரவணத்தில் நல் தீர்த்தம் ஆடி, எழுந்து,
அம் பொன் தணிகை அறுமுகவன் செம்பொன்
திரு ஆலயத்தை வலம் செய்வேற்கும் உண்டோ —
கருவால் அலையும் கடன்? 70

கடந்தார், எழு பிறப்பும்; காழ் மலங்கள் மூன்றும்
இடந்தார்; வினை இரண்டும் இற்றார்; — தடஞ் சாரல்
வேழம் திரியும் வியன் தணிகை வெற்பன் அடி
தாழும் அடியவர்கள் தாம். 71

தாமே சராசரங்கள் தம்மைப் படைத்து, அழிப்பார்;
தாமே அனைத்து உலகும் தாங்குவார்; — தாமே
தணிகைவரை மீது உறையும் சண்முகவர் என்று ஓர்
கணிகம் நினைவார் மால் கடிந்து. 72

கடி ஆர் பொழில் மாங்கனி கோதி, அங்கண்
குடி ஆகி வாழும் குயிலே! — அடியார்
உளத்தில் சிறந்த உயர் தணிகையானை,
குளத்தில் பிறந்தானைக் கூவு. 73

கூவு இன் குளத்தில் குழந்தை உருவாய் அமர்நாள்,
தா இல் முலைப்பால் அளித்த தாயர் பெயர் மேவும் நாள்
கார்த்திகைதோறும் தணிகைக் கந்தனைச் சென்று ஏத்தினவர்க்கு
ஆர்த்திடுவன் பேரின்பம், ஆங்கு. 74

ஆங்கு ஓர் கனிக்கா முன் யானைமுகனோடு இகலி,
தாங்கு ஓதை மஞ்ஞைதனைக் கடவி, நீங்காத
அண்டம் பலவும் அரைக்கணம் சூழ்ந்தோன், நீல
கண்டன் மகன் வாழ்வு தணிகை. 75

தணிகைவரையைச் சூழும் தாள் நல் தாள்; நேரே
பணி கை அழகிய கை; பாடும் அணி நாவே
நல் நா; நினைக்கும் மனம் நல் மனம்; காணும் கண் நன் கண்;
தென் ஆர் செவி நல் செவி. 76

செவி வாய் கண் மூக்கு உடலாய்ச் செப்புபொறி ஐந்தின்
அவிவாய், மனனே! சென்று; அந்தோ! கவி வாய்ந்த
கோடரம் சூழும் தணிகைக்குன்று உறையும் கொற்றவனை
நாடு, அரணாய்; வாரான், நமன். 77

நமரங்காள்! வம்மின்கள்; நாம் போய், தணிகைக்
குமரன் தாள் வீழ்ந்து, குறை கூறின், குமரன் அருள்
செய்து, நமது குறை தீராது இருந்தானேல்,
எய்தும், பழி அவனுக்கு இன்று. 78

இன்றியமையாது எவர்க்கும், தணிகைவரைக்
குன்று உறையும் சேயோன் குரைகழல்கள்; மன்ற
அதனால் அதனை அருச்சிக்க வேண்டும்,
புதுநீர் மலர் கொண்டு போந்து. 79

போந்து நமைக் கூற்றம் பிடித்து இடரைச் செய்யாமுன்,
நாந்தகம் ஓர் கைக்கொண்ட நாயகனை, காந்தும்
தணிகைவரை மீது உறையும் சண்முகனை, நாளும்,
பிணி அகல, வாய் ஆரப் பேசு. 80

பேசும் தணிகைப் பெருமான் பெரும் புகழே
வீசும் திருப்புகழாய் வீறியதே; ஏசும் மற்றை
விண்ணோர் புகழ் சிறிதாய் மேவும், சிறப்பும் முனம்
நண்ணாது, நாளும் நலிந்து. 81

நலியும் பிறவி நடுக்கடலுள் வீழ்ந்து,
மெலியும் சிறியேனை மேவாய்! — ஒலிசெய்து,
அருவித்திரள் தாழ் அருந் தணிகை வெற்பா! —
பொரு இல் கருணை பொழிந்து. 82

பொழிந்தார்கள் கற்பகத்தின் பூமாரி, விண்ணோர்;
அழிந்தார், அழியா அசுரர்; மொழிந்தார்,
கருப்பைப் புகாத் தணிகைக் காங்கெயன் கைவேலால்,
பொருப்பைப் பிளந்து எறிந்த போது. 83

போதன் சிரத்தில் பொறியான்; — 'தணிகைவரை
நாதன். நமது சிரம் நான்கினையும் மோதிக்
கரத்தால் புடைத்தருளும் கந்தன் அடியான்' என்று
உரத்தான் மனத்தால் உணர்ந்து. 84

உணர்ந்தார்கள் நெஞ்சத்தின் உள்ளே ஒளிரும்;
தணந்தார்கள் நெஞ்சம் தணக்கும்; — பணம் தாழும்
பாந்தள் எனக் காந்தள் பருதியைத் தீண்டும் தணிகை
சார்ந்த குமரேசன் இரு தாள். 85

தாளில் சதங்கையொடு தண்டை கலகலென,
தோளில் கடப்பந்தொடை அசைய, — நாளும் மணி
வேய் ஈன்று ஒளிர் தணிகை வெற்ப! — யாங்கு எய்திடினும்,
நாயேற்கு முன்னே நட. 86

நடந்தேன், தணிகைவரை; நாதனைச் சென்று ஏத்திக்
கடந்தேன், எனது பவக்காட்டை; கிடந்தேன்,
இறவாத வீட்டில் இருமூவெழுத்தும்
மறவாமல் என் மனத்தே வைத்து. 87

வைத்து அலை வேல் முத்தலை வேல், வாழ் தணிகை மால் வரையான்
கைத்தலை வேல், தானவரைக் காய்ந்திடு வேல், அத்தலை வேல்
கண்டான்; எனது உளத்திற்கு அண்டான்; நிலான்; ஒட்டம்
கொண்டான் தன் ஊரைக் குறித்து. 88

குறி இலேன், நல்ல குணம் இலேன், மெய்ம்மை
நெறி இலேன், நல்நெறியில் நிற்கும் அறிவு இலேன்,
ஆயினேன் நாயினேன் ஆதல் அறிந்து, என் உளத்தே
மேயினுன், தென் தணிகை வேள். 89

வேளுக்கு அபயம்! அவன் வேலுக்கு அபயம்! இரு
தாளுக்கு அபயம்! தணிகையான் தோளுக்கு
அபயம்! அவன் வள்ளி தெய்வயானை எழில் மஞ்ஞைக்கு
அபயம், அபயம், அபயம்! 90

அபய வரதம் கண்டேன்; ஆறிரு தோள் கண்டேன்;
உபய பதம் கண்டு உளத்து அள்ளூறும் சபை அடியார்
மேவும் தணிகைவரை வித்தகனுக்கு ஆள் ஆனேன்,
சாவும் பிறப்பும் தவிர்ந்து. 91

தவிர்ந்தேன் பிறவிதனை; தணிகை வெற்பில்
இவர்ந்தேன்; பருதி பன்னிரண்டும் அவிர்ந்து ஓர்
உருக்கொண்டால் என்ன ஒளிர் மேனிச் செவ்வேள்
திருக்கண்டேன் உள்ளம் தெளிந்து. 92

தெளி நீரின் மொக்குள் என, சேர்ந்த வினை யாக்கை
விளி நீர்மை கண்டு, இதனை விட்டு, வளி நீர் தீ
மண் வான் மதி அரி ஆன்மா வடிவானை, தணிகைப்
பண்பானை வாயால் பழிச்சு. 93

பழியும் பிணியும் படும் உடல் என்றேனும்
அழியும் அழியும் அழியும்; மொழியும் இது
என் என்று இராமல், இதற்கு முனமே தணிகை
மன்னனைச் சார்ந்தே கொள் வரம். 94

வரம் கொண்டார், தென் தணிகை வள்ளலைச் சென்று ஏத்தி, —
அரன், அயன், மால், நந்தி, விசும்பு ஆள்வோன், சுரர், முனிவர்,
நாரதன், சேடன், தமிழ் செய் நன் முனிவன், வாசுகி, வண்
பாரதி, இராமன் இவர் — பண்டு. 95

பண்டே துடங்கி உனைப் பாவித்து நிற்பேனைக்
கண்டே உனது கடைக்கண் பாராய்! — வண்டு ஏறும்
பூ மருவும் கல்லாரப் பூஞ்சுனைகளே செறிந்த
காமர் தணிகைக் காங்கயா! 96

கையர், கயவர், கரவர், படிற்று ஒழுக்கர்,
பொய்யர்: இவர் நட்பு என்றும் பூணாதே; செய்ய மணி
கான்று. இருள் தங்காது கதிர் செய் தணிகை வரை
மான்-திருடன் தாள் சேர், மதித்து. 97

மதிக்கும் திறலுடைய மா சூரபன்மன்
பதிக்கண் வளங்கள் பலவும், துதிக்கும்
திருத்தணிகையில் செறித்து, சீபூரணப் பேர்
இருத்தினன், வை வேல் இறை. 98

இறையை, தணிகைவரை ஏந்தலை, ஓர் நான்கு
மறை சொல் பொருளை, அன்பர் வாழ்வை, பொறையின்
மறம் திருந்தும் வேலோனை, வாழ்த்திடுமா பெற்றேன்;
பிறந்திருந்தும், யான் பெற்ற பேறு. 99

பேறுதரு மா மயிலோன் பேரின்பம் ஆம் தணிகை
ஆறு முடியோன் அறுமுகவன் சீறடியைச்
சார்ந்தாரைச் சார்ந்தாரைச் சார்ந்தாரைச் சார்ந்தாரைச்
சேர்ந்தாரைச் சேரும், திரு. 100

**திருத்தணிகை அந்தாதி முற்றும்**

## 10. திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்

**விநாயகர் துதி**

சத்தினி பதிந்து வினை ஒத்த மல பரிபாகர்
தமது இதையகூடம் அதனில்
தங்கு வயிராகம் ஆம் தறி நாட்டி, அன்பு எனும்
தளையை இரு காலின் மாட்டி,
மெத்து இனிய ஞான நீர் ஆட்டி, நிறை சாந்தம் ஆம்
மென் மலர் அணிந்து, உயிர் எனும்
வீயாத கவளம் கொடுத்திட, மகிழ்ந்து, உண்டு,
விளையாடு கரியை நினைவாம் —
சித்து இனிய யோகியர் நெருங்கு குகை எங்கணும்
செறி திருத்தணிகை மருவும்
செவ்வேள் தனக்கு அருணகிரிநாதர் நல் நயம்
தேர்ந்து, மகிழ் கூர்ந்து, நுவலும்
பத்தினுடன் ஆருயிரம் திருப்புகழ்-அமுது
பருகு பன்னிரு செவியினும்
பரவு நவ ரசம் ஒன்றும் அறியாத சிறியனேன்
பன்னு பைந்தமிழ் தழையவே.

**1**

### காப்புப் பருவம்

**திருமால் துதி**

நீர் தந்த உததி முதிர் நிலவுலகு புகழ்கின்ற
நீலமலர் எந்நாளினும்
நீள் சுனையில் முப்போதும் மலர்கின்ற கல்லார
நெடு வரையில் வீற்றிருந்து,

சீர் தந்த பிரணவப் பொருளை இறைவன் திருச்
செஞ்செவியில் அறிவுறுத்த
தேசிகனை, வாசவன் அளித்த பொற்கொடி மருவு
செவ்வேளை, இனிது காக்க —
கார் தந்த மேகம் தடித்து இடைவிடாது உற,
கதிரவனும் ஓர்பால் உற,
கலை நிறையும் வெண் மதியம் ஓர்பால் உற, குலவு
காட்சி நிகர் மணி வண்ணமும்
ஏர் கொண்ட பொன் மார்பு இலங்க, ஒரு கைத் திகிரி
ஏந்தி, ஒரு கையில் வெண் சங்கு
ஏந்தி, உலகு ஈரேழும் அனுதினம் அளித்து, உவணம்
ஏறியருள் செங்கண் மாலே! 1

## சிவபெருமான் துதி

திங்கள் அம் குழவி விடு வெண் கதிரும் அரவின் மணி
தேக்கு செங்கதிரும் அளவி,
செம்பொனில் செய்த புரி வெண்பொனில் செய்த புரி
சேர்த்துத் திரித்த கயிறுய்,
கங்கை தங்கும் செஞ்சடாடவிக் கற்றையைக்
கட்டிவைத்தென மொய்த்திடும்
கண்ணுதல் செந்திலதம் ஒப்ப மிளிர் ஐம்முகக்
கடவுள் இணை அடி பரவுவாம் —
மங்கலம் பூண அயிராணிதன் கண்டத்து
மாயை மருகியர் கழுத்தின்
மன்னும் உயிர் அகரம் முதல் மருவு மங்கலம் ஆக
வளர் கடைக்கண் சிவந்து
செங்கை இலைவேல் தொட்டு மலையலை அரக்கர் நிலை
சிந்தி அயிராவதத்தில்
தேவர்-உலகைப் பவனிவந்து, தென் தணிகை அமர்
சேயைப் புரக்க என்றே. 2

## உமாதேவியார் துதி

ஆண் உருவினால் அழிவு இல் அந்தகாசுரனுக்கு
அஞ்சி அழியும் சுரர் எல்லாம்
அபயம் என ஓலம் இட, அஞ்சல் என்று, அவர்களோடும்
அன்று பின்பக்கம் மருவ,

பூண் அரவம் ஆம் இறைவர் கண்சாடை காட்டலும்
பொற்சிலைக் கைப் பிடித்து,
பொருது அழித்து அந்தகனை, இமையவர்தமைக் காத்த
பூரணியை அஞ்சலிப்பாம் —

தாணு நுதலின்கண் தழல்-பொறியதாய், கங்கை
தங்கி, இமயச் சாரல் வாழ்
சரவணப் பொய்கைதனில் ஆறு மக உருவமாய்,
சாரும் அறுமீன் முலைப்பால்

மாணும் மலர் வாயினில் நுகர்ந்து, மது வார்ந்து ஒழுகு
வனச மா மலரணையின்மேல்
வண்டு தாலாட்ட, விழி துயில்கூர் திருத்தணிகை
மயில் இறைவனைக் காக்கவே. 3

## கணபதி துதி

(வேறு)

கோது அற்ற மேரு என் ஏட்டிலே
கோழ் உற்ற வால் வனைக் கோட்டினால்,
ஆதிப் பொற் பாரதம் தீட்டிய
ஆபற்சகாயனைப் போற்றுவாம் —
தாதைப் பொற் கால் தளை பூட்டியே
தாழ் நித்தற்கு ஓர் மொழி காட்டி, நால்
வேதத்தின் ஆர் தணிகைக்குளே
மேவுற்ற வேலனைக் காக்கவே. 4

### பிரமன் துதி

(வேறு)

காய்த்த குலைக்கதிர் வாய்த்த திணைப்புனம்
காத்த குறப்பெணின்பாற் செலா,
காட்டில் மிகப் பசி வாட்டுது எனக்கு அருள்
காட்டிடு எனத் தனி நோக்கியே,
தேய்த்த இடைக் கொடி மாத்திரளைப் பிழி
தேக்கிலையில் கடிது ஊட்ட, வாய்
தேக்கி, வினைத்திடர் நீக்கு செருத்தணி
சேர்க்கும் ஒருத்தனைக் காக்கவே —
மாத் தவளத்து உரு ஏய்த்த வனத்து எழில்
மாற்று பனத்தியை நாக்கிலே
மாட்டி, இருக்கு எனும் பாட்டை உரைத்து, உயிர்
வாய்த்த சகத்தை உண்டாக்கினேன்,
தோய்த்த தயிர்க்குடம் போய்த் திருடித் தினி
சூட்டு அரவப் பணப் பாய்க்கணே
தூக்கம் மிகுத்தவன் மோட்டு உதரப்புழை
தோற்று மலர்ப் பரமேட்டியே! 5

### கங்கையின் துதி

(வேறு)

தூயோர் சகரர்க்கு அளற்று நோய்
தோயாது உயர் நல் துறக்கமேல்
சோராது அமர, தரைக்கண் வீ
சூடு ஆர் சுடலைப் பொடிக்குள் நீர்
பாயா நனையப் பொருத்தினேன்
பாடு ஆர் தவம் மிக்கு இயற்ற, வான்
பாலாய் அரன் பொற்சடைக்குள் வீழ்
பாகீரதியைப் பழிச்சுவாம் —

தீ ஆர் விழியில் பொறிக்குள் ஓர்
சேயாய் உதித்து, குளத்திலே
தேன் ஆர் கமலப் பொருட்டின்மேல்
சேரா மகிழ்வுற்று உயிர்க்கு எலாம்

மாயா இடரைக் கொடுத்த சூர்
மாவாய் மலையத் துணித்து, நீள்
வான் ஆர் தணிகைப் பொருப்பிலே
வாழ் வேலவனைப் புரக்கவே. 6

## வீரபத்திரர் துதி

(வேறு)

நேரில் தக்கன் சிரத்தினை வீட்டினன்,
நேய எச்சனை அப்படி மாட்டினன்,
நீழல் அக்கினியைக் கரம் வாட்டினன்,
நீள் குயில் சிறை அற்றிட ஓட்டினன்,

மேருவிற்கு இறையைப் புறம்பு ஆக்கியே,
வேள்வியில் தகரைத் தினுவோர்க்கு எலாம்
வீறு அழித்து, இடர் பற்பல ஆக்கிய
வீரபத்திரன் மெய்ப்பதம் போற்றுவாம் —

கார் உடுத்த குவட்டு உறு தேக்கினை,
காமர் பச்சிலையை, திருவாத்தியை,
காழ் அகில் சினையை, சுளை வேர்ப்பலாக்
காயினைத் திரையில் பெயர்த்து ஈர்த்து எழீஇ,

சாரலில் கழைமுத்தினை, பூக்களை,
தா இல் வச்சிரத்தை, கரிக்கோட்டினைச்
சாடியிட்டு அருவித்திரள் ஆர்ப்பொடு
தாழ் செருத்தணி வெற்பனைக் காக்கவே. 7

## வயிரவக்கடவுள் துதி

(வேறு)

விராவு மதமொடு புராரிதனை இகழ்
விரோத மொழிபல வாக்கினில் சாற்றிட,
வினவு பிரணவம் முனை சதுமறை
விகாதம் அறுபொருள் தேற்றிடக் கேட்டிலன்
கராவின் அறிவு அழி பிதாவின் உயர்தலை
கடாவு விரல் உகிரால் பறித்து, ஆர்ப்பொடு
கண்ஆயிரவன் முதல் விண்டைர் பலிகொளும்
கபால வயிரவர் தாள்-துணை போற்றுதும் —
ஓர் ஆறு சிரமுடன் இராறு புயமுடன்
உகாத சிறைமயில் ஏற்றினுக்கு ஏற்றிடும்
உலாசன், நொடிவரை செலாமுன், உலகினை
உலாவி வலம்வரு சீர்த்தியைப் போர்த்தவன்,
மராவின் மலரொடு குராவின் மலர் நறை
மருத தொடைபுனை மூர்த்தி, நல் கார்த்திகை
வழாமல் அருள் குகன், கலாரகிரி உறை
வலாரி மருகனை வாய்ப்புறக் காக்கவே. 8

## இந்திரன் துதி

(வேறு)

கரிய மதன் அம்பு பட்டு, விரகமதின் நொந்து இளைத்து,
கனி இதழ் மடந்தையர்க்கு மோகம் ஆம்
கவலை உறு துன்பு ஒழித்து, வினை இரு சமம் கிடைத்து,
கருதரிய இன்ப முத்தி நாடியே,
கமல மலர் உந்தி உற்ற கனலையும் அறிந்து எழுப்பி,
கடிகொள் இடை பிங்கலைக்குள் ஓடிமீள்
புரை வளி இரண்டு அடக்கி, சுழுமுனையில் நெஞ்சு இருத்தி,
புருவ நடு விந்துவுக்குள் ஓமமே
புரியும் மதி-மண்டலத்தின் மருவு பரை இன்பம் உற்ற
பொருளினை அறிந்து இயற்றும் யோகினோர்

புணர் மலம் ஒழிந்து வெற்பின் குகையிடை வதிந்து நித்தம்
புகழ் தணிகை மன் குகற்கு ஓர் காவல் ஆம் —

தரு மலர் புனைந்து, கற்பின் சசிதனை மணந்து, சொர்க்கம்
தனி அரசு இயைந்து மைக்கண் ஏறியே,
சலமழை பொழிந்திட, பைந்தழை பயிர் விளைந்து எவர்க்கும்
தகை உண உவந்து அளிக்கும் நீர்மையான்,
தவள மத குஞ்சரத்தின் முதுகிடை இவர்ந்து அரக்கர்
தலை அற எறிந்து, சித்தர் பாடவே,

இருடியர் கணங்கள் சுற்ற, சுரர் தலை கரங் குவிப்ப,
இளமுலை அரம்பை மெச்சி ஆடவே,
இருநிதி வளம் கொழிப்ப, மருவலர் புறங்கொடுப்ப,
இகல் அற நடந்து வெற்றி கூடவே,
எழுபுவியின் மன்பதைக்கும் இடர்புரிதரும் பொருப்பின்
இரு சிறை அரிந்த வச்சிர பாணியே. 9

### பலதேவர்கள் துதி

(வேறு)

வம்பு அவிழும் பரங்குன்றமும் நந்தினை,
வார் அலைவாய் உறுசீர் அலைவாயினும்,
வாவி தண்டலை மனும் ஆவினன் குடியினும்,
வார் அகம் உற்றிடும் ஏரக வெற்பினும்,

பம்பிய குன்றுதொறு ஆடலினும், திருப்
பழமுதிர் சோலையினும் விளையாடிய
பாவலனை, செழுஞ் சேவலனை, சிவன்
பாலகனை, தணிகாசலனைத் தினம் —

வெம்பிய சூரியர், சந்திரர், மாதவர்,
விண்ணவர், பண் அமர் விஞ்சையர், கின்னரர்,
வீறும் உருத்திரர், கூறும் மருத்துவர்,
மேதகும் ஓர் எழு மாதர்கள் ஆதியர்,

தம்பியரா உறும் ஒன்பது வீரர்கள்,
தக்க இலக்கம் எனும் கண நாதர்கள்,
தள்ளரும் வெள்ளம் இராயிரம் பூதர்கள், —
தா இலராய்ப் புறம் காவலர் ஆவரே. 10

## 2

## செங்கீரைப் பருவம்

புகழ் பூத்த கார்த்திகை எனும் செவிலிமாதர் தண்
புனல் ஆட்டி, மெய் தொடைத்து,
புவியில் வாய்நீர் உமிழ்ந்து, அணி விரலினால் தேய்த்துப்
புது நுதல் திலகம் இட்டு,
மகிழ் பூத்த பூதித் திருக்காப்பு அணிந்து, தம்
மடிமேல் இருத்தி, எழில் சேர்
மணி முலைப் பால் ஊட்டி, மார்பு அணைத்து, உச்சிதனை
மோந்து, வாய் முத்தம் ஆடி,
அகழ் பூத்த சரவணப் பொய்கை அம் தொட்டில் மலர்-
அணையில் கிடத்தி அகல,
அளியினம் தாலாட்ட, அலை கயிறதாய் வளி
அசைப்ப, துயின்று எழுந்து,
திகழ் பூத்த விளையாடல் பயில் செருத்தணிகை இறை!
செங்கீரை ஆடியருளே!
சேனுடர் அர்ச்சனை செய் சேனுபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 1

மேனை எனும் மாதாமகீ தந்த பொற்சுட்டி
வெண் பிறை நுதற்கண் ஆட,
மென்முலைப் பால கறந்து ஊட்டியிடு கைத்தாய்
மிலைச்சு பூஞ் சுடிகை ஆட,
வானம் உறு கார்த்திகைத் தாதியர்கள் செவியில் அணி
மகர குண்டலமும ஆட,
வர நதி எனும் செவ்லி புனையும் அரைமணி ஆட,
வளர் சரவணப் பொய்கை ஆம்
மானம் உறு கோடாய் அணிந்த வயிரக் கடகம்
மரைமலர்க் கையில் ஆட,
வண்மை பெறு பாண்டிமாதவி எனும் நற்றாய்
வனைந்திடு சதங்கை ஆட,
தேன் ஒழுகு பைங்குவளை மலர் செருத்தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேனுடர் அர்ச்சனை செய் சேனுபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 2

பூமி எனும் நல் மாமி அசுரர் புரி வேதனை
பொறுக்கலாது அயர் துன்பு எலாம்
போக்குவல் எனத் திரு உரத்து இரு கை வைத்தல்போல்
பொற்கரம் நிலத்தில் ஊன்றி,
மீமிசை உறும் தேவர் படு சிறை எலாம் களைய
மேக்கு எழும் செய்கை மான
மென்மெலக் கந்தரம் எடுத்துஎடுத்து அந்தர-
மிசைப் பசுந் தலை நிமிர்த்து,
தோம் இல் தவ மாமுனிவருக்கு இடர் விளைத்த ஒரு
சூர் வலிதனைக் கறுவல்போல்
சுந்தரப் பொன்முடி அசைத்துஅசைத்துத் தண்டை
சூழ் கால் சதங்கை கொஞ்ச,
தேமருவு கல்லாரம் அலர் செருத்தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேஞடர் அர்ச்சனை செய் சேனுபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 3

பொன்மலைச் சாரலின் உறும் திருச் சரவணப்
பொய்கை ஒரு கட்டில் ஆக,
பூந்தாமரைச் சேக்கை மலர் மெத்தை ஆக,
புனற்கரை மரம் கால்கள் ஆய்,
மின் மலியும் மீனின் நெருங்கிப் பரந்த வான்
வெண்மலர்ப் பந்தர் ஆக,
வீறு பைந் தருமலரின இடைவிடாது ஒழுகு தேன்
விசித்த ஊசல் கயிறது ஆய்,
துன் மலைகள் ஆம் அலையின் ஒலி முழவது ஆய், வளைத்
தொனி மிகத் தும்பி பாட,
தோலடிப் பறவை ஒலி செஞ்சிலம்பு ஓசையின்
தோன்ற மகிழ் கூர்ந்து துயிலும்
தென் மலய மாமுனிக்கு அருள் செருத்தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேஞடர் அர்ச்சனை செய் சேனுபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 4

வெள்ளி வரையில் குடி விழைந்த பரமன் செவியில்
வீறு சங்கக் குழையினை
மென் மலர்க் கைப் பிடித்து, உரம் மேவு சிரமாலை
மீது ஏறு சோபானமாய்,
துள்ளிக் களித்து, அடி சிவப்புற மிதித்துத்
துவைத்துச் சுவற்கண் ஏறி,
சுடர் பொற் கடுக்கை பொதி வேணியை அவிழ்த்திட,
சுரநதி குதிப்ப மூழ்கி,
பிள்ளைமதியைப் பிடித்து அரவின்வாய் வைத்து, அவண்
பிரியாத முகிலை ஈர்ப்ப,
பெரிது உடல் நடுங்கித் தடித்தொடும் இடித்து மழை
பெய்ய விளையாட்டு அயர்தரும்
தெள்ளு புனல் ஊறு கற்சுனை மருவு தணிகை இறை
செங்கீரை ஆடியருளே!
சேணுடர் அர்ச்சனைசெய் சேனாபதிக் குரிசில்
செங்கீரை ஆடியருளே! 5

(வேறு)

மழை நிகர் விழியின் அருட்கடை ஆட,
மணிப்பட்டமும் ஆட,
மார்பில் அணிந்த மதாணியும் ஆட,
வரைத்தோள் அணி ஆட,
தழை கனிவாய் ஒழுகும் புனல் ஆட,
சரி தொந்தியும் ஆட,
தண்டை சதங்கை புலம்பு பதம் திகழ்
தனி நூபுரம் ஆட,
குழை அணியும் பன்னிரு செவி ஆட,
குஞ்சி அசைந்து ஆட,
கோது அறு பொன் அரைநாண் அரை ஆட,
குற்றுடைவாள் ஆட,
அழிவு இல் பதம் தரு தணிகை அமர்ந்தவன்
ஆடுக, செங்கீரை!
அமரர் புகழ்ந்திட அசுரரை வென்றவன்
ஆடுக, செங்கீரை! 6

நிறம் திகழ் குஞ்சி புனைந்திடு மலரொடு
நிமிர்தலை ஆறு ஆட,
நெடுநிலமிசை எழு வரை உறழ் திணிபுய
நீள் கடகமும் ஆட,
மறம் திகழ் அவுணர் உரம் தொளைபட விடு
வைவேல் வெயில் ஆட,
மார்பில் வனைந்திடு நீபம் உறும் களி
வண்டு ததைந்து ஆட,
சிறந்திடு செங்கழுநீர் இதழ் அங்குலி
செறி மோதிரம் ஆட,
செவ் அரையில் திகழ் வட்டுடை ஆட,
சேவற் கொடி ஆட,
அறம் திகழ் அன்பர் தொழும் தணிகைப் பரன்
ஆடுக, செங்கீரை!
அமரர் புகழ்ந்திட அசுரரை வென்றவன்
ஆடுக, செங்கீரை! 7

திருமலர் வாய்தொறும் நகைநிலவு ஆட,
செந்துவர் இதழ் ஆட,
தெரிவையர் மதர்விழி இருபுறம் ஆட,
சிறுநுதல் வேர்வு ஆட,
குரு மணி மேகலை புனை வடம் ஆட,
குல மா மயில் ஆட,
கோது அறு மாதவர் பூசுரர் நெஞ்சு
குழைந்து குழைந்து ஆட,
தரு அயிராணி பொன்மாது எனும் மாமியர்
தாம் களி கூர்ந்து ஆட,
தாரகை ஆகிய தாயரும் ஆசை
தழைந்து மகிழ்ந்து ஆட,
அரி கமலாசனர் பணி தணிகாசலன்
ஆடுக, செங்கீரை!
அமரர் புகழ்ந்திட அசுரரை வென்றவன்
ஆடுக, செங்கீரை! 8

(வேறு)

உமையொடு பரசிவன், 'உலகினை வலம் முனம்
வந்தால், இன்றேதான்
ஒரு கனி உதவுதும்; இது பொழுது அகலுதிர்!'
என்றே முன்பு ஓத,
தமையனொடு இகல் புரிதரு பிணிமுகமிசை
தங்காது அங்கு ஏறி,
சகம் முழுதையும் ஒரு நொடியினில் வலம்வரு
தந்தாய்! செந்தூரா!
கமை அறு நிசிசரர் அவிதர அயில் விடு
கந்தா! மந்தாரக்
கடிமலர் முடிபுனை சசிமகள் வடுவகிர்
கண் பாவும் தோளா!
சிமையமது உயரிய தணிகையில் அறுமுக!
செங்கோ செங்கீரை!
திருமகள் மருமகன் என வரு குருபர!
செங்கோ செங்கீரை! 9

கஞ்சன் இகழ்ந்து நடந்திட, அங்கு அது
கண்டே, வெங்கோபக்
கனல் படு மனமொடும், 'உலகினை மறைகொடு
தந்தாய் என்றால், நீ
விஞ்சிய சங்கிரகம் படு மந்திரம்
முந்து "ஓம்" என்பாயேல்,
விரி பொருள் எது? அது புகலுதி!' எனலும்,
மயங்கா நின்றானை,
குஞ்சி உறும் தலை பொந்து படும்படி
கொந்து ஆரும் பாணிக்
குரு விரல் பொதிதர, ஒருமுறை அறைதரு
குன்றே! பொன் தோய் கற்
செஞ்சிலை கொண்டவன் அன்று அருள் சுந்தர!
செங்கோ செங்கீரை!
திணி மல இருள் தவிர் தணிகையில் வரு குக!
செங்கோ செங்கீரை! 10

## 3

## தாலப் பருவம்

பாயாவேங்கை நிழற் பிணைமேல்
பாயும் வேங்கை அதிர்ப்பு ஒலியால்,
பறவாக்குளவி நிழல் இருந்து,
பறக்கும் சிறை எண்காற்பறவை
காயா-அத்திக் கொம்பு ஒடித்து,
கடுக்கும் வயமாவினைக் கவர்ந்து,
காய்க்கும் அத்திமிசை இறங்க
கனி தேர் கடுவன் கற்பகத்தில்
தாய் வான் அரம்பைக்கு எதிர் நடிப்ப,
தனி வானவர் ஆன் பால் ஊட்டும்
தணியா வளம் கூர் இறும்பூது
தழைக்கும் தணிகாசலத்தில் இருந்து
ஆயாய் உயிரைப் புரந்து அளிக்கும்
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில்வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 1

ஏலமரம், தக்கோலம், அகில்,
இலவங்கம், பச்சிலைமரம், தேக்கு,
எழில் சந்தனம், குங்குமமரமும்
எறிந்து கொளுவி வனசரர்கள்,
சால வெறுத்து வனம் புகுந்து
தவம் செய் முனிவர் உதிர் சருகு
தண்ணீர் கிழங்கு ஆதிகள் உண்ணும்
தகைமை காட்டு மலைச் சாரல்,
கோலம் அகழும் அளையில் அராக்
கொழுஞ்சுட்டு எரியும் மணி வெயிலால்
குளிர் பூம் பொழிலின் இருள் நீங்க,
குற மா மகளிர் விழைந்து ஆடும்
ஆலம் பெருகும் சுனைத் தணிகைக்கு
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில் வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 2

வெள்ளில் கனியால் அடுப்பு அமைத்து,
வேரல் உகு முத்து-அரிசிதனை
வேடர்அரிந்து கொணர்ந்து அளித்த
வேழச் செவி ஆம் முறத்து ஏற்றும்

புள்ளி படு மான் தோல்-பாய் மேல்
புடைத்துக் கொழித்துத் தறித்து எடுத்தும்
பொன்னம் துடிக்கண் தாழியுறும்
புதுத் தேனொடும் பெய்து, உலை ஏற்றி,

சுள்ளி அகில் சந்தன விறகில்
சுடர் மாணிக்கத் தீ மூட்டி,
துடுப்பா மருப்பில் துழாவு சிறு
சோறு அட்டு, எயினப் பேதையர் கை

அள்ளி விளையாட்டு அயர் தணிகைக்கு
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில்வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 3

கல் ஆர் சுனையில் சுரபியினம்
கறந்த பாலில் செவ் அரம்பைக்
கனிகள் நழுவி விழ, அதனை —
கணியின் பணை வாழ் கிளியினமும்

வில் ஆர் வேடப் பாவையரும்
விளரி இசை யாழ் விஞ்சையரும்
வெற்பில் தவம் செய் முனிவரரும்
வேழப் பிடியின் கரிணிகளும்

செல் ஆர் பொழில் சேர் கோடரமும்
சிறக்கும் தெய்வ மடந்தையரும் —
தின்று, களிப்புற்று, அனுதினமும்
தீரா இறும்பூதுடன் உறையும்

அல் ஆர் நீலம் அலர் தணிகைக்கு
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில் வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 4

வேரல் மணியின் குவை ஒருபால்,
வேழமருப்பின் குவை ஒருபால்,
விளங்கும் வயிரக் குவை ஒருபால்,
விழையும் வைடூரியம் ஒருபால்,
நேர் இல் அரவ மணி ஒருபால்,
நீல மணியின் குவை ஒருபால்,
நிழல் சேர் பச்சைக் குவை ஒருபால்,
நிறம் ஆர் கனகக் குவை ஒருபால்,
தேரும் புகழ்க் கல்லார கிரிச்
செட்டி எனப் பேர் படைத்ததனுல்,
தெரிந்து விலை ஆக்குறக் குவித்த
சீர்மை பொருவும் திருத்தணிகை,
ஆரல் உதவும் பன்னிரு கை
அரசே! தாலோ தாலேலோ!
அழகு ஆர் மயில்வாகனம் ஏறும்
அமுதே! தாலோ தாலேலோ! 5

(வேறு)

துணிபடு வெண்பிறை தவழ் முடியின் புடை
சொரி முகிலின் புனல் வார்
சுனையில் விழுந்து, அதின் உறு புனலும் கொடு
தொடர் மதம் உந்தியிடா;
திணி அகில் சந்தன மரம், முதிர் குங்குமம்,
திகழ் துடியும் பெயரா;
செறி பனசம், கனி, மலர் வழை, பைங் கழை,
சிறு மிளகும் கொணரா;
மணி வயிரம், கதிர் மரகதம், அஞ்சன
மணியினெடும் புணரா;
மருவு புலன் கெழும் அருவி இழிந்திடு
வளமை தழைந்து, எழில் கூர்
தணிகை நெடுங்கிரி அமரும் நெடுந்தகை!
தாலோ தாலேலோ!
சந்தனமும் புழுகும் புனை சுந்தர!
தாலோ தாலேலோ! 6

வானதியும், குளிர் தேனடை விண்டு இழி
வார் மதுவும், கரியின்
மா மதமும், புடை சூழ் சுனையின் புனல்
மண்டிக்கொண்டு இழியா;

ஏனல், கருந்தினை, சாமை, இறுங்கு உறும்
இதையில் மிகப் பெருகி;
இறவுளர் முன்புரி மடைகள் அழிந்திட,
எல்லை கடந்து ஓடி;

கானம் அருந்தி, தவழ்ந்து, நிறைந்து, இரு
கரைகள் அழித்து ஏகும்
கம்பலை அம்பரர் கம்பம் உறும்படி
கார் ஒலியைச் சினவா;

தானம் எழும் தணிகாசல வேலவ!
தாலோ தாலேலோ!
சந்தனமும் புழுகும் புனை சுந்தர!
தாலோ தாலேலோ! 7

சூதக் கனியொடு பனசக் கனி, பொழில்
சோர் கதலிக் கனியும்,
துதை வயலில் படும் எருவின் முளைத்து, எழில்
துன்னிய செந்நெல் எலாம்—

வேதக்கிழவர் உளத்துறு காதல்
விட, கனகத்திரெடு
மேதினி மன்னர் விடுத்திடு தான
விழுப்புனல், பூஞ்சுனை நீர்,

காதல் குறவர்கள் நானத்தொடு குடை
கல் அருவிப் புதுநீர்,
காலின் விழுந்து எதிர் பாய, — வளர்ந்து, ஒளிர்
கதிரவன் மிசை ஓங்கும்

தாதின் பொலிதரு காவிக்கிரி இறை!
தாலோ தாலேலோ!
சந்தனமும் புழுகும் புனை சுந்தர!
தாலோ தாலேலோ! 8

(வேறு)

மரு அலர் கற்பகம் முடி அணி பொற்சசி
வாழ் வீண் ஆகாதே,
மகபதி வச்சிர தரனும் உவப்புறும்
ஊர் பாழ் ஆகாதே,
இருடிகள் சித்தர்கள் உரகர் இயக்கர்கள்
வாணாள் போகாதே,
எழுகடல் சுற்றிய புடவி இடத்துறு-
வார் நோய் ஆழாதே,
பொரு கரி பற்பல புரவி மிடுக்கு உறு
காலாள் தேரோடும்
பொருத தயித்தியர் சிரமலை அற்றிட,
வாள் கோல் வேல் ஏவும்
தரு மலர் மொய்த்திடு பரகிரியில் குக!
தாலோ, தாலேலோ!
தணிகை மலைக்கு இறை என வரு சிற்பர!
தாலோ தாலேலோ! 9

நாலு முகத்தவன் மாலை அழித்திடு
நாதா! வாதாபி
நாசம் உறச் செயும் ஞானமுனிக்கு அருள்
போதா! நீள் பாதா!
பாலின் மொழிக் கனிவாய் உமை, தற்பரை
பாலா! மா சீலா!
பாவை எழில் தெய்வயானை அணைத்திடு
மார்பா! கூதாளா!
கோல வனத்து உறு வேடர் மகட்கு இசை
கோவே! கூர்வேலா!
கூடலரைத் தெறும் கோழி மயிற் கொடி
வீரா! தேன்ஆர் பூச்
சாலை மிகுத்துள சோலை மலைக்கு இறை!
தாலோ! தாலேலோ!
தா இல் செருத்தணி மேவிய சிற்பர!
தாலோ தாலேலோ! 10

## 4

## சப்பாணிப் பருவம்

இரைத்துத் திரைத்து நுரை பொங்கு கடல் ஓர் ஏழும்
இணை அறு கிடங்கது ஆக,
இடைப்படு வரைப்பு எலாம் திருஉலாப் போந்துவரும்
ஏழ் பெருந் தெருவது ஆக,
நிரைத்துத் தழைத்த பொழில் ஏழும் உய்யானமா,
நேமிவரை நெடிய மதிலா,
நீர்ப் புறக்கடல் ஆடு தெப்பக் குளத்தின் இயல்
நேராக, மேருவரை சூழ்
வரைப்பு அனைத்தும் புறக் கோவிலா, தணிகைமலை
மருவும் அந்தப்புரமதாய்,
மன் உயிர் எலாம் புரந்து ஆண்டு அரசு புரிகின்ற
வள்ளி தெய்வானை கணவா!
தரைக்குள் உயர் கும்பமுனி முடி வைத்த செங்கை கொடு
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 1

மலை அலையை அங்கையில் அடக்கி, இகல் வாதாவி
மலையலை வயிற்று அடக்கி,
வண்தமிழ் எனும் புதிய தென்கலையுடன் பழைய
வடகலையை நா அடக்கி,
நிலவலயம் உத்தரம் தாழ்ந்து தென் திக்கின்மேல்
நிமிர்தலைத் தாள் அடக்கி,
நீல் நிற விடத்தினை மிடற்று அடக்கும் கயிலை
நிமலனை உளத்து அடக்கி,
குலவிய கருப்பம் நிறை மாதர் என மந்த நடை
கொண்டு வளர் தென்றல் எனும் ஓர்
குழவியைத் தன்வயின் அடக்கு மலயத்தில் அமர்
குறுமுனிக்கு அருள் குரவனாய்,
தலைமை பெறு வீட்டுநெறி காட்டு தணிகைக்கு இறைவ!
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 2

பொன்மலையை வெள்ளி வெற்பு ஆக்கி, உயர் வெள்ளிப்
பொருப்பை நீலக் கிரியதாய்ப்
புதுக்கி, இந்திர நீல வெற்பை மாணிக்கப்
பொருப்பு ஆக்கி, மாணிக்க மா

மின் மலையினைப் பவளம் ஆக்கி, மரகத வெற்பை
வெள்வயிர வெற்பது ஆக்கி,
விண் உலகை மண் ஆக்கி, மண் உலகை விண் ஆக்கி,
விரிகதிரை மதியம் ஆக்கி,

நன் மதியினைக் கதிரது ஆக்கி, விண்ணவர்கள்தமை
நானிலத்தவர்கள் ஆக்கி,
நானிலத்தவர்கள்தமை உரகர் ஆக்கி, புதுமை
நாட்டு விளையாட்டு அயர்தரும்

தன்ம விடை ஏறும் அரன் அருள் தணிகை வளர் குழவி!
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 3

பருந்தினெடு நிழல் செலும் பான்மை என விஞ்சையர்கள்
பயிலும் இயல் இசைகள் பாட,
பாங்கர் உறு வேங்கையின் பனிமலர்ச் சினை மேவு
பைந்தோகை கேட்டு உறங்கும் —

முருந்தினெடு முத்தம் உறழ் மூரல் கொடிச்சியர்கள்
முருகு வாய் வைத்து அருந்தி,
முருகன் எதிர் சாரல் வெறியாட்டு அயர்தல் நோக்கியே
முதைப் புனம் இதைப் புனம் சூழ்

குருந்தினெடு கொன்றைமிசை அமர் பசுங் கிளிகள் மகிழ்
கூர்ந்து பூவைக்கு இசைக்கும் —
குளிர் தணிகை வெற்பினில் இருந்து, மானிட வடிவு
கொண்டு, புனம் எய்தி, வள்ளி

தரும் தினையின் இடி இரந்து ஏற்ற நீள் அங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 4

கிம்புரிப் பூண் அமர் மருப்பு எனும் உலக்கை கொடு
கேழ் நிறச் சந்த உரலில்,
கேடு இல் சாதிக்காய் லவங்கமொடு கர்ப்புரம்
கீறு தக்கோலம் ஏலம்
வம்பு உறு கொடிச்சியர், இடித்த வாசப் பொடிகள்
வாங்கி எழில் விஞ்சை மகளிர்,
வளர் கதிர்க் கற்றை கால் பீதாம்பரத்தை விலை
மாற்றிடும் வள்ளிமலையில்
கொம்பு முற்று அலர் வேங்கை மரமாய், விருத்தனாய்,
குன்றவர் தமக்கு ஒளித்து,
குறமான் தனக்கு மயல் பூட்டி, எழில் காட்டி, அணை
குமரனே! நிமல அழல் ஆம்
தம்பம் உற்றவன் உதவு தணிகாசலக் கடவுள்!
சப்பாணி கொட்டியருளே!
சரவணப் பொய்கைதனில் அவதரித்திடு முருக!
சப்பாணி கொட்டியருளே! 5

(வேறு)

உரகம் முழக்கிய ஒலியை அடக்கிடும்
உழைகள் உரப்பொலி; அவ்
உழையின் உரப்பொலிதனையும் அடக்கிடும்
உழுவை முழக்கு; கொடு-
வரியின் இரைப்பொலி நலிய அடக்கிடும்
வழுவை சிலப்பொலி; அவ்
வழுவை சிலப்பொலி மறைய அடக்கிடும்
வயவரிக் கர்ச்சனைகள்;
சரபம் அதிர்ப்பொலி அரியின் மிடுக்கொலி
தனையும் அடக்கியிடும்
தரு வனம் மொய்த்திடு சரி அருவித் திகழ்
தணிகை மலைக்கு இறை ஆம்
குருபர! சித்திர மயில் வரு தற்பர!
கொட்டுக, சப்பாணி!
குறுமுனிவற்கு அரு மறை புகல் உத்தம!
கொட்டுக, சப்பாணி! 6

தவரை வளைத்திடு சவரர் வடிக் கணை
தைத்திடும் எய்த் தேகம் -
தனை உதற, கணை நிகர் கரு முள் பட
எய்த்திடும் மைக் கேழல்

அவிர் பிறையின் பிறழ் வளை எயிறு இற்றிட,
முற்கலையைப் பாயும்;
அதுவும் மருப்பு உக, எதிர் புலி கொட்புற
முட்டி எடுத்து ஏகி,

இவர் சருவில் படும் — அருவி, தினைப்புனம்
உற்று ஓடி, காவின்
இழி நறவத்தொடு செழிய மலர்த் தடம்
வற்றுமல் பாயும் —

குவளை தழைத்திடு தணிகை மலைக்கு இறை!
கொட்டுக, சப்பாணி!
குறுமுனிவற்கு அரு மறை புகல் உத்தம!
கொட்டுக, சப்பாணி! 7

கந்தரம் மொய்த்திடல் கண்டு, வயப்புலி,
குஞ்சரம் என வியவா,
கடுகி அடித்திட, மழைகள் தடித்து இடி
கான்றிட, உளம் நாணி,

வந்து எதிர் உற்றிடு கைம்மலைதன்னையும்
மைம்முகில் என இகழா,
மது நுகர் மக்களின் அறிவு அழிய, சரி
மலை-முழையுள் புகுதும் —

சந்திரன் வந்திட, முந்து குறத்தியர்
தண் நிழல் ஆடி என,
சந்தன குங்கும ஒண் திலதம் புனை
தனி எழிலைப் பார்க்கும் —

கொந்து அலர் பைங்குவளைத் தணிகைக்கு இறை!
கொட்டுக, சப்பாணி!
குறுமுனிவற்கு அருமறை புகல் உத்தம!
கொட்டுக சப்பாணி! 8

(வேறு)

நிரை உலகு எங்கணும் உலவி இறப்பொடும், இப்போது
நிகழ்வு வரும் செயல் அறிதரு நல்-தவன் நட்போடும்,
புரியும் மகம்தனில் எழுதரு செச்சை மதத்தாலே
பொருது, கொடுஞ்சினம் முடுகி, அனைத்தும் அழித்து ஏகல்
கருதி, மறிந்திடு சுரர் அபயத்தொடும் முன் போத,
கருணை புரிந்து, அச வலியை அடக்கி, அடித்து ஏறும்
தரு நிகர் செங்கையில் ஒருமுறை கொட்டுக, சப்பாணி!
தணிகை நெடுங்கிரி வரும் இறை! கொட்டுக, சப்பாணி! 9

வேழமுகத்தவனோடு இகலி, கனியைப் பேணி,
மேதினி சுற்றும் மாதிரம் எட்டும் நொடிப் போதில்
சூழ மயிற்பரி ஏறி, மணிக் கடலில் போகி,
சூரனை அட்டு, உயர் வானவர் பொற்பதியில் கூடி
வாழ அளித்து, ஒரு வாசவன் பெற்ற மடப்பாவை -
வாய் வதுவைத் தொழில் யாவும் முடித்திடு மெய்த்தேவ!
தாழும் மறக்கொடி நாயக! கொட்டுக, சப்பாணி!
தா இல் செருத்தணி வேலவ! கொட்டுக, சப்பாணி! 10

## 5

## முத்தப் பருவம்

தூங்கும் துளைக்கைப் பிறைமருப்புச்
சொரி மும்மதம் தாழ் கவுள் உரல்-கால்
சுழலும் சிறுகண் புகர்முகத்துத்
தும்பி நிகரும், சம்பு முதிர்
வீங்கும் கனிகள் விழுந்து அழிந்து
விரி சார் அருவி ஒழுகு இமய
வெற்பின் தவத்தால் அவதரித்து
விளங்கும் தெய்வப்பிடி மணந்து,
தீங்கு இல் ஐந்து முகத் தேவர்
சிங்கம் எனவும் பெயர் படைத்து,
செழிக்கும் திருவாலங்காட்டில்
தேவர் வணங்க நடம் புரியும்
மூங்கில் அளித்த முத்தம் அருள்
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத்திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 1

வழுங்கும் அயமா மகம் புரிந்த
மன்னன் புதல்வர் எனும் சகரர்,
வானத்து இறைவன் புரிந்த நெடு
வஞ்சம் அறியா, மா நிலத்தைக்
கிழங்கின் அகழ் மண் எலாம் அருந்திக்
கீழ் போய், தவம் செய்திடு முனிபால்
கிளரும் பரி கண்டு, அவற் சீற,
கிளத்து முனிவன் தவக் கனலால்
சழுங்கி மாய்ந்து நிரையம் உறும்
தன்மை வினவி, பகீரதனுர்
தவம் ஆறு அயுதம் ஆண்டு இயற்ற,
சதுமா மறையோன் உலகு அகன்று,
முழுங்கி வரு வானதி அளித்த
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத்திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 2

விதி நா அமர் வெள் ஓதிமமும்
விண்டு உரம் சேர் பொன்-அனமும்,
மேவும் கொழுங் கண் மலர் பூத்து,
விழையும் மதியோர்க்கு அருட்செந்தேன்
பொதி சேதாம்பல் இதழ் அவிழ்ந்து,
புரை தீர் கங்கா நதி குலவி,
பொலியும் பவள வனம் அடர்ந்து,
பொன்றுது அணி மங்கல வளையின்
கதிர் வாய்ந்து, ஐங்கைக் களிற்றினுக்கும்
கவுணியனுக்கும் திருமுலைப்பால்
கறந்து கொடுத்த நேமியம்புள்
கஞலி, உயிர்கள் பல அளித்தும்
முதிரா நீலக்கடல் அளித்த
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத்திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 3

விளரித் தீஞ் சொல் அரமகளிர்
விழைந்து குடையும் மயிர்ச் சாந்தும்
விண்-நின்று இழி கார்த்திகை மடவார்
விம்மிச் சுரக்கும் முலைப்பாலும்,
கிளர் மைக் கருங்கண் உமை கறந்த
கிண்ணத்து ஒழுகும் முலைப்பாலும்,
கேடு இல் கூலத் தரு மலரில்
கிண்டும் அளியால் சொரி தேனும்,
தளர்வு இல் சங்கு, மீன், போதா,
தாரா, நாரை, குருகு உண்டு,
தழைப்பத் தவம் செய் சரவணத்தின்
தண்ணீர்மிசை ஆயிரம் இதழ்த் தேன்
முளரிப் பூஞ் சேக்கையில் குலவு
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத்திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 4

மெய் வாய் மூக்குக் கண் செவியின்
வழி போய், விடயங்களை அருந்தி,
விரவும் வினையால் சுழல் பிறவி-
வேலை கடக்கும் கருத்துடையார்
ஐவாய் வேட்கை அவா ஒழிந்திட்டு
ஆறு ஆதாரப் படி ஏறி,
ஆறேடு ஆறு அங்குலம் மீதில்
அறியும் நிமலப் பெருவெளியில்
கை வாய் மழுவும் கறை மிடறும்
கண் ஆர் நுதலும் பிறை முடியும்
கவினத் தோன்றும் சிவனிடத்தில்
கலந்த உமையாள் உடன்பிறந்த
மொய் வான் அறுமீன் உவந்து அளித்த
முத்தே! முத்தம் தருகவே!
மூலாத்திரியில் எழு ஞான
முளையே! முத்தம் தருகவே! 5

(வேறு)

கயிலை வெற்பும், பனி கொள் இமய வெற்பும், புதிய
கனக வெற்பும், குறைகள் தீர்
கடவுள் வெற்பும், சமரபுரியின் வெற்பும், பலவு
கனியும் வெற்பும், புனிதமா
மயிலை வெற்பும், தழலின் அருணை வெற்பும், பொதிய
மலைய வெற்பும், கலை நிலா
மதிய வெற்பும், கதிரின் உதய வெற்பும், சுருதி
மறையின் வெற்பும், கொடி உரு
நியம வெற்பும், சுடிகை உரக வெற்பும், களிறு
நியதி அர்ச்சனை புரிய வாழ்
நெடிய வெற்பும், திகிரி வடிவு வெற்பும், வதுவை
நிகழும் வெற்பும், விடையதாம்
சயில வெற்பும், பழைய குடியிருக்கும் குமர!
தருக, முத்தம் தருகவே!
தணிகை வெற்பின்கண் அமர் அறுமுகப் பொன் குழவி!
தருக, முத்தம் தருகவே! 6

இருடியர்க்கும் பழைய உரகருக்கும் துயர் இல்
இமையவர்க்கும் கிரணம் ஆர்
எரி கதிர்க்கும் குளிரும் மதியினுக்கும் புவியில்
எவர்களுக்கும் வழியதாய்,
வரவிடுத்து, அங்கு அவர்கள் அறிவு அழித்து, அஞ்சி உயிர்
மடி இருட் கங்குல் எனவே
மதி மயக்கும் குருகு பெயர் படைத்து, அண்டம் உறு
மலையினுள் சென்று துயர் கூர்
உருவுடைத் தம்பியரும் உயர் இலக்கம் பெயரும்
ஒளி பெருக்கும் கணவரோடு
உயிர் படைத்து, அங்கண் எழ மலையொடு அத் தும்பிமுக
னொடு கணத்து அஞ்சி விழவே
தரு மலர்ச் செங்கை உறு மயில் விடுக்கும் குமர!
தருக, முத்தம் தருகவே!
தணிகை வெற்பின்கண் அமர் அறுமுகப் பொன் குழவி!
தருக, முத்தம் தருகவே! 7

மழையின் முத்தும், தவள மதியின் முத்தும், கமல
மலரின் முத்தும், கரியின் நீள்
வளர் மருப்பின்கண் ஒளி கிளரும் முத்தும், கதலி
வரு கனிக்கண் பொழி நிலா

விழையும் முத்தும், குருகு தலையின் முத்தும், கமுகின்
மிடையும் முத்தும், தெரிவைமார்
மிடறின் முத்தும், கிருடி எயிறு முத்தும், கிளையின்
விளையும் முத்தும், பனையின் ஆர்

கழையின் முத்தும், பணிலம் உதவும் முத்தும், செநெலின்
கதிரின் முத்தும், புனல் உலாம்
கயலின் முத்தும், சலவர் முழுகு நத்தின் வயிறு
கனலும் முத்தும், புகழதாய்த்

தழையும் முத்தும் புனையும் மணி உரத்தின் குமர!
தருக, முத்தம் தருகவே!
தணிகை வெற்பின்கண் அமர் அறுமுகப் பொன்குழவி!
தருக, முத்தம் தருகவே, 8

(வேறு)

தருவும் சுரபியும் மணியும் கடை விழி
தத்தும் அருட்பார்வை
தனை நம்புற, இரு புறமும் செறிதர,
மொய்த்த கடற்சேனை

மருவும் சபைதனில் எவரும் பணி செய
உற்ற கொலுக்கூடம்
மணியின் கணம் ஒளிர் அணையின் புடை அரசு
உற்ற சசிக்கோவின்

திருவெண்கரி தரும் ஒரு பைங்கொடி படர்
வெற்றி மணித்தோளில்
திகழ் சந்தனம் அகில் புழுகும் புனைதரு
சித்ர மயிற்பாகா!

முருகு உண்டு அளியினம் உலவும் தணிகையில்
முத்தம் அளித்தருளே!
முதிரும் சுவையமுது ஒழுகும் துவர்இதழ்
முத்தம் அளித்தருளே! 9

உனது இன்புறு கவி புகல் என்று அனுதினம்
உற்று அறிவித்திடவும்,
உயர் செந்தமிழ் சிறிது அறைகின்றிலன் என
ஒட்டு கவிப்புலவன்
அனம் இன்று என மதுரையில் அந்தணன்
அடர் வற்கடம் உற்றிடலும்
அழுது அன்பொடு தொழ, அறிசுந்தரன் அருள்
பொற்கவியைச் சொலவே,
இனிது அன்று இது பொருள் என வந்து, இறைதரு
குட்டம் அடுத்திடு நோய்
இடரும் குகை உறு சிறையும் தவிர்தரு
நற்கவி சொற்றிடலும்,
முனிவு இன்று எதிர் வரும் முருகன் தணிகையில்
முத்தம் அளித்தருளே!
முதிரும் சுவையமுது ஒழுகும் துவர் இதழ்
முத்தம் அளித்தருளே! 10

6

## வருகைப் பருவம்

கண்ணனும் கனக நிற வண்ணனும் திரு நுதற்-
கண்ணனும் ஒருங்கு உறைதல்போல்
கருமலை இடத்து உற, செம்மலை வலத்து உற,
கவினும் வெண்மலை இடையதாய்,
பண் அமரும் நந்திநதி புடைசூழ, இடைஇடைப்
பைஞ்சுனை வயங்க, மீச்செல்
பயோதரம் வயா நலிவுற, கொடி கடாக்கல் பல
பாவையர் மருத்துவம் செய்து,
உள் நிலவு நீர் மகவு உயிர்த்திட, விலாப்புறத்து
ஒண் கரத்தால் வருடல்போல்,
ஓங்கு முடிமேல் ஊன்று வெள்ளிவீழ் என்ன மழை
ஒழுகு நீர் அருவி இழிதல்
தண் நிலவு கல்லார மாலை அணி மாண்பு நிகர்
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப்பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 1

நாவலம் பெயர்புனே பொலந்தகடு அணிந்தது என
நனே இதழ் முறுக்கு அவிழ்ந்து,
நளிர் வண்டு உணுது ஔிர் விளக்கு ஏற்றி வைத்தது என
நறு மலர்கள் துறு செண்பகக்
காவில், அந்தணர் புரியும் ஓம அங்கியின் நிமிர்
கரும்புகைப் படலம் மீப் போய்,
கடவுளர்க்கு ஆயுளே வளர்த்து முகில் மேனி பொதி
காட்சியால் களி துளும்பி,
தூவு மின் குலவு நகை வாய் நவின்று உரறி மதி
தோறும் மும்மாரி பொழி நீர்
துன்னு சுண் பணையில் வளர் செஞ்சாலி ஓங்கு கதிர்
சூரியன் பரிகள் தினவே,
தா இல் இன்பு உறு குடிகள் மேவு தண்ணடை குலவு
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப் பிணி எனே அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 2

ஆசினியின் முட்புறக் கனி பழுத்து, ஒண்புவி
அதிர்ந்திட வெடித்த விடரின்
அவிர் சுளே விரிந்து நறை ஒழுகு மணம் எண்திக்கும்
அளவு கால் வழியின் ஓடி,
மூசு வண்டினம் அளவி மொய்த்தல், நிதியின் புதையல்
முன் கண்டு கவரும் வறியோர்
முறைமகள் தெரித்திடும் சாரல் உறு சோலேகளின்
முதிர் கறிக்கொடியின் மிளகைக்
கூசு கரும் இள மந்தி தின்று, அழுதல் கண்டு, வன்
கோடரம் தேனின் அடையைக்
கொண்டு வந்து அதன் நாவிடைப் பிழிந்திடலும், மகிழ்
கூர்ந்து விளேயாடு பணேசூழ்
தாசரதி ஆசிரியன் ஆகி உயர் வாழ்வு தரு
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப்பிணி எனே அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 3

கானத்தை ஒத்த பைங் கதலியின் புலி அடிய
காய்க்குலை அறுத்து, மீப் போய்,
கமுகு இளம் பாளை மடல் கீறி, முப்புடைய தெங்-
கம் பழம் உதிர்த்து எழுந்து,

வானத்து அகட்டைப் பிளந்து, மழை சிதறி, உயர்
மதியின் உறு மானை முட்டி,
வானமீனைச் சினந்து, ஆகாயகங்கையிடை
வளர் சுறவின் முள் தகர்த்து,

கூன் நத்தை ஒத்த கண்டத்து அரம்பையர் செவிக்
குழை மகரமும் கிழித்து,
கோளகை இடித்து, புறம் கோத்த நீரில்
குதிக்கும் இள வாளை உகளும்

தானத்தினொடு மருவி, நீர் ஆறு பாய் வயல்
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப் பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 4

வாள் தடங் கண் செறி உழத்தியர் சரோருக
மலர்க்களை எடுத்து, அருந்தி,
மரு மலர்க் கைக் கோப்புடன் குரவை ஆடும் ஒலி
மஞ்சின் ஒலியைப் புடைப்ப,

நாட்ட அருஞ் சுமைகள் தரு தொழுவரைப் போர்மேல்
நயந்து இவர்ந்து ஏறும் உழவர்,
'நாவலோ!' என்று கூவிளி கொளும் சும்மை அலை
நரலையைத் தட்ப, வயலின்

ஈட்ட அருங் கள் தரளம் முதிர் கரும்பைத் தறித்து
ஏந்திரத்து இட்டு மள்ளர்
எறியும் முட்கோல் கொடு கடாவைத் தெழிக்கும் ஒலி
இடி-ஒலியை மாற்ற, அணி தோல்

தாள் துணைச் செஞ்சூட்ட அனம் உலவு பண்ணை சூழ்
தணிகை நாயகன் வருகவே!
தடா மலப் பிணி எனை அடாது சிற்சுகம் அருள்
சடானனக் குரு வருகவே! 5

(வேறு)

கன்னல் குதலைச் செங்கனி வாய்க்
கலச முலைப் பொற் கடைசியர் தம்
கருங்கண் மலரைப் பூந்தடத்தில்
கமலத்து அருகு முறுக்கு அவிழும்
நன்னர்க் குவளை என அறுகால்
நாடி, பெடையினொடு சுழலும் —
நகைத் தண் தரளம் பொழி நிலவால்
நறும் பூங் குமுதம் வாய் விரியும் —
பின்னல் குழலை மேகம் எனப்
பெருகுங் களிமா மயில் அகவும் —
பிறழும் வளைக்கை கஞ்சம் எனப்
பிரியாது அனங்கள் உவந்து ஏறும் —
வன்னப் பணை சூழ் செருத்தணிகை
வாழ்வே! வருக, வருகவே!
மலையான் உதவும் உமையாள் கண்-
மணியே! வருக, வருகவே! 6

தென்றல் கொழுந்து தவழ் பொழிலில்
செறி பூங் கழை சேர் வழை நிழலில்
தினையின் கதிர் தின்று, அருவி இழி
தீம் தேன் உண்டு, வாய் குதட்டும்
குன்றக் குகைவாய் மோட்டு எருமை
குடம் நேர் செருத்தல் உகு தீம் பால்
குட்டம் பலவும் நிரப்பியிட,
குதிக்கும் கயல்கள் உண்டு, மயல்
துன்றி, கமலமிசை உறங்கும்
தூ நீர் மருதம் பற்பல சூழ்
சோலை உயர் விண் கற்பகப் பூஞ்
சோலை எனப் பொன்மலர் கஞலும்
மன்றல் குவளை அலர் தணிகை
வாழ்வே! வருக, வருகவே!
மலையான் உதவும் உமையாள் கண் -
மணியே! வருக, வருகவே! 7

பிறப்பும் இறப்பும் எவ்வுயிர்க்கும்
பிறழாது அமரும் திறம் போலப்
பெருகும் புனல் பாய் வயல்கள்தொறும்
பின்னல் கதிரின் செந்நெல் முதிர்ந்து

அறுப்பும் படுப்பும் உழுது பரம்பு
அடித்து விதைத்து நடு நடவும்
அகலாது உழவர் செறி பணை சூழ்ந்து,
அழகு ஆர் கன்னல்-காடு உழக்கி,

ஒறுக்கும் மத வாரணம் பிடியோடு
உலவித் திரியும் சாரல் வளர்ந்து
ஓங்கும் மூங்கில் தலையின் மயில்
உலவும் கழைக்கூத்தரின் அகவி,

மறப்பு இல் இறும்பூது உறும் தணிகை
வாழ்வே! வருக, வருகவே!
மலையான் உதவும் உமையாள் கண்-
மணியே! வருக, வருகவே! 8

(வேறு)

தகுவர் முடிகள் உருள, எயிறு
தரள நிரையின் உதிர,'வாய்
தடிகள் உதிரம் ஒழுக, வயிறு
சரிய, மலையை அனைய தோள்

தொகு கை, நெடிய மிடறு, கழல்கள்,
துடைகள், இடைகள் துணியவே,
சுழலும் விழிகள் சிதற, அலகை
சுலவு கழுகு நரிகள் நாய்

புகுத, அயிலை எறியும் இறைவ!
புகர் இல் தணிகை வரையில் வாழ்
புனித முருக! அரியின் மருக!
புலவர் மலர்கள் பொழிய நீள்

மகுட நிரைகள் அசைய, விசைய
மயிலும் அசைய வருகவே!
மறுகும் எமது பிறவி அகல
வருக வருக வருகவே! 9

சரண மலர்கள் அசைய, விருது
தழுவு கழலும் அசையவே,
சகல உலகும் விலை இல் அறுவை
தழையும் இடையும் அசையவே,
அருண கிரண கடகம் அசைய,
அயிலும் அசைய, அழிவு இலா
அழகு புயமும் அசைய, இருவர்
அணையும் மருமம் அசையவே,
முரணும் மகர குழைகள் அசைய,
முறுவல் அணியும் அசைய, நீர்
முழுகு தணிகை வரையில் அலரும்
முருகு குவளை அணி கொள் தார்
மருவும் முடிகள் அசைய, விசைய
மயிலும் அசைய வருகவே!
மறுகும் எமது பிறவி அகல
வருக வருக வருகவே! 10

## 7

## அம்புலிப் பருவம்

### சாமம்

சந்ததமும் இறைவர் விழி தோற்றினாய்; இவன் இறைவர் -
தனி நுதல்விழிப் பிறந்தான்;
தாவும் ஒரு மானைப் புணர்ந்தாய்; இவன் குறவர்
தரு மானையும் புணர்ந்தான்;
நந்து கலை ஈரெட்டு மன்னினாய்; அறுபத்து
நாலு கலை இவன் உணர்ந்தான்;
நாகம் அணி ஈசர் முடி ஏறினாய்; இங்கு இவனும்
நாக மணிமுடி ஏறினான்;
வந்த புலவர்க்கு அமுதம் ஈந்தாய்; இவன் புலவர்
வந்திக்க, அமுதம் ஈவான்;
வாலிபம் அறும் குழவி ஆகினாய்; இவன் என்றும்
வாலிபக் குழவி ஆனான்;
அந்த வகை தெரிதி நீ, தென் தணிகை வெற்பனோடு
அம்புலீ! ஆடவாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமாமுகத்தனுடன்
அம்புலீ! ஆட வாவே! 1

### பேதம்

மேருவினை என்றும் நீ வலமாக வருவை; இவன்
மேரு தலைகீழ் ஆக்கினன்;
விளம்பும் உபதேச குரு இல் பிழைத்தாய்; இவன்
விளம்பு குரு உரை நயந்தான்;

சாரும் வடிவு அழிதி நீ; இவனும் அழியாது வளர்
சாரு வடிவாய் இருந்தான்;
சந்ததமும் நீங்காக் களங்கம் உற்றாய்; இவன்
சார்ந்திடு களங்கம் இல்லான்;

சீருடைய அத்திரி விழித் தாது ஆகி எண்
திக்கினும் சிதறினை; இவன்
சிவன் நுதற்கண் தழற்பொறியாய்த் தருப்பையில்
சேர்ந்து மக உருவம் ஆனான்;

யாரும் உணர் நிற்கு அதிகம் ஆம் தணிகை வெற்பனோடு
அம்புலீ! ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமாமுகத்தனுடன்
அம்புலீ! ஆட வாவே! 2

உரோகணி யிடத்து அதிக மோகம் ஆனாய்; இவனும்
ஒளிர் ஆரல் பால் உவந்தான்;
உயர் தலை உவாவினில் கலை அழிந்தாய்; இவனும்
உயர் தலை உவாவில் அழியான்;

சராசர உயிர்க்கு உணவு நல்கினாய்; ஞானியர்
தமக்கு அழிவு இல் வீடு அளித்தான்;
தனி நாளினுக்கு அரசன் ஆகினாய்; இவன் அமரர்
தங்களுக்கு அரசன் ஆனான்;

இராவினிடை வானத்து எழுந்து திரிவாய்; இவன்
இராப் பகல் இலா இடத்தான்;
இழிவு இலாச் சிறுவிதி சபித்திடப்படுவை; இவன்
எழில் விதியினைச் சிறை செய்தான்;

அராவினுக்கு அஞ்சா மயில் தணிகை வெற்பனோடு
அம்புலீ ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமாமுகத்தனுடன்
அம்புலீ ஆட வாவே! 3

தானம்

தக்கன் நெடு சாபம் தவிர்த்திடுவன்; நரைதிரைகள்
தாங்கும் உடலும் கூனியே
சாய்ந்து கிழம் ஆகி நீ சாம் துயரும் நீக்குவன்;
சகல கலையும் தெரிந்த

மிக்க குரு இல்லைப் பிழைத்த பழி நீக்கிடுவன்;
மெய்க் களங்கமும் அறுப்பன்;
வெங்கதிர்க்கு அஞ்சி ஒளி அவியாமல் அருளுவன்;
விட அரவின் அச்சு அறுப்பன்;

பக்கம் இருபாலும் முன்பக்கமே போல வளர்
பான்மையும் அறிந்து உதவுவன்;
பைங்கூழினுக்கு இறைமை அல்லாமல் உலகு
பதினுலினுக்கு இறைமை தருவன்;

அக் கதை தெரிந்து தணிகைக்கு இறைவனோடு அமர்ந்து
அம்புலீ ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமாமுகத்தனுடன்
அம்புலீ ஆட வாவே! 4

புற இருளை நீக்கியிடும் உனது நெஞ்சு அகலாது
புக்க இருளைத் துரப்பன்;
பொங்கும் அலைகடல் கண்டு மகிழ் உனக்கு அலையாத
பூரணக் கடல் அளிப்பன்;

குறை மதியம் ஆம் உனக்கு அருள் ஞான மோன நிலை
குலவு நிறைமதி அளிப்பன்;
கொடிய அரவுக்கு அஞ்சும் உன் தனக்கு உலகம்
கொடுங் கயிற்று அரவு ஆக்குவன்;

மறுகு அமுத உரு ஆகும் உன்தனக்கு அழியாத
வாய் அமுதமொழி ஈகுவன்;
வான் எலாம் உலவிடும் உனக்கு அரிய சிற்கதன
வானம் உறு நிலை அளிப்பன்;

அறுதி பெறு என் சொலை விளைத் தணிகை வெற்பனோடு
அம்புலீ ஆட வாவே!
அறிவாளர் சித்தம் உறும் அறுமாமுகத்தனுடன்
அம்புலீ ஆட வாவே! 5

### தண்டம்
(வேறு)

சே ஊரும் சிவன் நீர் மேவும் சடை
சேர்வாய் நன்று இது ஆனாலும்,
தேன் ஆர் பைங்கழை பூ ஆர் அப்பு இறை
சீர் சால் வெண்குடை ஆனாலும்,
கா வாழ் இந்திரன் வானோர் நுங்க முன்
கால்வாய் பொங்கு அமிர்து ஆனாலும்,
கான் ஆரும் பயிர் ஊண் ஆகும்படி
காய்வாய் தண் கதிர் ஆனாலும்,
'நீ வா!' என்று இவன் ஓதா முன்பு எதிர்
நீதான் வந்திலை யானாயேல்,
நீள் காலின் றளையோவாய்; அம்புயம்
நேராகும் துயர் ஈவானல்;
மா ஆர் பைங் கழுநீர் வாழும் கிரி
வாவா அம்புலி வாவாவே!
மாதேவன் குகனோடு ஆடும்படி
வாவா அம்புலி, வாவாவே! 6

தாயாய் இன்பு அருள் சேய் வா என்றலும்
தாழ்வாய் வந்திலை; போவாயேல்,
தாய்வாய் வந்து அலை மோதா நின்று, இருள்
சார்வாய், வஞ்சகனாய் நீயும்
தேய்வாய் வெங்கய நோயால்; வெங்கதிர்
சேர்போது உன் கதிர் வீவாயே;
தீ ஆரும் பணி வாயால் உண்டு இடர்
தீராது அங்கு உழல்வாய் வானில்;
தூய்து ஆம் நின்குரு மால் ஆம் அங்கனை
சூதால் வந்து அணை சோரா! நீள்
சோமா! பெண்பழி போமாறும், கறை
சூழா வண் வடிவு ஆமாறும்,
மாயாது ஒண் கழுநீர் வாழும் கிரி
வாவா அம்புலி, வாவாவே!
மாதேவன் குகனோடு ஆடும்படி
வாவா அம்புலி, வாவாவே! 7

வேறு ஆகும் சுரர் மாயோன் நண்பு உறு
வேதாவும் தொழுதே ஏகி,
வீடு ஆர் தம்பதி சேர் மா ஒண் கதை
மேலோரும் சொல ஓர்வாய் நீ;

கூறுமுன் வருவாயேல், நன்று அருள்
கூர்வாய்; வண்புகழ் சேர்வாயே;
கூசாது அன்பொடு நீ வா வெம் பணி
கோள் ஆரும் பகை தீர்வாயே;

சீரு வந்து எதிர் மாய் சூரன் செரு
தீரா நின்றது; மா பாவம்
தேயா நின்றது; வாழ்வு ஈகின்றது;
தேன் ஆரும் சுனை ஆர் பானல்

மாருது அம் புவியோர் தாழும் கிரி
வாவா அம்புலி, வாவாவே!
மாதேவன் குகனோடு ஆடும்படி
வாவா அம்புலி, வாவாவே! 8

(வேறு)

வானில் உறுவோர் அந்தணர்கள்
வாடி அழுதே துன்புறலும்,
மாயை தரு சூரன் சிரமும்
வாழும் அரிமாவின் சிரமும்

தான முடி தோயும் கிரியும்
தாருகனும் வீழும்படி முன்
சாடும் அயில் ஏவும் கரம் நீள்
தாள்கள் தொழுவார் அம் புவியில்

ஊனம் இலரால்; இங்கு வராது
ஓடி உழல்வாய்; நன்று அலவே!
ஓதும் முன் நீ வந்திலையேல்,
ஊனம் உறுவாய்; அங்கு அதனுல்

ஆனையினம் ஆரும் தணிகை
ஆட வருவாய், அம்புலியே!
ஆறுமுகனோடு இங்கு ஒரு நீ
ஆட வருவாய், அம்புலியே! 9

வீடு பெறலாம்; அன்பர் பெறு
மேன்மை பெறலாம்; செங்கதிர் முன்
வீறு பெறலாம்; எங்கும் உழல்
வேலை தவிர் வாழ்வும் பெறலாம்;
மாடு பெறலாம்; நொந்து அழியா
வாய்மை பெறலாம்; இன்ப சுக
வாரி பெறலாம்; வெம் பணியின்
வாதை அறலாம்; முந்தை முயற்
கூடும் அறலாம்; பெண் களவில்
கூடு பழி பாவம் தெறலாம்;
கூனும் அறலாம்; வந்திடு எனக்
கூறும் முனம் நீ வந்தனையேல் —
ஆடு மயில் சூழ் தென்தணிகை
ஆட வருவாய், அம்புலியே!
ஆறுமுகனோடு இங்கு ஒரு நீ
ஆட வருவாய், அம்புலியே! 10

## 8

## சிற்றிற் பருவம்

அல்லிக் கமலத்து அயன் நாவில்
அமரும் காயத்திரி மானும்,
அவனி முழுதும் முடி சுமக்கும்
அனந்தன் இரண்டாயிரம் நாவும்,
சொல்லற்கு அரிய புகழ் நிலவும்
தொலையாச் சூரன்தனை வென்ற
தோற்றம் படைத்து, ஈரேழ் உலகும்
துயர் கூர் பாவ இருள் அகற்றும்
கல்விக் கடலே! நின் பெருமை
கற்றோர்க்கு உதவும் நல் துணையே!
காவில் அரசன் அருள் பிடியும்
கானக் குறவர் தரு பிணையும்
செல்வக் கரத்தால் வருடு அடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 1

கங்கை அலே மிக்குறப் புடைத்தும்,
கயத்தின் அலர் தாமரை மிதித்தும்,
கானக் குறமான் புனத்து உழன்றும்,
கவின் ஆர் செச்சை விலா உதைத்தும்,

மங்கை உமையாள் மடித்தலத்து
மணிமேகலைக் கல் உறத் தளர்ந்தும்,
மை ஆர் களத்தன் திருமார்பில்
வனைந்த கேழல் மருப்பு அலைத்தும்,

திங்கள் தவழும் கொடுமுடிகள்
செறியும் மலைகள்தொறும் நடந்தும்,
தேவர் புனை மா மணி மகுடம்
தேய்க்கச் சிவந்தும், அரம்பையர்கள்

செங்கை வருடும் சீறடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 2

கானத்து இறைவா! மலைக்கு இறைவா!
கயிலைக்கு இறைவா! கலைக்கு இறைவா!
கமலத்து இறைவன் செருக்கு ஒழித்த
கருணைக்கு இறைவா! மகத்து இறைவா!

வானத்து இறைவா! மறைக்கு இறைவா!
மயிலுக்கு இறைவா! வருடை மிசை
மன்னும் இறைவா! செங்கடப்ப
மாலைக்கு இறைவா! மதிக்கு இறைவா!

மோனத்து இறைவா! அயிற்கு இறைவா!
மொய்ம்புஆர் கோழிக்கொடிக்கு இறைவா!
முனிவர்க்கு இறைவா! வேதாந்த
முத்திக்கு இறைவா! முடிவு இல் இன்பத்

தேன் நக்கு அலர் பொற் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 3

வந்தித்திடுவோம் முப்பொழுதும்;
வழுத்தியிருப்போம் திருப்புகழை;
வலம் வந்திடுவோம் நின் கோவில்;
மலரும் தருவோம் பூசனைக்கு;
பந்தித்திடுவோம் ஐம்பொறியும்;
பரம் என்று உனையே நினைந்திடுவோம்;
பாலும் பழமும் உவந்து அளிப்போம்;
பணிக்கும் உனது ஏவலும் புரிவோம்;
சந்தின் புழுகும் கப்புரமும்
தனிக் குங்குமமும் கலந்து அணிவோம்;
சலசத்து இறையும் மலை இறையும்
தண்ணம் திருபாற்கடல் இறையும்
சிந்தித்திருக்கும் சீறடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 4

வம்பைப் பொடித்து மான்மதத்தால்
வளரும் எமது முலைக்கரியை
வயங்கி ஒளிர் பன்னிரு புயம் ஆம்
மணிக் கந்து இறுகப் பிணித்திடுவோம்;
பம்பித் தரள முறுவல் நிலாப்
பயிலும் நினது செங்கனி வாய்ப்
பவளக் கடிகைத் துவர் இதழில்
பழுக்கும் சுவைத்தேன் பருகிடுவோம்;
நம்பித் துணை என்று ஒருவரையும்
நாடோம்; உனையே நாம் புணர்வோம்;
நவிற்றும் நினது தேவியர்பால்
நண்ணும் துணைச் சேடியர் ஆவோம்;
செம்பொற் கமலச் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேண் ஆர் தணிகை மலைக்கு இறைவா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 5

(வேறு)

துயில் நீங்கி, கொடுவினை நீங்கி, சிறைத்
துனி நீங்கி, சுரர் களிகூர,
துணை நீங்கி, கொலு-அணை நீங்கி, திரி
துயர் நீங்கி, கரி இறை வாழ,
மயல் நீங்கிச் சுழல் மனம் நீங்கி, பழ
மலம் நீங்கி, தவர் தவம் மேவ,
மறம் நீங்கி, திணி பொறை நீங்க, பல
மதம் நீங்கிப் புவிமகள் வீற,
உயிர் நீங்கி, புனை உடை நீங்கி, கருகு
உடல் நீங்கி, தகுவர்கள் மாய,
உரை நீங்கி, புயவலி நீங்கி, பிழை
உறல் நீங்கி, துணைவரும் மேவ,
அயில் ஏந்திக் கருமலை போழ்ந்திட்டவன்
அடியேம் சிற்றிலை அழியேலே!
அருள் தாங்கி, தணிகையில் ஓங்கு உத்தமன்!
அடியேம் சிற்றிலை அழியேலே! 6

தழை பாம்புக்குழை புனை பூம் பொற்கொடி,
சதிர் ஆம் சொற்கிளி, மகமாயி,
சடை தாங்கு உத்தமி, நடை தாங்கல் பிடி,
தனி ஆம் தற்பரை, சதுர்வேதி,
கழை ஆம் பொற்சிலை மலர் ஆங்கு உற்றிடு
கரம் வாய்ந்துற்றவள், அபிராமி,
கலை தேர்ந்திட்டவள், மலையான் பெற்றவள்,
கடு ஆர்ந்திட்டவள், கலியாணி,
எழில் ஆம் பற்பல உலகு ஈன்றிட்டவள்
இனிது ஆம் சிற்சுகம் உறு வாமி,
எனை ஆண்டு அற்புத அருள் ஈந்திட்டவள்,
இடம் ஆம் வித்தகன் விடை ஊரும்
அழலேந்திக்கு ஒரு மகன் ஆம் புத்திர!
அடியேம் சிற்றிலை அழியேலே!
அருள் தாங்கி, தணிகையில் ஓங்கு உத்தமன்!
அடியேம் சிற்றிலை அழியேலே. 7

கொலை ஏங்க, பழி வினை ஏங்க, குடை
கொடி ஏங்க, தகுவர்கள் நீடும்
குடி ஏங்க, கழல் அடி ஏங்க, தழை
குலம் ஏங்க, பெரு வரம் மேவும்

நிலை ஏங்க, சினமொழி ஏங்க, கொடு
நினைவு ஏங்க, புயவலிதானும்
நெடிது ஏங்க, புனைமுடி ஏங்க, படை
நிறைவு ஏங்க, பொறை அறு மாயை

மலை ஏங்க, குகை இருள் ஏங்க, பொலி
வளம் ஏங்க, தகுவியர் தாமும்
மனம் ஏங்க, பரியமும் ஏங்க, கரி
மதம ஏங்க, புனல் செறி வாரி

அலை ஏங்க, பொரு சிலை வாங்கு அற்புதன்!
அடியேம் சிற்றிலை அழியேலே!
அருள் தாங்கி, தணிகையில் ஓங்கு உத்தமன்!
அடியேம் சிற்றிலை அழியேலே! 8

(வேறு)

முற்றிலின் மணல் வாரி, முத்தொடு முழுநீலம்
மொய்த்திடும் அகில் ஆரம் முற்படு பனிநீர்கள்
வற்புறு நிழல் ஆடி, வச்சிரம் முதலான
மட்டு அவிழ மலர்மாலை வைதது அறையது கோலி
நல் தவ முனிவோரும் நச்சு எழில் இளமாதர்
நட்பொடும் எதிர்கூடி, நல தணிகையில் வீதித்
தெற்றியில் விளையாடும் சிற்றிலை அழியேலே!
சித்திர மயில்வீரா! சிற்றிலை அழியேலே! 9

பற்பல மணியாலும், பச்சிலை மலராலும்,
பத்தி கொள அறைவீடு, பக்கமது உறு மேடை,
பொற்பு உறு மணி மாடம், புக்கு இனிது உறு கூடம்,
புத்தமிர்து அடு தூதை, பொற்கலம் நிறைசால் நீர்,
வெற்பு உறு குறமாதர் மெய்த்தணிகையில் வீதி
விற்கறி, சிறுசோறு மிக்குற விளையாடும்
சிற்பனும் உளம் நாணும் சிற்றிலை அழியேலே!
சித்திர மயில்வீரா! சிற்றிலை அழியேலே! 10

9

## சிறுபறைப் பருவம்

கனை கடல் உடுத்த புவி முழுவதும் நொடிப்பு அளவில்
கடிது வலமுற்ற சரணு!
கமல மலரில் குடிகொள் பிரமனை அடித்து உலகு
கருணையின் அளித்த சதுரா!
நனை அவிழ் கடப்ப மலர் குவளையொடு செச்சை புனை
நல மலை நிகர்த்த புயனே!
நதி, அரவு, கொக்கு இறகு, பிறைமதி முடித்த சடை
நயன நுதலத்தன் மகனே!
வனை கழல் அரக்கரொடு மயல் புரி பொருப்பினையும்
மடிய, அயில் விட்ட கரனே !
மழையினெடு நல் தவள மதகரி மிசைக் குலவு
மகபதி மகட்கு இனியனே!
தினை வளர் புனத்து அருவி இழி தணிகை வெற்பு அரச!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளிய வரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 1

கொலை புரி தயித்தியர்கள் உடல் தலைகள் அற்று ஒழுகு
குருதிகள் குடித்து நரி, நாய்,
குறைபடும் உடற்கு நிகர் கரணமொடு சுற்றிவரு
குறளிகள்தமைக் கறுவ, நீள்
மலை நிகர் பிணக்குவையின் உறுகுடர் புயத்து அணியும்
வயிரவர் களித்து மகிழா,
மருவு கழுமுள் படையை முறைமுறை திரித்து, வய
மகள் எதிர் நடிக்க, அழல் ஆர்
உலை உறு குடத்தினிடை வறைபடு தசைப் பொரியல்
உருகு நிணம் முற்றும் அயிலா,
உறு கழுகு, மைக் கொடிகள் வறுமை அற வெற்றி அயில்
ஒரு நொடியில் விட்ட முருகா!
சிலை மறவர் மொய்த்து வளர் தணிகை நகருக்கு அரச!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 2

குறைவு அறு தவத்தை உறு கொடி இடை எயிற்றியர்கள்
குலவு நடை கற்ப, எகினம்
குளிர்முகம் நிகர்ப்ப எழு சுனையிடை முளைத்த ஒரு
கொடிய பதம் வைத்து, நிறைநீர்

உறு தவம் இயற்றல் நிகர்தரு கமல மெத்தைமிசை
உறையுமவர் பொற்பின் நிழல்போல்
உயர் தவம் இயற்றி மகிழ்வொடு தழல் வளர்ப்பது என
ஒளிர் கனல் புடைக்கண் எரியா,

மறு அறு கழைத்தலையில் மயிலினம் நடிக்க, அவர்
மருவு குதலைக்கு நிகர் ஆம்
மறைதரு குயில் தொகுதி, முகிலினம் வர, கடிது
மவுனம் உறு பெற்றிமை குலாய்,

சிறு மிளகு வெற்றிலையின் ஒளிர் தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 3

கழையின் உகு முத்தின் நிலவு ஒழுகும் ஒளியில் குவளை
கடி இதழ் அவிழ்க்க, வளையின்
கதிர் மணியினில் குமுதமுகை புரி முறுக்கு விரி
கழனி அலை தத்து புனலின்

நுழை சிறு கயல் புகுதும் அளவில் எதிர் குத்தி இடை
நொசி கமுகின் மொய்த்த குலைமேல்
நுகரும் முது கொக்கின் வளை மிடறு ஒடிதரச் சினவி,
நொடி வரை குதித்து எழு வரால்

மழை அகடு முட்டி, மிசை வரு கதிரை எட்டி, உயர்
மதியமுது உகுத்து, வெடி போய்,
மட நடையுடைக் கனக வன வளமுடைப் புவன
மடு நடுவில் உற்ற கமலச்

செழு மலர் மிசைத் துயிலும் உயர் தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 4

நடம் இடு மயில் தொகுதி, இசை வளர் குயில் தொகுதி,
நடை பயில் அனத் தொகுதி போல்
நவில் இயல் தழைத்து இனிய மழலை மொழி கற்று இளைஞர்
நகு நடை படைத்த மடவார்

தட வரை முடிக்கண் இவர் தரலுறு சுவர்க்கம் உறு
சசியின் எழிலைக் கவர, வான்
தலைமிசை நடிக்க எழு தகைமையை நிகர்க்கும் மழை
ததைதரு மலைச் சரிவிலே,

பட அர முடிக்கண் ஒளிர் மணி வெயில் எறிப்ப, இருள்
படு குகை விளக்கம் எனவே,
பயன் உறு கரிக்கணமும் அயல் உறும் அரிக்கணமும்
பகைமை அற, ஒத்து, உறைதரும்

திடம் உள பொருப்பர் குடியுறு தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளிய வரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 5

வட வரை முகட்டில் உறு துருவனும், மகத்து இறையும்,
வனச மலர் உற்ற அயனும்,
மதியமும், உடுக்குலமும், மலர்கதிரும், மைக்கடலும்,
மகிதலமும், மற்றையவரும்,

பட அரவம் எட்டுநெடு கட கரிகள் எட்டும் அவை
பயில் திசைகள் எட்டும் இறினும்,
பயன் உறு தவத்தின் நிலை அழிவு அரிய சித்தரொடு
பல முனிவர் மொய்த்த குகை சூழ்,

மட நடை எயிற்றியர்கள் இயல் உறும் மணிக் கலவ
மயில் முகில்வர, கணிகள் மேல்
மனம் மகிழ்தரக் குலவி, நடம் இடு சதிக்கு இசைய
வனசரர்கள் கொட்டு துடி ஆர்,

திடம் உறு துகிற் கொடிகள் உயர் தணிகை வெற்பு இறைவ!
சிறுபறை முழக்கியருளே!
திமிர மலம் அற்றவர்கள் தெளியவரு சிற்சொருப!
சிறுபறை முழக்கியருளே! 6

(வேறு)

தழைத்திடு தமனியம் இழைத்திடு மணிவெயில்
தகைத்திடும் எழுநிலைமேல்
சரித்திடு வனிதையர் முகத்து எழில் கவர்மதி
தளைப்படு நுழைவழி போய்,

மழைக்குலம் அவர்குழல் வனப்பினை நனி கவர்
மகிழ்ச்சியின் மழை பொழியும்
வருத்திடும் அவர் இடை எழில் கவர் தரு மினும்
மதத்தொடு நொடி அழியும்

செழித்திடு புரிசைகள் மிசைப்படு கொடி வளி
செறித்திட அசைதரலால்,
சிறப்பு உற வரு கதிர் இளைப்புறு துயர் தவிர்
செருத்தணி மலை இறைவா!

முழைச் செவி மலை உடல் அரக்கரை அடு குக!
முழக்குக, சிறுபறையே!
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 7

மலைச் சரிவினில் வளர் தினைக் கதிரினை நுகர்
வரிக் கிளிகளை இதண்மேல்
மறத்தியர் அணி விரல் சுழற்றிய கவண் எறி
மணிக்கல் வல் விசையொடு போய்,

புலத்து உறு கடைசியர் களித்திடு குரவையின்
பொழில்-கமுகு உறு குலைமேல்
பொருக்கென விழ, முதிர் பழத் திரள் பல இரு
புறத்து உதிர் தரு கனியும்,

செலைத் தொடு கதலியின் குலைக்கனிகளும் எழில்
திளைத்திடும் உழவர் எலாம்
செறித்து அனுதினம் உழு வயல்தலை எரு இடு
செருத்தணி மலை இறைவா!

முலைக் குவடு அசைதர, மறத்தியர் நகைசெய,
முழக்குக சிறுபறையே!
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 8

கடைப்படு பிறவியின் அகப்படும் இருவினை
கலக்குற நிலை குலையா,
கறைப்படு நரகொடு துறக்கமும் உழல்தரு
கசட்டனை அருள் விழியால்,

தடைப்படு மயலினை அறுத்து. இகல் அற ஒளிர்
தனிக் கழல் நிழல் நிறுவி,
சலிப்பு அறு பரசுக அளக்கரில் எனது உயிர்
தழைத்திட விடு முருகா!

குடத்தினை நிகர்தன மறத்தியர் இயல் மயில்
குறித்து அனுதினம் மருவா,
குறிச்சியில் உறு கணி மரத்தினில் அமர்தரு
குகைத் தணிமலை இறைவா!

முடக்கிய மணி விரல் பிடித்திடு குணில் கொடு
முழக்குக, சிறுபறையே!
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 9

தகைத்திடு பொறிவழி உகைத்திடு புலனொடு
தடைப்படும் மனம் நிறுவா,
தவத்தினை அநுதினம் உஞற்றிய முனிவரர்
தமக்கு எதிர் பிணிமுகமேல்,

மிகுத்திடு நறை பொழி கடப்பலர் அணிதரு
விறல் புயம் அசைதரவே,
விணில் செறி பிடியொடு குறக்கொடி இருபுறம்
விருப்புற வருபவனே!

திகைத்திடு நிருதர்கள் பகைத்து எதிர் விடு கணை
சிதைத்து அவர் தலை அறவே
செகுத்திடும் இலை அயில் பிடித்திடும் அறுமுக!
செருத்தணி மலை இறைவா!

முகிழ்த்திடும் அணி விரல் பிணித்திடு குணில் கொடு
முழக்குக, சிறுபறையே!
முழுத்திய மல இருள் ஒழித்திடு தினகர!
முழக்குக, சிறுபறையே! 10

## 10

## சிறுதேர்ப் பருவம்

அறுபதம் மிதிப்ப, முகை விண்டு தண் தேன் துளி
அசும்பு சலசப் பொகுட்டின்
அரசு இள அனம், சங்கு வயிறு உளைந்து ஈன்ற மணி
அவிர் பெடை உயிர்த்த கரு என்று,
உறு சிறை அகத்து வைத்து அடைகிடந்திடு வயல்
உடுத்த கன்னல்-காடு வான்
ஓங்கு கமுகைத் தீண்ட, வளர் கமுகு தெங்கின் முப்
புடைய கனியைத் தாவிட,
செறி இலை முடத் தாழை இரவி இரதம் தொட,
செழித்த தண்ணடைகள் புடைசூழ்
திருநந்தி ஆறு புனல் பெருகு கால் ஊர்தொறும்
திகழ் திருத் தணிகை நாடா!
சிறை தவிர் அமரர் உறு குறை தவிர்த்து அருள் குமர!
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 1

கவான் மலையில் விளையாடு வனசரர் சிறுர் விளாங்
கனி உதிரவே எறிந்த
கரி மருப்பு, அயல் சூழும் மருதம் உறு தண் பலாக்
கனியினைச் சாடி, உழவர்
குவால் உறப் புரியும் நெற்போர்மீது வரையின் ஊர்
குழவிமதி ஒப்ப வீழும்;
கொண்டல் உருவக் களமர் தரு மகார் வான் ஓங்கு
கொக்கின் முதிர் கனி உதிரவே
தவாது எடுத்து எறி சங்கு வெள்ளில் அம் கனிகளைச்
சாடி, வனசரர் குடிசைமேல்
தவழும் முழுநிலவு எனத் திகழும் அதிசயம் மருவு
தணிகை அம் கிரி முருகனே!
திவாகரன் இவர்ந்துவரு தேர் நாண ஒளிர்மணிச்
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 2

கொந்து ஊர் மலர்த் தடத்து, அரவிந்த மெத்தையில்
குடிகொண்ட வாழ்க்கை ஒருவி,
குட வயிறு உளைந்து அலறி வாய்விட்டு அரற்ற, நீர்க்
கோடு ஏறி வயலின் ஊர்ந்து,

முந்து ஊர் புனற் காலின் ஓடித் தவழ்ந்து, உழவர்
முன்றிலில் சென்று, மேதி
முதுகில் தவழ்ந்து ஏறி, அசலம் நிகர் நெற்போரின்
முடிமிசைச் சென்று இறங்கி,

சந்து ஊரும் மலையருவி நீரினில் எதிர் ஏறி,
தடஞ் சுனை எலாம் உழக்கி,
தவர் உறு முழைக்குள் தவழ்ந்து, முத்து ஈன்று, வளை
தங்கு தென் தணிகை இறைவா!

செந்தூர் இருந்து அவுணர் நந்து ஊர் அழித்த குக!
சிறு தேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர
சிறு தேர் உருட்டியருளே! 3

சகத்திரத் தோடு விரி கஞ்சப் பொகுட்டில் உறை
சதுமுக விரிஞ்சன் எழுதும்
தலைப்பொறி அனைத்தையும் உணர்ந்த சித்திரகுத்தர்
சாற்றிய கணக்கை வினவி,

மிகப் பருத்து ஓங்கி வளையும் கருங் கோட்டு, முழை
மேவு பிலவாய, செங்கண்
மேதிக் கடாவைக் கடாவி, முச் சிகை மருவு
வெள் வேல் திரித்து முகிலின்

வகைப்படும் இருட்டு உருவம் அசனி உரை வாய்ந்து, பிறை-
வாள் எயிறு இலங்கு சண்டன்
வாராமுன் என்தனைக் காத்தருள் திருத்தணிகை
மா மலையில் வாழும் முருகா!

செகத்தில் உயிர் யாவையும் அளித்த அம்பிகை மதலை!
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 4

தாரகன் தேரினை உருட்டி, அரிமாமுகன்
தனது பேய்த்தேர் உருட்டி,
தா இலாச் சூரன் இந்திரஞால இரதம்
தகர்ந்திட உதைத்து உருட்டி,

வீரர் ஒன்பதின்மர் தேரொடு படைத்தலைவர் தேர்
வெவ்வேறு புடை சூழ்தர,
மேதினி எனும் பரமன் ஏறு தேர் எங்கும்
விரிந்திடும் இரண்டாயிரம்

பேர் எனும் தொகை மருவு பூதவெள்ளத்தின் நடு
பிறழ் மணித் தேரில் ஏறி,
பெயர்த்து அலை எறிந்திடு கடல்-தலை நிசாசரர்
பிணக் குவை படத் தொலைத்து,

தீர அரிது ஆம் சினம் தவிர் செருத்தணிகை இறை!
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 5

மங்குலைத் தீண்டு கொடி மணி மாட முடி தவழும்
மதி-இளம்பிள்ளை மடவார்
மடிமீது சிறு குழவி என உவந்து ஏறலும்,
மகிழ்ந்து, மணி முறுவல் பூத்து,

பங்கய மலர்க் கரத்து ஏந்தி, வாய் முத்தாடி,
பஞ்சணையின் மீது சேர்த்தி,
பாலொடு பழம் கனிந்து உதவி, முகமன் சொலி,
பரிந்து, விளையாடி வா என்று

அங்கண் அகலும்படி விடுத்திடு விருப்பினுல்
அனுதினம் கலைகள் வளரும்
அழகிய செருத்தணிகை வரை நினைந்தவர் வினை
அறுத்தருளும் ஆறுமுகவா!

செங்கதிர்த் தேர் நாண, அம்புவித் தேர்மீது
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 6

பேய்த்தேரை நீர் எனக் கொண்டு உழலும் இரலையின்,
பிணித்திடு கயிற்றில் அரவப்
பிராந்தி உறும் ஒருவனின், சுத்தி நிகழ் இரசிதப்
பித்து அடைந்திடு பேதையின்,

பூத்தேரின் உறு வாழ்வு மெய் என்று கருதி, யான்
பொறிவழிச் சென்று, பஞ்சப்
புலனையும் அருந்தி, யான் எனது எனும் அகந்தையால்
புன் பிறவி அணுகு மலநோய்

நீத்து, ஏர் பெறும் திருவடித் தாமரைப் போதின்
நீழல் தந்து, ஆனந்தம் ஆம்
நித்த பரிபூரண சிதாகாச வெளியிலே
நிலைபெற விடுத்த முருகா!

தேய்த்தே முடிக்கண் மதி தவழ் தணிகை வெற்பின்மேல்
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 7

காமக் குரோதம் மிகு லோபமொடு மோகமும்
கருதி மத மாச்சரியமும்
கட்டிப் பிணித்து நிரையத்தில் இடும் ஐம்புலக்
காதலும் அறத் துறந்து,

தாம் உற்றிடும் துறவறத்தின் நிலை தவறாது
தழை கானகத்து அடைந்து,
சருகு அருந்தி, பஞ்ச தழலிடை இருந்து, நல்
தவம் இயற்றிடு மாதவர்

தோம் அற்ற சிந்தனைக்கு எட்டாத நின் திருத்
துணை மலர்ப்பத நீழலில்
துயர் அற இருத்தி, எனை ஆண்டருள் செருத்தணி
சுடர்க்கிரி அமர்ந்த முருகா!

சேமித்த மறை நெறிகள் எங்கணும் விளங்கிட,
சிறுதேர் உருட்டியருளே!
சிவஞான சித்திதர! வரு ஞான சத்திதர!
சிறுதேர் உருட்டியருளே! 8

(வேறு)

மனத்தொடு மொழி உடல் ஒருப்படும் அடியவர்
வணக்கொடும் அடி பேண,
மலத்தொடும் இரு வினை அகப்படும் உயிர் அருள்
வசப்படு திறம் நாடி,
சினத்தொடு மயல் விழைவு அளித்திடு பொறி புலன்
சிதைத்து, அறிவினில் ஓவாச்
சிவத்தினை அடைதர, அவத்தைகள் கழிவுறு
செயற்கையை எளிது ஈய,
தனித்து ஒரு மயில்மிசை இருத்திய கழலொடு
தவத்தினர் புடை சூழ,
சலிப்பு அற எதிர் வரும் அருத்திகொள் அறுமுக!
தலத்து உயர் குருநாதா!
உனக்கு உறு வலவனும் மனத்து அதிசயம் உற,
உருட்டுக, சிறுதேரே!
உலப்பு அறு வளம் மலி செருத்தணி மலையவன்
உருட்டுக, சிறுதேரே! 9

தரைத்தலை முனிவர்கள் உரைத்திடு சுருதிகள்
தழைத்த பனிரு காதில்
தமிழ்க்கடல் உறு விதி தினைத்துணை அறிவிலி
சலிப்பு அறும் விழைவாலே
விரித்திடு புகழ்பெறு பிளைத்தமிழ் ஒருசத
விருத்தமும் நனி ஏறும்,
வெளிற்று உரு உறு கரிமிசைக் குலவிய கழல்
வெறிக்கணும் உறலாலே;
குருப் பொலி இமையவர் அளித்திடும் அமுதொடு
குறத்தியர் தினைமாவும்
குளிர்ப்புற நுகர்தரு களிப்பொடு மகிழ்பெறு
குலப் புதுமலர் வாயா!
ஒருத்தரும் நிகர் அறு செருத்தொழில் வல குக!
உருட்டுக, சிறுதேரே!
உலப்பு அறு வளம் மலி செருத்தணி மலையவன்!
உருட்டுக, சிறுதேரே! 10

**திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் முற்றும்**

# தணிகாசல அநுபூதி

சிந்தாமணியே! திருமால் மருகா!
வந்தார்க்கு உயர் வாழ்வு கொடுத்தருள்வாய்!
நொந்து ஆழ் வினையேன் முகம் நோக்கி, வரம்
தந்து ஆள் முருகா! தணிகாசலனே! 1

நாயாய், நரியாய், நரர் தேவர்களாய்,
ஓயாது பிறந்து உழலாது அருள்வாய்!
சேயாய் வரு செந்நெறியார்க்கு அருள்கூர்!
தாயாய் அமரும் தணிகாசலனே! 4

கதிர்சூழ் நின தாள் கருதா அடியேன்
முதிர் தீவினை தீர் முறைவாழ்வு அருள்வாய்!
எதிர் பூவையும இன்கிளியும் புகல,
சதுர்வேதமும ஆர் தணிகாசலனே! 50

---

கந்தப்பய்யர் பாடிய இந்தத் 'தணிகாசல அநுபூதி' 1865-க்கு முன்பே அச்சில் வெளிவந்துள்ளது. இது குறித்து ஜான் முர்டாக் தம் 'தமிழ் அச்சுப் புத்தகத் தொகுப்பு' நூலில் 94 ஆம பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். பலவகையாகத் தேடியும் இந்நூல் முழுமையாய் இன்னும் கிடைக்கவில்லை. 'திருத்தணிகைத் திருப்புகழ்ப் பாடல்களும் ஆன்றோர் அருளிச் செய்த மற்றும் சில பாடல்களும்' என்னும நூல் தொகுப்பில் (1922) அநுபூதியிலிருந்து தரப்பட்டுள்ள மூன்று பாடல்களை இங்குச் சேர்த்துள்ளோம. நூல் முழுமையாய் வைத்திருப்போர் உதவினால் முழுமையும் அச்சிட்டு வெளியிடுவோம.

இந்நூலைப் போன்றே இவர் பாடிய 'முருகர் தாலாட்டு' என்பதும் 1865-க்கு முன்பே அச்சாகியுள்ளமை மேற்படி நூலால் (பக்: 92) தெரிய வருகிறது. இவை தவிர, அட்சய (1867)-ல் அச்சான 'சிலேடை வெண்பா மாலை' நூலின் விளம்பரத்தில இந்த ஆசிரியர் செய்ததாகக் குறிக்கப்பட்ட 'மலை வெண்பா', 'யமக அந்தாதி', 'முருகக்கடவுளுக்கும் திருமாலுக்கும் சிலேடையந்தாதி' என்னும் மூன்று நூல்கள் பற்றிய விவரமும் தெரியவில்லை.

# 11. திருத்தணிகை உலா

## காப்பு

(வெண்பா)

*நில உலாவும் சீர் நிகழும் தணிகை*
*மலை உலா ஒன்று வகுப்பாம் — அலகு இலாப்*
*பாபச் சகாயர் உளம் பாயாத மும் மதம் சேர்*
*ஆபச் சகாயன் அருளால்.*

*விண் உலாவும் தணிகை வெற்பு உலாவும் குமரன்*
*பண் உலா ஒன்று அடியேன் பாடுதற்குப் — பெண் உலாம்*
*மெய்யான், அனத்தன், நத்தன், விண்ணவர் கோன் போற்று நெடுங்*
*கையானனத்தன் அத்தன் காப்பு.*

—o—

## நூல்

### புராண வரலாறு

நீர் பூத்த மேக நிறத்தவனும் வேதாவும்
ஏர் பூத்த ஆயிரங்கண் இந்திரனும் — சீர் பூத்த 1

முப்பத்து முக்கோடி தேவர் முதலானவரும்
அப்பு உற்ற சூரபன்மற்கு அஞ்சியே, — ஒப்பு அற்ற 2

வெள்ளிவரை அணைந்து, வேண்டி முறையிடலும்,
உள்ளி இறைவன், உமை மணத்தை — நள்ளியபின், 3

ஆறு நுதல்-விழியில் ஆறு பொறி தரலும்,
ஆறு பொறியும் எழுந்து அண்டம் எலாம் — வீறியிட, 4

விண்ணவர் கண்டு, அஞ்சி, விமலன் தனக்கு உரைப்ப,
கண்ணுதலும் தீயினெடு காற்றிறையை, — 'நண்ணும் இந்த 5

வெம் பொறியைக் கங்கை வியன்நீர் விடுதிர்!' என,
நம்பி அயர் கங்கை நதியில் விட, — செம்பொறிகள் 6

அக் கங்கை மாநீர் அனைத்தும் உறுஞ்சியிட,
புக்கு, அங்கையில் ஏந்திப் போந்து, உவகை — மிக்க நதி 7

சேல் ஆர் சரவணங்கள் சேர்ந்து இமைய மால் வரையின் -
பால் ஆர் சரவணத்தின்பால் உய்ப்ப, — மேல் ஆரும் 8

ஆறு பொறிகளும் ஓர் ஆறு மக உருவாய்,
வீறி அழுதிடும் அவ் வேலைதனில், — கூற விண்ணோர் 9

கார்த்திகை ஆம் பெண்கள் கசிந்து முலைப்பால் ஊட்டி,
வார்த்து, மதுப் பூமேல் வளர்த்திடலும், — தீர்த்தனுடன் 10

அம்மை மழவிடைமேல் ஆங்கு அணைய, பாலகரும்
விம்மி அழும் குரலை மென் செவி கேட்டு, — அம்மை, 'இவை 11

என் குழவி ஆமாறு இயம்புகென்ன, எம்பெருமான்,
'நின் குழவி கைக்கொள்' என, நேர் ஓடி, — மின்கெழுமு 12

கையால் எடுத்து அணைத்து, 'கந்தன்' எனப் பேர் புனைந்து,
நையா முலைப்பால் நயந்து அருத்தி, — மெய் ஆன 13

தேவனொடு மால் விடைமேல் சென்று, கயிலைதனில்
மேவி, மகிழ்ந்து இருக்கும் வேலைதனில், — தேவரொடும் 14

சங்கரனை ஏத்தி, தனைப் பணியாதே வழிக்கொள்
பங்கயனைச் சென்னிபடப் புடைத்து, — மங்கச் 15

சிறையிட்டு, சிட்டி திதி இலயம் மூன்றும்
முறையின் பல நாள் முடிப்ப, — கறைமிடற்றோன் 16

'வேதன் சிறையை விடுத்தி' என, 'ஓம்' எனும் சொல்
ஓதும் பொருள் தெரியான் ஊங்கு' என்ன, — ஆதி, 17

'உனக்குத் தெரிந்திடுமேல் ஓது' எனலும், 'அத்தம்
எனக்குத் தெரியும், முறை இன்றித் — தனித்து இயம்ப 18

ஒண்ணாது' என, 'நீ உரைத்தருளும் ஆகமச்சீர்
எண்ணாய்' என, பணியும் ஈசனுக்கு, — பண் ஆர் 19

பிரணவத்தின் உண்மைநிலை பேசி, இசை ஞானப்
புரணவித்தை வல்லமுனி பொற்பு ஆர் — கரணமொடு 20

செய்யும் மகத்து எழுந்த செச்சைதனைக் கைப்பிடித்து,
வெய்ய வெரிந் ஏறி விளையாடி, — துய்ய செம்பொன் 21

மேரு முதலாம் உலகை மேல் கீழாச் செய்ய, விண்ணோர்
யாரும் நடுங்கி, 'அபயம்!' என, — சோரும் உலகு 22

எல்லாம் முனம்போல் இயற்றி, அரக்கர் குலம்
எல்லாம் அறுக்க இசைந்து எழுந்து, — கல் ஆர் 23

உமையாள் சிலம்பில் வரும் ஒன்பதின்மர், 'எங்கள் -
தம் ஐயா' எனப் பணிந்து சார, — எமை ஆளும் 24

ஓர் இலக்கம் ஆக உரைக்கும் படைத்தலைவர்
சீர் இலக்கமாய், அருகில் சேர்ந்து இறைஞ்ச,—
[போர் இலக்காம் 25

ஈராயிர வெள்ளம் என்று உரைக்கும் பூத கணம்
சோராமல் எம் மருங்கும் சூழ்ந்துவர, — தேர் ஏறி, 26

சம்பு விடை கொடுப்ப, தண் கயிலை வெற்பு ஒருவி,
அம் புவியில் மேருவின் தென்பால் அணுகி, — வம்பு புரி 27

தாரகனைப் புள்ளின் தனிப்பெயர் கொள் வெற்பினொடும்
பேர் உக, வை வேலால் பெரிது அழித்து, — கார் இருளில் 28

தேவகிரி மருவி, தேவர் செயும் பூசை கொண்டு,
பாவலர் சொல் சேனபதி ஆகி, — பூவில் 29

திருச் சேய்நல்லூரில் சிவ பூசை செய்து,
வரச் சூர் அடும் வடி வேல் வாங்கி, — பரித்து இமையோர், 30

தம் குருவு மந்திரியாய்ச் சார்ந்து, கொடுஞ் சூர் வரமும்
பொங்கு உருவும் தீங்கும் புகன்று உரைப்ப, — அங்கு அதனைச் 31

சற்றும் அறியாதவர்போல், தன் செவியிலே தேக்கி,
மற்றும் மனுநீதி வழுவாது, — முற்று உணர்ந்து, 32

செந்தூர் இருந்து, செய வீரவாகுவினை
முந்து ஊரும் தூதாக முன் அனுப்பி, — நந்து ஊரும் 33

வாரிதியில், வீரமகேந்திரத்தில் சென்று, அவுணர்
தேர் இவுளி தானை கரி சேனை எலாம் — போரில் 34

அழித்து, அவுணரோடும் அழியாத சூரைக்
கிழித்து இரு புள் ஆக்கி, உம்பர் கேதம் — ஒழித்தருளி, 35

வீர மகேந்திரத்தை வீரையிறையால் அழித்து,
வார மகவான் அளித்த வாணுதலை — நேரே 36

மணந்து, கொடுஞ் சூரை வதைத்த சினம் எல்லாம்
தணந்த செருத்தணிகை சார்ந்தோன்; — பணிந்தோர் 37

கணிகம் தவம் புரிந்த கண்ணுதலோன்முன் ஓர்
மணி-குண்டலம் அசைய வந்தோன்; — துணிவுடைய 38

நந்திநதி ஒன்று அழைத்து, நற் குகையில் யோகு இருந்து,
வந்து பணிய வரம் அளித்தோன்; — சந்த 39

மலயக் குறுமுனிவன் வந்திக்க ஞான
நிலையைச் செவி உரைத்த நித்தன், — கலை உணர்ந்த 40

சத்த முனிவர் தவத்துக்கு உவந்து, பர
முத்தி அளித்த முதல் குரவன் — பத்தியுடன் 41

விண்டு தவம் புரிந்து வேண்டி முறையிடலும்
வண் திகிரி ஈந்த மணி மார்பன், — பண்டு சிரம் 42

தாக்கும் பிரமன் தவம் புரியக் கண்டு உலகை
ஆக்கும் படைப்பு அளித்த ஆறுமுகன், — பூக் களுலும் 43

இந்திர நீலோற்பலம் தந்து, ஏத்தும் புரந்தரனுக்கு
அந்தர நாடு ஆளும் அரசு அளித்தோன் — வந்து இரவி 44

தன் குலத்திலே பிறந்த தாசரதி செவியில்
மின் குலவு ஞானம் விரித்து உரைத்தோன், — பொன் குலவு 45

சேடனொடு வாசுகியும் சேர்ந்து தவம் புரிய
ஓடி அவர்க்கு அருளும் உம்பர் பிரான், — பீடு பெறு 46

தேவர் முனிவர் பெருஞ் சித்தர் எவரும் பணிய
மா வரங்கள் முன்னம் வழங்கினோன், — நாவின் மகள் 47

பூசித்து முப் பொழுதும் போற்றி வணங்கிடலும்
மா சித்தி வாழ்வு அருளும் வண்மையான், — வாசித்த 48

தந்திரி யாழ் நாரதனும் சார்ந்து தவம் புரிய
வந்து உரிய தோழமையால் வாழ்வித்தோன், — நொந்த 49

அகோரன் எனும் பெயர் கொள் அந்தணன் மெய் நீங்கா
விகாரந்தனைத் துரந்த வேலன், — சகோரம் 50

பல மருவும் இந்து எனப் பாங்கியர்கள் நாப்பண்
நலம் மருவும் வேடர்குல நங்கை, — நிலம் மருவு 51

செந்தினை காக்கும் புனத்தில் சென்று மடப்பாவை உத-
வும் தினை மாவும் தேனும் உண்டு, இதண் மேல், — வந்து 52

விருத்தக் கிழவனாய், வேங்கையாய், வேடர்
ஒருத்தர் அறியாது ஒளித்து, — 'வருத்தமுற்றேன், 53

தண்ணீர் அளித்தி' என, தண் சுனையைக் காட்டி, 'இதில்
உண்ணீர்' என, புனலை உண்டதற்பின், — பெண் நீர்மை 54

கண்டு, தரியாமல், 'காரிகையே பூவையே
ஒண்டொடியே தெள் அமுதே ஓதிமமே — வண்டு படர் 55

வல்லிக் கொடியே மயிலே குயிலினமே
கொல்லிச் சிலம்பியும் கை கூப்பியிடு — மெல்லியலே! 56

வேய்த் தேனைத் தந்து என் விடாய் தணித்தாய், கோவை-இதழ்
வாய்த்தேனைத் தந்து என் மயல் தீர்ப்பாய்; — வாய்த்த சுனைப் 57

பச்சிளநீர் காட்டிப் பசி தணித்தாய், பூங் கனகக்
கச்சு இளநீர் தந்து விரகம் தவிர்ப்பாய், — இச்சையுடன் 58

இவ் வேளையே' என்று இணையடியில் தாழ்ந்திடலும்,
அவ் வேளை கோவித்து அவள் நடப்ப, — செவ்வேளும், 59

முன்னவனை வெங் கரியாய் முன்புவரக் காட்டுதலும்,
அன்னவளும் அஞ்சி அணைத்திடலும், — பின் அவனும் 60

காளையாய்த் தன் உருவம் காட்டி, அவள் மருவி,
கோளை ஆர் சீறூர்க் குடிசையில் போய், — வாளை ஆர் 61

கண்ணுளை வேட்டுவர்கள் காணுமல் நள் இருளில்
நண்ணுர் தொழும் புயமேல் நன்கு ஏந்தி, — எண்ணுத் 62

திருடனைப் போல் கானில் திருடிவர, வேட
முருடர் எலாம் கண்டு முனிந்து, — கருடனெடு 63

மாறு கொளும் பாம்பினம் போல் மாய, அணங்கு அழலும்,
தேறி அவர் சோகம் தெளிவித்து, — வீறி வளர் 64

கல்லார வெற்பு அணைந்து கல்யாணம் செய்து, வரம்
எல்லார்க்கும் ஈந்தருளும் எம் பெருமான் — வில் ஆரும் 65

சூரன் கொடு போம் சுரர் வளம் எலாம் கொணர்ந்து,
சேரும் மணி நீலவரை சேர்வித்து, — யாரும் சொல் 66

சீ பூரண கிரியாய்ச் செய்தோன், சராசரத்து
மா பூரணமாக வாழ் இறைவன், — நீபன், 67

திரு நந்தி ஆறுஅதனில் சென்று ஆடினோர்க்குத்
திரு நந்தி வீற அருள் செய்வோன், — பெருகும் 68

சிவகங்கை தன்னைத் தெரிசித்தோர் தம்மைச்
சிவகங்கையான் உலகம் சேர்ப்போன், — நவம் ஆர் 69

சரவண தீர்த்தத்தில் எவர் சார்ந்து ஆடினாலும்
வர வண் நலம் ஈந்தருளும் வள்ளல், — பரவு 70

பிரம சுனை மூழ்கும் பெற்றியோர்க்கு என்றும்
பிரம-பதம் அளிக்கும் பெம்மான், — வரம் உதவு 71

விண்டு சுனை படிந்த மெய்யடியார் யாவருக்கும்
விண்டு பதவி அருள் மெய்த் தேவன், — குண்டுபடும் 72

இந்திர தீர்த்தம் கண்டோர் யாவருக்கும் மேலான
இந்திர-போகம் கொடுக்கும் எம் கோமான், — சந்ததமும் 73

சத்த முனிவர் தரும் சுனை ஏழும் படிந்தோர்
சித்தம் உற மெய்ஞ்ஞானம் தேர்விப்பான், — சுத்தன் 74

அகத்திய தீர்த்தம் படிந்தோர்க்கு அன்றே அவர்தம்
அகத்து இருளைப் போக்கும் அமலன், — மகத்துவம் சேர் 75

வாசுகி தீர்த்தம் படிந்து வந்திப்போர் யாவரையும்
மா சுகியாய் வாழ வரம் தருவான், — பூசை புரி 76

சேட தீர்த்தம் படிந்தோர் தேசம் புரந்திட, வி-
சேட பலம் உதவும் சீராளன், — பாடு அமரும் 77

சித்திக் குகை அதனைச் சேவிப்போர்க்கு அட்ட மா
சித்திப் பயன் உதவும் செங்கடம்பன், — முத்தி தரும் 78

திங்கள்தொறும் கார்த்திகைநாள் சென்று பணிவோர் எவர்க்கும்,
சங்கமருக்கு அன்னம் தருவோர்க்கும், — மங்குல் தொடு 79

மண்டபங்கள் அம்பலங்கள் மாமதில்கள் கோபுரங்கள்
தண்டலைகள் கூபம் சமைப்போர்க்கும், — புண்டரிக 80

ஓடை மடம் ஆலயங்கள் ஓங்கு திருவாபரணம்
ஆடை மணி ஊர்தி அமைப்போர்க்கும், — தேடரிய 81

காலை விழா, உச்சிக் கடும் பகலில் பூசை விழா,
மாலை விழாக் கட்டளைகள் வைப்போர்க்கும், — சோலை விழா 82

கார்த்திகையில் கார்த்திகைநாள் கற்பூர தீபவிழா
ஆர்த்திகை மிக்கே புரியும் அன்பினர்க்கும் — கீர்த்தி 83

பராவி மயில் கோழி பசு எருது தந்து
விராவிப் பணிவோர்க்கும், மேன்மேல் — தராதலம் சேர் 84

இன்பம் அறம் பொருள் வீடு என்னும் இவை நான்கு அருளித்
துன்பங்களை விலக்கும் சோதியான், — இன்பப் 85

புழுகு அணியும் மேனியின்மேல் பூச்சும் திருப்பூச்சு
எழு பிறவி தீர்மருந்து என்று ஈவான்,—செழுமலரோன் 86

கல் ஆர மாமலையான், கற்பகத்தான் ஏத்து திருக்
கல்லார மாமலையான், கற்பகத்தான், — செல் ஆர் 87

பரங்குன்று அலைவாயான் பாலனல்லார் தேக
பரம் குன்றலை வாயான் பாலன் — வரம் கொள் திரு- 88

ஏரகத்தான், எண் ஆவினன்குடியான் எப்பொழுதும்
ஏர் அகத்தான் எண் நாவில் நன் குடியான், — ஏர் ஆர் 89

அகம் குன்றுதோறு ஆடலானன், எனது என்
அகங் குன்றுதோறு ஆடலானன், — மகம் துன்று 90

சோலைமலை ஆதரித்த சுந்தரத்தான், என் பிறவி
வேலை மலையாது அரித்த வேதாந்தன், — சாலப் 91

பரு வேம் கடமுலையார் பாடல் அருது ஓங்கும்
திருவேங்கட மலை வாழ் சீலன், — உருவாம் 92

இருக்கு அந்தம் ஆதனமாய் ஏய்ந்ததுபோல் என்றும்
திருக் கந்தமாதனம் சேர் செல்வன், — உருக்கி 93

முதிர் காமத்தான் மயங்கும் மூடர் உளம் சேராக்
கதிர் காமத்தான், வடிவேற் கந்தன், — மதியாத 94

சூர் ஆவி சாகத் தான் தோன்றும் விசாகத்தான்
ஏராவிசு ஆகத்தான், ஏகத்தான், — சீர் ஆரும் 95

காந்தந்தனில் உறை ஏகாந்தன், பலவித உ -
காந்தன், வலாரிமகள் காந்தன், — காந்து மணி 96

வள்ளிக்கிரியினன், வள்ளிக் குழியில் எழும்
வள்ளிக்கு இசைந்தருளும் வள்ளியான், — துள்ளு 97

மயிலான், அயிலான், மை இல் ஆணை இலான்,
மயிலாணை இலான், மை இலான், — ஒயிலான், 98

திருமால் மருகன், திருமான் மருகன்,
வரு மால் மகவான் மருகன், — பெருமான் 99

உருவன் அருவன் உபயன் அபயன்
முருகன் முருகன் முருகன் — ஒருவன், உமை 100

சேய் ஆனன், தீயவர்க்குச் சேயானன், தன் உருவம்
சேயானன், தன் பெயரும் சேய் ஆனன், — தீ ஆனன், 101

விண் ஆனன், நீர் கால் விது இரவி ஆருயிராய்,
மண் ஆனன், அண்ட வகுப்பு ஆனன், — பண் ஆனன், 102

சாலம் இடம் திக்குக் கடும்பகல் இரா ஆனன்,
மேல் அமரும் தத்துவத்தின் மேலானன், — கோலும் 103

தனு கரண போகம் உயிர் சாரும் புவனம்
வினை பகுதி பந்தமொடு வீடாய்ப், — பினும் உலகை 104

ஆக்கிப் புரந்து அழிக்கும் அம் மூவர் ஆகி, அருள்
தேக்கிப் பேரின்பம் அருள் சிற்சொருபன் — ஊக்கி 105

உலகை வலமாய் நொடியில் ஓடிவரும் தண்டை
கலகலெனும் பொற்சதங்கைக் காலன், — திலக நுதல் 106

ஓர் ஆறு மா முகத்தான், ஓர் ஆறு சென்னியினன்,
ஈராறு கண் செவி கை ஏந்தினன், — ஓர் ஆறு 107

செவ்வாய் மலர் உடையான், செச்சை அணி மார்பு உடையான்,
ஒவ்வாத காலாயுதக் கொடியான், — தவ்வாத 108

ஆறு சமையத்தான், ஆறெழுத்தான், அண்டர் எலாம்
கூறு சமையம் பார்த்துக் கும்பிடுவான் — தேறு 109

சுருதி பல ஆகம நூல் தோன்றும் இதிகாசம்
மிருதி புராணம் தொடரா மெய்யன், — கருதும் 110

குறிஞ்சிக் கிழவன், குலாவும் வருடத்து
உறும் சித்திரைத் திருநாள் உப்பர் — புறம் சுற்ற 111

ஊழிக்கு ஒடியாது உயர்ந்த கொடிக் கம்பத்தில்
கோழிக் கொடி ஏற்றிக்கொண்டு, அதற்பின், — ஊழின் 112

குமாரதந்திரப்படியே கொண்டருளிப் பூசை
விமானம் முதல் வாகனங்கள் மீதே — த(ம்) மாதரொடு 113

வீதி உலாப் போந்து விளையாடும் நாள் ஒருநாள்,
சோதி உலாம் மாணிக்கத் தூண் நிரையின் — மீது 114

பவளத்தின் போதிகைமேல் பச்சை மணித் தூலம்
திவளுற்ற பொற்பலகை சேர்த்து, — தவள 115

மணிக் கொடுங்கை வைத்து, வளர் பளிங்கின் பித்தி
துணித்த மலர்மாலை தூக்கி, — பிணித்த திரு - 116

மண்டபத்தில் வந்து, மடங்கல்-தவிசு ஏறி,
விண்தலத்துச் சூரியன்போல் வீற்றிருந்து, — பண்டு 117

மருவு பொறியாய்ச் சுவற்றும் வண் கங்கை மாநீர்
திருவுருவில் காலும் திறம்போல் — மருவு மலர் 118

இந்திர தீர்த்தம் குடத்தில் ஏந்தி, மறையவர்கள்
மந்திரத்தினோடு மகிழ்ந்து ஆட்டி, — சந்திரனை 119

நூற்றுச் சமைத்தனைய நொய்ய திருஒற்றுடை -
யால் திருமெய் ஈரம் அகற்றியே, — போற்றும் 120

பருதிமிசை மேகம் படிந்ததென, கார்கள்
ஒரு வடவையைச் சூழ்ந்தது ஒப்ப, — பொரு இல் மக 121

மேருவின் மேல் கங்குல் விரிந்ததென, தந்தை கரி
ஈருரியைத் தான் போர்த்து இருந்ததென, — ஊரும் 122

மயில் நீலச் சாயை வளைந்ததென, நீலம்
பயில் தாது மேற்படிந்தது என்ன, — இயல் பார்க்கும் 123

பூமாதர் கண்கள் புதைந்ததென, வண்டினங்கள்
பூ மேனி என்று அணைந்த பொற்பென்ன — நாம் மேவு 124

செவ்வேளாய் நின்ற திறத்தை ஒருவி ஒரு
மைவேளாய் வேடம் கொள் மாட்சி என — நைவேள் 125

அழுகு கவர்ந்த செம்பொன் ஆகம் எலாம் பச்சைப்
புழுகு கமழ்ந்து ஒழுகப் பூசி, — இழிவு இல் 126

கடிசூத்திரத்தில் கௌபீனம் சாத்தி,
படி ஏழும் விற்கும் எழிற்பட்டை, — இடை சேர்த்தி, 127

அம் மூவர்க்கு ஆசான் என்று ஆய்ந்து குறி இட்டதுபோல்,
செம் மார்பின் முப்புரிநூல் சேர்த்து அணிந்திட்டு, — இம் மாதர் 128

மோகா விகாரத்தின் மூழ்கி மயங்கியிட,
ஏகாசம் தோள்மேல் இசைவித்து, — வாகு ஆன 129

ஆறு தலைமீதும் ஆறுதலையான் நுதற்கண்
வேறு பொறி படர்ந்து மின்னுதல்போல் — பேறு பெறும் 130

உம்பர்பிரான் பூசை உஞற்றி உவந்து அளித்த
செம்பொன் மணிமகுடம் சேர்வித்து, — பம்பு கதிர் 131

முந்நான்கு சூரியரும் முந்நான்கு வெற்பு உறல்போல்
முந்நான்கு தோள்மீது மோந்து அசைய, — முந்நான்கு 132

செஞ்செவியில் மாணிக்கம் சேர் மகர குண்டலங்கள்
அம் செவியது ஆக அலங்கரித்து, — நஞ்சு நுகர் 133

தந்தை நுதற் செங்கண் தனயன் நுதல் உற்றதுபோல் —
செந் திலதம் இந்துநுதல் தீட்டியே, — சந்ததமும் 134

மாயூர நாதன் என வாசுகி தந்திட்ட மணிக்
கேயூரம் பொன்தோள்-கிரிக்கு இசைத்து, — தேயாது 135

போர் புரிந்த சூரன் உடல் போக்கும் படைக் கரத்தில்
கார் புரிந்த நீலமணிக் காப்பு அணிந்து, — நீர் பரந்த 136

அண்டத்தானத்து இருக்கும் ஆரல் முலைப்பால் உண்ட
கண்டத் தானத்தில், கடுஞ்சூரன் — சண்டைதனில் 137

அஞ்சும் நவக்கிரகம் அண்டி ஒளித்தது எனத்
துஞ்சு நவரத்னத் தொடை புனைந்து, — நெஞ்சு அதனில் 138

ஆரல் முலைப்பால் இறங்க, அங்கை கொடு தைவரல்போல்
ஆர வடம் அசைய ஆங்கு அணிந்து, — தாரகனை 139

அட்டு, அரியின் சக்கரத்தை ஆகத்து அணிந்திருந்த
திட்டம் எனப் பொற்பதக்கம் சேர அணிந்து,—இட்டம் அருள் 140

கல்லார வெற்பன் எனக் கல்லார மாலையொடு
கல்லார மாலை பல கைபுனைந்து — மெல் ஆரச் 141

செச்சை புனைந்த திருமார்பில் நீபமொடு
செச்சை மலர் மாலிகையும் சேர்த்து அணிந்து,—கச்சு
[இறுக்கி, 142

வட்டுடையில் குற்றுடைவாள் வண்மைபெறச் செருகி,
பட்டுடையின் மேல் உதரபந்தனமும் — கட்டி, 143

வலது கணைக்காலில் வயங்கு கழல், வீரம்
சொலுவதுபோல் ஆர்ப்பத் தொடுத்து, — குலவு மறை 144

நான்கும் தனித்தனியே நண்ணித் துதித்திடல்போல்
வான் குலவு தண்டை மணிச் சதங்கை — கான் குலவு 145

சாம்பூனதத்து அடர் பொற் சங்கிலி பொன் நூபுரம் தாள்
பூம் பூனதமாகப் பூட்டியே, — ஓம்பும் 146

பிரணவத்தின் முப்பொருளும் பேதாபேதத்தால்
பரிணமித்து வீற்றிருக்கும் பண்போல் — கிரணம் 147

மருவா சிகைக் கூந்தல் மாதரொடும் கூடித்
திருவாசிகை இடையே சேர்த்து, — மரு ஆரும் 148

ஆறு சுவை அமுதம் ஆறு மனுவால் அளிப்ப,
ஆறு மலர்வாய்கள்தொறும் ஆங்கு அருந்தி, — நூறியிடும் 149

தக்கோலம் ஏலம் இலவங்கம் சாதிக்காய்
கற்பூரம் சுண்ணம் அடைக்காய் நுகர்ந்து, — பொற்பு ஆர் 150

பகலிடை முப்போது மலர் பைங்கழுநீர்ப் போதைத்
திகழும் வலச் செவிமேல் சேர்ப்ப, — மகிழ்வால் 151

அனல் தூப தீப ஆராதனையும் கண்டு
தனைத்தான் நேர் என்று உலகம் சாற்றும்—நுனித்த பொருள் 152

தன்னை அறிவித்திடல்போல், தன்சாயை மின்சாயை
தன்னை நிகர் ஆடிதனில் பார்த்து, — பன்னு திரு 153

நாவில் எழுதல் அன்றி நற்பனையின் ஏட்டு எழுதாப்
பூவில் எழும் அந்தணர் சொல் பொற்கவியும், — மூவர் எனும் 154

சம்பந்தர் அப்பர் சடையன் அருள் சுந்தரனுர்
எம் பந்தம் நீங்க எடுத்து இயம்பும் — செம்பந்தத் 155

தேவாரத்தோடு திருவாதவூரர் புகல்
மா வாரம் ஆன திருவாசகமும் — நா ஆரச் 156

சித்தர் புகன்ற திருவிசைப்பாவும், புகழ்ந்து
பத்தியுடன் ஓதும் திருப்பல்லாண்டும், — சத்தி 157

பதிந்த முனிவருக்குப் பண்பு ஆர் கயிலை
வதிந்த சனக்குமர வள்ளல் — முதிர்ந்த தவம் 158

செய்யும் தலம் இதுவே செப்ப அரிதாம் இதன் சீர்
ஐயம் இலை என்று அதன் பெருமை — மையல் அறத் 159

தேற்றி விடை கொடுப்ப, சென்று தவம் செய்தவர்கள்
போற்றும் தணிகைப் புராணமுடன், — சாற்றும் 160

அருணகிரி நாதன் அறைந்த பதினறு -
யிர கவிதை என்று உலகில் யாரும் — உரை புகலும் 161

தெய்வத் திருப்புகழும் செஞ்செவிகள் பன்னிரண்டின்
எய்தத் தனிக் கேட்டு, எழுந்தருளி, — வை இலைவேல் 162

அத்திரதேவைக் காவலாம் பரிசு முன் ஏவி,
சித்திரம் நேரான இரு தேவியரோடு — ஒத்து 163

மடைப்பள்ளி, யாகம் மருவியிடும் சாலை,
படைப் பள்ளி கொள் அறையும் பார்த்து, — கடைப்பள்ளி 164

யானைமுகன் தொந்தி அசைய முனம் நடப்ப,
கான முகவீணை கனிந்து இசைக்கும் — ஞான 165

முனிப் பாங்கன் கைலாகு முன் கொடுப்ப, நீதி
உனிப் பாங்கா மந்திரி தாழ்ந்து ஓத, — இனிப்பான 166

ஒன்பதின்மர் தம்பியர்கள் ஓங்கிய வாள் கேடகமும்
மென் கரம் கொண்டே அருகில் மேவி வர, — அன்பு உருவாம் 167

நந்திமுனி, ஓர் ஏழு நன்முனிவர், செந்தமிழைத்
தந்தமுனி அம் கை தலை கூப்ப, — கந்தர் அனு - 168

பூதி, அலங்காரம், புகழ் வகுப்பு, அந்தாதி கரத்து
ஓது கிளியாய் இருந்த உத்தமனும், — ஆதி முருகு - 169

ஆற்றுப்படை இயம்பி அங்கம் உறு வெங்குட்டம்
மாற்றிச் சுனைமுழுகு வண்கவியும், — தோற்றி என் பேர் 170

முட்டை என வைத்து முதிர் சுரத்தைப் பாடுகெனத்
திட்டமுடன் ஓர் வெண்பாச் செய்தோனும், — கிட்டி வர, 171

பூசுரரும், முப்போதும் பூசை புரி ஆதிசைவ
மா சுரரும், வீரமகேசுரரும் — மீசுரரும், 172

முன்னும் இருபுறமும் மொய்த்து நெருங்கியிட,
அன்னவரை வீரவாகு அண்ணலுமே — தன் இருகை 173

வெள்ளித்தடியால் விலக்கியிட, ஆலயத்தின்
உள்ளில் திருவலமாய் உற்றதற்பின், — புள்ளிப் 174

பசும் பொன் தசும்பு நிரை பாய் ஒளியால் மேகம்
விசும்பில் பசும்பொன் நிறம் மேவ, — அசும்பு புனல் 175

சந்திரகாந்தத்து அமைத்த சாளரத்தினூடு ஏகு
இந்து இரவி என்று நிலவு என்று உரைப்ப, — அந்தரம் சேர் 176

நீலக் கொடியின் நிழல் பாயும் தாரகைகள்
நீலமலர் வான் பூத்து நின்றதென, — மேல் ஆரும் 177

மாணிக்கத் தூண் ஒளியால் வானுறு பூ நாறும்
சோணத் திருநதியாய்த் தோன்றும் எழில் — பூணும் 178

திருக் கோபுர வாயில் சென்று, புறம் போந்து,
பெருக்கு ஓதைக் கங்கைப் பிராட்டி — இருக்கு ஓது 179

மைந்தன் வெயிலில் வருந்தாமல், வான் நிழல் ஆம்
விந்தை என வெண் குடைகள் மேல் நிழற்ற, — அந்த நதி 180

செங்கை இரண்டால் திருமேனி தைவரல்போல்
பொங்கு கவரி புடை இரட்ட, — துங்க மயில் 181

கண்டு தலை நடுக்கும் கட்செவிகள் போல, வளி
மண்டுறு சாந்தாற்றி மருங்கு அசைப்ப, — தண்டினுக்குக் 182

காவற் கொடியான் கடிது முனம் செல்வன் எனச்
சேவற்கொடி முனம் போய்ச் சேண் அளப்ப, — கா உற்ற 183

பொன் மலர்கள் வானோர் பொழிய, முனிவர் குழாம்
சொல்-மலர்கள் நாவால் சொரிந்து தொழ, — பல் மலரும் 184

ஏனோர் சொரிய, இசை தேவ துந்துமியும்
கான் ஆரும் வேடர் கருந் துடியும், — ஆனாத 185

சல்லரி, சச்சரி, தண்ணுமை, கைச்சதி,
மல்லரி, துத்தரி, மத்தளி, — சில்லரி, 186

ஆகுளி, பேரிகை, ஆனகம், வார் குழல்,
காகுளி, தாரைகள், காகளம், — நாகம், 187

முரசு, திமிலை, முருடு, முழவு,
பரசு, பதலை, படகம், — கரடியுடன் 188

மேகத்து இடி போல், விரியும் கனைகடல் போல்,
ஏகத்துவமாய் எழுந்து ஆர்ப்ப, — வேகத்தில் 189

தானவரை முன்னம் தடிந்த முருகோன் வந்தான்,
வானவரைக் காத்திடும் சீமான் வந்தான், — தான தன்மம் 190

செய்யாதவரிடத்தில் சேராதவன் வந்தான்,
மை ஆரும் நீலமலையான் வந்தான், — நெய் ஆரும் 191

வேலாயுதன் வந்தான், வென்றிக் கொடி படைத்த
காலாயுதத் திருக் கையான் வந்தான், — மால் ஆகி, 192

வந்தாரை வாழ்விக்கும் வள்ளல் குகன் வந்தான்,
மந்தாகினிக்கு மகன் வந்தான், — கொந்து ஆரும் 193

செச்சைத் தொடை புனைந்த செவ்வேள் இதோ வந்தான்,
பச்சைமயில் ஏறும் பரன் வந்தான், — வச்சிரத்தின் 194

கோமான் மகட்கு இசைந்த கோமான் வந்தான், குறவர்
பூமான்தனைப் புணர் பூமான் வந்தான், — பூமேல் வாழ் 195

வேதன் இரு காலில் விலங்கு இட்டவன் வந்தான்,
சூதம் எறி சுந்தரன் வந்தான், — போதம் 196

மருவு தணிகேசன் வந்தான் வந்தான் என்று
விரவு திருச் சின்னம் விளம்ப, — வரம் உதவும் 197

ஐங்கரனும் மூடிகம் மேல் ஆக, மலைமாதினொடு
சங்கரனும் மால் விடைமேல் தாள் ஊன்ற, — பொங்கு அரவப் 198

பள்ளி கருடன்மிசை பாய்ந்து ஏற, நான்முகனும்
வெள்ளிய அன்னமிசை ஏற, — உள்ளும் 199

கருங் காரி யானை கசிந்து ஏற, சூலத்து
இருங் காரி ஞாளிமிசை ஏற, — மருங்கு ஆரும் 200

வச்சிரத்தோன் வெண்கரியின் மஞ்சு ஏற, காந்து சுடி -
கைச் சிரத்தோன் ஆட்டில் களித்து ஏற, — பச்சிரத்தம் 201

உண்ணும் கொடுங் கூற்று உவந்து எருமைப்போத்து ஏற,
எண்ணும் நிருதி எழிற் சிவிகை — நண்ணியிட, 202

நீரிறையும் காற்றிறையும் நீள் வான் மகரத்தும்
ஓர் இரலைக் கண்ணும் உவந்து ஏற, — பேர் இறைவன் 203

தோழனுடன் ஈசானன் துன்னு மலர்ப் புட்பகத்தும்
கோழ் எருத்தின்மீதும் குனித்து ஏற, — கேழ் அலரி 204

வெண்மதியம் போல் தேர்-விமானமிசை ஏற,
தண் முனிவர் ஓர் ஏழு சப்பரத்தின் — கண் அமர, 205

காளி எருமைக் கடாவில் உகந்து ஏறிட, எண்
தோளி வயச் சிங்கத்தின் தோள் ஏற, — நீள் ஒளிய 206

பொன்னின்வரை அடியில் பூந்தட்டோ, ஆதித்தர்
பன்னிருவர் பன்னிரண்டு பண்டியோ, — துன்னி 207

நெடு மால் பலஉருவாய் நின்ற நிலைதானோ,
படுநீலத் தூண் நிரையின் பந்தி — கடி ஆரும் 208

கற்பகமோ, தூண்மேல் கவி கிடுகு கூவிரம்தான்
பொற்பு அகம் சேர் மின்கொடியோ, பொன்கொடிகள் —
[அற்புதம் சேர் 209

தேவர் உணவு அமுதம் சேர்த்துவைத்த பொற்குடமோ,
மா வருணத் தேர்மீது வைத்த குடம் — தாவு அருணன் 210

தூண்டும் பரியோ, தொடங்கும் பசும் புரவி
மாண்ட அனந்தனெடு வாசுகியோ, — நீண்டவடம் 211

என்ன உவமை இயம்பு மணித் தேர்மேல்,
கன்னியரும் தாமும் கலந்து ஏறி, — கின்னரரும் 212

சித்த விச்சாதரரும் சேர் கருட காந்தருவ
நித்தியரும் மொய்த்து நெருங்கிவர, — மெத்தும் 213

இரண்டாயிர வெள்ளம் என்று உரைக்கும் பூதம்
திரண்டு ஆயிர முகமாய்ச் செல்ல, — முரண் தாவும் 214

நூருயிரமாய் நுவலும் படைத்தலைவர்
வேறு ஆயுதங்களொடு மேவிவர, — பேருன 215

விண்ணோர் ஒருபால் விரவி வடம் ஈர்ப்ப,
மண்ணோர் ஒருபால் வடம் ஈர்ப்ப, — பண் ஆர் 216

நரம்பின் இசைப்படியே நாடகத்திற்கு ஏற்ற
அரம்பை முதல் நால்வர் எதிர் ஆட, — நிரம்பும் 217

அகில்-தூமம் சாம்பிராணி ஆவி சரற்கால
முகில்-தூமம் போல் திசைகள் மூட, — செகச் சோதிக் 218

காடை விளக்கும் கற்பூர தீபமும் பொன்
ஆடை விளக்கும் அணி விளக்கும் — நீடும் 219

பருதி விளக்கம் பகல் விளக்கது ஆக,
துரகதத்தை வாயுவிறை தூண்ட, — திரு மறுகில் 220

## குழாங்கள்

செல்ல, அயன் மால் திருநாட்டுப் பூவைமார்
கல் அவிர் செஞ்சூட்டு உரகக் கன்னிமார் — நல் இசையாழ் 221

கந்தருவ நாட்டு உறையும் காரிகையார், மேருமுடி
நந்து உருவ நாட்டில் உறை நங்கைமார், — முந்து உருவ 222

விஞ்சையர் நாட்டிற்கு இசைந்த மின்னுர், எழில் இயக்கர் -
தம் சய நாட்டில் சிறந்த தையலார் — கொஞ்சும் 223

அளகாபுரி வாழும் ஆயிழையார், இன்பம்
உள காவில் பொற்கொடி நேர் ஒப்பாம் — இளையார் 224

மலை ஆர் முலையார், மலையார் முலையார்
அலை ஆர் முலையரர் அவிர் பூ — நிலையார் 225

உரு விழாது எய்தி, உலகு உலாப் போந்தோன்
திருவிழாக் காணத் திரண்டு — கரு விழா 226

வேதாவைக் குட்டி, விலங்கு இருகால் இட்டது என்ன
ஓதாய் எனத் திரண்ட ஓதிமமோ! — நீதானே 227

நாம் உற்ற சூதத்தை நன்று அழித்தது என் என்று
தாம் முற்றும் சூழ் குயிலின் தன்னினமோ! — காமுற்று 228

வாழும் ஒருதெய்வ மடப்பிடிபோல் வந்து அணையச்
சூழும் பிடிக்குலத்தின் தோற்றமோ! — தாழும் 229

புன மான் மருகன் புனை எழிலைக் காண
வன மான் எலாம் செறிந்த மாண்போ! — தினமானம் 230

முப்போதும் பைங்குவளை முப் போதும் வீசு மணம்
தப்பாது சூழ் அளியின் சங்கமோ! —'எப்போதும் 231

நம் இனத்தில் ஒன்று ஊரும் நாயகனைக் கண்டு அணைவோம்,
வம்மின்!' எனக் கூடும் மயிலினமோ! — அம் மதிபோல் 232

தேயாத ஆறுமுகத் திங்களைக் கண்டு ஓடிவரும்
வீயா நிலாமுக்கி மெல்லினமோ! — 'மாயாப் 233

புகழ் ஓதும் ஓர் கிளியைப் போல் எமையும் காத்தால்
இகழ்வு ஏது?' எனக் கிளிகள் எல்லாம்—மகிழ்வு ஆகிச் 234

சேர்ந்த திறமோ! திரைப் புயங்களாம் வரைமேல்
சார்ந்து படரக் கொடிகள்தாம் சூழுமி — வார்ந்து எழுந்த 235

சீரோ! மை வேள் அழிந்தான் செவ்வேள் இவன் எனச் சூழ்
கார் ஓதி வாய்ந்த கருங் கட் படையோ! — நேர் ஆகும் 236

என்ன நிலைத்தேர்மேல், எழுநிலைக் கோபுரமேல்
வன்னமணி வாகனம் ஆம் மண்டபமேல் — உன்னதம் சேர் 237

மேலைத்திரு மதில்மேல் வெண் பளிங்கு மாளிகைமேல்,
காலைத் தரு நீலக் கற்படிமேல் — மாலை தொடர் 238

பூங்காவனத்தில், புதுநிலா முற்றத்தில்,
ஓங்கு ஆவணத்தில், உயர்கிரியில் — பாங்கு ஆன 239

அம்பலத்தில் சூழிகையில், ஆடரங்கில் பாடரங்கில்
வம்பு அலரும் செய்குன்றில் வந்து ஏறி — உம்பர்பிரான் 240

தாளும் மணிக்குறங்கும் சண்முகமும், பன்னிரண்டு
தோளும் கடம்பும் துவர் இதழும் — நீளும் 241

கருணை பொழி பன்னிரண்டு கண்ணும், செவியும்,
அருணமணிக் குண்டலம் ஈராறும் — கிரணம் உறு 242

கையாறு இரண்டும், கடம்பு அணி முந்நூல் மார்பும்,
வை ஆரும் செங்கை வடிவேலும் — துய் ஆரும் 243

செம்பட்டு உடையும், தெரிசித்தார் மன்மதன் பூ
அம்பு அட்டு உடையும் மனமாய் எழுந்து — கும்பிட்டு 244

யாதும் கொடாதவரே ஆயிடினும், அம்பொன் மலர்த்
தாது உடையார் தம்புறம் போய்ச் சார்ந்துவிடார் —
[ஆதுலர்கள் 245

என்னும் முறைபோல் எழுந்தெழுந்து வண்டினங்கள்
துன்னும் மலர்க்குழல் மேல் சூழ்ந்து இரைப்ப — பன்னிருகைச் 246

சேந்தன் உருவைத் தினகரன் என்று அஞ்சி, இருள்
சோர்ந்ததுபோல் வார்குழல் பின் சோர்ந்துஅலைய — வேந்தன் 247

புயவரைகள் மீது ஏற, பொங்கும் கரிபோல்
குயவரைகள் மார்பில் குலுங்க, — இயவர் எலாம் 248

மா கலைகள் வல்லவனை வாழ்த்தி வியந்திடல்போல்
மேகலைகள் சத்தம் விரவியிட, — 'கேகயனைக் 249

கட்டி அணைமின் !' எனக் கைகளுக்குச் சொல்லுவபோல்
இட்ட வளைகள் இனிது ஒலிப்ப, — 'வட்ட நிலத்து 250

எம் பெயர் கொள் வெற்பிற்கு இறைபால் செலும் செலும்' என்று,
அம் பரிபுரம் காலில் ஆர்ப்பரிக்க, — செம்பொன் மணித் 251

தேர் எதிரே ஓடி வந்து தெண்டனிட்டார் ; மஞ்ஞை எலாம்
கார் எதிரே கண்டது எனக் காதலித்தார் ; — 'யார் எதிரே 252

ஒப்பாவார் ? இங்கு இவர்க்கு' என்று ஓதுவார் ; 'பொன்வளைகள்
கைப் பாவாது' என்று கழறுவார் ; — 'குப்பாவை 253

கொண்டாள் கலை' என்பார் ; 'கோதை வடிவேலர் தமைப்
பெண்டு ஆள்கிலார்' என்று பேசுவார் ; — 'கண்டாளோ 254

மாயக் குறத்தி ? மயல்மருந்து இட்டாளோ ? நம்
காயக் குறத்து இக்கார்காண் !' என்பார் ; — 'சேயோன் 255

மலையை மறைத்து, வளர் புதர்போல் துத்தி
முலையை மறைத்தே மூடிற்று' என்பார் ; — 'சிலையை ஒரு 256

பெண் ஆக்கும் மாயன் பெருமருகரே! உடம்பைப்
புண்ணுக்கும் காமத்தீ பொல்லாதே! — விண் ஆக்கும் 257

வண் தணிகைமேல் வாழ் வணிகரே! சோர்ந்து ஒழுகும்
வண்டு அணி கை ஏறும் வகை உரையீர்! — வெண்டு அமரும் 258

கொன்றைக் குழலுக்கும் கொல் ஏற்றின் மா மணிக்கும்
இன்றைக்கு உழலும் எமக்கு அருளீர்! — துன்று வஞ்சக் 259

கொக்கை இரண்டாய்ப் பிளந்தீர்! கூவுகுயில் வாழும் இந்தக்
கொக்கை இரண்டாய்ப் பிளந்தால் குற்றமோ? — மிக்க 260

கொலை அசத்தின் வீறு அடக்கிக் கொண்டீர்! எம்மேல் பாய்
மலையசத்தின் வீறு அடக்கமாட்டீர்; — தலை அடித்துக் 261

கோ வேதனை அடக்கும் கொற்றவரே! மைத்துனன் எய்
பூ வேதனை அடக்கப் போகாதோ? — தூ வேலால் 262

அன்று கடல்நீர் அனைத்தும் சுவற்றிவிட்டீர்!
இன்றும் சுவற அயில் ஏவிடீர்! — நன்று தெய்வ 263

யானை அணை ஆகத்தரானீரே! எங்கள் முலை -
யானை அணை ஆகத்தராம் நீரே; — கானில் 264

குறமானை நீர் புணரக் கும்பிட்டீர்! எங்கள்
மறமானை நீர்புணர வந்தீர்; — திறமான 265

ஆறு தலை உடையீர்! அன்போடு உமைப் பணிந்தால்,
தேறுதலை எமக்குச் செப்பிடீர்! — கூறும் 266

இரு மாதரை ஆள்வீர்! இன்று நுமை வேண்டி
வரும் மாதரை ஆளமாட்டீர்; — குரு ஆரும் 267

நீலத் தார் பேரின்ப நேயர் அல்லால், சிற்றின்பக்
கோலத்தார் தாம் அணையக்கூடாதோ? — மாலைக் 268

கடம்பு அணி ஆம் மார்பில் எமைக் காதலித்துக் கூடும்
இடம் பணியாது ஏகல் இயல்போ? — தொடர்ந்த 269

எமக்கு அல்லவாம் என்று இசைத்திடீர் என்பார்,
தமக்குள்ளே தாம் புகல்வதானார். — கமைத் தவத்தால் 270

விண்ணில் ஒருத்தி இன்பம் மேவி இடப்பால் உற்ருள்,
மண்ணில் ஒருத்தி மகா தவசு — பண்ணி 271

வலத்திருந்தாள், ஆதலின் இம் மண்மாதரே பெண்
நலத்து உயர்ந்தார், வெற்றி நமது என்பார்; — நிலைத்த தவம் 272

## பேதைப் பருவம்

செய்யகிலோம் அன்று என்பார்; செய்யகிற்பாம் இன்று என்பார்;
மையல் உரை பற்பல சொல் மங்கையருள் — ஐய! சிலர் 273

பாரார் உனை என்பார்; பார்த்தார் எனை என்பார்;
சீர் ஆர் துறவறத்தைச் சேர்ந்தவர்போல் — ஏர் ஆர் 274

கலை துறந்தார்; பூ மறந்தார்; காவல் எனும் நாணின்
நிலை துறந்தார்; ஐ அறிவும் நீத்தார்; — விலை சிறந்த 275

சங்கம் துறந்தார்; சடை ஆம் குழல் விரித்தார்;
அங்கம் எலாம் முத்து அணி நீறு ஆயினர்; — அங்கு அவன்கைச் 276

சத்தி பதிந்து, ஒத்த வினை சார்ந்து, பரிபாக
முத்தி அறிந்தோம் என வாய் மூடினர்; — குற்றி என 277

நின்ருர் பரவசமாய்; நீலமயிலோன் உருவத்து
ஒன்ருகினர்; இவருள் ஓர் பேதை — மன்றல் புரி 278

மாரன் சிலைக்காய் வளரும் இளங்கரும்பு,
நாரிக்கு ஆகாத இள நல் சுரும்பு, — நாரியிடை 279

பூட்டற்கு இணங்காத பூந்தாமரை அரும்பு,
வாட்டு குடைக்கு ஆகா மதிக்குழவி, — ஈட்டுபுகழ் 280

கூற விருது ஊதாத கோகிலத்தின் மென் பிள்ளை,
ஏறு பரி ஆகா இளங்கிள்ளை, — வீறு மதன் 281

தேருக்கு இசையாத தென்றல் சிறுகொழுந்து,
மார்பில் புனையா மருக்கொழுந்து, — வீரிய வேள் 282

வெற்றிக் கொடிக்கு ஆகா மென் பூங் கொடிக் குருத்து,
பற்றிய வாள் தீமை இலாப் பார்வையாள், — மற்று அவன்பால் 283

நெஞ்சுள் இருந்தே சூதின் நேர்மை எலாம் கற்பனபோல்
வஞ்ச முலை மேல் தோன்ரு மார்பினள், — அஞ்சப் 284

பெடை போல் நடை இலாப் பெட்டை இள அன்னம்,
இடையே அவன் உருவம் என்பாள்; — படை மதனன் 285

ஊரும் கரியாக ஓங்கு இருளைக் கூந்தல் என
வாரி முடிக்க வருந்துவாள்; — காரின் 286

ஒழிந்து முளைக்கும் மயில் ஒண் முருந்தை ஒப்ப
விழுந்து முளைத்திடு வெண் பல்லாள்;—தழைந்து ஒளிர் விண் 287

தாரகை வெண் மல்லிகைப் பூத் தான் பறித்துத் தாரும் எனச்
சீரிய தாய்மார்பால் சிணுங்குவாள்; — 'சீரிய கண் 288

ணுடி மதியைப் பிடித்து என் அங்கையில் தந்தாயில்லை,
ஏடீ! நிழற்பாவை!' என்று அழுவாள்; — வேள் தன் 289

விதி ரசத்தைக் காணுத மென் கனிவாய் முத்தம்
அதிரசத்தை ஈயும் அனைக்கு ஈவாள்; — சிதர் அரி சேர் 290

கண் ஒன்று பார்க்க, இரு கை ஒன்று செய்ய, மொழிப்
பண் ஒன்று பேசும் பருவத்தாள்; — விண் ஒன்றும் 291

மின்னல் சிறுகொடி போல் மேனியாள்; பால் ஒழுகும்
கன்னல் குதலைக் கனிவாயாள்; — வில் நுதலாள், 292

பூமேல் நடந்து அறியாப் பொன் பதத்தாள்; அன்னையர் சொல்
நாமேல் நடக்கும் நடையினுள்; — மா மாயக் 293

கள்ளம் அறியாக் கருத்தினுள்; காமசரம்
எள் அளவும் பாயா இயல்பினுள்; — எள்ளாது 294

அடிக்கடி சிற்றுடை அவிழ்ந்து அவிழ்ந்து வீழ,
எடுத்து எடுத்துக் கையால் இறுகப் — பிடித்து, இரண்டு 295

காலில் சதங்கை கலகலென, கைவளைகள்
ஆலிக்க, பேதையரோடு ஆங்கு அணுகி, — நீலவரைச் 296

சாரல் உறு நீல மணிதன்னுல் அடுப்பு அமைத்து,
வேரல் அரிசி கரி வெண் கோட்டால், — பேர் அறைமேல் 297

குற்றி, இளம் வேயின் கொழுங்கண் உகும் பாலை எனும்
முற்றில் நிறைய முகந்து எடுத்து, — பற்றி இரு 298

கையால் கொழித்து, கரி உண் விளங்கனியின்
மெய் ஆம் குழிசி நிறை வேய்த்தேன் உட் — பெய்யா, 299

அகிலின் விறகு அடுக்கி, அங்காந்த காந்தள்
முகிழ் எனும் செந்தீ வளர மூட்டி, — மிகவும் முதிர் 300

காய்க் குரவம் பாவைதனைக் கல்யாண மாப்பிளையாய்
வாய்ப்புறவே வைத்து, மலர் சூட்டி, — தேய்த்த செச்சை 301

பூசி, திரு மார்பில் பொய்தல் மகளிர் பலரும்
நேசித்துச் சோபனங்கள் நேர் இருந்து — வாசித்து, 302

தாலி கட்டும் வேளையிலே தண்டை சிலம்பு அசைய,
மாலை கட்டு நீபமலர் மார்பு அசைய, — மால் அளித்த 303

மாதர் இருவர் மருங்கு அசைய, ஆதபரைக்
காது மணிக் குண்டலம் சேர் காது அசைய, —சோதி ஒளிர் 304

வாகுவலயத் தோள் வரை அசைய, நீலநிற
மாகு வலையம் காதில் வாய்ந்து அசைய, — சேகின் 305

மருத்து அணி காசலத்தான் மன்னு சுனை வீறும்
திருத் தணிகாசலத்தான் தேர் வந்து, — ஒருப்படலும், 306

செஞ் செவிலித்தாய்மார் திருமுன் பணிவித்தார்;
தம் சுவலின் ஏற்றி எதிர் தாம் அணைந்தார்;—'எம் செவிலி! 307

யார் என்றாள், இத் தேரில்,' 'அன்னமே! செட்டி இவன்
பேர்' என்றாள்; அப்பொழுது அப் பேதையும்தான் —'சீர் ஒன்று 308

செட்டியே ஆமாகின், தின்ன அவலோடு கன்னல் -
கட்டி வாங்கிக் கொடு' என்று கண் பிசைந்தாள்; —
['பட்டி வள்ளி 309

கைவளையல் ஏற்றி, இரு காலில் வளைந்து ஏற்றி,
மை வளையும் நெஞ்சம் மயல் ஏற்றி, — வெய்ய 310

இருட்டு விடியாமுன் இனத்தவர் காணுமல்
திருட்டு வியாபாரம் செய் செட்டி — வெருட்டி ஒரு 311

வேடுவனாய் ஓர் புலவன் வெண்பாவைக் கைக்கொண்டு
கோடு திரியும் குறச் செட்டி, — பாடா நற் 312

கீரனைப் பூதத்தால் கிரிக்குகையுள் கற்சிறை செய்து
ஓர் அரிய பாவை உகந்து அணைந்து, — கீரனுக்கு 313

வீட்டுவழி காட்டியிடும் வேளாண்மையாம் செட்டி,
ஆட்டில் உவந்து ஏறும் அன்னதான செட்டி, — ஈட்டு புகழ் 314

தேவேந்திரன் மகள்பால் சிந்தை குடிகொண்ட செட்டி,
நாவேந்தர்க்கே இன்பம் நல்கு செட்டி, — பூ ஏந்திக் 315

கண்டு பணிபவர்தம் காசு பறிக்கும் செட்டி,
பண்டு அறுவர் ஊட்டு தனபால செட்டி, — தொண்டர் 316

மதுரையில் சொக்கப்ப செட்டி மைந்தன் இளஞ் செட்டி,
குதிரை மயில் ஆம் குமர செட்டி, — சதிருடனே 317

சீவ பர ஐக்கியம் செய்திடு கந்தப்ப செட்டி,
மூவர் வணங்கு முருகப்ப செட்டி, — பாவனைக்கும் 318

அப்பாலுக்கு அப்பால் ஆம் ஆறுமுக செட்டி, இவன்
தப்பாமல் கண்டால், உன் தன்னை விடான்; — இப்போது எம் 319

வீட்டில் அவல் வெல்லம் வேணது உண்டு, வா' எனச் சீர் -
ஆட்டி அன்னைமார் அகம்புகுந்தார்; — பூட்டிய வில் 320

நாணை அறுத்து, மதன் நல் கரும்பைத் தன் உருப்போல்
காணத் தெரியாமல் காப்புறுத்தான்; — பூண் அவன் தேர் 321

அவ் வீதி நீங்கி அடுத்தது அயல் வீதி;
இவ் வீதியில் ஓர் எழில் சிறுமி, — அவ் வீதி, 322

## பெதும்பைப் பருவம்

பேதைக்கு மூத்தாள், பெதும்பைப் பருவத்தாள்,
காதைப் பொருவும் கயல் விழியாள், — மீது வரும் 323

மங்கைக்கு இளையாள், மலர்மாது எழிற்கு இளையாள்,
செங்கைக் கிளையாள், செழுங்கிளையாள், — இங்கிதங்கள் 324

பேசும் மொழியாள், பிரச மணம் தாது பொதி
வாச முகையின் வளமொழியாள், — ஊசல் 325

குதம்பை அணியும் காதாள், கோலமும் நீங்காதாள்,
நிதம்பம் அணியும் நெடுங்காதாள், — இதம் பெருகு 326

காமக் கலவி நலம் காரிகையார் பேசுதொறும்
சேமச் செவி நிறையத் தேக்கிடுவாள்; — பூ முடிக்க 327

எட்டா மயிரோடு எதிர்ப்பைக் கவரிமயிர்
கட்டா முடித்த கருங் குழலாள்; — கட்டு இளைஞர் 328

திட்டிப் பார்வைக் கணிக்குள் சிக்கினதும் சிக்காதும்
எட்டிப் பார்க்கத் தலைமேல் ஏய்ந்தது என, —
[கொட்டைப் பாக்கு 329

என்ன, மதன் ஆடுறும் சூது என்ன, இணைக் கோங்கு அரும்பு ஈது
என்ன உரம் தோன்றும் இளமுலையாள்; — அன்னையர்கள் 330

கற்றுக் கொடுத்தது அன்றிக் கற்பனை ஒன்றும் தெரியாள்,
எற்றுக்கும் சற்றே நாண் எய்துவாள்; — 'பொற்றொடியீர்! 331

பூ அம்பு வாட்டுவது பொய்யோ, மெய்யோ?' என்பாள்;
மா வம்பு கொண்ட முலை வம்பு அணிவாள்; — நா வம்பு 332

பன்னும் இளங்காளையர்கள் பார்வை அளி இதழ்த்தேன்
துன்னு தரம் பார்க்கும் துவர் வாயாள்; — வன்னக் 333

குயிலொடு மாறாக எதிர் கூவுவாள்; சாரல்
மயிலொடு மாறாய் நடிக்கும் மாண்பாள்; — பயிலும் இள 334

அன்னத்தைப் போல் நடத்தற்கு ஆதரிப்பாள்; அன்னையர்கள்
சொன்னத்தைப் பைங்கிளிக்குச் சொல்லுவாள்; —
[சொன்ன மணிக் 335

குன்றத்தில் ஏறும் குலமயில் போல், செம்பொனின் செய்
குன்றத்தில் ஏறி, குயிற்று மணி — மன்றத்தில் 336

வந்திருந்து, பூவையர்கள் வாரிதி சூழும் தீவில்
தந்த மணிக் கழங்கு ஏழ் தந்திடலும், — முந்தி இவள் 337

ஒன்று என்று நாளும் உலகோர் வினை தீர்க்க
நன்று வரு நந்தி நதி பாடி, — என்றும் 338

இரண்டு என்று வள்ளி தெய்வயானை மணம் செய்யும்
திரண்ட விழா இரண்டும் செப்பி, — தெருண்டவர் சொல் 339

மூன்று என்று நாள்தோறும் முப்போதும் முப் போது
தோன்று மணி நீலமலர் சொல்லியபின், — தேன் துளும்ப, 340

நான்கு என்று வானவர்கள் நாளும் வலம்புரியும்
நான்கு பிரகார இயல் நன்கு இயம்பி, — கான் குலவும் 341

ஐந்து என்று வீராட்டகாசன் திருமுகங்கள்
ஐந்து நிலையும் அறிந்து இயம்பி, — சந்ததமும் 342

ஆறு என்று அனுதினமும் அன்பர் செபம் செய்து, கரை
யேறும் எழுத்து ஆறும் இனிது உரைத்து, — கூறரிய 343

ஏழ் என்று சத்த இருடிகள் உண்டாக்கியிடும்
ஏழு சுனையின் எழில் இயம்பித் — தாழும் 344

குழல் ஆட, கைவளைகள் கூட விரைந்து ஆட,
கழல் ஆடிப் பாடியிடும் காலை, — அழலாடி 345

மைந்தன், அந்தன், இந்து, அனந்தன் வந்தனம் செயும் சுகந்தன்,
தந்தனந்தமும் தெரிந்த சந்தன், அந்தன், — கந்தன் 346

அரி கூட, சாரல் உறும் ஆனையும் கெர்ச்சிக்கும்
திரிகூடச் சாரல் உறும் தேவன், — வரி கூடும் 347

இந்தீவரத்தான், இருந் தீவரத்தார்க்கு
வந்து ஈ வரத்தான், வரத்தான் தேர் — முந்து ஓடித் 348

தெண்டனிட்டாள்; அண்ணல் திருவழகு எலாம் பார்த்தாள்;
மண்டனிட்டு ஆபாவ மயல் அகற்றும் — புண்டரிகக் 349

கைக் கிளியைப் பார்த்து வெகு காதலுடன், 'அன்னைமீர்!
இக் கிளியைத் தாரும் எனக்கு' என்றாள்; — 'அக்கிளிதான் 350

வில்லிபுத்தூரான் செவியின் மேல் அரிவாள் பூட்டி அன்று,
வல்லபத்தின் வாது வென்று வந்ததுகாண்; — பல்லவையுள் 351

மற்றொருவன் வாது வென்று வான் பாரிசாதப் பூக்
குற்றம் அற மண்மேல் கொணர்ந்ததுகாண்; — வெற்றிப் 352

பிரபுட தேவக் குரிசில் பேணி எதிர் காண
முருகன் மயில்மேல் முடுகி, — வரவழைத்து 353

வந்ததுகாண்; செவ்வேள் வரிசை அலங்காரம் முற்றும்
தந்ததுகாண்; பேரின்பம் சார்ந்ததுகாண்; — எந்தை பிரான், 354

'முத்தித்திரு' என்னும் முன் பதினாறு ஆயிரமாம்
பத்தித் திருப்புகழைப் பாடுங்காண்; — சித்தி எட்டும் 355

கற்றது காண்; நந்தம்மைக் கண்ணாலும் பாராமல்
உற்றது காண்; சிற்றின்பத்து ஓர் உறவும் — அற்றது காண்; 356

நாம் உரைக்கும் வார்த்தைகளை நற்செவி கேளாதிருக்கும்;
'ஓம்' உரைக்கும்; பூதியும் கண்டு உற்றிருக்கும்; — தோம்
[உரைக்கும் 357

மற்றைக் கிளிபோல் வசப்படாது' என்று உரைத்துப்
பற்றிக் கொடுபோனர் பாவைதனை; — கொற்றவனும் 358

கண்டு முறுவலித்தாற் போலக் கதிர்த் தேரைத்
தண்டின் செலுத்தினர்; சம்பு அரனைப் — பண்டு வலி 359

சாய்த்த மதவேளும் தன் கிளித் தேரைத் தூண்டி,
கோத்த மலர் ஏவாமல் கொண்டு அணைந்தான் — மீத் தெருவில். 360

## மங்கைப் பருவம்

மற்றொருத்தி மங்கை; வயது பதினொன்று உடையாள்;
கற்று ஒருத்திக்கு ஓதும் கலை உணர்ந்தாள்; — உற்று இளைஞர் 361

நோக்கும் குறிப்பு உணர்ந்து, நோய் கொண்டு அலைய எதிர்
தாக்கும் விடப்பார்வை தான் அறிந்தாள்; — வீக்கியிடும் 362

வீணை அவசுரமாய் விட்டு நலிந்தது என்றும்,
கோணமலைத் தேன் புளிப்புக் கொண்டது என்றும், — காணும் 363

கனியின் இரதம் கலக்கமுறும் என்றும்,
இனி அமுதம் பால் விளர்த்தது என்றும், — பனி இரதக் 364

கன்னலும் கோது ஆம் என்றும் கற்றவர்கள் இம் மங்கைச்
சொல்நலம் ஒப்பு இல்லை எனும் சொல் உடையாள்; —
[வன்ன இதழ்க் 365

கோவைக்கு அனியாயம் கொள்ளாதிருப்பது இந்தப்
பூவைக் கனி ஆயம் போலும் என, — சேவை செயும் 366

காமாதுரகர் எலாம் கட்டுரைக்கும் செவ் அதர
பூமாது, உரக படம்போல் நிதம்ப — மா மாது, 367

மட்டில் சிறந்த மலரும் இளைஞோர் உயிரும்
கட்டிச் செருகும் கருங்குழலாள், — வெட்டி எறி 368

வட்டுக்கு உவமைதனை மாற்றி, வளர் தாமரையின்
மொட்டுக்கு நேர் ஆம் முலையினள், — கொட்டு துடி 369

மின் அம் பிடி எனவே மேவு கொடி மெல் இடையாள்
அன்னம் பிடி எனவே ஆம் நடையாள்—கன்னியர்க்கு ஆம் 370

நாணும் மடமும் அன்னை நல்கு பயிர்ப்பு அச்சமும் போல்
பூணும் அகலாமல் பூண்டிருப்பாள், — வாள் நிலவைக் 371

கட்டிப் பிடித்ததுபோல் கையில் மணிப் பந்தை
முட்டிப் பிடித்து இளைஞர் மொய்த்துவர,—மட்டு அவிழ் பூஞ் 372

சந்தனப் பூங் காவகத்தில் தாயத்துடன் ஏகி,
தம் தனத்தைத் தாங்கும் இடை தள்ளாட,—வந்து அனங்கள் 373

கண்டு வெருண்டு ஓட, கார் அளகம் சோர்ந்து மலர்
வண்டு கழுங்கின் மகிழ்ந்து ஆட, — தண் தரள 374

முத்துவடம் ஆட, முன்கை வளை ஆட,
நத்து வடபத்திரமும் நன்கு ஆட, — தத்து நுதல் 375

வேர் ஆட, மை எழுது மென் கழுநீர் ஆட, வள்ளைச்
சீர் ஆடு குண்டலங்கள் சேர்ந்து ஆட, தார் ஆட, 376

தண்டை சிலம்பு சதங்கை புலம்பியிட,
புண்டரம் விண்டு புறம் புக, — ஒண் தளிர் 377

ஆகம் அசைந்திட, ஆரம் அழிந்திட,
மேகலை அம்புவி மீது உற, — ஏகிய 378

முந்து அடி கொண்டு முடுக்கி விடுத்து எதிர்
பிந்து அடி கொண்டு பிடித்து எறிந்து, — பந்து அடிக்க, 379

தோழிமார் கண்டு துணுக்கென்று எழுந்திருந்து,
'வாழி, மட அனமே! மாமயிலே! — ஏழையே! 380

கொங்கைக்கு உறும் பகையைக் கொண்டாய், கரத்தது நின்
சிங்க இடைக்கு இடுக்கண் செய்யாதோ? — தங்கிய நின் 381

பல்லுக்குத் தோற்ற முத்தின் பந்தைப் பிடித்து அடித்தால்,
வல்லுக்குத் தோற்ற இடை வாடாதோ? — செல்லை நிகர் 382

கொண்டைக்குத் தோற்ற கொடும் பந்தை நீ அடித்தால்,
அண்ட நடுவை அஞர் ஆக்காதோ? — ஒண்தொடி! நின் 383

மென் குதிக்குத் தோற்று விளங்கு மணிப் பந்தடித்தால்,
மின் குதிக்கும் நுண் இடையை வீட்டாதோ?—நன்கு உதிக்கும் 384

பொன்னே! அமையும்' எனும் போதில், ஒரு மான் அளித்த
மின் நேயம் பூண்ட வடிவேலனர் — நன் நேய 385

மூலாத்திரியாய் முதிர் நல்ல காத் திரியார்,
மாலாத் திரியார், மனம் திரியார், — நீல 386

மயில் வாகனத்தார், மலர் வாணி கொங்கை
பயில் வாகு அனத்தார் பணியும் — சயிலேசர், 387

மாலைக் கடம்பு அணிவார், வள்ளி இரு தாமரைப் பூங்
காலைக் கடம் பணிவார், காங்கேயர், — சால 388

வெறியாட்டில் ஏறும் விருப்புடையார், வீர
மறி ஆட்டில் ஏறி வருவார் — குறி காட்டும் 389

வெற்றி மணித் தேர்மேல் மேவுதலும், பூங்கரத்தில்
பற்று மணிப் பந்து எறிந்து, பாங்கியரும் — சுற்றி வரச் 390

சென்ருள்; எதிர் ஏகித் தெண்டனிட்டாள்; ஆங்கு எழுந்து
நின்ருள்; திருவுருவை நேர்பட்டாள்; — ஒன்ருச் 391

சமயம் ஒரு மூவிரண்டும் தத்தம் நெறி நிற்க,
அமைய, முகதாமரை ஓர் ஆறும், — நமது உயிர் சூழ் 392

பன்னிரண்டு வேதனையும் பாற்றும் அருட்பார்வை தரும்
பன்னிரண்டு செய்ய இதழ்ப் பங்கயமும், — சொல் நிறைந்த 393

அன்பு தரும் சாத்திரங்கள் ஆறும் மறையவர்க்கு
முன் புகலும் செங்கமலம் மூவிரண்டும் — மன்பதைகட்- 394

கே இதங்கள் செய்யா இருள் அரக்கரைத் துணித்த
ஆயுதங்கள் ஏந்து கஞ்சம் ஆறிரண்டும் — ஆயுதத்தால் 395

சிந்தித்து அவுணர்தமைச் செற்ற சினக் கனல் சேர்
உந்திக் கமலம் எனும் ஓர் மலரும் — கந்திக்கும் 396

சீர் பூத்த வேடச் சிறுமி வளரும் குறிச்சி
ஊர் பூத்த புண்டரிகம் ஓர் இரண்டும், — பாரா, 397

முருகர் இளமை முருகு உண்டாள்; கஞ்சம்
வெருவ மதன் நெஞ்சு அழுத்திவிட்டான்; — பரவசமாய் 398

மெய் மறந்து சோர்ந்து விழுந்தாள் நிலம் மீது,
பொய் மறந்த தாய்மார் புகலுவார்; — 'கைமறந்து 399

வள்ளி இருதாள் பணிந்த மாயம் அறியேமோ?
நள்ளி மகவான் அளித்த நாரிதனை — உள்ளி　　400

அரக்கரொடும் போர் செய்து அலுத்தது அறியேமோ?
இரக்கம் இலாதே அறங்கள் எல்லாம் — கரக்கும் மது -　　401

சூதன் மருகன் என்று சொல்வது அறிவோம்; பரவை
தூதன் மகன் என்று துணிந்திடுவோம்; — காதல்　　402

திருப் பழனி வெற்பு அதனில் சேர்ந்து கொண்டு, ஞாலத்து
இருக்கும் இள மங்கையரை எல்லாம் — விருப்பமுடன்　　403

போதச் சிறையெடுத்தல் போதாமல் எங்கள் இள
மாதைச் சிறையெடுக்க வந்தீரோ? — சூதாய்　　404

இகலினோர் பொன்னை இரவில் இட்டீர் கன்னம்;
பகலிலே கன்னமிடல் பாங்கோ? — புகல் அரிய　　405

காமமுனை தோன்ற எம் காதலிக்கு நீர் வந்து இங்கு
ஏம மயல் விளைத்திட்டு ஏகுவீர் — சேமம் உறும்　　406

தேரை நிறுத்தீர் செழுங் கடைக்கண் வைத்து அவள்தன்
ஏரை நிறுத்தீர்!' எனும் அளவில், — நாரியரைப்　　407

பாராதவர் போலப் பார்த்து, பசும்புரவித்
தேர் ஆதவர்போல் தெரு அகன்றார்; — பார் மீது　　408

தன் காலால் வந்த மங்கை தாய் காலால் சென்று, மனை
யின் கால் இலங்கு மஞ்சத்தே கிடந்தாள்; — தென்காலும்　　409

சந்தனத்தைப் பூசு முலை தைவரலும், நெஞ்சு அழுங்கி
இந்தனத்தை நீற்று நெருப்பு ஈது என்றாள்;—வெம் தனத்தில்　　410

பன்னீரை வார்க்கும் இளம் பாங்கியரைப் பார்த்து, 'ஐயோ!
வெந்நீரை ஏன் இறைத்தீர் மேல்?' என்றாள்;—'முந்நீர்　　411

ஒலியும் குயிலின் ஒலியும் உயர் அம் -
புலியும் புலி ஆம் புதுமை, — ஒலி வளையீர்!　　412

இன்று அறிந்தேன் நான்' என்றாள்; 'என்று அறிந்தீர் நீர்?'
[என்றாள்,
அன்று அறிந்தாள் காமத்து அருந் துயரம்.—பின்று ஒருத்தி,　　413

## மடந்தைப் பருவம்

வேதம் ஒருமூன்றின் விளங்கும் இடை வேதத்தின்
ஓதுகின்ற காண்டங்கள் ஓர் ஏழின் — ஓது நடுக் 414

காண்டம் என ஏழ் பருவக் காரிகையார் தம்முன் எழில்
மாண்ட இடைப் பருவம் ஆம் மடந்தை; — வேண்டி அயன் 415

இம் மடந்தையைப் பார்த்து, எழில் ஆர் திலோத்தமை ஆம்
அம் மடந்தைதன்னையும் உண்டாக்கினன்; — இம் மடந்தை 416

பார்வை வலியால் மதனும் பங்கயன் முன்னும் புலவர்க்கு
ஆர்வ மயல் நீங்காது அளித்திட்டான்; — சீர் வடபால் 417

பொன்மலைமேல் ஊரும் புயல் அனைய கூந்தலாள்,
தென்மலைமேல் ஊர் பிறைபோல் சேர் நுதலாள் — நன்மை தரும் 418

கல்லார வெற்பில் உறை கார் வேடர் கைப் பிடித்த
வில் ஆர் கரும்புருவ மென்கொடியாள், — சொல் ஆரும் 419

இந்திரதீர்த்தத்தில் எழு நீலம் போல் விழியாள்,
நந்தவனப் பூங்குமிழ் நேர் நாசியாள் — நந்தி 420

மடுவின் அலர் செவ்வாம்பல் வாயாள், பைஞ்சாரல்
படு கழையின் முத்து என வெண் பல்லாள், — இடபன் 421

சிவகங்கை தீர்த்தம் உறும் செந்தாமரைபோல்
அவிர்கின்ற செய்ய வதனத்தாள், — தவ நண்பின் 422

நாரதனர் யாழில் எழு நல் இசையை வெல் இசையாள்,
ஏரி படர் வள்ளை எழிற் காதாள், — நீர்குலவும் 423

விண்டு சுனைத் தவழும் வெண்பணிலம் ஆம் கழுத்தாள்,
மண்டிய வேலன் செறுவின் வாழ்க்கை நேர் — தண்புயத்தாள், 424

தான் ஏறி எந் நாளும் தண்ணீர் பாய் ஏழ் சுனையின்
மா நேமிப்புள்ளின் வளர் முலையாள், — தேன் ஆர் 425

வராகபுரத்து ஆலிலைமேல் மாயவன்போல் பண்டி
விராவும் மயிர் ஒழுங்கு ஆர் மின்னாள் — பராவும் 426

கடம்பவனத்தில் திரியும் காமரு பின் பார்வை
மடங்கல் அனைய இடை வாய்ந்தாள், — விடம் குலவு 427

நாகர் சுனைக் கரை வாழ் நாகம் நிகர் அல்குலாள்,
நாகர் சுனைத் திரி கைந்நாகத்தின் — மோகத் 428

துதிக்கை நிகரும் தொடையாள், தமிழை
விதிக்கும் முனிப் பூஞ்சுனை வீழ் ஞெண்டின் — மதிக்குமுழந் 429

தாளாள்; சரவணதீர்த்தத்து வரால் என்ன துணைத்
தாளாள்; நல்லான்குளத்துத் தண்ணீரின் — மேல் ஆகும் 430

கச்சபத்துக்கு ஒப்பு ஆகும் கஞ்ச மலர் அடியாள்,
வச்சபத்தின் நான்காய் வரும் உலகை — இச்சையின் செய் 431

போதன் சுனையில் பொருந்தும் அனம் போல் நடையாள்,
நாதன் மயில் போலும் நல் இயலாள், — மாதரொடு 432

மேல் நிலாமுற்றத்து வீற்றிருப்ப, ஓர் அணங்கு,
'பால் நிலாக் கண்ணாடி பார்' என்றாள்; — வேனிலான் 433

வில் நாரியோர்பால் நெகிழ்த்தி விடுத்தது எனப்
பின் ஆர் இருங் கூந்தல் பின்னி ஒரு — நல் நாரி 434

மாலை புனைந்து, மருங்கில் விலை இல்லாப் பொற்
சேலை புனைந்து, திருநுதலின் — 'மேலை 435

மதிக்கும் மறு உண்டு, இந்தமாதின் எழில் கண்டோர்
மதிக்கும் மறு உண்டு' எனும் சொல் வாய்ப்ப, — துதிக்கும் எழில் 436

கத்தூரிப் பொட்டு அணிந்து, கண்ணில் விடம் ஊட்டுதல் போல்
மைத் தூரிகைக் கோலால் மை எழுதி, — முத்து ஊரும் 437

மூக்கணியும் காதணியும், முன்கை வளையும், கழுத்தில்
தேக்கு அணியும் ஆரச் செறிவித்து, — தாக்கும் 438

புகர் முகம் கொள் யானை எனப் பொற் சுணங்கு பூத்துத்
திகழ் முலையினில் களபம் சேர்த்தி, — புகழும் மதன் 439

கையில் கயலும் கரும்பும் சரம் ஐந்தும்
தொய்யிற்கு இசையத் தொகுத்து எழுதி, — நை இடையில் 440

காஞ்சி பருமம் கலாபம் விரிசிகை கால்
பூஞ்சிலம்பும் ஆர்ப்பப் புனைந்து தொழு, — வாஞ்சையுடன் 441

தன் அழகைக் கண்டு தருக்கி மனம் மகிழ்ந்து
மின்னனையாரோடு எழுந்து, வெற்பு இவர்ந்து, — சொன்ன
[மதில் 442

மேல் வீதியில் குணபால் வீறு மணி வாயிலைத் தென்-
கால் வீதி என்று கண்டு உவந்து, — நால் வீதி 443

சூழும் சரவணத்தின் தூய் நீரைப் பார்த்து, அடியார்
வாழும் மடங்கள் வளம் பார்த்து, — தாழ் மயில்மா 444

வையாளி மேட்டின் வளம் பார்த்து, வீரட்டத்து
ஐஆனனன் வாழ் அகம் பார்த்து,—பொய்யாத 445

ஓங்காரத்து உண்மை உரைக்கும் சாமிநாதன் என்று
நீங்காது அமரும் நிலை பார்த்து, — பாங்கு ஆரும் 446

மால் வீரராகவனுர் வண் தளியும் பார்த்து, விழிச்
சேல் வீர காளிநிலை சேவித்து, — நூல் வாய்ந்த 447

தென் கோபுர வாயில் சென்று, மலர்மாதின்
மன் பேர் குலவும் வரை பார்த்து, — முன்பு ஆகும் 448

நீலச் சுனையில் நிலவி எழும் பைங்குவளைக்
கோல மலரைப் பார்த்துக் கும்பிட்டு, — வேலர் திருக் 449

கல்யாண மண்டபமும் கண்டு, பல வாகனங்கள்
செல் யாணர் மண்டபத்தைச் சேவித்து, — வெல்யானைக் 450

காவேரி ராசன் கனக மணி மாளிகையின்
பா ஏர் இயல்பு அனைத்தும் பார்த்ததன் பின் — பூவேரி 451

மன்னும் குடவாயில் வந்திருந்து, செங்கழுநீர்
துன்னும் கரிமுகனைச் சூழ்ந்து இறைஞ்சி, — பல் நலம் சேர் 452

விண்டு சுனை பார்த்து, வெய்ய மணி நாகசுனை
கண்டு, சித்தர் வாழ் குகையும் கண்டு, எழுந்து,—வண்டு உலவும் 453

நாரத தீர்த்தம் பார்த்து, நல் மலயக் கும்பமுனிச்
சீர் அணவு தீர்த்தம் தெரிசித்து, — சாரல் உறும் 454

வேடுபறி மண்டபத்தின் விம்மிதம் எலாம் பார்த்து,
கோடு செறி நல்லான் குளம் பார்த்து, — நீடும் 455

வட கோபுரவாயில் வந்து அணுகி, ஞாலம்
படை ஓதிமன் சிகரி பார்த்து, — புடை சூழும் 456

தத்துவ சாரம் எனச் சாற்றும் நதி பார்த்து,
மத்தூர்ச் சிலையின் வளம் பார்த்து, — சுத்த 457

அகத்தியன் ஓர் ஆண்டு தவம் ஆற்றும் இடம் பார்த்து,
மகத்துவம் சேர் ஆலயத்துள் மன்னி, — இகப்பு இல் 458

ஒரு ஞானசத்திதரன் உற்ற இடம் பார்த்து,
திருஞானம் இச்சை எனச் சேரும் — இரு மாதர் 459

கோவில் வளம் பார்த்து, குமாரலிங்கம் பார்த்து, எவர்க்கும்
காவல் எனும் ஆபத்சகாயன் உறும் — கோவிலையும் 460

கண்டு, நவவீரர் உறும் கற்றளியும் பார்த்து, வலம்
கொண்டு, கொடிக்கம்ப நிலைக் குஞ்சரமும் — கண்டு உவந்து, 461

'நன்றுயிருந்தது இந்த நல் மலை' என்றாள்; எதிரே
தன் தாயரும் அணைந்து சாற்றுவார்: — 'முன் தேவர்- 462

கோமான் தவம் செய்த கொற்ற மலை; இதன் சீர்
நாமான் உரைக்க நெடு நாள் வேண்டும்; — பூமானே! 463

ஈசன் தவம் புரிந்தது இவ்வரைக்கீழ் அல்லாமல்
காசி முதல் சேதுவரை கண்டது உண்டோ? — வாச 464

மலரோன் சிறை தவிர்ந்து வாழ்வு பெற்றது இந்த
மலையே அலாது மலை உண்டோ? — நிலம் மீது 465

சூரன் கொடுபோம் சுரர் வளம் எலாம் கொடுத்த
வீரன் சினம் தவிர்ந்த வெற்பு இதுவே, — மாரனுக்குத் 466

தந்தை தவம் புரிந்து தத்துவத்தை நன்கு அறிந்தது
இந்த மலை அல்லால் மற்று எங்கண் உண்டு? — சிந்தனைசெய் 467

சத்த முனிவர் தவம் புரிந்து, மேலான
நித்தியத்தைப் பெற்றதும் இந் நீள்வரையே; — பத்தியுடன் 468

கும்பமுனி வேலோனைக் கும்பிட்டுச் செந்தமிழைக்
கம்பம் அறக் கற்றதும் இக் கல்லகமே; — வம்பு பெறு 469

செங்கழுநீர் முப்போதும் சீர் சால் கலியுகத்தில்
இங்கு அழகாய்ப் பூப்பதுவும் இம் மலையே; — மங்கைக் 470

குறத்தி தவம் முன் புரிந்த கொள்கையினுல் சேய் இல்
அறத்தின் இயல் வாய்ந்தது இது அன்றோ? — புறத்துஎவர்க்கும் 471

வேட்ட வரம் அளித்து, வெய்ய பிணி அனைத்தும்
ஓட்டு மலை ஈது' என்று உரைப்பளவில், — ஈட்டும் 472

பிறவிக்கு இனி யான் பெயராது அருள்வான்,
துறவிக்கு இனியான், தொலையான், — இறைவி 473

மலையாள் தரும் அத்தன், வாழ்வு தரும் அத்தன்,
மலை ஆள் தருமத்தன், மத்தம் — தலை மேவும் 474

ஈசன் அயன் மாற்கு அருள எண்ணி, தணிகைமலை
வாசன் அயன் மாற்கு அருள மன்னினன்; மோசக் 475

கிரவுஞ்சம் அங்கு அழித்தான், கேடு இல் அசுரர்
விரவும் சமம் கழித்தான், விண் தோய் — இரதமிசை 476

வந்தான் எதிர் போய், மடந்தை பணிந்து எழுந்தாள்;
செந்தாமரை நேர் திருமுகமும் — கொந்து ஆரும் 477

மாலைக் கடம்பு அணியும் மார்பும், வரைத் தோளும்
சேலைப் பொரும் விழியால் சேவித்தாள்; — கோல மதன் 478

ஐங்கணையில் ஓர் இரண்டை, ஆனைமுலைமேல், பாயும்
சிங்கம் என ஏவத் திகைத்திட்டாள்; — தங்கும் 479

மடம் நாணம் அச்சம் மருவும் பயிர்ப்பும்
உடன் ஏக, ஆசை நோய் உற்றாள்; — இடமாகப் 480

புள்ளிருக்கும் வேளூர்ப் புரக்கும் வைத்தியருக்கு
உள் இருக்கும் முத்துக் குமாரரே! — எள் இருக்கும் 481

எண்ணெயைப்போல் எங்கும் இருப்பவரே! காமசுரம்
வெண்ணெயைப் போலே உருக்கிவிட்டதுகாண்; — பண்ணும் 482

பரிகாரம் செய்யீர், பசும் புண்ணில் மாரன்
எரிகாரம் இட்டது போல் எய்தான், — சரமாரி; 483

கை தொட்டுப் பார்த்திடீர், கண்ணால் முகம் பாரீர்,
மெய் தொட்டுப் பார்த்திடீர், வீண் போமோ? — பை தொட்டு 484

ஒரு மாத்திரைதான் உரையீர், கனிவாய்
தரு மாத் திரைத் தேனும் தாரீர், — பொரும் ஆற்றல் 485

தென் காற்றுச் சங்கை உடல் தீண்டி அலைக்கும் இதை
நன்கு ஆற்றும் பூதி நயந்திடீர், — மின் காலும் 486

பூரண சந்த்ரோதயத்தால் பொங்கும் உடல் விளர்ப்பைச்
சீர் அணவு லேகியத்தால் தீர்த்திடீர், — கூர் மயல் நோய் 487

தீர்ந்தால் வெகுமதிகள் செய்குவன்; செவ் வாய் அமுதம்
ஆர்ந்தால் எம் பொற்குடம் நும் அங்கையதே; — சேர்ந்து 488

படுக்கப் பொருந்திஞல் பாரும் அதன் ஊரும்
கொடுக்கத் தகும்' என்று கூற, — அடுக்கல் 489

பெருமான் தலை அசைக்கும் பெற்றிபோல் தேர்மேல்
திரு மான் மகளிரொடும் சென்ருன்; — ஒரு மான் 490

பயந்தாள், விழுந்தாள், பதைத்தாள், உயிர்த்தாள்,
அயர்ந்தாள்; அனைமார் அறிந்து, — வியந்து உரைப்பார்: 491

'முந்நீரின் முத்து அளித்த மொய்குழற்குக் — கைம்மாறு
வெந்நீர் அளித்தது என்ன, வேலவரே! — பன்னீரோ? 492

பெண்ணுக்குப் பேயும் பெரிது இரங்கும் உன் தன்
கண்ணுக்கு எம் பூவை கசப்பு ஆச்சே! — நண்ணும் 493

வயித்தியஞர் மைந்தர் என்று வந்தடைந்தால், பின்னும்
பயித்தியமே செய்வதுதான் பண்போ? — "சயித்தியம் தீர் 494

அக்கினி குமார! கந்தா! அன்பினில் கூடு" என்பாளுக்கு
இக்கின் இகு மாரகத்தை ஏன் புரிந்தீர்! — திக்கு மகிழ் 495

பைங் கழுநீர் ஓடை ஒன்று பற்றுமல் எம் மடந்தை
இங்கு அழும் நீர் ஓடைகளும் இட்டீரே! — செங்கழுநீர் 496

ஆம் குவளைவெற்பு என்பது அல்லால், இவள் கரத்தின்
நீங்கு வளை வெற்பு ஆக்கி நின்றீரே! — ஓங்கி அண்டம் 497

தாம் மயிலின் தோகைத் தனி நிறம்போல் யாம் பயந்த
மா மயிலையும் கருக வைத்தீரே! — பூமிதனில் 498

காஞ்சி அணி மா அடியைக் கண்டீர், இவள் இடை வீழ்
காஞ்சியணி மா அடியும் கண்டீரே! — பூஞ் சிகை சேர் 499

மால் ஆழி மாமுகன்பால் வாங்கினீர், இங்கு இவள்தன்
கால் ஆழி வாங்கும் கருத்தானீர்! — பால் ஆழி 500

அன்ன புகழ் படைத்தீர்! ஆகாது, பெண்பழி இங்கு'
என்ன உரைத்து ஏகினர்; இம் மடந்தை — தன் அகத்தில் 501

சற்றே துயின்று, தனித்து எழுந்து, தோழியரை
உற்றே முகம் பார்த்து உரைத்திடுவாள்: — 'பொற்ருெடியீர்! 502

என் கனவிலே ஒருவர் எய்தினர்; அங்கு அவரைப்
புன்கண் அகற்றீர் என்றுபோற்றிசைத்தேன்;— நன்கு அவரும், 503

"சந்திர மண்டலத்தில் தாவிய கோவைக் கனியும்
அந்தர தாமரையும் அல்லாமல் — சுந்தரம் சேர் 504

வாழை இரண்டு அடியில் வைத்திடு செந்தேன் கூடும்
மாழை மொழியாய்! உதவ வல்லையேல், — ஏழை உன்தன் 505

மையல் நோய் தீரும் வகை புணர்ப்பன்" என்று உரைத்தார்;
தையல் நல்லீர்! அக்கணமேதான் விழித்தேன்;—ஐயம் அறச் 506

செப்பீர் இதன் பொருளைச் சிந்தை தெரிந்து' எனலும்,
அப் பேதையர் அதனை ஆராய்ந்து, — தப்பாமல் 507

ஓதுவார், 'வாய் இதழும் ஒண்முலையும் அல்குலுமே,
காது சேர் தாழ்குழையாய்! காண்'என்றார்; — 'தாது சேர் 508

செச்சைக் கணியாரும் சேர்ந்து உன்னைக் கூடியிடும்
இச்சைக்கு அணியராய், எய்திடுவார் — நிச்சயமே; 509

தேறி இருத்தி' எனச் செப்பினர்; அங்கு அவளும்
ஆறி இருந்தாள் அருந்துயரம். — வேறு ஒருத்தி, 510

## அரிவைப் பருவம்

கார் அரி வைகும் தலத்தும் கட்செவி வைகும் தலத்தும்
ஓர் அரி வைகும் தலத்தும் ஒப்பு இலாச் — சீர் அரிவை, 511

உண்டால் மயக்கம் உறும் மதுப் போலாது இளைஞர்
கண்டால் மயக்கும் களிநறவம்; — விண் தோய் 512

இடையாலும் யாழின் இசையாலும் அன்ன
நடையாலும் பார்வை நயனக் — கடையாலும் 513

புன்முறுவலாலும் பொருவேல் இளைஞர் உயிர்
வன்மை கவர வரும் கூற்றம்; — வின்மை பெறும் 514

காமன் கலைக்குக் கனிந்த அலங்காரம்;
சேம வனிதையர்க்கு ஓர் சிங்காரம்; — தாமக் 515

கருங்குழலாள், சொல் குழலாள், காமத்தால் மாந்தர்
மருங்கு உழலாள், பாங்கியொடும் மன்றல் — தரும்
[பொழில்வாய்ப் 516

புக்காள்; வெண்பற்கு இணையாம் பூமுல்லையைத் தளைந்து,
மைக் கார் அளகத்தில் மாட்டினாள்; — மெய்க்கு ஆகாப் 517

பிண்டித் தளிர் பறித்துப் பெய்தாள் புவிமீது,
மண்டி மிதித்தாள் மலர்ப்பதத்தால்; — கெண்டை விழிக்கு 518

ஒவ்வாத மாவடுவை ஒண் கரத்தினால் பறித்துக்
கவ்வாக் கறியாக் கனிந்து உமிழ்ந்தாள்; — செவ்வான 519

நாசிக்கு இணை ஆகா நல் சண்பக மலரை
வீசும் குழைக் காதின்மேல் வைத்தாள்; — நேசித்த 520

செங்கரத்துக்கு ஒவ்வாத செங்காந்தளைப் பிடுங்கி,
அங்கு அரற்றும் பாம்பு என நின்று ஆட்டினாள்; —
[கொங்கைக்குத் 521

தோற்ற இளநீரைத் தொட்டுப் பறித்து உடைத்துச்
சீற்றம் அறக் குடித்துத் தேக்கெறிந்தாள்;—தாற்றின் இளம் 522

வாசக் கமுகை வளைத்து, ஏறும் மாதவியின்
ஊசல்-கொடிமேல் உவந்து ஏறி, — வீசும் 523

கலாப மயில் போலக் காலின் உதைந்து ஆடிக்
குலாவும் பொழுதில், அன்பு கொண்டோர்க்கு—எலாம் உதவும் 524

சிந்தாமணியாம்; சிலப்பதிகாரம் படைத்தான்;
கந்தா மணிமே கலை புனைந்தான்; — நந்தா 525

வளையாபதி தருவான் வாசவனுக்கு ஈந்தான்;
திளையாத குண்டல கேசிக்கும் — வளை ஆழி 526

நீர் உண்டான்; காதல் நிகழும் அகத்தியத்தான்;
ஏர் உண்ட தொல்காப்பியம் உவந்தான்; — சீர் உண்ட 527

சிற்றதிகாரங்கள் எலாம் தேவர் முதலாக
உற்ற அதிகாரிகளுக்கு ஓர்ந்து அளித்தான்; — முற்று
[உலகு ஆள் 528

பேர் அதிகாரம்தனைத் தான் பேணும் திருத்தணிகை
ஊர் அதிகாரன் தேர் வந்து உற்றிடலும், — காரிகையும், 529

நன்னூல் இடை ஐயம் நண்ணிப் பணிந்து எழுந்து,
முன்னூல் உரை அகல மோகித்தாள்; — ‘பல் நூலும் 530

ஓதாது உணரும் உயர் புலவீர்! மெய்யின் உயிர்
போதாது இருக்கப் புணர்ப்பது உண்டோ? — தாது ஆரும் 531

ஆய்தம் குறுகி அரைமாத்திரையின் உடல்
தேய்தந்தது என் விதியோ? செப்பிடீர்! — வாய் தமிழ்ச் சேர்ந்து 532

ஏறும் உயிர் அளவாய் ஏய்ந்த உடல் அளவும்
மாறி அழிந்த வகை என்னே? — கூறிடீர்! 533

வல்லினத்துள் ஓர் இரண்டும் மற்றை மருங்கு ஆன
மெல்லினத்துக்கே பகையாய் விட்டது என்னே? — புல் ஒருசார் 534

அல்வழியும் வேற்றுமையே ஆகி, மதி மருட்டும்
சொல்வழி வாராதது என்ன சூட்சியோ? — நல்ல 535

இயற்கைக் குயில் மொழிதான் என்னே, மிகுத்த
செயற்கைக்கு ஒழிபு? அதனைச் செப்பீர்! — பயிற்சி பெறு 536

நேமி நாதத்தால் நிலை தெரியாச் சொற்புணர்ச்சி
காமர் நன்னூல் சூத்திரத்தால் காட்டிடீர்! — சேமம் உறு 537

செவ்வேழும் எய்க்குமுனம் சேர்ந்து தடவா மென் கை
ஒவ்வா இயல்பு என்கை ஓதிடீர்! — தவ்வாத 538

நானிலத்துள் ஐந்திணையா நண்ணிய பூ அம் பாலை
தான் அடுத்துச் செய்மயக்கம் தான் அறுப்பீர்! — வான்
[அடுத்துச் 539

சீறு பொழுது ஐந்தும் திவசம் தொறும் புணரும்
ஆறு பொழுது ஆக்கில், வகை ஆயிடுமோ? — கூறுகிலீர்!' 540

என்று வினயினள்; என் ஆவி நாயகனர்,
முன் ஆவிவந்த முருகேசர் — நல் நாவி 541

பூசும் திருமேனிப் பூச்சின் மணம் இவள்மேல்
வீசி, உரை வீசாமல் மேல் அகன்றார்; — தேசிகராய்த் 542

தாதைக்குத் தொல் நூல் தனிப் பொருள் சொற்றார், இந்தப்
பேதைக்குச் சின்னூலைப் பேசுவரோ? — சோதித்து 543

அருவ மதன் எய்யும் அசோக மலர் ஆகம்
உருவ, மதனக் கவலையுற்றாள். — தெரிவை, 544

## தெரிவைப் பருவம்

அவள் ஒருத்தி வேளுக்கு அடங்காப் படையாம்
தவரை வனத்து ஓட்டும் சமர்த்தி; — நவ வீரர் 545

ஓர் இலக்கர் பூத வெள்ளம் உட்புகலும், வெற்பு அறிவு
சோர மயக்கும் இருள் சோர் குழலாள், — தாரகனுர் 546

வெஞ்சிலைக்கை அற்று விழ வீட்டும் சரம் கொழுவும்
செஞ்சிலை நேர் ஆகும் திரு நுதலாள், — கஞ்ச 547

மலர் என்று பள்ளிகொளுமாறும், மணி நீல
மலர் என்று மார்பு அணியுமாறும், — இலை கூர் 548

அயில் என்று கை ஏந்துமாறும், ஒரு மாமி
இயல் ஒன்று மானினம் இது என்றும் — மயில் இறைவன் 549

என்னும் விழியாள், இளையோன் பிதாமகி என்று
எண்ண விளங்கும் இரு தோளாள், — அண்ணல் திருக் 550

குன்றுதோறு ஆடலுக்குக் கூடும் இவை மான்மதம் சேர்
குன்றம் இரண்டு என்னும் குவிமுலையாள், —குன்று இறைவன் 551

கோடலொடு வெட்சி மயிற் கோலம் எனும் பொற்றொடிக் கை
நீடு நிறம் சாயல் உறும் நேரிழையாள், — வேட நண்பன் 552

நீல மயிற்பீலி ஒன்று நீங்கி நின்ற தன்மை எனும்
கோல மயிர் ஒழுங்கு கூர் வயிற்றாள், — வேலன் அன்று 553

சூரொடும் போய் நாகதலம் துன்னி அமர் ஆடி எழும்
ஓர் பிலம் ஈது என்று புகழ் உந்தியாள், — சூரன் எதிர் 554

ஊரும் மணித்தேர் இது என ஓங்கும் இடைப் பொற்கொடியோடு
ஊர் அரம்பை வாய்ந்த அல்குல் ஒண்தொடியாள், — நாரியரும் 555

ஆணய் உரு எடுக்க ஆசை கொளும் மேனி எழில்
பூண் ஆரம் பூண்ட புதுமையாள், — சேண் ஆரும் 556

காவிச் சுனை அருகில் கல்யாண மண்டபத்தில்
ஆவிக்கு இனியாரோடு ஆங்கு அணுகி, — சேவிக்கும் 557

பாடினிகை யாழைப் பறித்து, மடிமேல் இருத்தி,
மாடகத்தை வார்முலைமேல் வைத்து இறுக்கி, — சூடகக் கை 558

அங்குலியின் நீள் உகிரால் ஆய்ந்த நரம்பைத் தெறித்து,
தங்கு சுரம் ஏழும் தனி எழுப்பி, — பொங்கும் 559

இசையால் சராசரங்கள் எல்லாம் உருக,
அசையாத பாடினி கேட்டு அஞ்ச, — இசை ஆரும் 560

பண் ஒருபத்து எட்டினையும் பண் அமரப் பாடியபின்,
தண்ணளியால் பாங்கிதனை நோக்கி, — 'பெண் அரசே! 561

பங்கயங்கள்தோறும் இரு பானல் இதழ் அவிழ்ந்து,
செங்குமுதம்தோறும் இளந்திங்கள் என, — தங்கி ஒளிர் 562

செஞ்சங்கினைச் சூழ்ந்த செங்கடம்பு செச்சைநிறம்
விஞ்சு அம் புயமலைகள் மீது அசைய, — அஞ்ச நடை 563

செந்துவர்வாய் வல்லி செறிந்து, தெய்வயானை துளைந்து,
உந்தி வலஞ்சுழியும் உட்குழிந்து, — தொந்தி 564

மடிப்பின்படி வாய்ந்து, வாமத் தூம்பு ஆர் கைக்
கடிக் கொள் வரால் மேவும் கணைக்காலும், — படைத்து, 565

சிலம்பு அடியில் மன்னி அன்பர் சிந்தை குடிகொண்டு
நலம் படரும் பேரின்பம் நல்கி, — இலங்கும் எழில் 566

சிற்ப நூல் ஒத்து ஒழுங்கில் சேரும் இந்திர நீலமணிப்
பொற்பும் அலங்காரப் பூமணமும் — அற்புதமும் 567

தன் நேர் இலாத சரவண தீர்த்தம் ஒன்று
நல் நீர்த் தணிகையிலே நண்ணியிடும் — அந் நீரில் 568

சங்கம் மிடறு ஒலிப்ப, சக்கரவாகம் குழைய,
பைங்கழுநீர் செங்கழுநீர்ப் பண்புபெறத் — துங்க இதழ் 569

செம்பவளம் வெண்பவளச் சீர் சால் நிறம் எய்த,
வம்பு அவிழும் சைவலம் தோள் வந்து அசைய, —
[ கொம்பரிடை 570

வல்லி துவள, மலர்க்கைக் குருகு இரைப்ப,
அல்குல் பைந்நாகம் அசைந்தாட, — வில்லின் நுதல் 571

வேர் ஆட, காதில் விளங்கு குழை ஆட,
நீராட வா, தோழி! நீ' என்றுள். — 'நேரிழையே! 572

கங்கைக்குள் முன் தோன்றும் கந்தச் சரவண நீர்
எங்கட்கு இயையாது, இயையும் உனக்கு — அங்கு அதனில் 573

தோய்குதி நீ' என்று உரைப்ப, 'தோகாய்! எனது குறிப்பு
ஆய்குதி நீதான்' என்று அமர்காலை, — தாய் குதிக்கும் 574

பச்சை மயில் பரியான், பல் நூலும் காண்பு அரியான்,
அச்சைப் பரியான், அளப்பு அரியான், — பிச்சம் 575

புனை பொற்குடையான், புகழ் மிக்குடையான்,
குனி விற்கு உடையான், குடையான் — இனிய 576

கதி வாய் அவியான், கடம்பாடவியான்,
திதிவாய் அவியான், செவியான் — மதி வாய்ந்த 577

கான் அகத்தான், வள்ளி உறும் கானகத்தான், வீணைமுனிக்
கான கத்தான், தென்தணிகைக் கானகத்தான் —
[வானகத்தான் 578

பொற்றேரைக் கண்டு எதிர்போய்ப் பூவை தொழுது, குகன்
முற்று ஏரைக் கண்ணால் முகந்து உண்டாள்; — கல் தோள் வாழ் 579

இந்திர நீலோற்பலமே என்னை எனது முக
சந்திர நீலோற்பலம்போல் தான் கலுழ்வாய்; — அந்திபகல் 580

மேனி கருகி விழி துயிலாய், மன்மதன் போர்க்கு
ஆனிபடும் என்தனைப்போல் ஆயினாய் — வேனிலுக்கும் 581

பங்கப்படுவாய், பகலும் அலர் பூண்டாய்,
திங்களைக் கண்டும் பயத்தைச் சேர்கின்றாய்; — அங்கசனார் 582

கொல்லும்படி நின்றாய், கூர் தென்றலால் குழைந்தாய்,
புல்லி அகலப் பொலிவு இழந்தாய், — கல்லெனவே 583

வீசும் அலைக்கு அலைந்தாய், மென் கொங்கையார் திதலை
வாசம் புனைந்தாய், வளை மருவாய், — பாசம் 584

புணர்ந்தாய், அனம் இறங்காய், பூந் தோட்டு அணியும்
தணந்தாய், தணந்தோர் தனிமை — புணர்ந்தாய்கொல் 585

கந்த வேள் ஆகம் கலந்து மணந்தாய், தணந்தேன்
சிந்தைபோல் வாழும் திறம் உனக்கு ஏன்? — வந்து எனக்குச் 586

சொல்லாய்!' என வினவும் தோகைமேல் சித்தசனும்
கல்லாரம் அல்லாக் கணை தெறித்தான்; கல் ஆரம் 587

சோர் அரிவைமீது சொரிந்தார் மின்னுர்; இளையோன்
தேர் அகன்றது அப்பால் தெருவீதி. — பேரிளம் பெண், 588

## பேரிளம் பெண்

ஆணில் அழகாம் அனங்கனைப் போல் பெண்ணில் எழில்
பூணும் அதிருபப் பொற்கொடியாள், — காணும் 589

அணிகட்கு அழகினை உண்டாக்கும் அவையவத்தாள்
மணிகட்கு அழகுநகை வாய்ந்தாள், — குணம் மிகுந்த 590

பூமகளைக் கூத்தாட்டும் பூவையாள், பூவரசன்
நாமகட்குக் காவியங்கள் நன்கு உரைப்பாள், — கா மருவும் 591

சுந்தரிக்கு மேலாம் துரைத்தனத்தாள், பூவாளி
பைந்தொடிக்கும் காமரசப் பண்பு உரைப்பாள், — இந்துஇரவி 592

மீது எழுந்த குன்று அனைத்தும் வென்று, குறுமுனியால்
பாதலத்தில் உற்ற பறம்பினையும், — மீதலம் சேர் 593

வாசவனுர் கைக்கு இசைந்த வச்சிரத்தைக் கண்டு, திரை
வீசு கடலில் படிந்த வெற்பினையும், — காசினிக்கீழ் 594

உற்றுப் பொருது வெலற்கு உந்திப் பிலவழியும்
மற்றை வழியாம் நிதம்ப மாகடலும், — சற்று இறங்கிப் 595

பார்க்கத் தலைவணங்கும் பான்மை எனச் சாய்ந்து மணி
வார்க் கச்சு உறுத்த வனமுலையாள், — கார்க்கு விளை 596

யாடற்கு அரங்கு ஆகும் அம்பொன்முடித் தெற்றியில் போய்த்
தேடற்கு அருமணிச் சிங்காதனத்தில் — சேடியர்கள் 597

முந்து தொழ வீற்றிருந்து, 'முற்றும் உணர் ஓவியனைத்
தந்திடு' என, ஒருத்தி தந்திடலும், — வந்து தொழும் 598

ஓவியனைக் கண்டு கிழி ஒன்றில் உலகு ஈரேழின்
மேவு புயவலியின் மிக்கவராய், — மூவர் தொழும் 599

தேசிகராய், பொன் நிறம் கொள் தேசினராய், உண்மை புகல்
வாசகராய், நீங்காத வாலிபராய், — யாசகர்க்கு 600

வீசும் கொடையினராய், வெய்ய கலியுகத்தில்
பேசி வரம் கொடுக்கும் பெற்றியராய், — நேசம் 601

துறவாதவராய், துவிதவினை நோய் கொண்டு
இறவாதவர் ஆகி, என்றும் — பிறவாத 602

நித்தியராய், நாற்பயனும் நேரில் ஒருங்கு உதவும்
சத்தியராய், மும்மலத்தின் சார்பு இலராய், — இத்தலத்தில் 603

பேரரசு கீர்த்திப் பிரதாபம் உள்ளவராய்,
போரரசர் கண்டு தொழும் பொற்பினரரய், — யார் ஒருவர் 604

உள்ளக் கருத்தும் உணர் உத்தமராய், உன்னும் அன்பர்
கொள்ளக் கருணை புரி கொற்றவராய், — எள்ளல் இலாச் 605

செல்வச் செருக்கினராய், சீர் ஒழுக்கம் உள்ளவராய்,
கல்விக் கடல் கடந்த காவலராய்ச், — சொல்லு மனு 606

நீதி பொறுமை நிலைமை அறிவு அடக்கம்
ஓதி மகிமை சால்பு உள்ளவராய், — சோதித்து 607

யாரும் நிகர் இல்லா ஓர் ஆடவரை நீ எழுதி
நேருதி என்றாள்; அவனும் நேர் வணங்கி, — கூறும் 608

அறிவாலும் கல்வி அளவாலும் சிற்பச்
செறிவாலும் ஆராய்ந்து தேடி, — மறி ஆகும் 609

மானின் மருகன் வடிவு அனைத்தும் கண்டு எழுதித்
தேனின் மொழியாள்கைச் சென்று அளிப்ப, — தூநகையும் 610

கண்டு மகிழ்ந்து, 'என்தன் கருத்தின்படி எழுதிக்
கொண்டுவந்தாய்' என்று அவனைக் கொண்டாடி, —
[ஒண்தொடி, அச் 611

சிற்பனுக்கு வேண்டும் திரவியமும் பொன்-துகிலும்
பொன் - பணியும் ஈந்து, புறம் போக்கி, — நற்கிழியில் 612

வாய்ந்த முருகர் வடிவழகைச் சிந்தித்து,
சாந்தம் விபூதி எனத் தான் அணிந்திட்டு, — ஏந்தும் எழில் 613

வள்ளைச் செவிக்கு அணியாய் மன்னும் திருப்புகழைக்
கிள்ளைக்கு இசைப்பதனைக் கேட்டு உவந்து, — வள்ளி புணர் 614

கந்தன் உருக் காண்பதுவே கண்ணுக்கு அணி என்றும்,
நந்தல் இல் சேய் நாமமே நா அணி என்று,—எந்தை எதிர் 615

கூப்புவதே செங்கை அணி கோலம் என்றும், கண்டிகையை
வாய்ப்பதுவே கொங்கை அணி மாண்பு என்றும் — தோப்பு
[அமைந்த 616

நீலச் சிலம்பு அதனை நித்தலும் சூழ்ந்து எய்துவதே
காலில் சிலம்பு அணியும் காட்சி என்றும், — வேலர் 617

அலங்காரத்து உட்பொருளை ஆய்வதுவே தேகம்
கலங்கா அலங்காரம் என்றும், — இலங்கு கந்தர் 618

அந்தாதிமேல் ஆசையாவது உயிர்த் தோழி எனும்
நம் தாதி மேலான நட்பு என்றும், — சந்த முருகு 619

ஆற்றுப்படையே அனங்கன் அடு போரை
மாற்றுப்படை ஆகி வைகும் என்றும், — தோற்றும் 620

அனுபூதி ஐம்பதுமே ஆருயிர் பேரின்ப
அனுபூதி நல்கும் அணி என்றும், — மனமீதில் 621

உன்னும் பொழுதில், உயரும் கயிலை நிகர்
மன்னி ஒளிர் கந்தமாதனமும் — கன்னி உமை 622

அங்கை விரலில் தோன்றி, அன்னையுமாய்ச் சோதரியாய்,
திங்கள் அணிவோன் சடை வாழ் சேண் நதியும் — சங்கு
[அணிந்த 623

செங்கண் மால் ஆன சிவமுனிக்கு மான்பிணைபால்
மங்கை வள்ளி தோன்றி வளர் நாடும், — பைங்குவளை 624

மூன்று தினங்கள்தொறும் மொய்த்த பகற் போது சுனை
தோன்றும் அதிசயம் சேர் தொல்நகரும், — ஏன்று அரக்கர் 625

கட்சிதனை வேலால் களைந்து ஆனிரை கவர்ந்து
வெட்சிப் பெயர் படைத்த மென் தாரும், — பட்சி என 626

மேவும் பெயர் கொண்டு மேதினி எலாம் நொடியில்
தாவி வரும் மஞ்ஞைத் தனிப் பரியும், — மாவின் உயிர் 627

கண்ணிமையில் போக்கி, கடவுட் பிடி மணந்து,
விண்ணில் பவனிவரும் வெண்கரியும், — கண்ணன் 628

கொடிக்கும், மலர் வேதன் கொடிக்கும், வலாரி
கொடிக்கும் இசை நல்கு கொடியும், — படிக்கும் உருக் 629

கட்புனலில் தோற்றுது காசினியில் பூசுரர்கள்
உட்புனலில் கற்று அறையும் ஒண் முரசும், — தட்ப மலர் 630

வேதன் படைப்பு அகற்றி மீட்டும் படைத்து, உலகில்
தீது அகலவே நடத்தும் செங்கோலும், — பேதம் அற 631

ஓதும் தசாங்கம் உடையான் மணி நெடுந் தேர்
போதரலும், துண்ணெனவே புக்கு இறைஞ்சி,—சோதி எழில் 632

பாதாதி கேச பரியந்தம் பார்த்தும் உரு
காது ஆதி ஆகம் கடம்பு என்றுள்; — வாதாபி 633

சீரணம் என்றேன் செவியில் சேர்ந்த கனி வாய் இதழ் என்
வார் செவியில் வைத்து உரைக்க மாட்டாரயோ? — மார்பு
[அதனில் 634

சந்தனத்தைப் பூசும் இரு தையலார்தம் தனம் போல்
எம் தனமும் சேரில் இழிவு ஆமோ? — அந்தரத்தின் 635

மீன் ஆட்டும் காமநோய் வீட்டினை, இன்று ஓர் கொடியின்
மீன் நாட்டும் காமநோய் வீட்டியிடாய்! — நான் ஆட்டு 636

நாகப் பாம்பின் பை நயந்து உணர்ந்தால் உன்னை அதி
மோகப் பாஞ்சாலருக்குள் முன் மொழிவேன்;—சோகப் பூத் 637

தைத்து ஆவி சோராமுன், சார்ந்தவருக்கு அஞ்சல் எனும்
கைத் தாவியே அணையக் கண்டிலேன்! — எய்த்தேன் 638

துயிலைத் தடுத்த இராத் தோன்றின், இனி நீ ஏறும்
மயிலைத் தடுத்து இழுக்கவல்லேன், — கயிலை இறை 639

மைந்தன் நீ ஆனாலும், வந்து கனிவாய் முத்தம்
தந்தனையேல், செவ் இளநீர்தான் அளிப்பேன்; —
[கந்தன் எனும் 640

நாமம் படைத்து நயந்து எனைக் கூடாது அகன்றால்,
ஏமப் பொருள் அதனுக்கு ஏலாதே; — சேமத் 641

தணிகைத் தலம் அமர்ந்தாய் தண் மேகலையோடு
அணி கைத்தலம் அகல்வது ஆமோ? — திணிய முலைக் 642

காம்பு சுவைத்தால் கசக்குமோ? யாரேனும்
வேம்பு சுவைத்தால் வெறுக்காதே? — மேம்படுசீர் 643

நந்து பரி ஆசு அகத்தை நல்கு என்றாள்; புன்முறுவல்
தந்து பரியாசகம் செய் தன்மையர்போல், — சிந்தை 644

தளரும் விரகச் சலதி படிவித்துக்
குளவன் அயல் வீதி கொண்டான் — களப 645

முலை மாதர் ஓர் எழுவர் மோகிப்ப என்றும்
உலவாச் சேய் வந்தான் உலா. 646

**திருத்தணிகை உலா முற்றும்**

## 12. திருத்தணிகைக் கலம்பகம்

### வெண்பா

நல் அம்பகம் முந்நான்கு உடைய நல் தணிகை வேலோன்
கலம்பகத்தைப் பாட வழிகாட்டும் — சிலம்புஅகம் சேர்
வாலி பத்தி கண்டு எதிர்ந்தோர் வன்மை தந்தோன்
வாலி பத்தன், வால் இபத்தன் வந்து. [மைந்தன், என்றும்

### மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

நீர் கொண்ட சடைமுடியோன் நெற்றி விழிகளில் பிறந்து,
சீர் கொண்ட சரவணத்தின் செங்கமலம்மிசை வளர்ந்து,
கார்த்திகையின் முலைப்பாலும் கவுரிமுலைப் பாலும் உண்டு,
ஆர்த்த திரைக் கடலிடைச் சென்று அசுரர் குலங்களைத்
[தொலைத்து,
தேவர் சிறைதனை மீட்டு, தெய்வ மடப்பிடி மணந்து,
மூவர் தொழும் திருத்தணிகை முதுகிரியில் எழும் சுடரே!
(இவை மூன்றும் தரவு)

தீராத பவப்பிணியின் திருக்கு அனைத்தும் நீ கடைக்கண்
பாராதபோது ஒருவர் பாற்றுவதுதான் உண்டோ?
வேர் ஆரும் பயிர் வாட்டும் வெங்கோடை விசும்பின் மழை
நீர் ஆரப் பெயின் அன்றி, நீங்கிடுமாறு எங்ஙனே!
பூமி முதல் அண்டம் எலாம் பொருந்தியிடும் சராசரங்கள்!
நீ மனத்தில் ஒரு நிமிடம் நினைக்க, வளர்ந்து ஓங்கிடுமே!
கா மருவும் புனல் கரையில் கரு உயிர்த்துச் சேய்மை உறும்
ஆமை தன் பார்ப்பைக் கருதின் அன்றி அது வளராதே!
தருமங்கள் பல செயினும் தவம்தானம் மிகச் செயினும்
முருகு என்று மொழிந்திலரேல், முத்தி நலம் இழந்தவரே,
பிரமன் சங்கரன் மாயன் பினும் தேவர் யார்க்கும் உனைக்
குரு என்று நான்மறையும் கூசாமல் கூப்பிடுமே!
(இவை ஆறும் தாழிசை)

உலகு ஒரு நொடியினில் வலம்வரு மயிலினை!
அலை கடலொடு மலைகெட விடும் அயிலினை!
மணி, 'கணில் கணில்' என அறைதரு கழலினை!
பணி மணி வெயில் விரி பல கிரி மருவினை!
அடியொடு நடு முடிவு அறிவரும் அருவினை!
பொடி அணி அடியவர் புகழ்தரும் உருவினை!

(இவை ஆறு அடி அராகம்)

குன்றுதோருடல் பரங்குன்று அலைவாய் ஏரகம் சீர்
துன்று பழமுதிர்சோலை தொகும் ஆவினன்குடியாய்!

தானவரை வேரறுத்து, சயந்தன் உறு துயர் நீக்கி,
வானவரைப் புரந்து, சசி மங்கிலியம் தந்தளித்தோய்!

நாரணன் வாசவன் பரமன் நான்முகனுல் வெலற்கு அரிய
சூரன் உடல் துணித்து, மயில் சூட்டு வாரணம் செய்தோய்!

பொரு காற்றில் அலை சருகில் பூதம் இடர் செயும் கீரன்
முருகாற்றுப்படை இயம்ப, முன்வந்து தோன்றினையே!

மடம் முனிந்து செந்தமிழை வளர்த்து மலையத்து இருந்த
குடமுனிக்குப் பேரின்பம் கொடுத்தது நின் திருவடியே!

கருப் புகழ் ஆம் பிற சமையக் கதை கேளாது, அனுதினம் உன்
திருப்புகழை உரைப்போர்க்குச் சித்தி எட்டும் எளிது ஆமே.

(இவை ஆறும் இருமடித் தாழிசை)

மாலை நீந்து நீ, வேலை ஏந்து நீ,
வாழ்வது ஆக்கும் நீ, தாழ்வு போக்கும் நீ,
மறைகள் ஆயினை, குறைகள் போயினை,
வனம் நிலாவினை, புனம் உலாவினை,
மதி நிறுத்தினை, துதி பொறுத்தனை
மலம் அறுத்தனை, நலம் உறுத்தினை!

(அம்போதரங்கம்)

என ஆங்கு — (தனிச் சொல்)

தொண்டர்கள் புகழ்தரு சுப்பிரமணிய!
மண்டில மதிமுக வள்ளி நாயக!
உன் திருவடியை உளம்தனில் இருத்தி,
பல்மலர் தூவிப் பணிகுவன் யானே.

இறந்தும் பிறந்தும் இருவினைக் கயிற்றில்
யாப்புறும் உடலின் ஆசையைத் துறந்தும்
அன்பொடு கெழீஇ இன் அருள் புரிந்தும்
மேலாம் வாழ்வு பெற்றவர்
காலால் பணிப்பது என் கைகளால் செயவே.

(இது சுரிதகம்) 1

### வெண்பா

வேதாகமங்கள் மிருதி புராணங்கள் எல்லாம்
தாதா எனும் தணிகைச் சண்முகவா! — வா, தா,
பணிகள் தம் பை அஞ்சும் பரவை நிதம்பத்தாட்கு
அணி கடம்பை நீங்கும் அலர்! 2

### கட்டளைக் கலித்துறை

அலர் அம்பை ஏந்தும் அனங்கற்கு மைத்துனர், அம் தணிகை -
இலர், அம்பை மைந்தர்க்குத் தூது செல்லாமல், இரும் பொழிலில்
பல் அரம்பையின் கனி மாங்கனி கோதிடும் பைங்கிளியே! —
நல் அரம்பையாம் எங்கள் நங்கையும் வாடுவள் நல் நெஞ்சமே! 3

### பதினான்குசீர்க் கழிநெடில் விருத்தம்

நெஞ்சகம் உருக்கும் வஞ்சியர் களப
நெடுமுலை அணைதர நினையேன்;
நின் திருத்தணிகை மலை அணைதரற்கு
நித்தமும் நினைத்திடல் வேண்டும்;
வஞ்சகம் புரியுமவர் அலங்கார
வறும் புகழ் வேண்டிலேன்; வேண்டும்
வரம் பெறும் அருணகிரி நினை முன் நாள்
வழுத்து அலங்காரமும் புகழும்
தஞ்சகப் படைப்பின் தருக்கினால் அணைந்து, உன்
தாமரை மலர்ப்பதம் பணியாச்
சதுமுகன் சிரங்கள் குழிந்திடப் புடைத்துச்
சகம் எலாம் நொடியினில் படைத்து,

மஞ்சு அகம் சூழும் வேங்கடவரையின்
வந்து, அகலாது வீற்றிருந்து,
வள்ளியோன் ஆகி உள்ளியோர்க்கு அருளும்
வள்ளலே! வள்ளி நாயகனே! 4

**எழுசீர்க் கழிநெடில் விருத்தம்**

நாயகன் ஆகி நீ இருந்திடவும், நாயகன் இலாத வேசையர் போல்
தாய் அகட்டு உதித்து, மரித்திடும் தேவர் தம்மை யான்
[விரும்பிடத்தகுமோ? —
சாயகம் துரக்கும் வேடர் கற்புயத்தில் தமது கண்-சாயகம் துரந்து,
தோய் அகம் உருக்கும் மறத்தியர் பாடல் தொகும்
[தணிகாசலச் சுடரே! 5

**கலி விருத்தம்**

சுடர் உறும் அகத்து இருள் துலையுமாறுபோல்
இடர் இலை, நினைப் பணிந்து ஏத்துவோர்தமக்கு —
உடல்-உயிர் விரை-மலர் உரை–அதன் பொருள்
தொடர்பின் எங்கணும் உறும் தணிகைத் தோன்றலே! 6

**அறுசீர்க் கழிநெடில் விருத்தம்**

'தோன்றிய வகையும், காயம் துலைந்திடும் வகையும் ஆவி,
மூன்று எனும் மலத்தினலே முழுவதும், "யான்" என்று எண்ணி,
கான்ற சோறு என விடுத்தி, காதலை உலகத்து' என்றான் —
ஏன்ற சீர்த் தணிகை வெற்பின் எழில் பெறும் குமரவேளே. 7

(வேறு) **அறுசீர்க் கழிநெடில் விருத்தம்**

வேளின் கருப்புச் சிலைமலரே,
வேதன் எழுதும் தலைப்பொறியே,
மீளி நமன் கைப் பாசமே,
வேறு வேறு நீங்கள் எனை
நாளும் துயர்செய்து அலைத்தீர்கள்!
நான்போய்த் தணிகை வரையில் இவர்ந்து,
ஆளும் பெருமான் திருமுன்னர்
அறைவேன்; எனைவிட்டு, அகல்வீரே! 8

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

வீரவாகுவை முதலிய ஒன்பது
வீரர்க்கு முன்தோன்றல்,
பேர ஆகுவை ஊர்ந்திடு கரிமுகப்
பிள்ளைக்குப் பின்தோன்றல்,
ஆர வாகு ஐயிரண்டினோடு இரண்டினோன்
அருள் தணிகையில் — நெஞ்சே! —
சேர ஆகுவையாம்; பழி நீங்கி நல்
சிவகதி பெறலாமே. 9

### மறம்

### பன்னிருசீர்க் கழிநெடில் விருத்தம்

மேலாம் அரசன் தூதன் என விளம்பும் ஒருவ! யாம் தணிகை
வேடன் தனக்கு வள்ளிதனை விரும்பிக் கொடுத்த வேடர்காண்!
மாலாய் எங்கள் குலமகளை வதுவை பேச நினை விடுத்த
மன்னன் குரு பத்தினியுடனே மருவும் தூர்த்தன் தன் குலமோ?
சாலா மடந்தை உரு ஆகி, தாழ்ந்த கால் இலா முடவன்
தன்னைக் கூடி ஒரு குரங்குதனைப் பெற்றெடுத்தோன்
[சிறுகுலமோ?
ஏலா மகத்தில் ஒருவீரன் ஈரக் குறைந்த கரம் உடையோன்
இழிபாங் குலமோ? வெருவாமல் இயம்பாய்; தியங்கி
[மயங்காதே. 10

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

காதலாய் ஒருமயிலில் களித்து ஏறும் தணிகைவரைக்
கந்தன், யார்க்கும்
நாதனே எனத் தெளிந்த அருணகிரி நாதனும் முன்
நவின்ற பாவை
ஓதுவார் திருப்புகழ் என்று உலகினுள்ளோர்; அதற்கு நிகர்
உண்டோ? மற்றைச்
சாதல் ஆர் விண்ணவர்கள் தம் புகழைத் திருப்புகழாய்ச்
சாற்றிடாரே. 11

### கலிநிலைத் துறை

சாற்றுங்கோள், தென் தணிகையில் வேலோன் சரணத்தை;
போற்றுங்கோள், புது மா மலர் இட்டுப் புகழ்மின்கள்;
பாற்றுங்கோள், நும்பாலின் அடைந்தார் பசிநோயை;
மாற்றுங்கோள், உலகத்தினில் ஓடும் மனம் அன்றே. 12

### ஏழுசீர்க் கழிநெடில் விருத்தம்

அன்று நிலம், அன்று புனல், அன்று கனல், அன்று வளி,
அன்று வெளி, அன்று நவகோள்,
துன்று புலன் அன்று, பொறி அன்று, மனம் அன்று, உடல்
துவன்றும் உயிர் அன்று; துகள்தீர்
குன்றுதொறும் நின்று சுரர் சென்று தொழ, வந்து அவுணர்
குன்ற அயில் ஒன்று விடு நீ
தென் தணிகை அம் கிரியின் அன்று பரமன் செவி
திருந்த மொழிகின்ற பொருளே. 13

### வெண்பா

பொருளும் குலமும் புவியும் புகழும்
அருளும் அழகும் அறிவும் — 'தெருளும்
தணிகையாய்! அன்பர் உளம் தங்குவாய்! வை வேல்
அணி கையாய்!' என்பவர்க்கே — ஆம். 14

### தலைவி துன்பம் தலைவனுக்குப் பாங்கி உரைத்தல்
### கட்டளைக் கலித்துறை

ஆங்கு அலைக்கும், கலைக்கும், சம்பராரி அடு கணைக்கும்,
கோங்கு அலைக்கும் கலையத் தனத்தாள் அச்சம்கொண்டு விடப்
போம் கலைக்கும், கலைக்கும் கணக்கு இல்லை,—பொருப்பர் கைவில்
தாங்க அலைக்கும் கலைமான் பாய் தணிகைச் சயிலத்தனே! 15

### கலி விருத்தம்

சயிலம் ஒடியும் தாழ்சடை நீடியும்
பயிலும் மாதவத்தால் பயன் உண்டுகொல் —
மயிலும் சேவலும் வாழ் தணிகைப் பரன்
செயலது யாவும் எனத் தெளியார்கட்கே! 16

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

கேடு இல் திருத்தொண்டு எனக்கு அளித்தான்,
　　கிளத்து என் சொலைத் தேன் எனக் களித்தான்,
நாடும் குருவாம்படிக்கு வந்தான்,
　　நாலாம் பதவி தரற்கு உவந்தான்,
நீடும் தணிகைக் கரு மயிலன்,
　　நீங்காது அணி கைப் பொரும் அயிலன்,
பாடற்கு இசைந்து நடிப்பாரே
　　படர் நோய்வாய் மண்ணடிப்பாரே.　　17

### ஐயம்

### கலித்துறை

பாரோ, அமர் உலகோ, மலரோ, மலையோ, பணிகள்
ஊரோ? இடம் தெரிந்து ஓதற்கு அரிது! — வெய்யோன் கடவும்
தேர் ஓடும் வீதித் தணிகை அம் சாரல் செறி பொழில்வாய்,
காரோ குழல், அயில் கண்ணே என நிற்கும் காரிகைக்கே.　　18

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

காரிகையார் எதிர் நோக்க, மயில் ஆட,
　　கல் அருவி முழவம் காட்ட,
பேரிகை போல் முகில் ஆர்க்கும் தணிகையாய்!
　　நீ இவரப் பெற்றிடாயேல், —
தூரிகையால் எழுத அரும் நின் ஊர்தியினும்
　　கடிது உலகைத் துருவி ஓடிச்
சாரிகை ஆம் எனத் திரியும் எனது மனப்
　　பரிமாவைத் தடுப்பார் யாரே.　　19

### வெண்பா

யார்கொல் உலகு எல்லாம் இமைக்கும் முனம் சூழ்ந்திட்டான்,
யார்கொல் அழியாச் சூரன் ஆவி அட்டான், — யார்கொல்,
வனக் குறவர் சூழ் தணிகை வாழ்வான், — அவனே
எனக்கு உறவு, தாய் தந்தையே.　　20

### கலித்துறை

தந் தனம் தந் தனம் என்று இசை பாட, சலசமுகைத்
தம் தனம் தந்து, அன மானார் நடம் செயும் தணிகை வெற்பில்
தந்து அனந்தம் தனமும் கண்டிலாக் கந்தர் தாள் எனக்கே
தந்தனம் தந்தனம் என்றார்; இனி ஒரு தாழ்வு இல்லையே. 21

### கலி விருத்தம்

இல்லையும் பொருளையும் எமது என்று எண்ணுவீர்;
வல்லை வந்து இடர் செயும் மறலிக்கு என் செய்வீர்? —
செல்லை ஒன்றிய மதிள் தணிகைச் செல்வனை
ஒல்லை வந்தனை செயா உலகின் மாந்தரே! 22

### அம்மானை

மாந்தருடன் விண்ணோர் வணங்கும் தணிகாசலனார்
போந்து தலையோட்டில் இரப்போன் மகன்காண், அம்மானே!
போந்து தலையோட்டில் இரப்போன் மகனேயாமாகில்,
காந்தி விடும் ஆடகப் பொற்காசு உண்டோ அம்மானே?
கல்லார வெற்பு அடைந்தால் காசு அரிதோ, அம்மானே! 23

### வெறி விலக்கு
### நேரடி வெள்ளை விருத்தம்

மானைத் துடரா ஒருவன் கொலைதான்
ஏனப் பகை அம்புலியே! இனி நீர்,
கோனைத் தணிகா புரியில் குலவும்
தேனைக் கொணரீர்; சிதையும் துயரே. 24

### வெண்பா

துயரம் படையா என் தோகையிடத்தே வண்டு
அயர் அம்பு அடையாமல் ஆள்வாய்! — உயரும்
மணி காசு அலம்பு முலை வள்ளி மணவாளா!
தணிகாசலத்து உறை வேந்தா! 25

### காலம்

### எண்சீர்க் கழிநெடில் விருத்தம்

தாது வளர் கொன்றை அலர் தூற்றும் காலம்,
தமை நினைக்கப் பிறரும் அலர் தூற்றும் காலம்;
கோதுபட மா மதியும் உருக்கும் காலம்,
குலவிய விண் மாமதியும் முருக்கும் காலம்;
பாதகவேள் வாங்கிய வில் கணம் பெய் காலம்,
பைங்குவளை ஆகிய விற்கண் அம்பு எய் காலம்;
மா தணிகை இறை அகலம் அயலாம் காலம்,
வண்டு அணி கை இறை அகல மயலாம் காலம். 26

### இடையூறு கிளத்தல்

### கலித்துறை

கால் இலையாம் பணி காலும் மணித் தணிகாசலத்தின் -
பால் இலையாம் இடைப் பாவை நல்லாய்! அல்குல் பாற்கடல்மேல்
ஆலிலை மீது வைகும் தனம் காட்டினை, ஆங்கு அதற்கு
மேல் இலையாம் கைலாயத்து இருக்கை விளக்குகவே. 27

### முடுகு விருத்தம்

விளக்கின் ஒளிக்கு விருப்புறு விட்டின்
வளத்தின் அயற்பெண் வனப்பை நினைத்தே
இளைத்து நிலத்தின் இறக்க வழக்கோ? —
களித்த திருத்தணிகைப் பதியானே! 28

### ஆறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

'பதியே பிரமம்; பசு நீயே; பாசம் உடல் ஆம்; பாசத்தால்
உதியா மரியா உழல்கின்றாய்; ஒருவிப் பாசம், பதியாக
மதி நீ; என்றும் அழியாதவகை ஈது' என்றான் — ஆரணங்கள்
துதியே பெருகும் தணிகைவரைத் தோன்று ஞான சூரியனே. 29

### பாகனெடு கூறல்

### கலித்துறை

சூரியன் தேர்ப் பரிபாகன் உன் ஆண்மைக்குத் தோற்றனன் என்று
யாரும் அறிதர, 'பங்கன்' என்று ஏசுவன், யான்; — வலவ! —
நாரியின் கண் - அம்பு தூவ, தணிகை நல் நாட்டில் இந்தக்
கார் விரைந்து ஓடுமுன் தேர் விரைந்து ஓடக் கடாவிடினே. 30

### வறுங்களம் நாடி மறுகல்

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

கடாவு மணிப் பொற் கவண் சுழற்றி,
  காவற்புனத்து, 'ஆலோ' என்னும்
படா மென் முலையார் வாய்க் குரலும்
  பைந் தாள் தினையின் காய்க் குரலும்
விடாது கவர்ந்து தணிகையில் போய்
  மீளும் தொழிலே மிகும் கிளிகாள்!
உடாது உண்ணுது இதனெடும் காத்து
  உறைந்தார் எங்கே மறைந்தாரே! 31

### வண்டு விடு தூது

### வெண்பா

மறை ஆகமங்கள் தொழும் மன்னன் தணிகைக்கு
இறை ஆகம் இன்று அணையவேண்டும் — துறையாகச்
செந்தேன் உண்ணும் தேனே! சென்றே தூது அங்கு அவனைத்
தந்தேன் என்றால், அளி நீதான். 32

### இடைச்சியைப் பழித்தல்

### கொச்சகக் கலிப்பா

தானம்தான் என்று எவரும் சாற்று தணிகைக்கிரிமேல்
வானம்தான் என்னும் இடை வல்லி, இடை மெல்லியலே!
மோனம்தான் ஆகாது; உன் மோர்க்குடம் பின்பாக விலை;
நீ நந்தாதே சொல் இளநீர்க்குடம் முன்னும் விலையே. 33

### கலி விருத்தம்

விலை இலா மணி மேவும் திருத்தணி
மலையினான் தனை வஞ்சர், தம் நோய் எலாம்
துலையில் யாம் தொழுவோம் பின்பு என்பார், கடல்
அலை இலாப் பொழுது ஆட நின்றார்களே. 34

### இரச வாதம்
### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

கள் உலாம் பூங்குவளை முப் போது
 முப்போதும் கயத்துள் நாளும்
விள்ளும் மால்வரைத் தணிகை இறைக்கு அடிமைச்
 சித்தர் யாம், மெய்யாய்க் கேள் நீ:
கொள்ளிபோல் சுடும் பசிக்குக் கூழ் ஒரு கை
 வார் அப்பா! குவலயத்தில்
உள்ள நீள் வரை அனைத்தும் உருக்குகை சேர்
 கனகம் என உரைப்போம் நாமே! 35

### தழை கொடு விறைதலில் தலைவி கையுறை ஏற்றமை பாங்கி தலைமகற்கு உரைத்தல்
### வெண்பா

உரைத்தாள் உயிர் எனவே; ஒற்றினாள் கண்ணில்;
வரைத் தாம் எனும் முலைமேல் வைத்தாள்; அரைத்து உருட்டித்
தின்னாள்; இது அன்றிச் செயாதது இலை; — தென் தணிகை
மன்னா! நின் பூந்தழை — எம் மான். 36

### ஊசல்
### எண்சீர்க் கழிநெடில் விருத்தம்

மானவரும் வானவரும் வணங்கிப் போற்ற,
 வரம் உதவும் தணிகைவரை வள்ளல் கூறும்
ஞான மரக்கலம் இவரா உயிர்கள் யாவும்
 நாள்தோறும் நனி விரும்பித் தாம் செய்கின்ற
ஈனம் உறும் இரு வினையாம் திரைகள் வீச
 இவ்வாறு பவக்கடலூடு அலைவர் என்ன,
பானல் அன விழி மடவீர்! இரண்டு பாலும்
 பாங்கியர்கள் நின்று ஆட்ட, ஆடீர் ஊசல்! 37

### கழிக்கரைப் புலம்பல்
### மடக்குத் தாழிசை விருத்தம்

ஊசல் அஞ்சலம் அனத்தியே மிகவும்
மூசலம் சல மனத்தியே!
ஒருவில் அம் செய் கரும் பெண்ணையே மதன் ஒரு வில்
அஞ்செய் கரும்பு எண் ஐயே!
வாசம் வீழ்ந்த மலைத் தென்றலே இடையின்
வாசம் வீழ்ந்து அமலைத்து என்றலே
வளைமுன் போக்கிய திருக்கையே கழலும்
வளை முன் போக்கியது இருக்கையே
பாசமாம் கொடிய நெய்தலே புணரும்
பாசம் ஆங்கு ஒடிய நெய்தலே
பார்ப்பின் ஆண்டு அருமின் நாரையே இனி என்
பார்ப்பின் நான்தரும் மிறைரையே
காசு அரும்பிய அம் புன்னையே பிறர்சொல்
காசு அரும்பிய அம்பு உன்னையே
கந்தன் ஓடிவரத் தணிகையே விரகம்
கந்தனோடு இவரத் தணிகையே. 38

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

தணிகை என்று ஒரு கால் ஓதின்,
சாலோக பதவி எய்தும்;
தணிகை என்று இருகால் ஓதின்,
சாமீப பதவி சாரும்;
தணிகை என்று உரைக்கின் முக்கால்
சாரூபம் நண்ணும்; செவ்வேள்
தணிகை என்று உரைக்கின் நாற்கால்
சாயுச்சியம் அடைவர் தாமே. 39

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

தாங்கு மயில் வாகனமோ, உமை குறங்கோ, கந்தமா
தனமோ, தீமை
நீங்கு மறையின் சிரமோ, வல்லி படர் தினைப் புனமோ,
நிலமீது இன்னும்

ஓங்கிவளர் பல் நகமோ, என் அகம்தான் எந்நாளும்
ஒழியாது உற்ருய்!—
தேங்கு புனல் சடைமுடியோன் அளித்த திருத் தணிகைவரைத்
தேவர் தேவே! 40

### கட்டளைக் கலித்துறை

தேவேந்திரன் உதவும் தெய்வயானை திருக்கணவ!
கோ ஏந்து இரவி முடி சேர் தணிகைக் குமர! ஒரு
மா ஏந்திரம் என வல் வினையால் இங்ஙன் வந்து உதித்துச்
சாவேம், திரம் என நின் திருநாமத்தைச் சாற்றிலமே! 41

### புய வகுப்பு

### எண்சீர்க் கழிநெடில் விருத்தம்

இலகு ஆர முத்தினொடு மன்னி ஒளிர்கின்றன,
இசை நீடி எத்திசையும் நண்ணி வசை சிந்தின,
பல தானவக் கொடியர் வெந்திட முனிந்தன,
பயன் ஆகும் நற்புலவர் பன்னு கவி ஒன்றின,
மலர் நீலம் முப்பொழுதும் முன்னுற அணிந்தன,
மகமேரு வெற்பு முதல் எந் நகமும் அஞ்சின,
தலம் ஏழ் இரட்டி உறும் மன்னவர் பணிந்தன,—
தணிகாசலக் கடவுள் பன்னிரு புயங்களே! 42

### மேகத்தோடு கூறல்

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

புயலினங்காள்! என்மீது பழி இலை ஆதலின்
உமக்குப் புகன்றேன் முன்னர்;
வயலினம் ஆர் தணிகையைச் சூழ் முல்லையில் நீர்
எனக்கு முனம் மருவுவீரேல்,
துயர் உறும் ஓர் கொடி இடையால் பலம் இனும் போம்;
இருவில்லால் துலையும் ஓர் வில்;
பயம் உறும் ஓரிரண்டு அம்பால் நீர் கொடுபோம் அம்பு
எல்லாம் பறிபோம் அன்றே. 43

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

அன்று சுரர் வாதனை தவிர்க்கும்;
    அசுரர் குலம் வேர் அற அடர்க்கும்;
குன்று பொடியாம்படி துளைக்கும்;
    குகையுள் படும் கீரனை விடுக்கும்;
என்றும் அடியார் உளத்து இருக்கும்;
    இரவி சதகோடியின் சிறக்கும்; —
மன்றல் கமழும் திருத்தணிகை
    வரதன் குடங்கைத் தனி வேலே. 44

### வெண்பா

'வேல் ஏந்தும் கையான் வியன் தணிகை அண்ணல் இரு
கால் ஏந்தும் கைகளே கைகள்; அவன் நூல் ஏந்து
நல் நாவே நா; அவனை நாடும் மனமே மனம்' என்று
அன்னுன் மறை பகருமால். 45

### அகவல்

மால் அயன் தொழுதிடும் ஆலயம் பலவினும்
மேவிய சிவன் அமர் வெள்ளி மால் வரையினும்
மந்த மாருதம் தவழ் கந்தமாதனமும்
கருப் பரம் குன்றிடு திருப்பரங்குன்றமும்
5 நந்து இலம் படு பணைச் செந்தில்அம் பதியும்
தா இல் நன்குடி உறு ஆவினன்குடியும்
மருவு ஏர் அகம் கொளும் திருவேரகமும்
துன்றுதோறு ஆடல்செய் குன்றுதோருடலும்
மழை முதிர் சோலை சூழ் பழமுதிர்சோலையும்
10 மணி கை ஆர்ந்து அருவி தாழ் தணிகைமால்வரையும்
மற்றுள வரையினும் வாழ்தரு முருக!
வீறு மதி நிகர் ஆறு முகவ!
மூறு இதழ்க் கமலம் நேர் ஆறிரு விழிய!
பன்னிரு வரை நிகர் பன்னிரு புயவ!

15 கன்னியர் இருவர் கலந்து அணே மார்ப!
அறு சமையத்தரும் உறு சமையத்த!
தேவ தேவ! நின் திருவடி பணிகுவன் —
குழல் சைவலமும் குலவு கண் குவளேயும்
திருமுகக் கமலமும் செவ்வாய்க் குமுதமும்
20 துணேச் செவி வள்ளேயும் துவர் இதழ்ப் பவளமும்
கந்தரச் சங்கமும் கவின்ற பல் முத்தமும்
உந்தியம் சுழியும் ஒளிர் தனவெற்பும்
அருகு இடைக் கொடியும் அல்குல் பைந்நாகமும்
முழந்தாள் அலவனும் முன்கால் வராலும்
25 பஞ்சு அடி யாமையும் பரந்திடு மாதர்
அழகு எனும் இனிய மெய் ஆம் கடல் அழுந்தி
இரு விணேத் திரைகள் பொருது அழித்து அலேப்ப
விரகக் கொடுவளி அரிது எழுந்து எறிய,
காமன் விடும் கணேக் கராவும் அங்காப்ப,
30 திகைத்திடுவேனே நின் செங்கையால் பற்றி
எடுத்து அருள்-புணே சேர்த்து, இகல் அற நடாத்தி
அக் கடற்கே செலும் ஆற்ரெடு புணரிய
இக்கரை மருவாது என்னே நாதாந்தம் என்
அக்கரை மேல் விடுத்து ஆஅஅ
35 மெய்க் கமலக் கழல் வீடு தந்து அருளே! 46

## கலித்துறை

அருள்-ஆர்கலி அளித்து, என்னே மின்ஞர் கருப்பாசயத்தின்
இருள்-ஆர் கலி தவிர்த்து ஆளும் தணிகை இறைவர் தம் தேர்
உருள் ஆர் கலித்தது; அவரும் வந்தார்; தந்த உட்பல்மிசைப்
பொருள் ஆர் கல்யாணமும் செய்வது உண்டாம், நமர்; —
[பூங்கொடியே! 47

## ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

கொடிக் குரம்பையில் உற்ருலும்
குயிற் குரல் கொடிக்கு உண்டாமோ?
மிடிக்கு உடம்பான என்னுள்
மேவினும் நினே யான் காணேன்! —

சடிக் குடங்கை சேர் நெல்லிக்
கனியின் ஞானத்தை வேணி
முடிக் குடமுனிவன் காதில்
மொழி திருத்தணிகை வேந்தே! 48

(வேறு) **ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்**

வேந்தர் ஆக்கும் வறிஞோரை;
விண்ணோர் ஆக்கும் மண்ணோரை;
சாந்தர் ஆக்கும் சினத்தோரை;
தவத்தோர் ஆக்கும் அவத்தோரை;
காந்தம் ஈர்க்கும் இரும்பு என என்
கருத்தை அடியார் அடிக் கூட்டும்; —
சேர்ந்த வாழ்க்கைத் திருத்தணிகைத்
தேவன் அணியும் திருப் பூச்சே. 49

**கலிநிலைத் துறை**

பூசலை உற்றாய், சங்கு அணி அற்றாய், பொறி அற்றாய்,
வாசமும் அற்றாய், — அன்னமும் மன் தாமரை மொட்டே! —
ஆசு இல் எழுத்து ஆறு ஆர் தணிகைப்பால் அமர் வேட்டுப்
பாசறை உற்றார் ஆசை உனக்கோ? பகராயே! 50

**சந்தக் குறள் விருத்தம்**

பகலோடு இரவு அற்ற இடம்தனைப் பாவியேன் கண்டு
இகல் ஆர் மலம் அற்று இருக்கும் வகை என்று சொல்லாய் —
சகம் ஊரும் என் நெஞ்சப் பரியொடு தாவின் மஞ்ஞை
ககம் ஊர் தணிகைக் குறமாதினைக் கள்ளியானே! 51

**பதினான்குசீர்க் கழிநெடில் விருத்தம்**

கள்ளியின் மலர் ஆர் கிள்ளி மேல் அணிவார்?
காஞ்சிரங் கனியை யார் நுகர்வார்?
கருப்பு எனத் தழை பேய்க் கரும்பை யார் கறிப்பார்?
கருங்கடல் நீரை யார் குடிப்பார்?

உள்ளின் அங்கு அவைபோல் வெள்ளி பொன் மலையாய்
ஓங்குறத் தாங்கி வாழ்ந்திடினும்,
உற்றவர்க்கு உதவா உலோபர்தம் திருவை
உலகிடத்து எவர் விரும்பிடுவார்?
கொள்ளியின் மலரும் அள் இதழ்க் காந்தள் -
குலங்களை அருக்கனும் மதியும்
கோள் அரா இனம் என்று அஞ்சி நாள்தோறும்
குலவரை அருகிலே நடக்கும்
தெள்ளிய தணிகைப் பதியினில் அடைந்தோர்
தேடிய காசு எலாம் நொடியில்
தெட்டியே பறித்து ஓர் பட்டிமண்டபத்தில்
சேர்த்திடும், செட்டியான் அவனே. 52

## கட்டளைக் கலித்துறை

யானே அவன், அவன் யானே எனக்கொண்டு இருந்தும், அவன்
தானே பல் மாயங்கள் செய்தே ஒளிக்கின் தடுப்பவர் யார்? —
மா நேயம் ஆகிய நெஞ்சே! தியங்கி, மயங்குவது என்? —
கான் ஏய் கடம்பன் தணிகாசலன் செயல் கண்டனமே. 53

## எண்சீர்க் கடைத்திருகு விருத்தம்

கண்ட மலை பயந்தாரும் பண்டு அமலை பயந்தாரும்
கருந்தினை மா ஏற்றாரும் வருந்தி நை மா வேற்றாரும்
தண் தலை ஆறு ஆனாரும் விண்டு அலை ஆறு ஆனாரும்
தானவர் நாடு அளியாரும் வானவர் நாடு அளியாரும்
கொண்ட கல்லாரத் தாரும் விண்ட கல் ஆரத் தாரும்
குலவு முகம் ஆறு நம் புலவுமுகம் மாறாரும்
புண் தரும் அயிலாரும் எண் தரும் மயிலாரும்
பொருந்து அணி கை வரையாரும் திருத்தணிகை
[வரையாரே. 54

## வெண்பா

வரையாய் — தணிகை வரையாய்! இவளை;
புரை ஆகும் நீ இரவில் போந்தால்; கரை காணா
மின் இடையும் பொய் என்பர்; வில் வேடர் சேமித்த
என்னிடையும் பொய் என்பரே. 55

### வாமம்

### எண்சீர்க் கழிநெடில் விருத்தம்

பொய் இல் அறு சமயங்கட்கு இறையான் என்னப்
பொருந்து ஆறுமுகம் படைத்த தணிகை வேந்தன்
கை இலகு சத்தி சமயத்திற்கு ஏற்கும்
கள்ளுடன் மாங்கிசம் எனவே கருதி அன்றே —
செய்ய சிவன் திருப்பனங்காடு அகலாது உற்றான்;
திருமாலும் குடம் உகந்தான்; மதன் மீன் ஏற்றான்;
ஐயனொடு புரந்தரன் வாரணம் வளர்த்தான்;
அயனும் மரைப் பங்கயமேல் விழைவுற்றானே. 56

### கொற்றி

### கலிநிலைத் துறை

உற்றவருக்கு அருள் நல் தணிகைப்பதியூடு ஏகும்
மற்று இவள் கொங்கை நகக் குறியும் பிறை வகிரும்போல்,
நெற்றி இடும் திருநாமமும் நீலி நெடுஞ் சூலம்
கொற்றி எனும் திருநாமமும் நீலி கொளும் பேரே. 57

### பிச்சியார்

### கட்டளைக் கலிப்பா

பேர் பெறும் தணிகைப் பொருப்பு இச்சியார்,
பெண்கள் ஏச நடந்திடும் பிச்சியார்;
ஏர் கொள் வீடு எங்கும் ஏற்பர் பதத்தையே;
இசையும் கஞ்சம் இவர் தம் பதத்தையே;
வார் தரும் குழல் ஆம் மஞ்சு வர்க்கமே;
வந்து அணைந்தவர்க்கு ஆம் அம் சுவர்க்கமே;
சீர் கொள் பூதி என்றும் தரிப்பரே;
செப்பும் வேடங்கள் மற்றும் தரிப்பரே. 58

### ஆறுசீர்ச் சந்த விருத்தம்

தரித்த சக்கரத்தை ஏவ தனது மார் மதாணியாய்ப்
பொருத்தி, மாயன் ஓட, அன்று பொருது, தாரகன் தலை
அரைக் கணத்தில் அற்று வீழ, அங்கைவேல் எறிந்தவன் —
திருத்தணிப் பொருப்பில் நின்ற தேவன் எங்கள் தேவனே! 59

### சிந்தடி விருத்தம்

தேவர் ஆலும் திருத்தணிகேசனை
பூவரால் அடி போற்றிப் பணிகலாப்
பாவர் — ஆலைப் படு கரும்பு என்னவே
ஆவர், மாதர் அல்குல் புழைக்கணே. 60

### எண்சீர்க் கழிநெடில் விருத்தம்

புழைக்கை யானை ஒர் பார்வை ஆக்கி முன்
போதவே விடுத்து, ஆதரத்துடன்
தழைத்த கான் மனும் வல்லி அம் குசத்
தான மா இரண்டு அணையக் கண்டு, உவந்து,
இழைத்த மாதவத் தெய்வயானை சேர்
எழில் புயங்கள் ஆம் தறியில் பூட்டினன்
மழைக் கணங்கள் ஆர் தணிகை வேள்தன் ஆண் -
மைத் திறத்தை யார் புகல வல்லரே. 61

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

வல்லை வரும் ஒரு மாவில் அரைமாவின்மேல்
இரு கால் வைத்தான், மற்றும்
சொல்லும் அரைமாவை அமர் முந்திரி கை
மேல் வைத்தான், தோகை என்றும்
வெல்லுறும் குக்குடம் என்றும் ஆங்கு அதற்குப்
பெயர் புனைந்தான், விரும்பி வாழும்
இல்லம் எனது அகமும் மறைமுடியும் எழில்
தணிகையுமாய் இடங்கொண்டானே. 62

### வண்டு ஒச்சி மருங்கு அணைதல்
### கட்டளைக் கலித்துறை

கொண்டல் உலாவும் தணிகாசலன் பதம் கூறலர்போல்,
வண்டர்களே! ஒரு காரிகை ஒதி மயங்குகின்றீர்;
துண்டமதாம் மெல்லின வல்லினம் தலைச் சொல்லுவது என்?
கண்டமது ஆகும் இடையினம் நீர் தலைக்கண் உறினே. 63

### வெண்பா

வற்றுச் சுனையில் மலராத பைங் கழுநீர்
குற்றுது அணியும் குமரேசா! — கற்றோர்கள்
போற்றும் தணிகைப் பொருப்பா! என் தீவினைகள்
மாற்றும் வகை ஓதுவாய்! 71

### ஆறுசீர் விருத்தம்

வாய் உன் புகழே துதித்திடவும், மனது உன் வடிவே நினைத்திடவும்,
தூய நின் தாள் கரம் தொழவும், துணைத்தாள் கோயில் வலம்வரவும்
நீ இங்கு இவையே எனக்கு அருள்வாய், நிலம் பொன் மாதர்
[வேண்டிலன் யான்;
காயும் கதிர் கால் மணி அருவி கறங்கும் தணிகைப் பெருமானே! 72

### பதினான்குசீர்க் கழிநெடில் விருத்தம்

பெரிய குன்றம் அட்டும், நெஞ்சு என்
கரிய குன்றம் அட்டிலாய்;
பிறழும் வேல் பிடித்தும், என்தன்
பிறவி வேலை நீக்கிடாய்;
வரியும் வேதனைத் தடுத்தும்,
மாரன் வே-தனைத் தடாய்;
வணிகன் என்று இருந்தும், என்னுள்
மருவு காசை மாற்றிலாய்; —
அரியும் அஞ்ச, அரனும் அஞ்ச,
அயனும் அஞ்ச, உம்பரோடு
அண்டர்கோனும் அஞ்ச, அண்டம்
ஆயிரத்தோடு எட்டினும்
திரியும் வஞ்ச ஆணையே
செலுத்து சூரன் அஞ்ச, முன்
சிறிது கண்கள் கடை சிவந்த
தென் தணிகைக் குமரனே! 73

### கட்டளைக் கலித்துறை

'குமரா! திருமால் மருகா! முருகா! கொடியோரைச்
சமர் ஆடிய மா மயிலா! அயிலா! தணிகேசா!
அமராபதி காவலவா! தொலைவு ஆம் அலம் என்றே —
நமர்காள்! — உரையீர்; நலம் ஆர் கதி நாம் பெறலாமே. 74

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

பெற்றாலும் இனி ஒருவர் எனைத் தணிகை
வரையகத்தே பெறவும் வேண்டும்;
உற்றாலும் அருந்தவங்கள் அவ்வரைக்கே
உறல் வேண்டும்; உயர்ந்த கல்வி
கற்றாலும் உமது திருப் புகழ் - அமுதே
நாள்தோறும் கற்க வேண்டும்;
செத்தாலும் இவ் உடலம் அத்தலமீது
உற வேண்டும்; — சேந்தனாரே! 75

### வெண்பா

சேந்த விரல் உகிரால் செவ்வழியாழ் வாசித்துப்
போந்து இச்சைகள் பேசும் பொய்ப் பாணா! — நாம் தரைமேல்
மட்கலம் ஒப்பாயினேம்; வண்தணிகை ஊரற்குப்
பொற்கலம் ஒப்பார்க்கே புகல். 76

### கட்டளைக் கலித்துறை

புகலாய், இரவும் பகலும் — தணிகைப் பொருப்பில் எழும்
பகல் ஆயிரம் அன்ன சேயோன் புகழை; பாழ் வயிற்றுக்கு
இகலாய் இரந்து இரந்து எய்ப்பது நீங்கிலை என்று நல்லோர்
நகலாய் இரங்கவும் நாணம் உறாய், — எந்த நாளும் நெஞ்சே! 77

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

நாளே பிரமம் என்பாரும், நானே பிரமம் என்பாரும்,
கோளே பிரமம் என்பாரும், குணமே பிரமம் என்பாரும்,
தாளே ஊழைப் பிரமம் எனச் சாற்றுவோரும், தணிகைவரை
வேளே பிரமம் என்னாமல், வீணே பிறப்பில் உழல்வாரே! 78

### எண்சீர்ச் சந்தத் தாழிசை விருத்தம்

உழலும் ஒரு கொக்கை அட்டு, ஓர் கொக்கு அடியில் இருந்தார்;
ஒரு மயிலை இவர்ந்தது அன்றிச் சேவலைக் கைப் பிடித்தார்;
அழகிய செம்படன் மகளைய் ஆலவாய் நின்றுர்;
ஆரலின்பால் ஆசை கொண்டு ஓர் பொய்கையிடத்து
[இருந்தார்;
குழவி எனப் பொலிந்து குறிஞ்சிக் கிழவன் ஆனுர்;
கொடுவேங்கை ஆகி ஒரு குறமானைப் புணர்ந்தார்;
தழை உடுக்கும் வேடரொடு மலைகள் தொறும் சரித்தார்;
சாற்றில் வசை ஆம், தணிகைச் சண்முகர்தம் செயலே. 79

### வெண்பா

தம் செயலே யாவும் எனச் சாற்றித் தணிகை இறை
நம் செயலைப் போக்கி நலம் அளித்தான் — நெஞ்சமே!
என்னே, உலகத்தில் யான் எனது என்றே இன்னும்
அன்னே கிடந்து அழிகுவாய்! 80

### எழுசீர்க் கழிநெடில் விருத்தம்

ஆய என் உளம் ஆம் கோயிலின் மருவும்
அருள் தணிகாசல அமரர்
நாயக சிரம் ஓர் ஆறு உடையார்க்கு
நற்சிரம் ஐந்தினேன் உயரில்,
தூயவன் அவனில் நாற் சிரமுடைய
சுருதி வானவன் உயர்குவனுல்;
மாயை ஆர் உலகத்து ஓர் சிரத்தவரும்
மற்றவர்க்கு உயர்ச்சி ஆகுவரே! 81

### ஆறுசீர்ச் சந்த விருத்தம்

ஆகுவாகன னேடு ஒரு மாங்கனிக்கு அன்று அமர் ஆடிய நாள்,
ஏக நாயகன் இவ் உலகைச் சுழன்று இக்கணம் முன்வருவோர்க்கு
ஈகுவேன் கனி என்னலுமே மயில் ஏறி இமைப் பொழுதில்
வேகமாய் வரும் நின் கழல் தந்தருள், —மெய்த் தணிகாசலனே! 82

### எழுசீர் முடுகு விருத்தம்

காசி காஞ்சி முதலாம் தலங்கள் மிகு
　　காதல் கொண்டு நடமே செயும்
ஈசனுர் கயிலே வாசனுர் நகையில்
　　எழில் கொள் முப்புரம் அழிந்ததால்;
தேசு உலாம் தணிகை வாசனுர் முருகர்
　　செய்ய வாயில் இள முறுவலால்,
மாசு உலாவியிடும் எனது முப்புரமும்
　　வலி அழிந்து இமையின் மாயுமே.　　83

### மதங்கி

### ஆறுசீர்ச் சந்த விருத்தம்

மேகம் சூழ் தணிகாசலர் வீதி மேவு மதங்கிதன்
பாகின் ஆகிய செஞ்சொலால், பண் மறந்தனர் விஞ்சையர்;
ஆகும் ஆடலினுல், நடம் அரம்பை தப்பினள்; சக்கர -
வாகம் ஆம் முலேயால், துறவைத் துறந்தனர் முனிவரே.　　84

### எண்சீர்ச் சந்தத் தாழிசை விருத்தம்

முனிவோர் தொழும் தணிகாசலர் முன்பு ஏகுதும் என்றே
　　மொழிந்தே எழுந்தனன் அங்கு அதன் முன்பே விணமலேதான்
இனி ஏது அரணியில் கொன்றிடும் என்றே அழிந்ததுவால்;
　　இவ்வாறு பிறப்பு ஆம் கடல் ஏழும் கிழிந்தது பின்;
உனி மூல மலச் சூர்மரம் ஓங்கும் கிளேயுடனே
　　ஒடிந்தே விழுந்தது; மற்று அதற்கு ஒரு நல் துணே ஆகும்
தனி மாயையின் வலி சிந்தின; நமர்காள்! அவன் நகரில்
　　தம் காதலின் அடைவார் செயல் சாற்றற்கு எளிது ஆமே!　85

### குறளடி விருத்தம்

தாமதங்கள் தவிர்ந்து நின் நாமம் என்றும் நவின்றிடற்கு
ஓம் எனும் பொருள் ஓதிடாய், ஏமுறும் தணிகேசனே!　　86

### வெண்பா

நேற்று இருந்தார் இன்றைக்கு நீறு ஆனுர் என்னும் அறம்
பார்த்தும் உடல்மீது ஆசைப்பட்டாயே! — தூர்த்த நெஞ்சே! —
என்று தணிகேசன் இரு கழற்கு அன்பு ஆகுவையோ?
நின்று எனக்குச் சற்று உரைசெய் நீ.　　87

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

நீயும் ஒரு விண்மகளை மணம் புரிந்த செயல் அறிந்தேன்;
நின் பிதா முன்
போய் ஒரு விண்மகளை மணம் புரிந்ததனால்; அஃதன்றிப்
பொருப்பர் ஈன்ற
நாயகி ஆம் வல்லிதனை மணந்தனை நீ; அவனும் ஒரு
நகமதாம் என்
தாயை மணம் புரிந்ததனால்; தந்தையைப் போல் உனக்கும் இரு
தாரம் வாய்த்தது; —
ஆயர் அறு மீன் முலை உண்டு ஒரு குளத்தில் வளர் தணிகை
அமரர் ஏறே! 88

### எழுசீர்ச் சந்த விருத்தம்

ஏறு ஆகி மாதர் எழில் கண்டு கூடும்
இடம் எங்கும் நாடி உழலா,
வேறு ஆகி உன் தன் அடியார் இனத்தை
விழையேனை ஆள்வது இலையோ? —
மாறு ஆகி மந்தி மரம் ஏறி அந்தி
மதி வாங்கி ஓங்கு பலவின்
தாறு ஆர் பழங்கள் சுளை கீன்று அருந்து
தணிகாசலக் கடவுளே! 89

### கலித்துறை

கடக் குஞ்சரம் நிகர் என் மனது அண்டம் கடந்து இமைப்பின்
நடக்கும்; சரம் என நில்லா; நிறுத்தவும் நான் அறியேன்;
அடக்கும் சரசம் எனக்கு உரையாய்; — புகழ் அட்டதிக்கும்
நடக்கும் சரவண மன்னு! தணிகை நல் நாட்டினனே! 90

### சித்து

### எண்சீர்ச் சந்த விருத்தம்

நாடரு நீள மலைகளைப் பிசைந்து நுகர்ந்திடுவோம்;
நன்று எழு வாரியும் கரகம் பெய்து குடித்திடுவோம்;
நீடும் எழுவகை லோகங்களைத் தூக்கி நிறுப்போம்;
நிலத்தையும் ஓர் அடி ஆக்கி நிலாக் கலையைத் தரிப்போம்;

பாடுறு வேதனைக் கமலக்கண்ணன் ஆக்கிடுவோம்;
பண்ணரியைப் பரியாகப் படைப்போம் இவ் உலகத்தில்
தேடரும் சீர்த் தணிகை வரைச் செவ்வேள் தன் அருளால்,
சிவனை நொடித்தான் மலையில் தெளிவிப்போம் நாமே. 91

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

தெளியாப் புனலைத் தேற்று வித்தால்
தெளிய உரைக்கு மாறதுபோல்,
விளியாது எனைச் சூழ் ஆணவத்தை
விளியக் கடைக்கண் சிறிது அளித்தான்; —
வளி ஆர் உலகம் மூன்றிலும் தன்
மகிமை முகிழ்ப்ப, வைகல்தொறும்
நளி ஆர் குவளை மூன்று அலரும்
நகத்தான், தணிகையகத்தானே. 92

### கொச்சகம்

அகம் மலர விழி இரண்டும் அருவி சொரிதர நினது
முக மலரோ மூவிரண்டும் மொழிந்து உருகும்படி அருளாய்! —
நக மலரும் கயிலேதனை நற்கீரற்கு அன்று அளித்து,
சகம் மலரும் புகழ் படைத்த தணிகைவரைக் குருபரனே! 93

### ஆறுசீர்க் கழிநெடில் விருத்தம்

குருபர! நீ தாரகனை அடுதலினால், சக்கரம் கைக்
கொண்டான், மாயன்;
வரம் உறும் ஓர் வெண்கரியை அளித்ததனால், பெண்கரியை
வலாரி ஈந்தான்;
பிரமனைமுன் சிறை செயலால், பரமனும் தாழ்ந்து உபதேசம்
பெற்றான்; நின்போல்
ஒருவரும் நேர் இலை நினக்கு; — திரிகூடம் ஆம் தணிகை
ஓங்கலானே! 94

### கட்டளைக் கலித்துறை

ஓங்கு ஆதரத்தில் பிறர் தீங்கை நாளும் உரைத்து, எனது
தீங்கு ஆயிரமும் கரந்தேனை ஆண்டனன், தென் தணிகை
நீங்காத வேலவன்; இஃது அறிந்து என்தனை நீடு உலகில்
பாங்கு ஆர் குறத்தித் திருடன் என்று ஏசும் பயன் அறிந்தே. 95

### எண்சீர் விருத்தம்

பயன் பெறு மூவுலகின் இலா அழகு உற்றுலும்,
பரமன் நுதற்கண் தீயால் அருவம் ஆனுய்;
நயந்திடு சாபம் கருப்புப் பூ அம்பு ஏந்தி
நாண் மிகுத்த வண்டர் குணம் அடுத்து நின்ருய்;
உயர்ந்து பிடித்திடு துவசம் மீனம் ஆகி
உறுபடை பெண் கூட்டமதாம் மதனு! நீதான்
வியந்த திருத் தணிகை வரைச் செவ்வேளைப் போல்
மேல் ஆகாய், வேள் எனும் பேர் படைத்தும் மாதோ! 96

### வெண்பா

மாதரையும் மா தரையும் மாதரையும் வேண்டி நும் போல்
ஆதரையும் பாடும் அவப்புலவீர்! — பூதரை ஆள்
சேய் ஆம் தணிகைவரைச் செவ்வேளைப் பாடில், என்றும்
மாயாத செல்வம் அருள்வான். 97

### கட்டளைக் கலித்துறை

வானம் அளந்தது மாயோன் திருவடி; மாயன் உந்தித்
தானம் அளந்தது நான்முகன் சேவடி; தாழ் புவி போம்
ஏனம் அளந்தது வெள்ளி வெற்போன் அடி; ஏனல் வளர்
கானம் அளந்தது தென் தணிகாசலன் காலடியே. 98

### மருட்பா

அடி வண் தறை பயிலும், அம் கண் இமைக்கும், பூ
முடி வண்டு அறை குழலின் மொய்க்கும், வடிவம் நிழல்
காட்டும் ஆதலின், தணிகை
நாட்டில் வாழ்தரு நங்கை மற்று இவளே. 99

### கலிநிலைத் துறை

ஏறும் புகழ் சேர் தென் தணிகைக் கோன் இரு தாளும்
கூறும் பெரியோர், சேவடி நெஞ்சு குறித்திட்டோர்,
வீறும் கமலத்து அந்தணன் அறியா வீடு எய்தி,
நீறும்படி தீவினையின் அகன்றிடு நீராரே. 100

### திருத்தணிகைக் கலம்பகம் முற்றும்

# திருத்தணிகைச் சந்நிதிமுறை நூல்களின்

## பாடல் முதல் குறிப்பு அகராதி

[ எண் : செய்யுள் எண் ]

—: o :—

### 1. ஐங்கர மாலை

## 2. தயாநிதி மாலை

## 3. வேலாயுத சதகம்

## 4. மயில் - பத்து



## 5. சேவல் - பத்து



## 6. வேல் - பத்து



## 7. சீர்பாதப் பத்து

## 10. பிள்ளைத் தமிழ்

## 12. திருத்தணிகைக் கலம்பகம்

———

பின் - இணைப்புகள்

# 1. முருகப்பெருமான் வள்ளிக்கு அருளிய திருத்தணிகைப் பெருமை

(கச்சியப்ப சிவாசாரியர்)

(கந்த புராணம் — தட்ச காண்டம் — 24 வள்ளியம்மை திருமணம்)

* அவசியம் மனப்பாடம் செய்ய வேண்டியவை.

214. செச்சை மௌலியான், செருத்தணிவரைமிசைத் தெய்வத்
தச்சன் முன்னரே இயற்றிய தனிநகர் புகுந்து,
பச்சிளங் கொங்கை வனசரர் பாவையோடு ஒன்றி,
இச் சகத்து உயிர் யாவையும் உய்ய, வீற்றிருந்தான்.

215. அந்த வேலையில், வள்ளிநாயகி, அயில் வேற்கைக்
கந்தவேள் பதம் வணங்கியே கைதொழுது, "ஐய!
இந்த மால்வரை இயற்கையை இயம்புதி" என்ன,
சிந்தை நீடு பேர் அருளினுல் இன்னன செப்பும்:

216.* செங்கண் வெய்ய சூர்ச் செருத்தொழிலினும், சிலேவேடர்
தங்களில் செயும் செருத்தொழிலினும், தணிந்திட்டே,
இங்கு வந்து, யாம் இருத்தலால், செருத்தணி என்று ஓர்
மங்கலம் தரு பெயரினைப் பெற்றது — இவ் வரையே.

217. முல்லை வாள்நகை உமையவள் முலைவளை அதனுன்
மல்லல் மாநிழல் இறைவரை வடுப்படுத்து அமரும்
எல்லை நீர் வயல் காஞ்சியின் அணுக நின்றிடலால்,
சொல்லலாம் தகைத்து அன்று — இந்த மால் வரைத் தூய்மை.

218.* விரை இடங்கொளும் போதினுள் மிக்க பங்கயம்போல்,
திரை இடங்கொளும் நதிகளில் சிறந்த கங்கையைப்போல்,
தரை இடங்கொளும் பதிகளில் காஞ்சி அம் தலம்போல்,
வரையிடங்களில் சிறந்தது — இத் தணிகை மால் வரையே!

219. கோடு இயம்பியும், வேய்ங்குழல் ஊதியும், குரலால்
நீடு தந்திரி இயக்கியும், ஏழ் இசை நிறுத்துப்
பாடியும், சிறு பல்லியத்து இன்னிசை படுத்தும்
ஆடுதும், விளையாடுதும், — இவ் வரை அதன்கண்.

220. மந்தரத்தினும் மேரு மால் வரையினும், மணி தோய்
கந்தரத்தவன், கயிலையே காதலித்ததுபோல்,
சுந்தரக் கிரி தொல் புவிதனில் பல எனினும்,
இந்த வெற்பினில் ஆற்றவும் மகிழ்ச்சி உண்டு, எமக்கே.

221.* வான் திகழ்ந்திடும் இருநில வரை பல; அவற்றுள்
ஆன்ற காதலால் இங்ஙனம் மேவுதும்; அதற்குச்
சான்று, வாசவன் வைகலும் சாத்துதற் பொருட்டால்,
மூன்று காவி இச் சுனைதனில் எமக்கு முன் வைத்தான்.

222.* காலைப் போதினில் ஒரு மலர், கதிர் முதிர் உச்சி
வேலைப் போதினில் ஒரு மலர், விண் எலாம் இருள் சூழ்
மாலைப் போதினில் ஒரு மலர் ஆக, இவ் வரைமேல்
நீலப் போது மூன்று ஒழிவு இன்றி நித்தலும் மலரும்.

223.* ஆழி நீரரசு உலகு எலாம் உண்ணினும், அளிப்போர்
ஊழி பேரினும், ஒரு பகற்கு உற்பலம் மூன்றுய்த்
தாழ் இரும் சுனைதன்னிடை மலர்ந்திடும், தவிரா; —
மாழை ஒண் கணாய்! — இவ் வரைப் பெருமை யார் வகுப்பார்

224. இந்த வெற்பினைத் தொழுதுளார் பவம் எலாம் ஏகும்;
சிந்தை அன்புடன் இவ் வரையின்கணே சென்று,
முந்த நின்று, இச் சுனைதனில் விதிமுறை மூழ்கி,
வந்து, நம்தமைத் தொழுதுளார் நம் பதம் வாழ்வார்.

225.* அஞ்சு வைகல் இவ் அகன் கிரி நண்ணி, எம் அடிகள்
தஞ்சம் என்று உளத்து உன்னியே வழிபடும் தவத்தோர்
நெஞ்சகம்தனில் வெஃகிய போகங்கள் நிரப்பி,
எஞ்சல் இல்லதோர் வீடுபேறு அடைந்து இனிது இருப்பார்.

226. தேவர் ஆயினும் முனிவரர் ஆயினும் சிறந்தோர்
ஏவர் ஆயினும், பிறந்தபின் இவ் வரை தொழாதார்,
தாவர்-ஆதிகள் தம்மினும் கடையரே; தமது
பாவராசிகள் அகலுமோ, பார் வலம் செயினும்?

227.* பாதகம் பல செய்தவர் ஆயினும், பவங்கள்
ஏதும் வைகலும் புரிபவர் ஆயினும், எம்பால்
ஆதரம் கொடு தணிகை வெற்பு அடைவரேல், அவரே
வேதன் மாலினும் விழுமியர்; எவற்றினும் மிக்கார்.

228. உற்பல வரையின் வாழ்வோர்
ஓரொரு தருமம் செய்யில்,
பற்பல ஆகி ஓங்கும்;
பவங்களில் பல செய்தாலும்,
சிற்பமது ஆகி ஒன்றுய்த்
தேய்ந்திடும்; இதுவே அன்றி
அற்புதம் ஆக இங்ஙன்
அனந்த கோடிகள் உண்டு அன்றே.

229. என்று இவை குமரன் கூற,
எயினர்தம் பாவை கேளா,
'நன்று!' என உவகை எய்தி,
'நானில வரைப்பின் உள்ள
குன்றிடைச் சிறந்த இந்தத்
தணிகை மால் வரையின் கொள்கை
உன் திரு அருளால் தேர்ந்தே
உய்ந்தனன் தமியன்' என்றாள்.

## 2. திருத்தணிகைத் திருப்புகழ்கள் - 64

(அருணகிரிநாதர்)

## முதல் - குறிப்பும் அருளப்பட்ட விண்ணப்பமும்

(தணிகைமணி பதிப்பு வரிசைப்படி)

| | | |
|---|---|---|
| 1 | அமைவுற் றடைய | தளர்வுற்று ஒழியக் கடவேனோ! |
| 2 | குவளைக் கணை | கருணைக்கு இனிமைத் தொடையைத் தரவேணும் |
| 3 | பொரியப் பொரிய | அருமைத் தெரிவைக்கு உணர்வைத் தரவேணும் |
| 4 | அருக்கி மெத்தென | இப்பிறப்பு பெற்றிடலாமோ? |
| 5 | கடற்செகத் தடக்கி | இதப்படுவேனோ! |
| 6 | கனத்தறப் பணைத்த | நித்த முத்தியைத் தரவேணும் |
| 7 | பருத்தபற் சிரத்தினை | பிறப்பு அற, கருத்து அளித்து அருள்வாயே! |
| 8* | எனக்கென யாவும் | சரண் நானும் தொழுவேனோ! |
| 9 | பெருக்க உபாயம் | கழல்புணை நீ தந்து அருள்வாயே! |
| 10 | மருக்குல மேவும் | இனியார்தம் சபை தாராய்! |
| 11 | வினைக்கு இனம் | கழல்-புகழ் ஓதும் கலை தாராய்! |
| 12* | இருமலு ரோக | நோய்கள், பிறவிகள்தோறும் எனை நலியாதபடி உன தாள்கள் அருள்வாயே! |
| 13 | கலைமடவார்தம் | குளிர்தொடை தந்து அருள்வாயே! |

| | | |
|---|---|---|
| 14 | கரிக்குழல் விரித்தும் | உன் தலத்தினில் இருக்கும்படி பாராய்! |
| 15* | சினத்தவர் முடிக் | நிறைப்புகழ் உரைக்கும் செயல் தாராய்! |
| 16 | தொக்கருக் குடில் | வாக்கு அழிவது ஒரு நாளே! |
| 17 | வட்டவாட் டனமனே | குராக்கொள் இருகழல் தாராய்! |
| 18 | சினத்தில் அத்தினை | மலர்ப்பதத்தினில் உருகவும் இனி [அருள்புரிவாயே! |
| 19 | தொடத்து ளக்கிகள் | நல்அருள் புகட்டி உன் அடி இணை அருளுவது [ஒரு நாளே! |
| 20 | எலுப்பு நாடிக | வீடுஅதை நத்தி எடுத்து இவண் உழல்வேனோ? |
| 21 | திருட்டு நாரிகள் | காமவிதத்திலும் உட்பட அலைவேனோ? |
| 22* | அரகர சிவனரி | அநுதின மன மகிழ்வுற அணிபணி திகழ் [தணிகையில் உறைவோனே! |
| 23 | இருப்பவல் திருப் | சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ? |
| 24 | உடலி னூடுபோய் | சிவரூபம் அருள்வாயே! |
| 25 | உடையவர்கள் ஏவ | அருண ஒளிவீசு நளின இருபதம் அருள்வாயே! |
| 26 | உய்ய ஞானத்து | முறிகிள்ளி வீசுற்று மலர் பணிவேனோ! |
| 27 | எத்தனை கலாதி | கழல் தாராய்! |
| 28 | எனை அடைந்த குட்ட | மயிலில் வந்து முத்தி தரவேணும்! |
| 29* | ஏதுபுத்தி ஐயா | உன்திரு-அருள் எனக்கு சித்தியாதோ? |
| 30 | ஒலை இட்ட குழைச்சி | மாதருக்கு வருத்தம் இருப்பது தணியாதோ? |
| 31 | கச்சணி இளமுலை | பதமலர்-இணை இப்பொழுது அணுக உன் [அருள்தாராய்! |
| 32 | கவடுற்ற சித்தர் | நின்சரணப் பிரசித்தி சற்று உணராரோ? |
| 33 | கனைத்த திர்க்கும் | யாக்கை சழங்கலாமோ? |
| 34 | கிரி உலாவிய | கதிபெறும் வகை பகர, மாமயில் வர நினைவதும் [ஒருநாளே! |
| 35 | கிறிமொழிக் கிருத | அடி இணைக்கு அணுகிடப் பெறுவேனோ! |
| 36 | குயிலொன்று மொழி | வந்து-புயம் அணையக் கிடையாதோ? |
| 37 | குருவி எனப்பல | திருப்புகழ் அருள எனக்கு இனி அருள்வாயே! |
| 38 | குலைத்து மயிர்க்கலைத்து | தவத்து அழிப்பவர்க்கு உறவாமோ? |
| 39 | கூந்தல் அவிழ்த்து | எப்படி நல்-கதி? புக்கிடல் அருள்வாயே! |
| 40 | கூர்வேல் பழித்த | கலகம் ஒழியாதோ? |
| 41* | கொந்துவார் குர-அடி | பேர் அருள் கனவிலும் நனவிலும் மறவேனே! |
| 42* | சொரியு முகிலைப் | உனது குவளைச் சிகரி பகரப் பெறுவேனோ! |
| 43 | தாக்க மருக்கொடு | அடியாரொடு போய்ப் பெறுகைக்கு [இலையோ கதி? அருள்புரிவாயே! |
| 44 | துப்பார் அப்பாட | கிட்டா எட்டா அருளைத் தரவேணும் |
| 45* | நிலையாத சமுத்திர | உனை ஓதி தலமீதில் பிழைத்திடவே [அருள்தாராய்! |
| 46* | நினைத்தது எத்தனை | நித்திய சித்து அருள்வாயே! |

| | | |
|---|---|---|
| 47 | பகல் இரவினும் | அறிவிலேன் அழிந்திடலாமோ? |
| 48 | பழமை செப்பிய | பொற்பதம் உற்றிட வைப்பதும் ஒரு நாளே! |
| 49 | புருவ நெறித்து | (உளம்) பத்மக் கழல்கள் துதிக்கக் கருதாதோ? |
| 50 | பூசலிட்டுச் சரத்தை | பொற்பதத்தை யான் வழுத்திச் சுகிக்க [அருள்வாயே! |
| 51 | பொருவிக் கந்தொடற் | உன் குரவைத் தரவேணும் |
| 52 | பொற்குடம் ஒத்த | கண்வலைக்குள் அகப்படு புத்தியை அற்றிட [வைத்து அருள்வாயே! |
| 53 | பொற்ப தத்தினைத் | முத்தி சற்று எனக்கு அளிப்பது ஒருநாளே! |
| 54 | மலைமுலைச்சியர் | கதியில் வைப்பதும் ஒரு நாளே! |
| 55 | முகத்தை மினுக்கி | ஒருபொருள் அருளாயோ? |
| 56 | முகிலும் இரவியு | அடியவர் தவம் அதில்வர, அருள்புரிவாயே! |
| 57 | முடித்த குழலினர் | உன் பதத்து மலர்-இணை அருள்வாயே! |
| 58 | முத்துத் தெறிக்கவள | திருத்தணியில் இற்றைத் தினத்தில் வரவேணும்! |
| 59 | முலைபுளகம் எழ | கவலை கெட நினது அன்பு பெறுவேனோ? |
| 60 | மொகுமொகென | பரமவெளியில் புக்கு இருக்க எனை நினையாதோ? |
| 61 | வங்கம் பெறுகடல் | பொன்றும் தனிமையை நினையாயோ? |
| 62 | வரிக்கலையி னிகரான | உனது கழல் பாட உயர்ச்சிபெறு குணசீலம் [அருள்வாயே! |
| 63† | வாருற்றுஎழு பூண்முலை | புகழ்பொங்கிய தேசுக் கதிர்-கோடி எனும் பதம் [அருள்வாயே! |
| 64 | வெற்றிசெய உற்ற | திருத்தணியில் எப்பொழுதும் நிற்கும் [முருகோனே பச்சை மயில் உற்று வரவேணும்! |

## இத் திருப்புகழ்களில் உள்ள சில கருத்துகளின் அடைவு

அகப்பொருள் : சழங்கலாமோ 33, தரிசனம் பெற 64, தலைவன் வந்து அருள் 58, தனிமை நீங்க (நல்-தாய் இரங்கல்) 61, தோள் அணைய 36, நல் உணர்வு பெற 3, மாலைபெற 13, மாலையைத் தர 51, மாலை விரும்புதல் 2.

அடிமை ஆக 56
அருள் கனவிலும் நனவிலும் மறவாமை 41
அருள்பெற 44
அலைச்சல் அற 20
அறிவு பெற 46
அன்பைப் பெற 59
இனி (அடி)யார் சபை சேர 10
உபதேசம் பெற 55
உனை ஓதிப் பிழைக்க45
கதி பெற 39, 43, 54
கதிபெறும் வகை பகர, வர நினைவது 34

†ஐயப்பாடான திருப்புகழ்

## திருத்தணிகை முருகன்



## திருவகுப்பில் திருத்தணி (16)

(எண் - திருவகுப்பு எண்)

1. சீர்பாத - நீல (நீலோற்பல) கிரி
3. வேல் - திருத்தணியில் உதித்தருளும் - மலைவிருத்தன்
4. வேளைக்காரன் - ஏர் அணி செருத்தணி - வெற்பு
6. பூத வேதாள - அனவரத நீலமலர் முத்தெறி சுனைப்புனலில் அருவி [குதிபாய்தரு செருத்தணி
7. பொருகளத்து அலகை - செருத்தணி
9. போர்க்களத்து அலகை - தணிகை
10. திருஞானவேழ - நீள் சுனை தினமும் உற்பல மலர் திருத்தணி
11. திருக்கையில் வழக்க - உற்பலகிரிப் பெயர் தரித்து அருள் திருத்தணிமலை
12. வேடிச்சி காவலன் - புவியில் அழகிய செருத்தணியில்
14. வேல்வாங்கு - அணிகுறமின் புணர் தணிகையில்
15. புய - இந்திர நீலச் சிலம்பு
16. சித்து - திருத்தணி வெற்பு

## 3. திருத்தணிகைத் திருவிருத்தம்

(தொட்டிக்கலே சுப்பிரமணிய முனிவர்)

ஓங்கார உருவ! சின்மய! விமல ஒளி ஆகி
உலகம் முழுவதும் நிறைந்த
உண்மைப் பராபர! நிராமய! நிராலம்ப!
உம்பர்கள் சிகாரத்னமே!

ஆங்காரம் நீங்காத தீங்கு ஆணவத்தின் வரும்
அலகு இலாப் பிறவிதோறும்
அடியேன் செய் கொடுவினை அளக்கரும் வரம்பினை
அளந்திடினும், அளவுபடுமோ?

வாங்காமல் அவ் வினை வருத்தலால், உன் திருமுன்
வந்து, அபயம் அபயம் என்றேன் —
மயில் ஏறி வந்து, திருமந்திர சடாக்கர
மருந்து அருள்; திருந்தும் அடியார்

தாம் காண முன் நின்ற சண்முகத் தெய்வமே!
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 1

*பன்னரிய உன் அற்புதத் திருப்புகழைப்
பகர்ந்துகொண்டு, உன் திருமலைப்
படி ஏறும் அன்பர் வினை பொடியாகும் என்று நிறை
மொழி மாந்தர் பகருவது கேட்டு,

என்னுடைய பொல்லாத சஞ்சிதப் பிணி ஒழித்து,
எனையும் வாழ்வித்தருள்க என்று
இரவு-பகல் உன் அருள்-சந்நிதியில் வந்து, முறை
யிடுவேற்கு இரங்கி அருள்வாய்! —

பொன் நிறக் காந்தளொடு செங்குவளை மலர்களும்
பொற்பு அமர் கடப்ப மலரும்
பூத்து அலர் குறிஞ்சியும் சேத்த கூதளமும்
புனைந்த திருமார்பு அழகனே!

தன்னமும் மனத்துயர் இலாது அமரரைக் காத்த
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 2

திருவருள் கொழிக்கும் உன் சரவணப் பொய்கைத்
திருத்தம் திளைத்து ஆடியே
தீராத பழவினை - அழுக்கைக் கழிஇ, வரும்
திருவாளரைத் தரிசியா,
உரிமையுடன் அடியேனும் அச் சரவணப் பொய்கை
உற்று உவந்து ஆடி, உட்கொண்டு.
உன் அடிகளே சரணம் என்று ஓலமிடும் எனக்கு
உறு குறை தவிர்த்து அருளுவாய் —
மரு வளரும் மலரோன் தருக்கினைக் கண்டு, கர -
மலர் கொண்டு தாக்கி, அவனை
வன் சிறை இருத்தி, உலகு ஏழும் படைத்த நின்
வல்லாண்மை சொல்ல வசமோ!
தரு வளரும் அமராவதிக்கு அரசை வாழ்வித்த
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 3

கண்டவர் களிக்கும் முருகேச! உன் பெருமையைக்
கடவுள் - சுனைக்குள் வளர் செங்
கல்வாரம் முப்போது மலர் தந்து கமழ்தரும்
கந்தமே தூதாய் உலாய்,
எண் திசையுளார்க்கும் தெரித்தலால், கொண்டாடி
எல்லாரும் வந்து தொழுது, உன்
இன் அருளை மொண்டு உண்ண, இந்நோயின் யான் ஒருவன்
இடர் உற்று இளைப்பது அழகோ? —
அண்டர்கள் நடுக்கம் உற ஆயிரத்து எட்டு அண்டம்
ஆண்டிடு குரூர சூரன்
ஆண்மைதனை நீறு ஆக்கி, அவனை இருகூறு ஆக்கி,
ஆட்கொண்ட செய சிங்கமே!
தண்டையொடு கிண்கிணிகள் கொஞ்சு செஞ் சரணனே!
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 4

அத் தானவச் சிங்கன் வெருவச் சிரங்களை
அரிந்த வச்சிரம் இருக்க,
அக்கிரமம் மிக்க கிரவுஞ்சமலை பொடியாக்கும்
அயில் வேல் வலத்து இருக்க,

சித்தான உன்னுடைய - ஆறு அக்கரங்கள் ஆம்
தெய்வ மந்திரம் இருக்க,
தீண்டினும் பூசினும் பாபப் பசாசு அறத்
தீர்க்கும் வெண் நீறு இருக்க,
இத் தாரணிக்குள் ஒன்று அறியாக் குழந்தைபோல்
என் அளவும் நீ இருந்தால்,
என் ஆகுலத்தைத் துரத்தி, எனை உய்விக்க,
இன்னம் ஒரு தெய்வம் உண்டோ?
சத்து ஆகி, முத்திக்கு வித்து ஆகி, நின்ற சிவ
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 5

வெங் கனல் உறைப்ப வரு பானுகோபப் பதகன்
விட்ட மாயைப் பகழிதான்
மிக்க மயல் பூட்டி, கருங்கடல் கொண்டு போய்
வீழ்த்திட, அழுந்தி நின்ற
துங்க ஒளி மணி மகுட பார் நவ வீரரொடு
சோர்வு அரிய பூதர்களையும்
சுடர் விடும் குடுமியுடை அடல் உடம்பிடி கொண்டு
தூக்கிய பராக்கிரமனே!
பங்கம் உறு கொடுவினைக் கடலிலே நெடுநாள்
படிந்து தடுமாறும் எனையும்
பயப்படேல் என்று நின் பன்னிரு விழிக் கருணை
பாலித்து எடுத்தருளுவாய்! —
சங்கடம் விலக்கும் ஒரு தந்திமுகவற்கு இளைய
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 6

எண் இல் உயிர்கட்கு எலாம் அன்றுதொட்டு அகலாமல்
என்றும் ஒரு தஞ்சமாயே
இருத்தலால் கந்தன் என ஒரு நாமம் உற்றனை;
இருண்ட மல மோகத்தினால்
கண் இலாருக்கு மெய்க்கோல் கொடுத்து ஈர்ப்பது உன்
கருணைப் பெருக்கம் அன்றோ?
காங்கேய! உனை அன்றி மற்றொரு தெய்வத்தை நான்
கனவிலும் நினைத்தல் செய்யேன்;

மண்ணில் அடியார் இருவினைக் காடு வேரோடு
மடிய, வடி வேல் பிடித்து,
மாருத பேரின்ப வாழ்வைக் கொடுத்தருள,
வாய்மை ஆம் கொடி கட்டியே

தண் அருளின் வரமாரி பொழிகின்ற தெய்வமே!
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே!

அத்தகு சிறப்புடைய கிருத்திகைத் தையலார்
அறுவர் முலை அமுத வாரி
அரு மறை பழுத்து ஒழுகும் வாயார மொண்டுகொண்டு
ஆனந்த மழை பொழிதரும்

வித்தகக் கருணை மா முகில் என்று நம்பி, என்
விடாய் தீர வந்து அடுத்தேன்;
வேறு புகல் இல்லை; உன் அடைக்கலம், அடைக்கலம்!
வெட்சி சூடிய விசாகா!

சித்திரக் கலப மரகத நிற மயூரனே!
தேவ குஞ்சரி மணாளா!
சிங்கார வள்ளி இரு சிற்றடிகள் வருடிச்
சிவந்த பன்னிரு கரதலா!

சத்துருக் கசமுகத்து அசுர சங்காரனே!
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே!

வாலை திரிபுரை ஆன சிவகாம சுந்தரி தன்
மைந்தனே! நின் துவசம் ஆம்
மதுகை உறு காலாயுதத்தினுக்கேனும், நீ
வாகனம் கொடு நடாத்தும்

வேலை நடு வடவை அனல் விழி பொழிய வரும் ஒரு
வியன் தகர்தனக்காயினும்,
விடைகொடுத்து, என்னுடைய பேரா வினைக்குன்றை
வேரோடு இடித்தருளுவாய்! —

கோலம் மலி தென் பரங்குன்று, ஆவினன்குடி,
குளிர்ந்த செந்தூர், ஏரகம்,
கொடி ஆடு சோலைமலை, குன்றுதோருடலும்
கொண்டருளி நின்ற குகனே!

தாலம் முழுது உண்ட பைங் கொண்டல் மேனியன் மருக!
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 9

நலம் மருவு மதுரைத் தமிழ்ச் சங்கமேல், புலவர்
நடு வீற்றிருந்த முதல்வா!
நக்கீரர் சொன்ன முருகாற்றுப்படைத் தமிழும்
நல் அருணகிரிநாதர் சொல்

புலமை உறு சித்திரச் சந்தப்ரவாகமும்
புனிதச் செவிக்குள் ஆர்த்த
புகழாள! குறுமுனிக்கு ஆரணத்து உட்பொருள்
புலப்படுத்திய குரவனே!

கொலை களவு முதலான பாதகம் எனக்கு வெகு
கோடிகள் இருந்திடினும், உன்
கூர் மந்திரப் படையினால் வீட்டி, எனது உளம்
குடிகொண்டு இருந்தருளுவாய்! —

சலனம் அறு சருவபரிபூரண தயாநிதே!
சரவணோற்பவ குமரனே!
தணிகை அம் கிரி வாச! அரன் விரும்பு உபதேச!
சகல பண்டித ராசனே! 10

*திருத்தணிகைத் திருவிருத்தம் முற்றும்*

## 4. க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

(காஞ்சிபுரம் சிதம்பர முனிவர்)

ஒருத்தி என வள்ளி கலியாணமும் செய்து, பின்,
உற்றிருந்து அருள் மா மலை,
உமைக்கு அரன் உரைத்தது என வள்ளிக்கு அனைத்தையும்
உகந்தே உரைத்தருள் மலை,

மருத் தங்கு நீலமலர் மூன்று முப்போதினும்
மகிழ்ந்தே தினம் தரும் மலை,
வள்ளல் உனை அர்ச்சித்து வாசவன் வெள்ளானை
வாங்கக் கொடுத்தருள் மலை,

கருத் தங்கு பவம் எலாம் தூரத்திலே நின்று
கண்டோர்க்கு ஒழித்தருள் மலே,
கண்ணுதலே எந்தைநீ சிவலிங்க வடிவினில்
கண்டு பூசித்திடு மலே,
திருத்தணி மலேக்குமர! ஈராறு கை கொண்டு
சிறுபறை முழக்கியருளே!
தினம் நீலமலர் மேவு பன்னிரு புயாசலா!
சிறுபறை முழக்கியருளே!

— சிறுபறைப் பருவம், 5.

## 5. திருத்தணிகைத் திருவிழாக்கள்

1. நாள் (நித்தியம்): காலேசந்தியான உடனும், நடுஇரவு தீபாராதனேக்கு முன்னும் சுவாமி பல்லக்கில் உள்சுற்றுச் சுற்றி வருவார். நடுஇரவு பூசை ஆனவுடன் பள்ளி அறைச் சுவாமி தினம் ஒரு அம்மனுடன் சுற்றி வருவார். காலேயில் இருப்பிடம் வருவார்.

2. வாரம் : ஒவ்வொரு வெள்ளிக்கிழமை இரவும் சுக்கிரவார அம்மன் (கஜவல்லி அம்மன்) கிளி வாகனத்தில் திருச்சுற்றில் வலம் வருவார்.

3. பட்சம் : பிரதோஷ நாள்களில் இரவில் சின்ன உற்சவர் வெளிச்சுற்று வலம் வருவார்.

4. மாதம் : 1. சித்திரை, ஆடி, தை இம் 3 மாத முதல் தேதிகளிற் பெரிய உற்சவர் புறப்படுவார். மற்ற மாதங்களில் முதல் தேதியில் சின்ன உற்சவர் புறப்படுவார்.

2. விசாக நட்சத்திரங்களில் இரவில் சின்ன உற்சவர் வெளிச்சுற்று வலம் வருவார்.

3. கிருத்திகை நட்சத்திரம்தோறும் தங்கமயில்மீது பெரிய உற்சவர் வருவார். ஆடி, கார்த்திகை கிருத்திகைகளில் மட்டும் வெள்ளி மயில்மீது வருவார்.

4. வளர்பிறை சஷ்டி திதிதோறும் இரவிற் பெரிய உற்சவர் வெளிச்சுற்று வருவார்.

5. அமாவாசை, பௌர்ணமை தோறும் பெரிய உற்சவர் புறப்படுவார்.

குறிப்பு : சின்ன உற்சவர் புறப்படும் நாளும் பெரிய உற்சவர் புறப்படும் நாளும் (விசாகமும் சஷ்டியும்) ஒன்று சேர்ந்தால் பெரிய உற்சவரே புறப்படுவார்.

## ஆண்டுப் பெருவிழா

*உடுக்குறி இட்டவை சிறப்பான திருவிழாக்கள்)
மலைக்குக் கீழே பெரிய உற்சவர்தான் வருவார்.

1. ஆடி : (i) முதல் தேதி - தென்(தட்சிண) அயன புண்யகாலம் - இரவிற் பெரிய உற்சவர் மலைமேல் வெளிச்சுற்றில் வலம் வருவார். (ii) *கிருத்திகைக்கு முன் 5 நாள்கள் பெரிய உற்சவர் மலையில் கீழே வந்து குமார தீர்த்தம் வலம் வருவார். முதல் நாள்-1, இரண்டாம் நாள்-3, மூன்றும் நாள்-5, நான்காம் நாள்-7, ஐந்தாம் நாளாகிய பரணியன்று-9 சுற்றுகள். ஒவ்வொரு நாளிலும் கடைசிச் சுற்றில் சகஸ்ரேசுரரையும் சேர்த்துச் சுற்றப்படும். கிருத்திகை முதல் 3 நாள் தெப்ப உற்சவம்; பெருங் கூட்டம்; தெய்விகக் காட்சி, தெப்பத்தில் சுவாமி கிருத்திகை யன்று 3, மறுநாள் 5, மூன்று நாள் 7 சுற்றுகள் வருவார்.

2. ஆவணி : (i) திருஓணம் (சிராவணம்) - பவித்ரோற்சவம். காலையில் சிறப்பான தீபஆராதனை. இரவில் பெரிய உற்சவர் வெளிச்சுற்று வலம் வருவார். அன்று காலை எல்லா மூர்த்திகளுக்கும் பவித்திரம் அணிவித்தல். (ii) விநாயக சதுர்த்தி - இரவில் விநாயகர் விழா.

3. புரட்டாசி : (i) நவராத்திரி உற்சவம் - வளர்பிறை பிரதமையிலிருந்து சுக்கிரவார அம்மன் சர்வவாத்திய மண்டபத்தில் கொலு வீற்றிருக்கை. (ii) விஜய தசமியில் பெரிய உற்சவர் மாலையின் கீழே இறங்கித் தேவர் அடியார் குளம் சுற்றி வருவார். வன்னிமர சேவை.

4. ஐப்பசி : கந்தர் சஷ்டி: வளர்பிறை பிரதமை தொடங்கி 5 நாள் பெரிய உற்சவர் இரவில் வெளிச்சுற்று வலம் வருவார். 6 ஆம் நாள் ஆறுமுகர் வெளிச்சுற்று வலம் வருவார். 6 நாளும் பெரிய உற்சவருக்கும் ஆறுமுகருக்கும் அபிஷேகம்.

5. கார்த்திகை : திங்கள்கிழமை (சோமவாரம்) தோறும் பெரிய உற்சவர் திருச்சுற்றில் வலமாகச் சுற்றி வருவார். பரணி தீபமும், கிருத்திகை தீபமும் விசேஷம்; உள்ளே ஸ்தபன மண்டபத்தில் தலைமை விளக்கு ஒன்றுடன் ஆறு நெய் விளக்குகளுக்குப் பூஜை; சுமார் 120 நெய் விளக்குகள் ஏற்றப்படும். கிருத்திகை இரவு சுவாமி சந்நிதிக்கு வடகிழக்கில் உள்ள பச்சரிசி மலைமேல் தீப உற்சவம்; மலைமேல் வெளிச்சுற்றில் வடகிழக்கு (ஈசானம்) மூலையில், சொக்கபனை நடக்கும். பிரதான விளக்கு பலிபீடத்துக்கு அருகில் வைக்கப் படும்; அவ்விளக்கிலிருந்து சொக்கபனை ஏற்றப்படும். சொக்கபனையான பின், நடுஇரவு அர்த்தஜாமம் பூசை நடக்கும்.

6. மார்கழி : சுமித்திரேசுரர் திருஆதிரைக்கு முன் 9 நாளும் வெளிச் சுற்று வருவார். இந்த ஆருத்ரா தினத்துக்கு முன் நாள் இரவு ஷண்முகருக்கு அபிஷேகம். வெளிச்சுற்று வலமாகப் பாதி தூரம் வருவார். வெள்ளை சாத்துபடி; ஆருத்ரா காலை-தரிசனம்; ஷண்முகர் வலமாக வெளிச்சுற்று

முழுமையும் வருவார். திருஆதிரை காலை சுமித்திரேசுரர் குமார தீர்த்தத்துக்கு வந்து சகஸ்ரேசுரர் கோயிலில் இறங்கிப் புனிதநீர் ஆடிப் போவார்.

7. தை: (1) சங்கிராந்தி: பெரிய உற்சவர் வலமாக வெளிச்சுற்று வருவார். (2) மாட்டுப் பொங்கல்: மாலையில் மலைக்கு மேற்கில் ரயிலடிக்கு 3 கி. மீ. தூரத்திலுள்ள ஐயன் குளத்துக்குப் பெரிய உற்சவர் புறப்பாடு; மாடு மடக்குதல். (3) கன்றுப் பொங்கல்: காலையில் பெரிய உற்சவர் மலைக்குக் கிழக்கில் இறங்கி வந்து கிராம வலம்; மாலை 3 மணிக்கு மேல் ரெட்டியார் குள மண்டபத்தில் அபிஷேகம். (4) தைப்பூசம்; மாலையில் மூலவருக்கு மதுகலச அபிஷேகம்; பாவாடை சாத்துதல்; அன்னநிவேதனம். இரவு-தங்க மயில் வாகன சேவை; பெரிய உற்சவர் புறப்பாடு. (5) தைப்பூசத்துக்கு அடுத்த நாள் பெரிய உற்சவர் மலைக்கு மேற்கிலும் கிழக்கிலும் உள்ள கருணீகர் மண்டபங்களில் இறங்குவார். பின்பு மலைமேல் குதிரை வாகனத் திருவிழா. தை மாதம் 27-ஆம் தேதி "வர்த்தந்தி விழா" மாலையில் 108 சங்கு அபிஷேகம் ஆன பிறகு மாலை தீபாராதனை; இரவு - பொன்மயில் வாகனம்.

8 மாசி: (1) விசாகத்தில் - தவன விழா - 3 நாள்கள் நடக்கும்.

*(2) பெரிய திருவிழா (பிரமோற்சவம்) - மக நட்சத்திரத்திற்கு 10 நாள் முன்னைகத் தொடக்கம்; பெரிய உற்சவர், உற்சவ மூர்த்தி; திருவிழா மலைமேல் நடக்கும்; கொடி ஏற்றத்துக்கு முன் நாள் இரவு விநாயகர் திருவிழா. அங்குரார்ப்பண விழா - சுமிர்திரேசுரர் அஸ்திர தேவர் புறப்பாடு; இந்திர தீர்த்தத்திலிருந்து புற்றுமண் கொண்டு வரப்படும்.

முதல் நாள்: காலை - கொடி ஏற்றம்; இரவு - கற்பக மரம் அல்லது விமானம். அடுத்து வரும் நாள்களில் காலை, இரவு வாகனங்கள் வருமாறு:

2 ஆம் நாள்: சூரியப் பிரபை; — பூதம்.

3 ஆம் நாள்: சிங்கம்; மாலை — ஆடு.

4 ஆம் நாள்: பல்லக்கு; ,, — நாகம்

5 ஆம் நாள்: அன்னம்; ,, — வெள்ளி மயில்.

6 ஆம் நாள்: மாலை 6 மணிக்கு முன் புலி; மஞ்சள்நீர். இரவு யானை; [காமக்கூத்து.

7 ஆம் நாள்: திருத்தேர்.

8 ஆம் நாள்: (1) யாளி; (2) சுவாமி கீழே ஆறுமுகர் கோவிலில் ஊஞ்சல் ஆடுதல்; இரவு — சுவாமி மலைக்கு மேற்கே போய் அடிவாரத்தில் இறங்குதல்; கன்னம் இடுதல்; வள்ளியைத் திருடுதல் — வேடர் கூட்டக் காட்சி; பிறகு, குதிரை; இரவு 3 மணிக்கு வள்ளி அம்மை திருக்கலியாணம். தேவசேனையின் கதவடைப்பு; 15 நிமிடம் வரை பாடல், மங்களம், பின்னர்க் கதவு திறப்பு.

9 ஆம் நாள் : (1) இந்திர விமானம். (2) கந்தப்பொடி விழா (6 மணி) ; இரவு — சண்முகருக்கு அபிஷேகம், விழாவில் — பாதி வலம் வருதல்.

10 ஆம் நாள் : மாசிமகம். காலை — அத்திர தேவர் குமார தீர்த்தத்துக்கு வருவார். சண்முகர் — முழுவலம் வருதல். மட்டையடி சேவை;

மாலை — குமார தீர்த்தத்தில் தீர்த்தவாரி; மண்டபத்தில் பெரிய உற்சவருக்கு அபிஷேகம்.
இரவு — 3 மணிக்குக் கொடி இறக்குதல்.

11 ஆம் நாள் : இரவு 10 மணிக்கு மலைமேல் அரண்மனைக்கு அருகில் பந்தம்பறி. வள்ளியம்மை தேவசேனைக்குச் சமாதானம்.

பெரிய விழா முடிந்த மறுநாள் சுவாமி ஏழுசுனைக்குப் போய் வருவார். இது மாமியார் வீடு; இங்கே கலியாண மரு உண்ணுதல்.

9. பங்குனி : *அஸ்த நட்சத்திரம் — ஆற்று விழா (திரு ஊறல்); மலைக்கு மேற்கு 3 கி.மீ. தூரத்தில் நந்தி ஆற்றங்கரையில் பெரிய உற்சவருக்கு அபிஷேகம்; இரவில் திருஊறல் விழா.

10. சித்திரை : ஆண்டுப் பெருவிழா : சித்திரை நட்சத்திரத்துக்கு 10 நாள்களுக்கு முன்பு தொடக்கம்; மாசிப் பெருவிழா எப்படியோ அப்படியே; ஆனால் வேடர் உற்சவம் மாத்திரம் கிடையாது. 8 ஆம் நாள் இரவு தேவசேனை திருக்கலியாணம். வள்ளியம்மை கதவு அடைப்பது. இந்தப் பெருவிழா முடிந்த மறுநாள் பெரிய உற்சவர் திருத்தணிக்குக் கிழக்கில் 9.5 கி.மீ. தூரத்திலுள்ள விநாயகபுரம் (தேவசேனையின் தாயார் வீடு) போய் வருவார்.

11. வைகாசி : 1. விசாகம் : பெரிய உற்சவருக்கு மாலையில் அபிஷேகம்; இரவு - வெளிச்சுற்று வருவார். 2. வசந்த விழா : வளர்பிறை பிரதமை முதல் 10 நாள் நடக்கும். துவாதசி - மாலை ஐயன்குள விழா. 10 நாளும் பெரிய உற்சவர் சர்வ வாத்திய மண்டபத்துக்கு வருவார். 8 ஆவது நாள் பகல் பெரிய உற்சவருக்குக் கச்சேரி மண்டபத்தில் அபிஷேகம். *ஒன்பதாம் நாள் பெரிய உற்சவருக்குப் பள்ளியறையின் அண்மையில் பகல் மணி 1 முதல் 5 வரையில் விசேட அபிஷேகம்; அன்று இரவு குருக்கள்மார் விழா.

12. ஆனி : ஆனியில் விசேட விழாக்கள் இல்லை.

குறிப்பு : சண்முகர் புறப்பாடு : இவர் மலையைவிட்டு இறங்குவது இல்லை ; மலை மேலே ஆண்டுப் பெருவிழா நாள்களில் 2 நாள், ஐப்பசி சஷ்டி 1 நாள், மார்கழி திருஆதிரை 1 நாள்; ஆக 4 நாள்கள் வெளிச்சுற்று வருவார்.

பெரிய உற்சவர்: மலைக்குக் கிழக்கே இறங்கி வரும் நாள்கள்: (1) காணும் பொங்கல், (2) தைப்பூசத்துக்கு அடுத்த நாள் (3) ஆண்டுப் பெருவிழா, (4) ஆடித் தெப்பம், (5) விஜயதசமி.

மலைக்கு மேற்கே இறங்கிவரும் நாள்கள்: (1) ஆற்றுத் திருநாள், (2) தைப்பூசத்துக்கு அடுத்த நாள். (3) மாட்டுப் பொங்கல், (4) ஆண்டுப் பெருவிழா, (5) வைகாசி ஐயன்குளத் திருவிழா.

(இவை 1922 வரை நடந்துவந்த நடைமுறை)

## 6. திருத்தணிகைத் தீர்த்தங்கள்

1. குமார தீர்த்தம் (சரவணப் பொய்கை): இது மலையின் கிழக்கே அடிவாரத்தில் உள்ள திருக்குளம்; சுற்றிப் பல வகுப்பாருக்கு உரிய மடங்கள் இருக்கின்றன. இதனால் திருத்தணியின் இப் பாகத்தை மடம் கிராமம் என்பர்.

2. நந்தி ஆறு: இது கீழ்த் திருத்தணியின் வடகோடியில் இருக்கின்றது. ஆற்றின் தென்கரையில் ஆறுமுகசாமி கோயிலும், விஜயராகவ சாமி கோயிலும், வடகரையில் வீரட்டகாசர் கோயிலும் உள்ளன.

3. பிரம தீர்த்தம் (பிரம சுனை): கீழ்ப்புறம் இருந்து மலைமேற் செல்லும் போது நடுவழியில் வடபுறம் இருக்கின்றது.

4. விஷ்ணு தீர்த்தம்: மலையின்மேல் மேற்குப் பக்கத்தில் குருக்கள்மார் வீடுகளின் எதிரில் உள்ளது.

5. நாக (ஆதிசேட) தீர்த்தம்: விஷ்ணு தீர்த்தத்துக்கும் மேற்கே தென்புறம் இருப்பது.

6. அகத்திய தீர்த்தம்: ஆதிசேட தீர்த்தத்துக்குத் தென்கிழக்கில் உள்ளது.

7. இந்திரநீலச் சுனை (கல்லார தீர்த்தம்): மலைமேல் தெற்குச் சுற்றுக்குத் தெற்கேயுள்ள பிரபலமான சுனை; இதன் தீர்த்தமே தணிகை நாயகருக்குத் திருமஞ்சனம் ஆவது. இதில் எப்பொழுதாவது நீர் இல்லா விட்டால் ஆறு பேர் சென்று ஆற்று நீர் கொண்டு வருவது வழக்கம்.

'காலை நண்பகல் மாலைமுப் பொழுதும்
வைகல் வைகல் மலர்மூன்று தெரிக்கும்
நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது.'
— தணிகை ஆற்றுப்படை 224 - 226

8. நாரத தீர்த்தம்: அகத்திய தீர்த்தத்துக்குக் கிழக்கே உள்ளது.

9. சிவகங்கை: இன்னதெனத் தெரியவில்லை; ஆயினும் கோயிலின் உள்சுற்றில் வாயு (வடமேற்கு) மூலையில் ஆறுமுக சுவாமிக்குச் சித்திரை, மாசிப்

பெருவிழாக்களில் 9 ஆம் நாள் இரவிலும், ஐப்பசி வளர்பிறைக் கந்த சஷ்டி அன்றும், மார்கழி திருஆதிரையிலும், அபிஷேகாதி அலங்காரங்கள் நடக்கும் மேடையின் கீழே உள்ளதாகச் சொல்லப்படும் கந்த கைலாச தீர்த்தமாக இருக்கலாம் எனத் தோன்றுகின்றது.

10. ஏழு சுனை (கன்னியர் கோயில்): திருத்தணிகாசல மூர்த்தி வீற்றிருக்கும் மலைக்குத் தென்கிழக்கில் மலைச்சாரலில் ஏழு சுனைகளும் கன்னியர் கோயிலும் இருக்கின்றன. இந்தச் சுனைகள் ஏழு ரிஷிகளால் உண்டாக்கப்பட்டன என்றும் அவர்கள் பூசித்த இலிங்க மூர்த்தி சப்தரிஷீசுரர் என்றும் கூறுகின்றனர். மாசிப் பெருவிழா முடிவில் 11 ஆம் நாள், கொடி இறங்கினபின், தணிகாசல மூர்த்தி இந்த ஏழு சுனைக்கு அருகிலுள்ள மண்டபத்துக்கு எழுந்தருளல் வழக்கம்.

## 7. திருத்தணிகைத் தலவிளக்கம்

1. செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ள திருத்தணிகை, பிரபல முருகன் மலைத்தலம்; இது திருத்தணி வட்டத்திற்கும் பஞ்சாயத்து ஒன்றியத்திற்கும் தலைநகர் ஆகும். சென்னையிலிருந்து வடமேற்கே போகும் ரயில் வழியில் அரக்கோணத்திற்கு வடக்கே 13 கி.மீ-ல் உள்ளது. சென்னையிலிருந்து 83 கி.மீ. தூரத்தில் உள்ளது. தமிழ் நூல்கள் தொண்டை நாட்டில் உள்ளதாகக் கூறும். காஞ்சீபுரம் தெற்கிலும், விரிஞ்சிபுரம், வள்ளிமலை, சோளிங்கபுரம் மேற்கிலும், திருஆலங்காடு கிழக்கிலும், சீகாளத்தி, திருப்பதி வடக்கிலும் சூழ்ந்து இருக்கத் திருத்தணிகை இவற்றிற்கு நடுவில் நாயகமாக விளங்குகின்றது. பழைய தமிழ் நூல்களில் தமிழகத்திற்குத் திருவேங்கடம் (திருப்பதி) வட எல்லையாகக் கூறப்பட்டுள்ளது. 'திருப்புகழ்' திருத்தணிகையை வட எல்லையாகக் கூறுகிறது. இது 'திறத்தமிழ்க்கு உயர்த் திசைச் சிறப்புடைத் திருத்தணி' (7), 'தமிழ் திரயம் நீடும் திருத்தணி' (9) 'தமிழ்ச்சொலத்த சத்தம் வித்தரிக்கும் ..........திருத்தணி' (53) என வரும் திருப்புகழ்களால் அறியலாகும். இப்போது திருத்தணிகை தமிழும் தெலுங்கும் கலந்து வழங்கும் ஊராக இருக்கிறது.

2. ஊர்: ஊர் எல்லையிலேயே திருத்தணிகை ரயிலடி உள்ளது. இங்கு ரயில் பாதை தெற்கு வடக்காக ஓடுகிறது. ஊருக்கு வடக்கே நந்தி ஆறு என்னும் சிறிய ஆறு ஓடுகின்றது. ரயில் வழிக்கு மேற்கிலும் கிழக்கிலும் ஊர் பரவியுள்ளது. ரயில் பாதைக்குக் கிழக்கே அரசு அலுவலகங்களும், அஞ்சலகமும் உயர்தரப் பள்ளியும் உள்ளன. ஊரின் கீழ்ப்பாகத்தைக் 'கீழ்த் திருத்தணி'' என்பர். ரயில் பாதைக்கு மேற்கே கடைத்தெரு முதலியன உள்ளன. ஊருக்கு வடக்கே திருப்பதிக்கும், வடமேற்கே

சோளிங்கபுரம், சித்தூருக்கும் கிழக்கே திருஆலங்காடு, திருவள்ளூர், சென்னைக்கும், தெற்கே அரக்கோணம், காஞ்சீபுரத்திற்கும் சாலைகள் உள்ளன. சோளிங்கபுரம் சாலைக்கு வடக்கே ரயில் வழிக்கு மேற்கே ஏரி இருக்கிறது. ஊருக்குத் தெற்கே, அரக்கோணம் போகும் சாலைக்கு மேற்கே, தாமரை (நல்ல தண்ணீர்)க் குளம்இருக்கிறது. ஊருக்குக் குழாய்நீர் கிடைக்கின்றது. திருத்தணி, மடம் கிராமம், நல்லான்குளம், அமிர்தபுரம் (மேலைத் திருத்தணி) கிராமங்கள் இந்தத் திருத்தணிகை நகரத்தில் அடங்கியுள்ளன. தணிகையில் வகுப்புவாரியாகத் தங்க வசதியான சத்திரங்கள் பல உள்ளன. கிருத்திகை நாள்களில் சத்திரங்கள் நிரம்பியிருக்கும். திருமணங்கள், உபநயனங்கள், ஏழைகளுக்குச் சோறு இடுதல் முதலியன இச் சத்திரங்களில் நடைபெறும். வெற்றுக் காலத்தில் தங்குவதற்கு இச் சத்திரங்களில் எளிதில் இடம் கிடைக்கும்.

திருத்தணி, மலைநிலம் ஆதலின் சூடான நிலம்; ஆயினும் நல்ல கறிகாய், பால், தயிர், நெய் கிடைக்கும். வசிக்கத் தகுந்த ஊர். மலைக்கோயிலே இவ் ஊருக்குப் பெருமை தருவது.

3. **திருத்தணிகை மலை :** இத்தலத்தில் கோயில் ஒரு தனி மலையின் உச்சியில் கிழக்குப் பார்த்து உள்ளது. பெருமான் இருக்கும் மலையின் இருபுறத்திலும் பரவலாகப் படர்ந்த மலைத் தொடர்ச்சிகள் உள்ளன. வடக்கே உள்ள மலை சற்று வெளுத்து இருப்பதால் 'பச்சரிசி மலை' என்பர்; தெற்கே உள்ள மலை கறுத்து இருப்பதால் 'பிண்ணாக்கு மலை' என்பர்.

ரயிலடியிலிருந்து மலை அடிவாரம் தென்மேற்கே சுமார் 1·5 கி.மீ. இருக்கும். 'சரவணப் பொய்கை' என வழங்கும் குமார தீர்த்தம் மலை அடிவாரத்தில் உள்ளது. இதைச் சுற்றி விடுதிகள் உள்ளன. ஆதலால் இப்பாகத்தை 'மடம் கிராமம்' என்பர். திருக்குளத்தில் தென்மேற்கு (நிருதி) மூலையில் மலை அடிவாரம் இருக்கிறது. திருக்குளத்தின் கிழக்குக் கரையில் நின்று மலையைப் பார்த்தால் வளைந்த ஒரு மாலை போல, மூன்று மலைகளின் நடுவில் நாயகமாய் முருகன் கோயில் விளங்கும். தணிகை மலையின் அழகிய தோற்றத்தை 'அழகு திருத்தணி மலை', 'ஏரணி செருத்தணி' என அருணகிரிநாதரும், 'மூவுரு எடுத்த ஒரு பரம்பொருள் போல் முத்தலைச் சிகரியாய் ஓங்கிக் காவுரு எடுத்த சந்தனம், அகில் சூழ் கைலை நேர் தணிகைமால் வரையே' எனக் கந்தப்பையரும் அருளியுள்ளார்கள்.

4. **தலபுராணம், நூல்கள் :** இத்தலத்தின் பெருமையைப் பாட்டால் சொல்லும் தமிழ்ப் புராணங்கள் இரண்டு உள்ளன.

(i) கவிராட்சசர் கச்சியப்ப முனிவர் இயற்றியது **'தணிகைப் புராணம்'** (18-ஆம் நூற்றுண்டு). இது சங்கத் தமிழ்போல் உயரிய செந்தமிழ் நடையில் அமைந்தது; புலவர்களால் பெரிதும் பாராட்டப்படுவது; அருமையான நூல்; நான்கு முறை அச்சாகி இருக்கின்றது.

இப் புராண அமைப்பு : விநாயகர் காப்பு - 2; கடவுள் வாழ்த்து - 11; அவை அடக்கம் - 3 ஆக 16; நாடு 170 - (186); நகரம் 141 - (327); நைமிசம் 21 - (348); புராண வரலாறு 93 - (441); வீரட்டகாசம் 128 - (569); குமரேசம் 46 - (615); பிரமன் படைப்புப் பெறுதல் 103 - (718); நந்தி உபதேசம் 155 - (873); 1. அகத்தியர் அருள் பெறுதல் 513 - (1386); சீபரிபூரண நாமம் 614 - (2000); அருள் பெறுதல் : 2. பிரமன் 19 - (2019); 3. நாராயணன் 26 - (2045); 4. இந்திரன் 30 - (2075); 5. நாகம் 10-(2085); 6. இராமன் 45 - (2130); களவு 643 - (2773); வள்ளி திருமணம் 263 - (3036); விடை அருளல் 44 - (3080); 7. நாரதன் அருள் பெறுதல் 81 - (3161).

(ii) கந்தப்ப தேசிகர் இயற்றியது 'தணிகாசல புராணம்'. இது எளிய நடையில் தணிகாசலப் பெருமையை விளக்குகின்றது; அச்சிட்ட நூல் (1939). பிரம்மாண்ட புராணத்தில் பிரம்ம - நாரத சம்வாதத்தில் 'கல்லாரகிரி மாகாத்மியம்' எனவரும் பகுதி, ஓலைச்சுவடியில் கிரந்தத்தில் உள்ளதின் மொழிபெயர்ப்பே 'தணிகாசல புராணம்'.

இதன் அமைப்பு : (1) கடவுள் வாழ்த்து - 13, (2) அவை அடக்கம் - 2, (3) சிறப்புப் பாயிரம் - 1, சிறப்புகள் : (4) நாடு - 38, (5) நகரம் - 29, (6) நைமிசாரணியம் - 29, (7) கல்லாரகிரி மான்மியம் - 40 (8) பிரமன் பேறு பெற்றது - 51, (9) அகத்தியன் கல்லாரகிரி அடைதல் - 14, (10) அகத்தியனுக்குச் சிவன் தன்மோத்திரம் உரைத்தது - 31, (11) தாரகனைக் கொன்றது - 68, (12) இந்திரன் நீலமலரால் அர்ச்சித்து, தெய்வயானையும் வெள்ளை ஆனையும் கொடுத்தது 29, (13) திருமால் பூசித்துச் சக்கரம் பெற்றது - 35, (14) சேடன் பூசித்துச் சற்சரம் நீங்கினது - 46 ஆக 426.

இவை தவிர, கந்தபுராணம் - வள்ளியம்மை திருமணப் படலத்தில் 214 முதல் 229 வரையிலுள்ள பாடல்கள் தணிகைமலைச் சிறப்பை முருகனே வள்ளிக்கு விளக்கினதாகக் கூறும் (பார்க்க, பக். 227-229). மேற்கண்ட புராணங்களைத் தழுவித் தமிழிலும், தெலுங்கிலும் உரைநடையில் எழுதப்பட்ட தணிகை மான்மியங்கள் அச்சில் வந்துள்ளன.

### முத்துசாமி திட்சிதர் (1775 - 1835) கீர்த்தனைகள் !

கீர்த்தனை முதல் குறிப்பு - மேள எண் - ராகம் - தாளம்

1. ஸ்ரீ நாதாதி குரு குஹோ - 15 மாயாமாளவ கௌள-ஆதி
2. மானச குரு குக - 20 ஆனந்த பைரவி - ரூபகம்
3. ஸ்ரீ குருணா - 15 - பாடி - ரூபகம்
4. குரு குஹாயா 29 - சாமா - ஆதி

5. குரு குஹ தன்யம் - 28 பலஅம்ச - ஜம்பை

6. குரு குஹாஸ்ய - 15 - பூர்வி - மிஸ்ரசாபு

7. குரு குஹ சுவாமினி - 4 பானுமதி - திரிபுடம்

8. ஸ்ரீ குரு குஹ மூர்த்தே - 9 உதயரவிசந்திரிகா - ரூபகம்
பாடி, பூர்வி, உதய ரவிசந்திரிகா ராகங்களுக்கு முறையே 3, 6, 8 ஆம் கிருதிகள் ஆதாரமாக விளங்குகின்றன. 7. பானுமதி ராகம் அல்பமான ராகமாக இருப்பதோடு அல்லாமல் விவாதி மேளத்தைச் சார்ந்ததாகவும் இருக்கிறது. தீட்சிதர் விவாதி குறைபாடு இன்னிசைக்கு ஏலாத தொடர்கள்.

இக் கீர்த்தனைகளில் குறிப்பிடத்தக்க மற்றொரு கூறு உண்டு. அது வடமொழியில் உள்ள 8 விபக்திகளையும் இவர் எளிமையாக ஆண்டு இருப்பது. விபக்தி, வடமொழியில் பெயர்ச் சொற்கள் வேற்றுமை உருபுகளை ஏற்கும் நிலை. அந்த விபக்திகளை வரிசைப்படி ஆண்டுள்ளார்.

5. தலச்சிறப்பு : முருகனுக்குச் சிறப்பான திருப்பதிகள் ஆறு :- குன்றுதோறாடல் - குறிஞ்சி நிலத்து தலைவர் - முருகன் மலைமேல் கோயில் கொண்ட எல்லாத் தலங்களையும் குறிக்கும். அப்படி முருகன் மலை இடங் கொண்ட கோயில்களுள் தணிகை மலையே சிறந்தது. (கந்தபுராணம் பக்கம் 227 : பாட்டு 'விரையிடங்கொளும்' பார்க்க.)

'புவிக்குயிர் ஆகும் திருத்தணி' என அருணகிரியார் இத் தலத்தைப் பூமியின் உயிர்நிலை இடமாகக் கூறி, 'இதைத் தூரத்திலிருந்து தொழுதாலும் நாம் செய்த வினை தொலையும்' என்கிறார் :

தூரத்தொழு வார்வினை சிந்திடு
தாதுற்றெழு கோபுர மண்டபம் அவைசூழும்
தார்மெத்திய தோரண மென்தெரு
தேர்சுற்றிய வார்பதி அண்டர்கள்
தாமெச்சிய நீள்தணி யம்பதிப் பெருமாளே! — திருப்புகழ் 63

'தூரத்திலிருந்து இத்தலத்தின் பெயரைக் கேட்டாலும் சொன்னாலும், தொழுதாலும், தலத்தில் இருந்தாலும், பல பிறப்புகளில் செய்த வினைத்தொகை அனைத்தும் தொலைந்து பேரின்பம் கைகூடும்' என்றும், 'திருத்தணிகைக்குப் போகலாம் என்று மனத்தில் நினைத்தாலும் அத்தலத்தின் பக்கமாகப் போனாலும், அத்தலத்துக்குப் போக வேண்டுமென்று 10 அடி தூரம்

நடந்தாலும் நம்மை வாதிக்கும் நோய் எல்லாம் ஓடிப்போகும்' என்றும் தணிகைப்புராண ஆசிரியர் கூறுவர்.

சேயிடை இருந்து கேட்பினும் தொழினும்
செப்பினும் சித்தம் வைத்திடினும்
ஆயிடை வதிதல் ஆதிகள் செயினும்
அலகு இல் பல் பவத்தினும் ஈட்டு
மாயிரு வினையும் சவட்டி, மீளாத
வரம்பில் இன்புறுத்துவது என்றால்,
காயிலை வேலோன் தணிகையின் பெருமை
கட்டுரைக்கு அடங்குவது அன்றே.

— புராண வரலாறு-70

அத்தலம் தன்னை யாம் அடைகு வாம் எனப்
புத்தியில் நினைப்பினும், புறத்தில் செல்லினும்,
பத்துஅடி நடப்பினும், பரித்த நோய் எலாம்
கொத்தொடும் அவர்புறம் வழிக்கொண்டு ஓடுமே.

— அகத்தியர் அருள் பெறுதல்-37

'ஐந்து நாள் இத்தலத்தில் இருந்து என்னை நம்பி வழிபடுவோர் நினைத்த போகங்கள் நிரம்பப்பெற்று வீடுபேறு அடைவர்' என்று முருகரே வள்ளிக்கு அருளியதாகக் கந்தபுராணம் கூறும். (பக்கம் 228 : பாட்டு 'அஞ்சு வைகல்' பார்க்க.)

**6. திருத்தணிகையின் வேறு பெயர்கள் :** சூரனுடன் செய்த பெரிய போரும் வேடரோடு நிகழ்த்திய சிறிய போரும் முடிந்து இறைவன் சினம் தணிந்து இருந்த தலம்; ஆதலின் இத்தலத்துக்குத் **'தணிகை'**, **'செருத்தணி'** எனப் பெயர்கள் வந்தன. (பக்கம் 227 : பாட்டு 'செங்கண்' பார்க்க)

சூரன் கவர்ந்து சென்ற பொன்னுலகத்துச் செல்வம் எல்லாம் தன்னிடத்தே நிறைந்துள்ள காரணத்தால் **'ஸ்ரீ பூரணகிரி'**; அடியவர் இச்சை ஒருநொடிப் (க்ஷணம்) பொழுதில் கைகூடும்; ஆதலால் **'க்ஷணிகாசலம்'** (கணிக வெற்பு). மூலகாரணனான சிவனே முருகனைத் தனக்கு மூலமாகக் கொண்டு இவ் இடத்தில் வணங்கின காரணத்தால், **'மூலாத்திரி'** என்பர். நீலோற்பல மலரும் செங்கழுநீரும் நாளும் மலையில் மலர்ந்த காரணத்தால், **'நீலோற்பல கிரி'**, **'நீலகிரி'**, **'உற்பல கிரி'**, **'அல்லகாத்திரி'**, **'கல்லார கிரி'**, **'காவி மலை'** **'குவளைச் சிகரி'**, **'செங்கழுநீர்க் குன்றம்'**, **'செங்கல்வ கிரி'** என்னும் பெயர்களும் உள. முருகனைச் **'செங்கல்வராயர்'** என்பர். கற்ப முடிவிலும் அழியாத தலம் ஆதலின் **'கற்பசித்'** எனவும், பிரணவப் பொருளைச்

சிவனுக்கு முருகன் உபதேசித்த இடம் ஆதலால் 'பிரணவார்த்த நகரம்' எனவும், இந்திரன் வரம் பெற்ற இடம் ஆகையால் 'இந்திர நகரி' எனவும், நாரதர்க்குப் பிரியமுள்ள இடம் ஆதலால் 'நாரதப் பிரியம்' எனவும், அகோரன் (மறையோன்) மோட்சம் அடைந்த பழைய நகர் ஆதலால் 'அகோர கைவல்யப் பிரதம்' எனவும், கந்தர் வீற்றிருப்பதால் 'கந்தகிரி' எனவும் இத்தலத்திற்குப் பெயர்கள் வந்தன.

7. வழிபட்டுப் பேறு பெற்றவர்கள் : 1. சிவன் இத்தலத்தில் குமாரரைத் தியானித்து, பிரணவப் பொருள் அருளப் பெற்றார். அப்படி சிவன் அமர்ந்துள்ள கோயில் ஊருக்கு வடகிழக்கே நந்தி ஆற்றின் வடகரையில் உள்ளது. அதனைக் கல்வெட்டு 'வீரட்டானம்' எனவும் தலபுராணம் 'வீரஅட்டகாசம்', எனவும் கூறும். உபதேசம் செய்த சாமிநாதர் கோயில் நந்தி ஆற்றின் தென்கரையில் வீரட்டானக் கோயிலுக்கு எதிரில் உள்ளது. இது கோட்டா ஆறுமுகசாமி கோயில் என வழங்கும். இன்று மலை மீது உள்ள ஆறுமுகர் திருவுருவம், முன்னாளில் இங்கு இருந்தது என்பர்.

2. விஷ்ணு இங்கு முருகனை வழிபட்டுத் தாரகனால் கவரப்பட்ட தன் சக்கரம் சங்கு முதலியவற்றை மீண்டும் பெற்றார்.

3. இராமர் முருகனை வழிபட்டு இராவணனை வெல்ல ஆற்றலையும் ஆயுதங்களையும் பெற்றார். அவனை வென்ற பிறகு மறுபடியும் பூசித்துச் சிவஞானம் பெற்றார். இராவணனை வென்று வந்த விஜயவல்லி உடன் உறை விஜயராகவப்பெருமாள் கோயில், ஆறுமுகர் கோயிலுக்குத் தெற்கில் பக்கத்தில் உள்ளது.

4. பிரமன் குமரனைப் பூசித்துப் படைப்புத் தொழில் செய்யும் ஆற்றலையும் சூரனால் கவரப்பட்ட தமது செல்வங்களையும் பெற்றார். கலைமகள் இத்தலத்தில் பூசித்தாள். மலைமேல் ஏறிப் போகும் படி வழியில் பாதி தூரத்தில் வட பக்கத்தில் பிரமசுனை (தீர்த்தம்) இருக்கின்றது. இதன் தென்கரையில் பிரம்மேசுவரர் கோயில் இருக்கிறது. இப்படி மூவரும் இங்கு வழிபட்டதை, 'சிலைமகள் நாயன், கலைமகள் நாயன், திருமகள் நாயன் தொழும் வேலா' எனத் திருப்புகழில் (13) வருகிறது.

5. இந்திரன் தணிகை மலையில் தென்புறத்தில் உள்ள சுனையில் நீலோற்பலக் கொடியை நட்டு, பூத்த அம்மலரால் காலை, உச்சி, மாலை மூன்று வேளைகளிலும் குமரனைப் பூசித்து, சூரனால் கவரப்பட்ட காமதேனு, சங்கநிதி, பதுமநிதி முதலிய செல்வங்களை மீண்டும் பெற்றான். இந்திரன் அமைத்து வணங்கிய விநாயகரை 'செங்கழுநீர் விநாயகர்' என்பர். 'இந்திரநீலச் சுனை'

(கல்லார தீர்த்தம்) மலைக்கோயிலின் தெற்கு வாயிலுக்கு நேராகப் பள்ளத்தில் மதில் சூழ, இருக்கின்றது. இத் தீர்த்தம் சுவாமியின் திருமஞ்சனத்திற்கும் (நீராட்டம்), சமையலுக்கும், பூசைக்கும் தனிப்படப் பயன்படுகிறது. அதனை இப்புனித நீரைத் தூரத்திலிருந்து தொழலாமே அன்றி வேறு எவ்விதத்திலும் பயன்படுத்தல் ஆகாது. இந்திரனுடன் தேவர்கள் யாவரும் வந்து வழிபட்டனர். இது 'இமையவர் பணி திருத்தணிப் பொற்பதி' (55), 'அண்டர்கள் தாம் மெச்சிய நீள் தணியம்பதி' (63) எனவரும் திருப்புகழ்களால் அறியலாகும்.

6. நந்திதேவர் இங்கு வழிபட்டுப் பதிபசுபாச இலக்கணத்தை உணர்ந்தார். அவருக்காக முருகன் வரவழைத்த ஆறே (சிவ தத்துவாமிர்தம்) நந்தி ஆறு. நந்திதேவர் யோகிருந்த குகை 'நந்தி குகை' என வழங்கும்.

7. பாற்கடல் கடைந்த காலத்தே கயிறு ஆக இருந்து உடம்பு புண்ணுனை வாசுகி (நாகம்) இங்கு முருகனைப் பூசித்து நலப்பட்டது. ஆதிசேடனும் பூசித்ததாகச் சொல்வர்.

8. அகத்தியர் இங்கு முருகப்பிரானைப் பூசித்துத் தமிழ் மொழியின் இலக்கண உணர்ச்சியும் ஞான உபதேசமும் பெற்றார்.

9. நாரதர் பூசித்து, 'இறைவன் எருதை ஏன் வாகனமாகக் கொள்கிறார்? ஏன் திருநீற்றைப் பூசிக் கொள்கிறார்?' என்பன போன்ற ஐயங்கள் முருகனால் நீங்கப் பெற்றார்.

10. ஏழு முனிவர் பூசித்த இடம், மலையில் தென்கிழக்கில் உள்ளது இங்கு ஏழு சுனைகளும், கன்னிமார் கோயிலும் இருக்கின்றன. இந்த இடம், இப்போது 'ஏழுசுனை', 'கன்னிமார்கோயில்' என வழங்குகின்றது. அடர்ந்த சோலைகளால் சூழப்பெற்று, வெயில் நுழையாத அமைதியான இடம். பூங்காவனத்துக்கும் தவத்துக்கும் ஏற்ற இடம். முனிவர்கள் பூசித்ததை 'தவமுனிக் கணத்தவர் மதுமலர் கொடுபணி திருத்தணிப்பதி, (18) எனவரும் திருப்புகழால் அறியலாகும்.

11. மறையவன் அகோரன் இங்கு உள்ள தீர்த்தங்களில் நீராடிப் பிறவி நோய் ஒழிந்தனன் எனப் புராணம் கூறும்.

12. நிற்க, குமரனே தந்தையை இத்தலத்திற் பூசிக்க விரும்பி, மலைமீது தாம் இருக்கும் இடத்துக்கு வடகீழ்ப் பக்கத்தில் ஆபத்சகாய விநாயகரை அமைத்து, பின்னர், சிவலிங்கம் அமைத்துப் பூசித்துச் சிவனிடமிருந்து ஞான சக்தி(வேல் படை)யைப் பெற்றனர். அப்படி அவர் பூசித்த மூர்த்தியை 'குமரேசுரர்' என்பர். குமரேசுரர் சந்நிதி இரண்டாவது உள் சுற்றில் வடக்கே இருக்கிறது. ஞானசக்தியைப் பெற்றதால் இத்தல குமரனுக்கு 'ஞான சக்திதரர்' என்னும் பெயர் ஏற்பட்டது. சாமிக்குச் செய்யப்படும்

அர்ச்சனைகளிலும் 'ஓம் ஞான சக்திதராய நம' என்பது முதன்மையான பெயராகச் சொல்லப்படும். குமரேசுரரை நீராட்ட குமரர் வரவழைத்த கங்கா தீர்த்தம் 'குமார தீர்த்தம்' (சரவணப் பொய்கை) எனப்படும். இது மலையடி வாரத்திலுள்ள பெரிய திருக்குளம். அருணகிரிநாதர் காலத்திலேயே இது விசேட தீர்த்தமாய் இருந்தது என்பது 'திருக்குளம் நாளும் பலத்திசை மூசும் சிறப்பு' (10) என்னும் திருப்புகழால் தெரிகின்றது. கச்சியப்ப முனிவர் இப்புனிதப் புனலை,

> ' எத்துயர்த் திரளும் அத்தினத்து அகற்றும்
> சரவணப் பொய்கைத் தடம் புனல் துளைந்து '
>
> — தணிகை - ஆற்றுப்படை 221, 222

எனச் சிறப்பித்துள்ளார். இன்றும் வழிபடுவோர் இதில் நீராடி, மலையேறிச் சாமியை வணங்குகிறுர்கள்.

8. **தமிழ் நூல்களில் தணிகையைப் பற்றித் தெரிவன :** திருப்புகழிலும், கந்தபுராணத்திலும் இத்தலம் சிறப்பாகச் சொல்லப்பட்டு இருத்தலால் இது அக்காலம் முதல் சிறந்த பெயர் பெற்றத் தலமாய் விளங்கி வருகின்றது. திருத்தணிகைத் திருப்புகழ்களில் பின்வரும் செய்திகள் கூறப்பட்டுள்ளன : இத்தலத்திற் குவளை மலர் நித்தம் மலர்ந்தது; தமிழ் மொழிக்குத் திருத்தணிகை வடஎல்லையாய் இருந்தது; திருக்குளத்திற் பெருந்திரளாக அடியார் நீராடியது; மும்மூர்த்திகளும் இத்தலத்தில் வழிபட்டது; தேவர், முனிவர், ஐந்தலை நாகம் வழிபட்டது; தேவசேனை, வள்ளியம்மையுடன் இறைவன் மகிழ்ச்சியோடு இத்தலத்தில் வீற்றிருப்பது என்பனவாம். உண்மைத் தவத்தோர் இத்தலத்தில் வாழ்ந்தனர். தணிகைமலை, 'அழகு திருத்தணி மலை'; 'திருப்புகழை ஓதும் கருத்தினர் சேரும் திருப்பதி' இது. இத்தலத்தில் முருகன் மயில்மீது நடனம் செய்தார். முருகன் 'அழகிய பெருமாள்', 'இணையிலி', எனப் போற்றப் படுகிறுர். இத்தல மூர்த்தி 'பவரோக வைத்தியநாதப் பெருமாள்'. இத்தலம் பூமிக்கு உயிர் நிலையிடம்; 'தூரத்தொழுவார் வினை சிந்திடும் பதி, தேரோடிய திருப்பதி', 'எத்திக்கும் உற்ற புகழ் வெற்றித் திருத்தணி' எனப் புகழப் பெற்றது. கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர், கந்தப்ப தேசிகர் முறையே அருளிய 'தணிகையாற்றுப்படை', 'திருத்தணிகைத் திருவிருத்தம்', (பக். 233-237) 'தணிகையுலா, (பக். 143-188) என்னும் நூல்களால் சரவணப் பொய்கையில் நீராடி அடியார்கள் மலை ஏறுவதும், மலை ஏறும்போது திருப்புகழ் பாடிக்கொண்டே படி ஏறுவதும், அங்கவலம் செய்யும் அடியவர் கூட்டம் மிகுத்திருந்ததும், மலைமீது கிழக்குச் சுற்றில் கொடிமர விநாயகர், ஐராவதம் இவைகளை வணங்குவதும், தெற்குச் சுற்றில் நீலோற்பல மலரை நித்தம் தந்த இந்திர நீலச்சுனையைத் தரிசிப்பதும், கோயிலுள் ஆபத் சகாய விநாயகரை முதலில் வணங்கிப் பின்பு பக்கத்திலுள்ள நவ வீரர்களை வணங்கி, குமார லிங்கத்தைத் தரிசித்து, வள்ளி, தேவசேனை உடனுறை மூர்த்தியை வணங்கி அவரது அழகிய திருக்கோலத்தில் ஈடுபட்டுப் பேர்-ஆனந்தமுற்று

நிற்பதும், அவர் சந்நிதியில் விபூதி, பிறவி நோய் தீர்க்கும் மருந்தென்று உட்கொள்ளப்படும் திருமேனி திருவுருப் பூச்சு (சுவாமி மேல் அணிந்து களையப்பட்ட சந்தனம்), பிரசாதமாக அளிக்கப் பெறுவதும், கிருத்திகைகளில் கற்பூர தீபம் எரிப்பதும், மயில், கோழி, புரு, பசு, எருது இவைகள் பிரார்த்தனையாகச் செலுத்தப்படுவதும், இந்திர நீலச்சுனைத் தீர்த்தம் சுவாமிக்கே பயன் படுவதும் தெரிகின்றன.

9. **கோயிலின் அமைப்பும், தரிசனமும்:** அடிவாரத் திருக்குளத்திலிருந்து கோயிலின் தேர்வீதியைச் சேர 410 படிகள் ஏற வேண்டும். படிகளின் உயரம் 8" - 9" இருப்பதால் சிரமம் தோன்றுது. திருப்புகழ் பாடிக்கொண்டு மலை ஏறினல் நாம் செய்த வினை பொடியாகும் என்று தொன்றுதொட்டுச் சொல்வர். பாதி மலையில் வலப்புறத்தில் பிரமசுனையையும் அங்குள்ள விநாயக மூர்த்தி, பிரமலிங்கத்தையும் வணங்கி மலை உச்சி சேர வேண்டும்.

10. **நேர் விதி - வெளிப் பிராகாரம்:** மலை உச்சி சேர்ந்ததும் ரதவீதியாகிய கிழக்கு வெளிப்பிராகாரம் இருக்கிறது. இப்பிராகாரத் துவக்கத்தில் கற்பூரக் கொப்பரை, சாமி சந்நிதிக்கு நேராய் இருக்கிறது. கிருத்திகை நாள்களில் பிரார்த்தனைக் கற்பூரம் இதில் எரியும். ரத வீதியை வலமாக வந்தால் தெற்கு வாயிலுக்கு நேராகத் தென்புறத்தில் இந்திர நீலச்சுனை தெரியும். இதன் தீர்த்தமே இன்றும் சுவாமிக்குத் தனிப்படப் பயன்படுகின்றது. இதில் யாரும் இறங்கக் கூடாது; நின்ற இடத்திலேயே இதைத் தரிசித்துச் சென்ருல் தென்மேற்கு மூலையில், வசந்த மண்டபம் இருக்கின்றது; உற்சவ காலங்களில் சுவாமி இந்த மண்டபத்தில் தங்குவார்; இங்கிருந்தே வாகனங்கள் ஏறிக் காட்சி அளிப்பார். பின்பு மேற்குப் பிராகாரத்தில் மேல்-திருத்தணிக்குப் போகும் மலைப்படிகளைக் காணலாம். இப் படிகள் தொடங்கும் இடத்தில் குருக்கள்மார் வீடுகள் உள்ளன. செங்கழுநீர் விநாயகர் ஆலயமும் மேற்குச் சுற்றின் முடிவில் உள்ளது. மேற்கு, வடக்கு, கிழக்கு ரத வீதிகளிலிருந்து பார்த்தால் நந்தியாற்றின் காட்சியைக் காணலாம். வடக்குச் சுற்றின் முடிவில் வடகிழக்கு மூலைக்கு அருகில் நவாப் வாத்திய மண்டபம் இருக்கிறது. இங்கு தினந்தோறும் பூசை, உற்சவ காலங்களில் மகம்மதியர்கள் வாத்தியம் வாசிப்பார்கள். ரதவீதியிலிருந்து கிழக்கு, தெற்கு, மேற்கு வாயில்களின் வழி சில படிகள் ஏறினல் கோயிலைச் சேரலாம்.

11. **முதல் உள் - பிராகாரம்:** கிழக்கு வாயிலுக்கு வெளியில் வடபுறத்தில் உள்ள விநாயகரை வணங்கி உள்ளே வெளிப் பிராகாரத்தை அடையலாம். இந்தச் சுற்றை வலமாக வந்தால் தென்மேற்கு மூலையில் உமாமகேசுரர் கோயில் உள்ளது. இதற்கு அடுத்தாற்போல் வடபுறத்தில் சர்வ வாத்திய மண்டபம் உள்ளது. சிறப்புத் திருவிழாக் காலங்களில் இங்கு சுவாமியின் முன்பு எல்லா வாத்தியங்களும் வாசிக்கப்படும். மேற்குச் சுற்றின் மத்தியில் மேற்கு வாயிலுக்குத் தெற்கே 'உச்சிப் பிள்ளையார்' ஆலயம் இருக்கிறது. கிழக்குச் சுற்றில் உள்ள கொடிமர விநாயகரையும், ஐராவதத்தை (யானையை)யும் தரிசித்து உள்ளே செல்ல வேண்டும்.




*திருத்தணிகை மலைக்கோயில் அமைதி*

**(Ground Plan - Not to Scale)**

1. மூலவர் - ஞானசக்திதரர்
2. அந்தராளம்
† 3. அர்த்த மண்டபம்
† 4. ஸ்தபன மண்டபம்
5. தேவசேனை
6. வள்ளி
7. சுமத்திரீஸ்வரர்
8. கருவூலம்
9. பைரவர்
10. உற்சவ மூர்த்திகள்
11. குமரீஸ்வரர்
11A திருமூலட்டான ஈஸ்வரர்
B காளத்தி ஈஸ்வரர்
C பால சுப்பிரமணியர்
D கைலாச நாதர்
E பள்ளி அறை
12. யாகசாலை
13. ஆறுமுகர் (உற்சவர்)
14. ஆபத்சகாய விநாயகர்
அருணகிரிநாதர், நவவீரர்
15. வீர பத்திரர்
16. வீர தீரன்
17. வீராந்தகன்
18. வீர மார்த்தாண்டன்
19. வீர ராட்சசன்
20. வீர புராந்தரன்
21. வீர மாகேஸ்வரன்
22. வீர மகேந்திரன்
23. வீர கேசரி
24. வீர பாகு
25. சூரிய மூர்த்தி
26. மடப்பள்ளி
27. ஏகாம்பரர்
28. அர்த்தநாரி
29. அருணசலர்
30. ஆறுமுகர் (கல் சிலை)
31. சந்தன மண்டபம்
32. வாகன மண்டபம்
அலுவலகம்
33. ஐராவதம் (யானை)
34. காதர்க் கொடி மரம்
35. பலிபீடம்
36. பிரசன்ன காதரீஸ்வரர்
37. கர்ப்பூர அகண்டம்
38. சிவன் கோயில்
† 39 மண்டபம்
40. உச்சிப் பிள்ளையார்
† 41. மண்டபம்
† 42. வாகன மண்டபம்
† 43. திருமண மண்டபம்
44 நுழை வாயில்

42, 43, 44 (ரத வீதியில் உள்ளன)
† மண்டபங்களைக் குறிக்கும்.

திருத்தணிகை ஊர், கடல் மட்டத்திற்கு (Sea level) மேல் 283′ அடி உயரத்தில் இருக்கிறது. மலையில் மூலவர் இருக்குமிடம், ஊர் மட்டத்திற்கு மேல் ஏறக்குறைய சுமார் 350′ அடி உயரம் இருக்கும். அதாவது கடல் மட்டத்திற்கு மேல் சுமார் 650′ அடி உயரத்தில் பெருமான் இருக்கிறார்.

ஐராவதம் கிழக்குத் திசை நோக்கி நிற்பதற்குக் காரணம் பின்வருமாறு : ஐராவதம் தெய்வயானையம்மைக்குச் சீதனமாக இந்திரனால் கொடுக்கப்பட்டது. ஐராவதம் தன்னை விட்டுப் பிரியவே இந்திரனுடைய செல்வங் குறைந்தது. அக்குறை நீங்க அவன் இத்தலத்தில் செங்கழுநீர்ப் பூவால் முருகக் கடவுளை அர்ச்சித்தான். அவனது வழிபாட்டுக்கு இரங்கி ஐராவதத்தை அவன் கொண்டு செல்ல முருகக் கடவுள் அனுமதி தந்தார். சீதனம் தந்த பொருளை எடுத்துக்கொள்வது முறையன்று என்று இந்திரன் மயங்கினான். யானையும் முருகனுக்கு வாகனமாக இருத்தலே தனக்கு அரிய பதவி என்று விண்ணப் பித்தது. இந்திரன் 'இந்த யானை தங்கள் சந்நிதியிலே இருந்து, கிழக்கே யுள்ள என் உலகை நோக்கியிருக்குமானால் என் செல்வங் குறையாது' என்று விண்ணப்பித்தான். முருகன் அவ்வாறே அனுக்கிரகிக்க, முருகன் தன் மீது ஏறி உலாவரச் சித்தமாய் இருக்கும் நிலையில் யானை இருக்கின்றது. இந்த யானையை 'ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி' என நக்கீரர் சொல்லியவாறு வணங்கிச் செல்ல வேண்டும். இந்திரன் சீதனமாகக் கொடுத்த பெரிய சந்தனக்கல் கோயிலுக்குள் இருக்கின்றது.

சந்நிதி வாயிலின் தென்புறத்தில் 'பிரசன்ன காதரீசுர' சிவ சந்நிதி உளது. தனது இடுக்கண்ணை நீக்கிய காரணத்தால் காதர் (நவாப்) இந்த லிங்கம் அமைத்து நவாப் வாத்திய மண்டபத்தை அமைத்துப் பூசை, வாத்திய வாசிப்பு முதலிய ஏற்பாடுகள் செய்ததாகக் கூறுகின்றனர். சந்நிதி வாயிலுக்கு வடக்கே தேவஸ்தானக் கச்சேரியும் ஆஸ்தான (கொலு) மண்டபமும் உள்ளன. இந்த மண்டபத்தில் திருவிழாக் காலங்களில் சுவாமி, தேவிமாருடன் இறங்குவது வழக்கம். சந்நிதி வாயிலில் நுழையுமிடத்தில் முகத்துவாரத்துக்கு வட பக்கத்தில் பிரார்த்தனைக்காரர்கள், முடிப்புகள், ரொக்கம் வகையரா பிரார்த்தனைக் காணிக்கைகளைச் செலுத்த வேண்டிய உண்டி இருக்கிறது. இதைக் கடந்து முகத்துவாரம் நுழைந்தால் உட்பிராகாரத்தை அடைகின்றோம்.

12. **இரண்டாவது உள்சுற்று :** இதில் வலம் வந்தால் தென்கிழக்கு அக்கினி மூலையில் மடைப்பள்ளியும், தெற்குப் பிராகாரத்தின் மத்தியில் காமாட்சி உடன் உறை ஏகாம்பரேசுரர் சந்நிதியும் இருக்கின்றன. மேற்குச்சுற்றின் மத்தியில் சண்முகர் (மூலவர்) கோயில் இருக்கிறது. வடமேற்கு மூலையில் ஆறுமுகர் அபிஷேக மண்டபம் உளது. இம்மண்டபத்தில் சின்ன உற்சவ மூர்த்தியின் சந்நிதி உள்ளது. வடக்குச் சுற்றில் வடபுறம் மத்தியிலுள்ள ஒரு தூண் பக்கத்திலிருந்து மேலே தென்புறமாகச் சாய்ந்து ஒரு துவாரத்தின் மூலம் பார்த்தால் கர்ப்பக்கிரக ஸ்தூபியின் (மூல இடத்தின் விமானக்) காட்சி கிடைக்கும். இச்சுற்றிலே குமரேசுர லிங்கத்தின் சந்நிதி உளது; வடக்குப் பிராகாரத்துக் கீழண்டை எல்லையில் யாகசாலைக்கு எதிரில் சுவாமிக்கு உபயோகப்படுகின்ற சந்தனம் அரைப்பதற்கு வேண்டிய அற்புதமான பெரிய சந்தனக்கல் இருக்கின்றது. இதுவும் தேவயானைக்குச் சீதனமாகத்

தேவேந்திரன் கொடுத்ததாம். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இடைவிடாமல் பயன்பட்டும் இந்தக்கல் தேய்வுபடாமல் சோதி விடும் பல அணுக்கள் கொண்டதாகத் திகழ்கின்றது. இதில் அரைக்கும் சந்தனமே பெருமானுக்குத் திருமேனிப் பூச்சாகி, பின்பு அடியார்களுக்குப் பிரசாதமாகக் கொடுக்கப்படுகின்றது. இது சகல வியாதிகளையும் தீர்க்கும் மருந்தாக அடியார்களால் கருதப்பட்டுப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இதையறிந்தவர்கள் தங்களுக்கு அளிக்கப்படுவதைச் சாக்கிரதையாக வைத்துக்கொண்டு தினந்தோறும் மிளகு அளவு உட்கொண்டு வருவார்கள். வடகிழக்கு மூலைக்கு அருகே ருத்ராட்ச விமானத்தில் பிரதான பெரிய உற்சவ மூர்த்தி வீற்றிருக்கின்றார். இந்த விமானத்தின் மேல்பாகம் ருத்ராட்சங்களால் அமைந்திருப்பது காணத்தக்கது. கிழக்குச் சுற்றின் வடபாகத்தில் சண்முக மூர்த்தி (உற்சவர்) இருக்கிறார். மாலை வேளையில் பிரதோஷ காலமாகிய சுமார் 6½ மணிக்கு இவருக்குத் தீபாராதனை நடந்த பின் மூலவருக்கு அபிஷேகம், பூசை, சாயரக்ஷை தீபாராதனை நடக்கும். சண்முக சுவாமிக்குக் கிழக்கே ஆபத்சகாய விநாயக மூர்த்தி இருக்கின்றார். இவருக்குச் சமீபத்தில் மேற்குப் பார்த்த மேடையில் முதலில் அருணகிரிநாத சுவாமிகள் பெரிய உற்சவரைப் பார்த்த முகமாகத் தனி விமானத்தில் இருக்கிறார். அவருக்குத் தெற்கே வீரபத்திர மூர்த்தியும், அவருக்குத் தெற்கே நவவீரர்களும் இருக்கிறார்கள். நவவீரர்களுக்குள் தெற்குக் கோடியில் இருப்பவர்தான் அவர்களுள் முதல்வரான வீரவாகுதேவர். அவருக்குத் தெற்கே சூரிய மூர்த்தி இருக்கின்றார். காலைப் பூசை இவருக்குத்தான் ஆரம்பிக்கப்பட்டு நடக்கும். இந்தப் பிராகாரத்திலிருந்து உள்ளே உள் பிரகாரத்துக்குச் சேர ஐந்து படிகள் உள்ளன. இவை 'பஞ்சாட்சரப் படிகள்' என வழங்குகின்றன.

13. மூன்றாவது உள் - பிராகாரம் : பஞ்சாட்சரப் படிகளைத் தாண்டி உட்பிராகாரம் சேர்ந்து நேராகச் சென்றால் ஸ்தபன மண்டபம். அது தாண்டினதும் அர்த்த மண்டபம். இங்கு, தென்புறத்தில் ஸ்தபன விநாயகர் உள்ளார். இதையும் தாண்டி உள் மண்டபத்தில் நின்றுதான் ஞானசக்தி தரராகிய ஆண்டவரைத் தரிசிக்க வேண்டும். நல்ல தரிசனம் கிடைக்கும். நூல்களில் சொல்லியுள்ள முருகக் கடவுளுக்குரிய பதினாறுவகைத் திருவுருவங்களில் 'ஞானசக்திதரர்' என்னும் திருவுருவமே தணிகைநாதரது திருவுருவம். இவ்வுருவத்தின் இலக்கணம் தணிகைப்புராணத்தில்,

'செங்கமல மலர் ஏய்க்கும் ஒருதிருக்கை
குறங்கு அமைத்துச் செம்பொன் மேருத்
துங்கவரிச் சிலைக்கடவுள் அருள்ஞான
சத்தி ஒரு தொடிக்கை ஏந்திப்

பொங்கும் அருட் கருணைவிழிக் கடை ஒழுக
மலர்ந்தமுகப் பொலிவி னேடும்
அங்கண் அமர் ஞானசத்தி தரனை அகத்து
உற நினைப்போர் அவனே ஆவர்.' 7 குமரேச-45

'இச்சா ஞானக் கிரியை எனும்
இவைமூன்று இலையாய்க் கிளைத்தெழுந்திட்டு
அச்சான் ஆடி அறச் சுவற்றும்
அயில்வேல் ஒருகை வலத்து அமைத்து
நச்சாதவரைத் தெறும் ஒருகை
நளினம் குறங்கின் அமைத்து இமையோர்
விச்சாதரர் சூழ் ஞானசத்தி
தரனது உருவம் விதிப்போரும்' 10 அகத்தியர்-64

என்னும் பாடல்களில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது இந்தச் செய்யுட்களில் கூறியவாறு மூஇதழ்ச் சக்தியாகிய ஞானசக்தி சுவாமியின் வலது திருக் கரத்தில் உள்ளது. அவரது தொடையில் இடது திருக்கரம் அமைந்துள்ளது. மயிலின்றித் தனித்த உருவம், திவ்ய சுந்தரமூர்த்தி; 'தணிமலையப்பனே அழகிய பெருமாளே' (31), 'தணிகையில் இணையிலி' (41) என்பன திருப்புகழ். 'தணிகை மலையைச் சாரேனே, சாமியழகைப் பாரேனே' என்பது திருஅருட்பா. சுவாமியின் திருமார்பில் சிறுபள்ளம் ஒன்று அபிஷேகம் செய்யுங் காலத்தில் பார்க்கலாம். தாரகாசுரனல் விடப்பட்ட சக்கரம், சுவாமி மார்பில் பதக்கமாகப் பதிந்திருந்ததாகவும், தணிகை நாதரைத் திருமால் பூசித்துச் சக்கரத்தைப் பெற விரும்ப, அதைத் தமது மார்பிலிருந்து சுவாமி அவருக்கு எடுத்துத் தந்ததாகவும், சக்கரம் பதிந்திருந்த இடத்தின் அடையாளம் மார்பில் குழிபோல உள்ளது என்றும்

'தாரகன் விடுப்பத் தனது உரம் பதிந்த
சக்கரந்தனை அகழ்ந்து அரிக்குச்
சீர்பெற அளித்த நாள்முத லாகச்
செருத்தணிகாசலற்கு இன்னும்
மார்பகங் குழிந்த திருஅடை யாளம்
வயங்கியது இவ்வுல கத்தில்
ஏர்பெற அதனைத் தெரிசனம் செய்தோர்
இடர் ஒழிந்து இன்பவீடு அடைவார்' 13. திருமால்-369

எனத் தணிகாசல புராணம் விளக்கும். இங்கு விபூதி, நிர்மால்யம், திருமேனிச் சந்தனம் கொடுக்கப்படும். சந்தனத்தை முன் கூறியபடி உட்கொள்ள வேண்டும். அது பவரோகத்தையும் நீக்கும் என்பர் பெரியோர். மூலத் தானத்தில் இருபக்கத்திலும் போக சக்திகளாகிய தேவசேனை வள்ளியம்மை

உள்ளனர். ஆண்டவரையும் போக சக்திகளையும் தரிசித்து வெளியே வந்ததும் கிழக்கு உட்பிராகாரத்தில் தெற்கே வள்ளியம்மை சந்நிதியையும் வடக்கே தேவசேனை சந்நிதியையும் தரிசிக்க வேண்டும் வள்ளியம்மையின் இடது கரத்தில் தாமரை மலர் உருவமும் தேவசேனையின் வலது கரத்தில் நீலோற்பல மலர் உருவமும் அமைந்துள்ளன. அவற்றைக் கவனித்துப் பார்க்க வேண்டும்; வள்ளியம்மையைத் தரிசித்ததும் உட்பிராகாரத்தில் வலம் வந்தால் மேற்குப் பிராகாரத்தின் மத்தியில் ஸ்ரீபாலசுப்பிரமணிய சுவாமி சந்நிதி உள்ளது. இவரே பல்லவர் கால மூர்த்தி. இவருக்கு ஆருத்ரா தினத்தன்று வெந்நீர் அபிஷேகம் நடக்கிறது. வடக்குப் பிராகாரத்தில் (சுமந்திரேசுரர்), சண்டேசுரர் சந்நிதியும், பிராகாரத்தின் வடமேற்கு மூலையில் பள்ளியறையும், வடகிழக்கு மூலையில் பைரவர் சந்நிதியும் உள்ளன.

## 8. திருத்தணிகைக் கோயில்களின் கல்வெட்டுகள்

அரசினரால் 1905-ல் எண் 429 முதல் 451 வரையுள்ள 23 கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டன. திருத்தணி ரயில் நிலையத்திற்குக் கிழக்கே - ஊருக்கு வடகிழக்கே நந்தி ஆற்றின் வடகரையில் (1) வீரட்டானேச்சரமும், அதன் எதிரே தென்கரையில் (2) ஆறுமுகசாமி கோயிலும், அதன் தென்புறத்தில் – பக்கத்தில் (3) விஜயராகவப் பெருமாள் கோயிலும் உள்ளன. பிரபலமான முருகன் கோயில் மலைமேல் உள்ளது.

(1) வீரட்டானேசர் கோயிலில் (எண் 429 முதல் 438 வரை) 10 கல்வெட்டு களும் (2) மலையில் உள்ள முருகன் கோயிலில் ஒரே கல்வெட்டு (439)ம் (3) ஆறுமுகசாமி கோயிலில் (440-442) உள்ள 3 கல்வெட்டுகளும் (4) விஜயராகவசாமி (வடகலை) கோயிலில் மற்ற (443-451) 9 கல்வெட்டுகளும் படி எடுக்கப்பட்டுள்ளன.

வீரட்டானேசர் கோயிலில் உள்ள 10 (429-438) கல்வெட்டுகளும் தமிழ்க் கல்வெட்டுகள் அவற்றுள் எண் 433 ஆம் கல்வெட்டு, தமிழ்ப்பாடல் ஆகும். மலைக்கோயிலில் படி எடுத்த ஒரு கல்வெட்டும் தமிழே. ஆறுமுகசாமி கோயிலில் படி எடுத்த கல்வெட்டுகள் 3-ல் எண் 440, 441 என்ற இரண்டும் தமிழே 3-ஆவது கல்வெட்டு (442) தெலுங்கில் உள்ளது விஜயராகவப் பெருமாள் கோயிலில் உள்ள 9 (443-451) கல்வெட்டுகளுள் (443-446, 449, 451 6-ம் தமிழ். 447 (தெலுங்கு எழுத்தில்) வடமொழியில் உள்ளது. 448, 447-ன் தெலுங்கு மொழிபெயர்ப்பாகும். 450 வடமொழியும் தெலுங்கும் கலந்தது. 1905-ல் படி எடுக்கப்பட்ட இந்த 23 கல்வெட்டுகளுள், 3-ன் மூலம் தவிர, ஏனையவற்றின் மூலம் இன்னும் அச்சில் வெளிவரவில்லை. வெளிவந்த 1905-ஆம்

ஆண்டு அறிக்கையில் இக் கல்வெட்டுகளைப் பற்றிய குறிப்புகள் உள. அவை வருமாறு :-

குறிப்பு : கல்வெட்டு பற்றிய விவரம் : வரிசை எண் - கல்வெட்டுத் தொடர் எண் - கல்வெட்டு இருக்கும் இடம் - வமிசாவளி - அரசர் - கல்வெட்டின் காலம் - கல்வெட்டின் மொழி - கல்வெட்டில் காணப்படும் செய்திகள் என்ற வரிசையில் உள்ளன.

**வீரட்டானேசுரர் கோயில்**

(1) 429 - மூலக்கோயிலின் வடக்குச் சுவரில் - தமிழ் - பழுதுபட்டது. திருவேங்கடத் திருமலைக்குச் சென்றுவரும் பயணிகளுக்கு உணவு அளிக்க, தனியார் ஒருவருக்கு நிலம் கிரயம் செய்தல்.

(2) 430 - மூலக் கோயிலின் வடக்கு, மேற்கு, தெற்குச் சுவர்களில் - சோழர் - இராசகேசரி வர்மன் என்னும் இராசராச தேவன் - 28-ஆம் ஆண்டு - தமிழ் - செயங்கொண்ட சோழ மண்டலம், மேல்மலை தணியல் நாட்டில் (மாவட்டம்) சனநாத சதுர்வேதி மங்கலச் சபையார், திருவேங்கடம் சென்றுவரும் பயணிகளுக்கு உணவு அளிக்க, தனியார் ஒருவருக்கு நிலம் கிரயம் செய்தல்.

(3) 431 - மூலக்கோயிலின் மேற்குச் சுவரில் - சோழர் - விக்கிரம சோழ தேவர் - 11 ஆம் ஆண்டு - தமிழ் - திருவீரட்டானம் உடையார் கோயிலுக்கு விளக்கு எரிக்க 12 ஆடுகளைக் கொடுத்தல்.

(4) 432 - மூலக்கோயிலின் மேற்குச் சுவரில் - சோழர் - இராசகேசரி வர்மன் - 4 ஆம் ஆண்டு - தமிழ் - குன்றவர்த்தன கோட்டத்து, திருத்தணியலில் உள்ள ஒரூரின் ஆண்டுக் குழுவினர் விளக்கு எரிக்கும் அறக்கட்டளையை மேற்பார்வை செய்தல்.

(5) 433 - மூலக்கோயிலின் தெற்குச்சுவரில் - சோழர் - தமிழ்ச் செய்யுள் - நம்பி அப்பி திருத்தணியல் கருங்கல் தளியைக் கட்டியதைப் பற்றிப் பெருமானடிகள் (அரசன்) பாடிய வெண்பா :

> திருந்து திருத்தணியில் செஞ்சடைஈ சர்க்குக்
> கருங்கல்லால் கற்றளியா நிற்க — விரும்பியே
> நற்கலைகள் எல்லாம் நவின்றசீர் நம்பியப்பி
> பொற்பமையச் செய்தான் புரிந்து.

(6) 434 - மூலக்கோயிலின் தெற்குச் சுவரில் - பரகேசரிவர்மன் என்னும் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவன் - 19 ஆம் ஆண்டு - தமிழ் - திருத்தணியலில் உள்ள திருவீரட்டானம் உடைய மகாதேவர் கோயிலுக்கு ஒரு விளக்கு ஏற்ற 0 பசுக்களைக் கொடுத்தல்.

(7) 435 - மூலக்கோயிலின் தெற்குச் சுவரில் - கங்க பல்லவர் - விசய அபராசித விக்கிரம வர்மன் - 18 ஆம் ஆண்டு - தமிழ் - திருத்தணியல் திருவீரட்டானம் கோயிலுக்கு நம்பி அப்பி 1000 குழி நிலத்தைக் கொடுத்தல்.

(8) 436 - மூலக்கோயிலின் முன் மண்டபத்தின் கிழக்கு, வடக்குச் சுவர்களில் - சோழர் - பரகேசரி வர்மன் என்னும் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவன் - தமிழ் - மிகவும் பழுதுபட்டது.

(9) 437 - மூலக்கோயில் முன் மண்டபத்தின் கிழக்கு, வடக்குச் சுவர் களில் - சோழர் - பழுதுபட்டது - மலையில் உள்ள கோயிலுக்கு விளக்கு எரிக்க 90 ஆடுகளைத் தானம் கொடுத்தல்.

(10) 438 - கோயில் நுழை வாயிலில் பதிக்கப்பட்ட ஒரு கல்லில் - சோழர் - பரகேசரிவர்மன் - 16 ஆம் ஆண்டு - தமிழ் - குன்றவர்த்தனக் கோட்டத்துத் திருத்தணியல் ஊர்ச் சபையினர் செய்த நிலக் கிரயம். வேசலிப்பாடி மாவட்டத்தில் தென்கரை இளையூர் நாட்டிலுள்ள சிறுவெளூர் கிராமம் உள்ளதைக் கூறல்.

## மலைக் கோயில்

(1) 439 - மூல உள்நாழியை ஒட்டி உள்ள கல்லில் - சோழர் - மதுரை கொண்ட பரகேசரிவர்மன் - 3 (2) ஆம் ஆண்டு - தமிழ் - அடியில் கட்டப் பட்டது. செயங்கொண்ட சோழவள நாட்டின் பகுதியான மேலூர் கோட்டத்து ஒகவள (மாவட்டம்) நாட்டின் பெருங்காஞ்சிக்கு கிழக்கே உள்ள அகுவூருக்கு அருகில் உள்ள திருத்தணி மலையில் எழுந்தருளியுள்ள சுப்பிரமணியப் பிள்ளையார் கோயிலுக்குப் பரகேசரி முத்தரையன் நிலம் கொடுத்தல்.

## ஆறுமுகசாமி கோயில்

(1) 440 - மூலக்கோயிலின் தெற்குச்சுவர் - விஜயநகரம் - (வீரகம்ப)ண உடையார் - விசுவாவசு (சகம் 1288) - தமிழ் - மிகப் பழுதுபட்டது.

(2) 441 - மூலக்கோயில் அந்தராள மண்டபத் தளவரிசையில் - சோழர் - மதுரை கொ(ண்ட பர)கேசரி வர்மன் - விசுவாவசு (சகம் 1288) - தமிழ் - மிகப் பழுதுபட்டது.

(3) 442 - முதல் பிராகாரக் கிழக்குச் சுவரில் - தெலுங்கு - இந்தப் பிராகாரம் வெள்ள நாட்டுச் சோழ மகாராசாவான மகா மண்டலேச்சுர திருவேங்கட நாதராச தேவரால் கட்டப்படல்.

**விஜயராகவப் பெருமாள்** (வடகலை) **கோயில்**

(1) **443** - மூலக்கோயிலின் வடக்குச் சுவரில் - விசய நகரம் - வீரபிரதாப சதாசிவதேவ மகாராயர் - சௌமிய (சகம் 1471) - தமிழ் - மகா மண்டலேசுவர ராமதாச சின்ன திம்மய தேவ மகாராயர் ஊர் கொடுத்தல் - அவ்வூர் குன்றவர்த்தனக் கோட்டத்து தணிகை நாட்டு (மாவட்டம்) திருத்தணி எனப்படல்.

(2) **444** - மூலக்கோயிலின் வடக்கு, மேற்கு, தெற்குச் சுவர்களிலும் மண்டபத்திலும் - சோழர் - இராசகேசரி வர்மன் என்னும் முதலாம் இராசாதிராசன் (3) **1ஆம் ஆண்டு** - தமிழ் - **221/1894**-ஐ ஒத்த வரலாற்று அறிமுகம்.

(3) **445** - மூலக்கோயிலின் மேற்கு, தெற்குச் சுவர்கள் - சோழர் - பரகேசரி வர்மன் என்னும் உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர் - காலம் பழுதுபட்டது - தமிழ் - தொடக்கம் தொலைதல் - மேல்மலை தணிய நாட்டுச் ஜனநாத சதுர்வேதி மங்கலச் சபையார் திருவனந்தபுரம் கோயில் நிலம் விற்றல்.

(4) **446** - மூலக்கோயிலின் மேற்குச் சுவரில் - தமிழ் - முதலாம் இராசேந்திர சோழர் கல்வெட்டின் முன்பகுதி.

(5) **447** - மூலக்கோயிலின் தெற்குச் சுவரில் - வடமொழியில் தெலுங்கு எழுத்து - நாராயண ராசா இக்கோயிலைக் கட்டியதைக் கூறல். அவன் கரிகால் சோழனின் பரம்பரை எனல். (Mr. Sewell's Lists of Antiquities Vol. I, Page 1581).

(6) **448** - மூலக்கோயிலின் தெற்குச் சுவரில் - தெலுங்கு - மேற்கண்ட **447** கல்வெட்டின் தெலுங்கு மொழிபெயர்ப்பு.

(7) **449** - மூலக்கோயிலின் தெற்குச் சுவரில் - சோழர் - (மதுரை கொண்ட) பரகேசரி வர்வன் - **34 ஆம் ஆண்டு** - தமிழ் - குன்றவர்த்தன கோட்டத்துத் திருத்தணிச் சபை திருவனந்தபுரம் கோயிலுக்கு நிலம் கொடுத்தல்.

(8) **450** - மூலக்கோயிலின் முன் மண்டபத்தில் தெற்குச் சுவரில் - வடமொழியும் தெலுங்கும் - **447**-ல் வரும் நாராயண ராசாவின் வழிவந்த பொம்ம ராசாவின் முன்னோர் செய்த பழைய அறக்கட்டளைகளைப் புதுப்பித்தல்.

(9) **451** - மூலக்கோயில் மண்டபத் தெற்குச் சுவரில் - விஜய நகரம் - வீரப் பிரதாப சதாசிவ தேவராயர் - ரக்தாட்சி, சகம் **1486** - தமிழ் - முற்றுப் பெருத கல்வெட்டு - அரசன் இலங்கையைக் கொள்ளை அடித்த புகழைக் கூறல்.

**1942-43-ல் படி எடுக்கப்பட்டவை**

ஆறுமுகசாமி கோயில் (1) 128 - மகா மண்டப நுழைவாயிலின் வலப் பக்கம் - விசய நகரம் - அச்சுத தேவ மகாராயர் - சகம் 1453, கர - தமிழ் - பழுதுற்றது. திருத்தணியிலுள்ள இளைய நயினர் கடவுளுக்கு நள்ளிரவு நிவேத்தியத்துக்கு அரிசி கொடுக்கத் திப்பய்யனல் அறக்கட்டளை ஏற்பாடு.

(2) 129 - நுழை வாயிலின் இடப் பக்கத்திலிலுள்ள மகா மண்டபத்தின் தெற்குச் சுவரில் - சாளுவர் - தேவ மகாராயர் - சகம் 1377, யுவ, பங்குனி 10 - தமிழ் - பழுதுற்றது. இளைய நயினர் கடவுளின் நிவேத்தியத்துக்காகப் பணம் கொடுத்தல்.

(3) 130 - முதல் பிராகாரத்தின் தெற்குச் சுவரின் உட்புறம் - விசய நகரம் - யானை வேட்டையைப் பார்க்க விரும்பும் தேவராய மகாராயர் - சகம் 1359, பிங்கள - தமிழ் - திருத்தணி பிள்ளையார் செங்கழுநீர் பிள்ளையார் கோயிலுக்கு, தணியல் நாட்டு திருக்காரப் பிள்ளை மலையான உடையான் வேலன், சோபான மண்டபத்தையும், தெற்குச் சுற்றுச் சுவரையும் ஆனையார் (கணேசர்?), க்ஷேத்திர பாலர் முதலியவர்களுக்குக் கோயில் எடுப்பித்தல். இக்கல்வெட்டுக்கு அடியில் லிங்கத்துடன் அமர்ந்த நிலையில் இருக்கும் ஒருவனின் உருவம் உள்ளது.

(4) 131 - மகா மண்டபத்தின் கிழக்குச் சுவரில் - விசய நகரம் - தேவராய மகாராயர் - சகம் 1349, பிலவங்க, கன்னி, பா (12) புதன்கிழமை, ஆயில்யம் - தமிழ் - அரசன், அதிகாரிகள் கட்டளைக்கு இணங்க, திருத்தணிக் கோயில் ஒன்று உட்பட்ட கோயில்களிலிருந்து சூல வரியை வசூலித்து, சந்திரகிரி கஜானவில் கட்டவேண்டும் எனல்.

(5) 132 - மகா மண்டபத்தின் கிழக்குச் சுவர் - விசய நகரம் - திருமலை தேவ மகாராயர் - சகம் 1447, தாரண, விருச்சிக, சு 15, வியாழக்கிழமை, கார்த்திகை - தமிழ் - திருத்தணியிலுள்ள செங்கழுநீர்ப் பிள்ளையாருக்குப் பல்லக்கு ஊர்வலத்துக்காக (பல்லக்குச் சேவை) வித்தப்ப நாயக்கனின் மகன் நாகம நாயக்கன் தன் நாயக தனசீர்மைக்காக மயிலைகுப்பம் ஊரைக் கொடுத்தல்.

(6) 133 - மூலக்கோயிலின் வடக்குச் சுவரில் - விசய நகரம் - சதாசிவ தேவ மகாராய - சக 1482, ரௌத்திரி, விருச்சிகம், சு. 5, வெள்ளிக்கிழமை, சிரவணம் - தமிழ் - திருத்தணி மலைமீதுள்ள செங்கழுநீர்ப் பிள்ளையாருக்குக் கார்த்திகை நாளன்று நிவேதனம் செய்ய, கோயில் கணக்கனும் பிறராலும் அகவூர் ஏரிக்குக் கீழுள்ள சிறு நிலத்துக்காகப் பணம் கொடுத்தல்.

மலைக் கோயிலில் (1) 134 - மூலக்கோயிலின் மேற்குச் சுவரில் - விசய நகரம் - கிருஷ்ணதேவ மகாராயர் - சகம் 1436, பவ, (சித்திரை 10) - தமிழ் - செங்கழுநீர்ப் பிள்ளையார் கோயில் சோபான மண்டபத்தில் இரவில் விளக்கேற்ற திருத்தணியில் வாழும் செவ்வாயன் உய்யக்கொண்டார் என்னும் கணக்கன் மேலே குறிப்பிட்டதைப்போல, அகுவூர் ஏரியின் கீழ் உள்ள மற்றொரு சிறு நிலத்துக்காகப் பணம் கொடுத்தல்.

(2) 135 - மூலக்கோயிலின் தெற்குச் சுவரில் - விசய நகரம் - கிருஷ்ண தேவ மகாராயர் - சகம் 1433, பிரசோத்பத்தி, தை 7, பூசம் - தமிழ் - முற்றுப் பெறாதது. முன் கல்வெட்டுக் குறிப்புப் போன்றே, அதே நபரால் அதே போன்றே, தன் பிறந்த நாளான பூசத்தில் கடவுளின் நிவேதனத்துக்காகப் பணம் கொடுத்தல்.

(3) 136 - மகா மண்டபத்தின் தென் கீழ்ப்பகுதி - விசய நகரம் - கும்மடி தோராட்ட வேங்கடதேவ மகாராயர் - காலக் குறிப்பு அழிதல் - தமிழ் - கடவுளுக்குக் குமாரசாமி என்று சொல்லப்படுபவரால் இட்டிப் பதக்கம் என்ற அணிகலனைக் கொடுத்தல்.

(4) 137 - மகா மண்டபத்தின் மேற்குச் சுவரில் - பரிதாபி, வைகாசி 10 - தமிழ் - பழுதுற்றதுடன் முழுமை பெறாதது - கோயில் வழிபாட்டுக்கும் நிவேதனத்திற்கும் பணம் கொடுத்தல்.

(5) 138 - மூலக்கோயிலின் (நுழைவாயிலின் இடப்பக்கம்) முன் மண்டபத்தின் கிழக்குச் சுவரில் - கண்ட கோபாலர் - விசய கண்ட கோபால தேவர் - 26 ஆம் ஆண்டு - தமிழ் - விமரசாரிலுள்ள சீயப்ப நாயக்கன் என்னும் ஒரு முதலி, தன் தலைவரின் நலத்துக்காக ஒரு இரட்டை விளக்கைக் கொடுத்தல்.

(6) 139 - மூலக்கோயிலின் முன் மண்டபம் கிழக்குச் சுவரில் - கண்ட கோபாலர் - விசய கண்ட கோபால தேவர் - 26 ஆம் ஆண்டு - தமிழ் - வள்ளி ராசரிலுள்ள மாதி நாயகர் என்னும் ஒரு முதலி, தன் தலைவரின் நலத்துக்காகக் கோயிலில் விளக்கெரிப்பதற்காக நிலத்தைக் கொடுத்தல்.

(7) 140 - மூலக்கோயிலின் முன் மண்டபக் கிழக்குச் சுவரில் - கண்ட கோபாலர் - விசய கண்ட கோபால தேவர் – 4 ஆம் ஆண்டு - தமிழ் - நெசவாளர்கள் (கோட்டிகள்) கோயில் திருநாமத்துக் காணிக்காக நிலம் கொடுத்தல்.

(8) 141 - மகா மண்டபத்தின் (நுழைவாயிலின் வலப்பக்கம்) கிழக்குச் சுவரில் - கண்ட கோபாலர் - விசய கண்ட கோபால தேவர் - 17 ஆம் ஆண்டு - தமிழ் காளியாயர் மகனான தேர் பொலிய நின்றார் என்பவரால் பலிபீடம் எழுப்பல்.

(9) 142 - மகா மண்டபத்தின் (நுழைவாயிலின் வலப்பக்கம்) கிழக்குச் சுவரில் - பாண்டியர் - மாறவர்மன் என்னும் திரிபுவன சக்கரவர்த்தி குலசேகர தேவர் - 30 ஆம் ஆண்டு - சிம்ம, சு 5, புதன்கிழமை, சோதி - தமிழ் - பழுதுற்றது. யாதவராயர் என்பவரால் திருத்தணியிலுள்ள செங்கழுநீர்ப் பிள்ளையாருக்கு நாயனார் நரசிங்க தேவர் பெயரால் பணி செய்வதற்கும், வழிபாட்டிற்கும், நிவேதனத்திற்கும் வல்லயன்பாக்கம் என்னும் ஊரைச் சர்வ மானியமாகக் கொடுத்தல்.

(10) 143 - குளக்கரைமீது எழுப்பப்பட்ட கல் (அரக்கோணம் பக்க ரயில் பாதைக்கு அருகில்) - தெலுங்கு - கல்வெட்டுத் தொடர் எண் 116, 122-ல் உள்ளபடி.

## 9. கல்வெட்டுகளில் காணும் சிறப்புச் செய்திகள்

திருத்தணியில் 4 கோயில்கள் உள்ளன. (1) மலைமீதுள்ள முருகன் கோயில், (2) கங்க பல்லவ மன்னனான அபராஜிதன் ஆட்சிக்காலத்தில் நம்பி அப்பியால் கட்டப்பட்ட வீரட்டானேசுவரர் கோயில், (3) ஆறுமுகசாமி கோயில் (4) விஜயராகவப் பெருமாள் கோயில் ஆகியன. இந்திய அரசின் கல்வெட்டு ஆய்வாளர்களால் 1905, 1942-43-ல் இக்கோயில்களில் உள்ள கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டன. இங்குக் காணப்படும் மிகப் பழமையான கல்வெட்டு அபராஜிதனுடையது. அது, அவனுடைய 18ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டாம். இக் கல்வெட்டு வீரட்டானேசுவரர் கோயிலில் உள்ளது. அபராஜிதனை அடுத்து, சோழ மன்னன் மதுரைகொண்ட பரகேசரி முதலாம் பராந்தகன் கல்வெட்டுகளால் அறியப்படுகிறான். பிற சோழ மன்னர்கள் இராசராசன், முதலாம் இராசேந்திரன், முதலாம் இராசாதிராசன், விக்கிரம சோழன் ஆகியோர் ஆவர். மேலும் இங்குக் காணப்படும் சில முக்கியமான விஜயநகரக் கல்வெட்டுகள் கிருஷ்ண தேவராயர், சதாசிவர் ஆகிய இருவர் ஆட்சிக்காலத்தைச் சேர்ந்தவையாம்.

### வீரட்டானேசுவரர் கோயில்

1905-ல் வந்த அரசாங்கக் கல்வெட்டு அறிக்கை, இக்கோயிலுக்கு உரியதாக 4 கல்வெட்டுகளைக் குறிப்பிடுகிறது. அபராஜிதனின் 18ஆம் ஆட்சி ஆண்டில், வீரட்டானேசுவரர் கோயிலைக் கட்டிய நம்பி அப்பி, ஊராரிடமிருந்து 1000 குழி நிலங்களை வாங்கி, கோயிலுக்கு உரியதாக்கி வரிப்பணத்தை ஊர்ச் சபையாரிடம் கொடுத்தான். ஊர்ச்சபை இதற்குப் பதிலாக, அந்நிலத்துக் குரிய வரியை நிலையாக விலக்கிவிட்டது. ஊர் அறங்காவலர்கள் இம் மானியத் தைப் பொறுப்பேற்று நடத்த இசைந்தனர். இந்நிலத்திலிருந்து வரும் வருவாயைக் கொண்டு, கோயிலில் நாள்தோறும் இருமுறை வழிபாடு நடத்த

வேண்டும்; ஒவ்வொரு வழிபாட்டுக்கும் 4 படி அரிசியைக் கொண்டு அன்ன தானம் செய்யவேண்டும்; காலையும் மாலையும் விளக்குகளுக்கு எண்ணெயும் கொடுக்கவேண்டும் என நிபந்தனை விதிக்கப்பட்டது.

இதனை நோக்கும்பொழுது, ஒரு செய்தி நமக்குத் தெரியவருகிறது. அஃது, ஊரில் சில உறுப்பினர்கள் சேர்ந்த ஓர் அமைப்பு ஊர் அறங் காவலர் குழு (கிராம அறக்கட்டளை நிர்வாகிகள்) என்று அழைக்கப்பட்டது. இவ் அறங்காவலர்கள், ஊர்ச்சபையின் உறுப்பாயிருந்து பணியாற்றினர். இவர்கள், தங்கள் மானியத்தைச் சரியாகக் கவனிக்காவிடில், அதற்குத் தண்டனையாகக் கால் பொன்பணம் செலுத்த உடன்பட்டனர். முடிவுப் பகுதியால், திருத்தணி ஊர்ச்சபை உறுப்பினர்களே அறங்காவலர்களுமாய் இருந்தனர் என்று கல்வெட்டால் தெரியவருகிறது. அபராஜிதனின் 18ஆம் ஆட்சி ஆண்டில் இக் கோயிலைக் கட்டிய நம்பி அப்பி இதன் வழிபாட்டுக்கான முயற்சிகளை எடுத்துக்கொண்டான் என்பதனால், அவ் ஆண்டிலேயே இக் கோயில் மக்களால் வழிபடப்பட்டது என்று தெரியவருகிறது.

நம்பி அப்பியால் கோயில் கட்டப்பட்டது என்பதைக் கூறும் செய்யுள் கல்வெட்டிலேயே, அது பொறிக்கப்பட்டதையும், வழிபடுவதற்கான நிலத்தைக் கொடுத்ததைப் பற்றிக் குறிப்பிடும் முன் கல்வெட்டுப் போலவே அதே சமயத்தில் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். இச்செய்யுள் பெருமான் அடிகள் என்பவரால் செய்யப்பெற்றது என்பது, மன்னன் அபராஜிதனால் என்று அறியப்படுகிறது. மன்னன் இக்கோயிலின் மீது தனிப் பற்றுக் கொண்டிருந்ததை இது குறிப்பிடுகிறது. இதனைக் கட்டிய நம்பி அப்பி எல்லாக் கலைகளிலும் வல்ல அறிஞனாகப் புகழப்படுகிறான். நம்பி என்றும் குறிப்பிடப்படுவதால், அவன் சைவத்தில் நம்பிக்கை கொண்ட குருக்களாய் இருக்கவேண்டும். இக்கோயில் கருங்கல்லால் கட்டப்பட்டதால், கற்கோயில் என வழங்கப்பட்டது.

இந்த வீரட்டானேசுவரர் கோயில் 1130-ஆம் ஆண்டு வரை கருத்தில் கொள்ளத்தக்க ஒரு சிறந்த கோயிலாய் இருந்தது. முதலாம் இராசராசனின் ஆட்சித் தொடக்கத்தில் (990) திருத்தணி ஊர்ச்சபையின் ஆண்டுக்குழு, விளக்கு ஏற்றுவதற்கான அறக்கட்டளையைக் கவனிக்க இசைந்தது (432 / 1905). இராசராசனின் ஆட்சிக்கால இறுதி ஆண்டு 1010-ல் தனியார் ஒருவர் நிலம் வாங்கித் திருவேங்கடம் சென்றுவரும் பயணிகளுக்கு உணவு வழங்க அறக்கட்டளை ஆக்கினர் (430 / 1905).

இதே கோயிலில் காணப்படும் மற்றொரு கல்வெட்டும் முன்னதைப் போலவே, திருவேங்கடம் சென்றுவரும் பயணிகளுக்கு உணவூட்ட அறக் கட்டளையாக நிலம் தரப்பட்டது என்பதைக் குறிக்கிறது. இதனால் 10-ஆம்

நூற்றுண்டில் திருவேங்கடம் சென்றுவரும் பயணிகளுக்குத் திருத்தணி தங்கும் ஒரு வழித்தலமாய் இருந்ததைக் காட்டுகிறது. இக்கோயிலில் காணப்படும் முதலாம் இராசேந்திரனின் 3 கல்வெட்டுகள், செயல்படுத்திய சில காரியங்களைக் குறிப்பிடுகின்றன. இக்கோயில் வீரட்டானேசுவரர் கோயில் என்றே அழைக்கப்படுகிறது. சிறுவள்ளூர் (சென்னை திருத்தணிக்கு இடையில் உள்ள திருவள்ளூர்) வெசலிப்பாடி (சென்னைக்கு அருகிலுள்ள வியாசர்பாடி) மாவட்டத்திலுள்ள தென்கரை இளையூர் நாட்டில் அமைந்திருந்ததாக ஒரு குறிப்புக் காணப்படுகிறது (438 / 1905). காலம் கணிக்கப்படாத இக் கோயிலிலுள்ள மற்றொரு கல்வெட்டு, மலைக் கோயிலுக்கு விளக்கு ஏற்றுவதற்காக அளிக்கப்பட்ட ஒரு அறக்கட்டளையைக் கூறுகிறது.

இந்த விரும்பத்தக்க சிறிய அரைவட்டக் கோயில், (படம் பார்க்க) அறிஞர்கள் இடையே மிகுந்த ஆர்வத்தை எழுப்பியதுடன், பிற்காலப் பல்லவக் கோயில்களின் வரலாற்றில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது.

## மலைக் கோயில்

அபராஜிதனின் 9-ஆம் ஆண்டுக்கு முன்னரே வழிபடப்பட்டது. 1905-ல் கல்வெட்டு ஆய்வாளரால் இக் கோயிலில் ஒரே ஒரு கல்வெட்டு படியெடுக்கப்பட்டது (439 / 1905). அதன் தொடர்பான அறிக்கை கூறுவதாவது :—"அதே ஊரிலுள்ள சுப்பிரமணியர் கோயிலின் கருப்பக் கிரகத்தை ஒட்டியுள்ள ஒரு கல்லின்மேல் உள்ளது. சோழ அரசன் மதுரை கொண்ட பரகேசரி (பராந்தகன்)யின் 32ஆம் ஆட்சி ஆண்டைக் குறிக்கிறது; அடியில் கட்டப்பட்டது. செயங்கொண்ட சோழமண்டலத்தின் பகுதியாய் இருப்பது மாலூர் கோட்டம். அதன் ஒரு மாவட்டம் ஒகவல நாடு. அதிலுள்ள பெருங்காஞ்சியின் கிழக்குப் பகுதியில் இருப்பது அவ்வூர். அவ்வூருக்கு அருகில் உள்ளது திருத்தணிமலை. அம்மலையில் இருக்கும் சுப்பிரமணியப் பிள்ளையார் கோயிலுக்குப் பரகேசரி முத்தரையன் நிலம் கொடுத்ததைக் குறிக்கிறது. இக்கல்வெட்டின் சிறப்பு - இயல்பு நவீனமாய் அமைத்திருப்பதுதான்."

1905-ல் கல்வெட்டு ஆய்வாளர் இதனைப் படி எடுக்கும்பொழுது, முழுமையாகக் காணப்பட்டது. ஆனால், கோயில் புதுப்பிக்கப்பட்டபொழுது, அது நீக்கப்பட்டு இரு பகுதிகளாகச் சிதைந்த நிலையில் இருப்பது கவனிக்கப்பட்டது. தொண்டைமண்டலம் என்பது, செயங்கொண்ட சோழ மண்டலம் அன்று. ஏனெனில், தொண்டைமண்டலத்திற்குச் செயங்கொண்ட சோழ மண்டலம் என்னும் பெயர் முதலாம் இராசராசனின் காலத்தில்தான் கொடுக்கப்பட்டது; எனவே இக்கல்வெட்டு பராந்தகன் காலத்தைச் சேர்ந்தது அன்று. மேலும், இக்கல்வெட்டு 'மதுரைகொண்ட கோப்பரகேசரி' என்று தொடங்கவில்லை.

மாறக, பரகேசரி என்பதால், முதலாம் இராசேந்திரனுடையது என்பது பெறப்படும். அவன் காலத்திலும் இக்கோயில், தொடர்ந்து மக்களைக் கவர்ந்துவந்தது என்பது உறுதியாகிறது இரண்டாவதாக, முத்தரையத் தலைவன் பரகேசரி முத்தரையன், இக்கோயிலுக்கு நிலம் வழங்கினன் என்பது இன்றியமையாச் செய்தியாம். இப்பகுதியில் இருந்த முத்தரையர் குடும்பத்துக்கும் தஞ்சை - புதுக்கோட்டைப் பகுதியில் இருந்த முத்தரையர்களுக்கும் நிருபதுங்கன் ஆட்சிக்காலம் முதலே தொடர்பு இருந்தது. 8-ஆம் நூற்றுண்டில், கருங்கல்லால் ஆகிய * பல்லவ சுப்பிரமணியர் உருவம் மூலக் கருவறையில் இல்லாமல் சுற்றில் வைக்கப்பட்டுள்ளது.

கருவறைச் சுவர்களைத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை பார்வையிட்டபொழுது, 3 கல்வெட்டுகளைக் கண்டது. அவற்றுள் 2 கல்வெட்டுகள் 16-ஆம் நூற்றுண்டான விஜயநகரப் பேரரசரான கிருஷ்ணதேவ ராயர் காலத்தைச் சார்ந்தவை எனக் கண்டது. முதல் கல்வெட்டின் காலம் பிரஜாபதி (பிரசோற்பத்தி) யின் ஆண்டுக்குச் சமமான சாளுவ கிருஷ்ணதேவ மகாராயரின் சக ஆண்டு 1433 (1511) எனப்பட்டது. திருத்தணியின் கணக்கன் — மணிமங்கலம் அப்புவிபாய் குங்கெய்யன் பெருமானுக்குப் பணத்தை வழங்கியதாகச் சொல்கிறது. அந்த நன்கொடை வழங்கப்பட்ட பிரஜாபதிக்குச் சமமான தமிழ் நாள் தைப்பூசம் ஆகும். திருத்தணியில் இருப்பவரைச் செங்கழுநீர்ப் பிள்ளையார் என்று குறிப்பிடப்படுகிருர். மேற்கண்ட கல்வெட்டுகளால் இரு சிறப்பான செய்திகள் காணப்படுகின்றன. 9, 10, 11-ஆம் நூற்றுண்டுகளிலும் பிற்காலத்திலும் மூர்த்தி சுப்பிரமணியர் என்றும் சண்முகர் என்றும் வழங்கப்பட்டார். கிருஷ்ணதேவராயரின் ஆட்சிக் காலமான 16-ஆம் நூற்றுண்டில், அவரே செங்கழுநீர்ப் பிள்ளையார் எனப்படுகிருர். இங்கு ஒரு சிறப்பான செய்தி என்னவெனில், 14-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த அருணகிரியார் முருகன்மீது பாடிய திருப்புகழில், மலைமூர்த்தியைச் செங்கமலப் பிள்ளையார் என்று குறிப்பிடுகிருர். இன்றும், அவருக்குத் தைப்பூசத் திருவிழா நடத்தப்படுவது ஒரு சிறப்பான செய்தியாம். 100 பணம் கொண்ட அறக்கட்டளையிலிருந்து வரும் வட்டியைக்கொண்டு உணவு வழங்குதல், விளக்கு எரித்தல் முதலியவற்றிற்குப் பயன்படுத்தப்படுகிறது. ஏறக்குறைய 3 ஆண்டுகளுக்குப்பின், கிருஷ்ணதேவராயருடைய ஆட்சிக்காலத்திலேயே இது போல ஓர் அறக்கட்டளை இவரால் ஏற்படுத்தப் பட்டிருக்கலாம்.

மூலக்கோயில் சுவரிலிருக்கும் 3 ஆவது கல்வெட்டும் 1760-ல் அளிக்கப் பட்ட சில அறக்கொடைகளைப்பற்றிச் சொல்கிறது (கல்வெட்டில் குறிக்கப்பட்ட சக ஆண்டும் ஆங்கிரச ஆண்டும் சரியாகப் பொருந்தவில்லை). செயங்கொண்ட சோழமண்டலத்துக் குன்றவர்த்தன கோட்டத்தில் உள்ள நாராயணப் பற்றுவில் திருத்தணி இருந்ததாகத் தெரிகிறது. தெளிவாய்

ஆராயுமிடத்து, கிருஷ்ணதேவராயர் காலத்தில் ஏற்கெனவே இருந்த பல்லவர் காலச் சுப்பிரமணிய உருவச்சிலையைக் கோயில் சுற்றுக்கு மாற்றி, இப்போதிருக்கும் மூர்த்தி வைக்கப்பட்டது. இக் கோயிலிலுள்ள ஆறுமுகசாமி உள்பட்ட செப்புச்சிலைகள் கிருஷ்ணதேவராயர் காலமான 16ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவையாகும்.

## ஆறுமுகசாமி கோயில்

நந்தி ஆற்றின் தென்கரையில் உள்ள ஆறுமுகசாமி கோயிலில் 3 கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டன. அவற்றில் மிகத்தொன்மையானது முதலாம் பராந்தகனின் ஆட்சிக்காலத்தது ஆகும். ஆனல், அது தனக்குரிய நிலையில் இல்லாதிருப்பதுடன், வேறு ஒரு கோயிலைச் சார்ந்ததாய் இருக்கிறது. பழுதுபட்ட கல்வெட்டு ஒன்று விஜயநகர அரசனுன வீரக்கம்பண்ணனின் ஆட்சிக்காலமான 1365-ஐச் சார்ந்தது. இந்தக் காலத்தில், இந்த ஆறுமுகர் கோயில் மக்கள் வழிபாட்டுக்கு உரியதாய் இருந்திருக்கவேண்டும். இக்கோயிலைச் சுற்றியுள்ள திருச்சுற்று மகாமண்டலேசுவரரான திருவேங்கட நாத தேவ சோழ மகாராஜாவான சோழ சிற்றரசரால் கட்டப்பட்டது (432/1905).

## விஜயராகவப் பெருமாள் (வடகலை) கோயில்

இப்பொழுது காணப்படும் இக்கோயில் விசயநகர மன்னர்கள் தொடக்க காலமான 14ஆம் நூற்றுண்டில் புதுப்பிக்கப்பட்டிருக்கலாம். ஆனல், இது வழிபாட்டிற்குத் தக்கதாக 10ஆம் நூற்றுண்டுக்கு முன்பே வந்துவிட்டது. 940-ல் முதலாம் பராந்தக சோழனின் 34-ஆம் ஆண்டில், திருத்தணி ஊர்ச்சபையால் இக்கோயிலுக்கு நில நன்கொடை வழங்கப்பட்டது. இச் செய்திகளைத் தரும் பராந்தகன் கல்வெட்டு இப்பொழுது உள்ளது. இக் கல்வெட்டு திருஅனந்தபுரத்திலுள்ளதைப் போன்ற ஒரு கோயிலைக் குறிக்கிறது (449/1905). இங்கு, முதலாம் இராசேந்திர சோழனின் கல்வெட்டுகள் 2, உள்ளன. ஒன்று, சிதைந்த நிலையில் இராசேந்திரனின் கீர்த்தி (ப்ரசஸ்தி) யோடு தொடங்குகிறது; மற்றொன்று, மேல்மலை தணியல் நாட்டிலுள்ள ஜனநாத சதுர்வேதி மங்கலச்சபையாரால், கோயிலுக்கு நிலம் விற்கப் பட்டதைத் தெரிவிக்கிறது. பரகேசரி உடையார் இராசேந்திர சோழ தேவர் என்று மன்னனை அது குறிக்கிறது. இக்கல்வெட்டு, 11ஆம் நூற்றுண்டில் பெருமாள் கோயில்களுக்கு ஏற்பட்ட வளமான நிலைகளைக் காட்டுகிறது. மற்றொரு செய்தி, ஜனநாத சதுர்வேதி மங்கலம் என்னும் பெயராகும். ஜனநாதன் — முதலாம் இராசராசனின் பட்டப்பெயராம். திருத்தணியின் ஒரு பகுதி ஜனநாத சதுர்வேதி மங்கலம் என்று அவனுல் அழைக்கப்பட்டது. அது, சோழமன்னன் அவ்வூர்மீது கொண்ட ஆர்வத்தைக் காட்டுகிறது. அறிமுகப் பகுதியைக்கொண்ட முதலாம் இராசாதிராசனின் கல்வெட்டு ஒன்று அங்குக் காணப்படுகிறது.

தெலுங்கு வரிவடிவில் சமஸ்கிருதமொழியில் காணப்படும் கல்வெட்டு ஒன்று உள்ளது. அது கரிகால சோழனின் வழிவந்த 4-ஆம் தலைமுறையைச் சார்ந்தவனுன நாராயணராசன், கோயிலைக் கட்டியதாக (புதுப்பித்ததாக)த் தெரிவிக்கிறது. 1550-ல் சதாசிவராயர் ஆட்சிக் காலத்தில், ராமராச சின்ன திம்மயதேவ மகாராயர் திருத்தணியைத் தானமாகக் கொடுத்தார் (443 - 1905). சதாசிவராயரின் பரம்பரையை மட்டுமே குறிப்பிடும் அவருடைய மற்ருெரு கல்வெட்டு இங்கே காணப்படுகிறது.

## திருத்தணி

9ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் அபராஜித பல்லவன், தன் ஆட்சிக் காலத்தில் முருகனிடம் கொண்ட தனி ஈடுபாட்டாலும், புதிதாகக் கட்டப்பட்ட வீரட்டானேசுவரர் கோயிலாலும் திருத்தணி பிரபலம் அடைந்தது. 3·2 கி.மீ. லுள்ள மேலிருஞ்சேருர் (வேலஞ்சேரி) பல வேத குடும்பங்கள் நிறைந்த பிராமணர்கள் வாழும் பெரிய அக்கிரகார இருப்பிடமாய்த் திகழ்ந்தது. பராந்தக சோழன் மேலிருஞ்சேருர் மக்களுக்கு வேண்டுமளவு தானம் வழங்கியதுடன், திருத்தணிக் கோயில்கள் பலவற்றிற்கும் அறக்கட்டளைகளை ஏற்படுத்தினுன். இராசராசனின் ஆட்சிக்காலத்தில், இவ்வூர் மிகுந்த புகழ் பெற்றதால் திருத்தணியின் ஒரு பகுதி, இராசராசனின் பட்டப்பெயருள் ஒன்றைப் பெற்றுள்ளது. பிற்காலப் பாண்டியர்கள், அவ்வூருக்கு ஏதும் செய்யவில்லை; பின்னர், விசயநகர மன்னர் ஆட்சிக்காலத்தில், இவ்வூர் முக்கியத்துவத்தையும் முதன்மையையும் பெற்றது. 18-ஆம் நூற்ருண்டுப் புலவரான கவிராட்சச கச்சியப்ப முனிவர் இங்கே பிறந்தவர். திருத்தணியைப்பற்றி தலபுராணம், ஆற்றுப்படை, பதிற்றுப்பத்து, அந்தாதி முதலிய நூல்களைப் பாடியவர். இந்தியச் சிந்தனையாளர் முன்னுள் ஜனுதிபதி சர். இராதாகிருஷ்ணன் திருத்தணியில் பிறந்தவர். முன்னைய விசால சென்னை ராஜதானியின் முதல் மந்திரியாக இருந்த B. முனுசாமி நாயுடு வேலஞ்சேரியில் பிறந்தவர். மலைக்கோயில், யாத்திரிகர்களைக் கவர்ந்து வருவதோடு வளமான சிறந்த கோயில்களுள் ஒன்ருகவும் திகழ்கிறது. வரலாற்று ஆசிரியர்கட்கு வீரட்டானேசுவரர் கோயில் இன்றுவரை ஒரு சிறந்த மையமாகத் திகழ்ந்து வருகிறது.

தமிழ் நாட்டுத் தொல்பொருள் ஆய்வினர் வெளியிட்ட 'திருத்தணி' நூலில் (1979) உள்ள கருத்துப்பிழைகளை நீக்கி, திருத்தி, தழுவி எழுதப்பட்டது.

# 10. வேலஞ்சேரிச் செப்பேடுகள்

தமிழ்நாடு தொல் பொருள் துறை, 1977ஆம் ஆண்டு வேலஞ்சேரிக் கிராமத்திலிருந்து பெற்ற செப்பேடுகள் சிலவற்றை அதன் இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் 1979-ல் நூலாக வெளிட்டுள்ளார். இவை திருத்தணி வரலாறு குறிப்பனவாகும். இச் செப்பேடுகள் வடமொழி - தமிழ் என்னும் இரு மொழியிலும் அமைந்துள்ளன. இவற்றில் காணும் செய்திச் சுருக்கம் ஆங்கிலத்தில் அந் நூலிறுதியில் தரப்பட்டிருக்கிறது. அதனைத் தமிழாக்கி இங்குச் சேர்க்கப்பட்டிருக்கிறது. தமிழாக்கம் செய்துதவியர் டாக்டர் வ. ஜெயதேவன் அவர்களாவர். செப்பேடுகளின் தமிழ்ப் பகுதித் தொகுப்புரையும் உடன் தரப்பட்டுள்ளது.

## பராந்தகனின் வேலஞ்சேரிச் செப்பேடு

### வடமொழிப் பகுதி

1. நீர் நிறைந்த சிவந்த மேகங்களின் ஒளியால் அழகு ஒளிரும் முராரியின் செந்தாமரைத் திருவடிகள் — மாலைகள் நிரம்பிய மலர்கள் தவழும் திருவடிகள் — இலக்குமியின் தாமரை ஒத்த கரத்தினால் எப்பொழுதும் சிவந்து விளங்கும் திருவடிகள் நம்முடைய இன்பத்தையும் வளத்தையும் மிகுவிப்பதாக.

2. பொன் வண்ண மேகம் ஒத்து ஒளிவீசும் உருத்திராக்க மணிகள் — இடப்பக்கத்தே பெருத்து அணி செய்யும் நகில்கள் — சடைக்கூந்தலில் தெள்ளிய நீரின் தூய அலைகள் — பிறையொத்த காதணிகள் — கருமை ஒளிரும் கழுத்து — மின்னும் பாம்பு வளையல்கள் — திருநீறு துலங்கும் நெற்றி — நமக்கு வளம் நல்குவதாக.

3. எல்லா அரசர்களின் முடிகளிலும் தாமரையடி பதித்த சோழேந்திர ஆட்சி — உலகு முழுதும் அரசாட்சி ஒச்ச வாளால் உறுதியேற்ற பரம்பரை உலகம் முழுவதையும் காப்பதாக.

4. முராரியின் உந்தியில் எழுந்த தாமரையில் பிரமன் தோன்றினான். மெல்லிய பின்னிய கூந்தலினும் மேம்பட்ட ஒளியினால் அவன் சற்றுத் தாழ்ந்த போது அவனிடத்து மரீசி பிறந்தான்.

5. காசிபன் இந்த மரீசியிடத்தில் பிறந்தான். காசிபனிடத்துச் சூரியன் (அவிச்சாரிய மார்க்கம்) தோன்றினான். அவன் தன் தூய துணைவர்களோடு உலகை அணி செய்தான்.

6. உலகம் துய்த்துப் பல அரசர்கள் தெய்வத்தன்மை எய்திய பின்னர், அந்தப் புகழ்வாய்ந்த பெருங் குடும்பத்தில் உசிநாரன் என்னும் பெயரிய பெருங்கடவுள் தோன்றினான்.

7. அந்தக் குடும்பத்தின் அணிகலனுகிய அரசன், அக்கினி தேவன் கழுகு வடிவில் வந்து அணுகியபோது தன் தசையைத் தந்தான். அன்றியும் புருவின் துன்பத்தைப் போக்கிக் காக்கச் சிபியாகப் பிறந்தான்.

8. அந்தக் குடும்பத்தில் கரிகாற்சோழேந்திரன் பிறந்தான். அவனுடைய ஆணையாலே 'காவேரியின் இருமருங்கும் கரை எழும்பியது. காஞ்சி நகரத்தில் மேகம் தழுவும் மாளிகைகள் நிறைந்தன.

9. ஒரு சிலந்தி சிறிய, மெல்லிய, அழகிய கூட்டினைச் சிவனுக்காகத் தன் வாய்நூலால் கட்டியது. இதனைக் கண்டு மகிழ்ந்த அரனால் இச் சிலந்தி அந்த அரச குடும்பத்தில் கோச் செங்கண்ணனைகப் பிறந்தது.

10. வெற்றித்திறம் செறிந்த ஒற்றியூரன் பிறந்தான். அவனுடைய மகன் பகையரசர்களாகிய காட்டிற்குப் பெருந்தீயாக விளங்கினன்.

11. இவனுக்குக் குபேரனை ஒத்த ஆதித்தன் என்பான் பிறந்தான். இவன் பகையரசிகளின் தாமரை ஒத்த திருமுகங்களுக்கு நிலவொளி போல விளங்கினன்.

12. பாற்கடலிலிருந்து பெருநிலா எழுதல் போல, இமயத்திலிருந்து கங்கை வெள்ளம் புறப்படுதல் போல, சூரியனிடமிருந்து வெப்பம் எழுதல் போல, மேருவிலிருந்து திரிகூடம் வருதல் போல, இவனுக்குப் பராந்தகன் தோன்றினன்.

13. பகையரசர்கள் இவனைத் தம் யமனைக் கருதினர்கள்; அறிஞர்கள் இவனை பிரகஸ்பதி என நினைத்தார்கள்; அன்புள்ளோர் சிந்தாமணி எனக் கருதினர்; மக்கள் தமது பெற்றோராகப் போற்றினர். நல்லவர்கள் கருவூலமாக நினைத்தார்கள்; அழகிகள் மன்மதனைப் போற்றினர்.

14. அரசன் வீரத்தால் ஈட்டிய தங்கத்தைக் கொண்டு, திறன் வாய்ந்த குரங்குக் கூட்டம் பாலம் கட்டிய அழகிய இடமான ஸ்ரீராம தீர்த்தத்திலும், தென் மூலையை ஆட்சிப் பரப்பில் உள்ளடக்கிய கன்னியா தீர்த்தத்திலும், பாம்பணையில் பரமன் பள்ளிகொண்ட கமுகஞ்சோலை சூழ் திருவரங்கத்திலும் துலாபாரம் செய்தான்.

15. கல்வி, செல்வம், புகழ் இவற்றின் இருப்பிடமாகிய பிரம்மவனவாதி ராஜன் அந்த அரச பரம்பரையின் விஞ்ஞானப்தி ஆவர்.

16. வசிட்டி குடும்பத்தில் தோன்றிய கிளிநல்லூர் சர்வதேவர் நன்கு கற்று வல்லவர்; அக் குடும்பத்தின் அணிகலன்; அந்தப் பரம்பரையின் ஆஞ்ஞாப்தி ஆவர்.

### உரைநடைப் பகுதி

எல்லா அரசர்களாலும் அணி செய்யப்பெற்ற தாமரை அடிகளையுடைய அந்தப் பராந்தகன் பக்தியோடு தாலேவேடு, மயங்காறு, கிலகல் ஆகிய மூன்று

ஊர்களையும் மூவாயிரம் காடி நெல்லையும் ஒன்பது நிஸ்காக்களையும் (வரியாக) 3000 சாகைகளைக் கொண்ட சாம வேதம் உள்ளிட்ட வேதம், வேதாங்கம் ஆகியவற்றில் வல்ல மேலிருஞ்செரு என்னும் ஊரின் அந்தண அறிஞர் களுக்குத் தங்கக் குடத்தில் நீர் சொரிந்து, தாரைவார்த்துக் கொடுத்தான்.

ஊர்களின் எல்லைகள் வருமாறு :

கிழக்கெல்லையானது பூண்டி, நென்மலை, அருங்கலம் ஆகிய ஊர்களுக்கு மேற்கில் அமைகிறது.

தென் எல்லையானது மேலிருஞ்செரு என்னும் ஊருக்கு வடக்கில் அமைகிறது.

மேல் எல்லையானது பார்பாக்கம், நெடுங்குன்று, முடிப்பலி, மதுரை இவற்றிற்குக் கிழக்கில் அமைகிறது.

வட எல்லையானது உலையூர், நல்லாரூர் இவற்றிற்குத் தெற்கில் அமைகிறது.

இந்த நான்கு எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பானது மேலே சொன்னவாறு மேலிருஞ்செருவில் வாழும் மேலே விளக்கிய அந்தணர்களுக்கு அரசன் பராந்தகனால் கொடையாகத் தரப்பட்டது.

## தமிழ்ப் பகுதி

25ஆம் ஆட்சியாண்டு.

193ஆம் நாள்.

கோனேரின்மை கொண்டான்.

குன்றவர்த்தனக் கோட்டத்தைச் சார்ந்த நடுவின் மலையின் உள்ளடங்கிய இலத்தூர் நாட்டார், திருத்தணி நாட்டார் ஆகியோர் கிலகல், மயங்காறு, தாலைவேடு ஆகிய ஊர்ப்பகுதிகள் ஒருங்கிணைக்கப்பட்டு மேலிருஞ்செரு என்னும் ஊரோடு ஒரே ஊராக அமைக்கவும் முன்னுரிமையை மாற்றி ஆண்டுதோறும் அவ்வூரிடமிருந்து 3000 காடி நெல்லைப் பஞ்சவாரமாகப் பெறவும் 9 கழஞ்சுப் பொன் பெறவும் இவ்வாறு பெறுதல் நிலவும் கதிரவனும் உள்ளவரை தொடரவும் மேற்பார்வை புரிவர். பிரமவன் வாதிராஜன் வேண்டுகோளின்படி இந்நல்கை தரப்பட்டது. கிளிநல்லூர் சர்வதேவரும் ராசசிம்மரும் செயல் அலுவலர்கள் ஆவர். மேலிருஞ்செரு ஊரவைக்கு இந்நல்கை காணியாகத்தர நாங்கள் ஆணையிடுகிறோம்.

பதாகையோடு சென்று ஊர்ப் பகுதிகளைப் பார்வையிட்டு எல்லைக் கற்களோடு கள்ளிச்செடிகள் நட்டு அறையோலை வெளியிட்டுத் தாழைவேடு, மயங்காறு, கீலகல் ஊர்களின் எல்லைகளை நாட்டார்கள் வகுக்க வேண்டும்.

இந்த ஆணையைப் பெற்றதும் நாட்டார்கள் இவ்வாணைக்குப் பணிந்து, ஆணையில் கூறப்பட்டதை நன்கு கருத்திற்கொண்டு, எல்லைகளைச் சுற்றிப் பார்த்து எல்லைக் கற்களையும் கள்ளிச் செடிகளையும் நட்டு ஓலையை வழங்கினார்கள்.

இவ்வாறு கொடையாகத் தரப்பட்ட நிலத்தின் எல்லைகள் வருமாறு :

பூண்டி, நென்மலை, அருங்கலம் ஆகிய மூன்று ஊர்களுக்கு மேற்குப் பகுதி கிழக்கெல்லையாகவும்; மேலிருஞ் செருவிற்கு வடக்குப் பகுதி தெற்கெல்லையாகவும்; பார்பாக்கம், நெடுங்குன்றம், முடிபலி, மதுரை ஆகிய நான்கு ஊர்களுக்குக் கிழக்குப் பகுதி மேற்கெல்லையாகவும்; உலையூர், நல்லாறு ஊர்களுக்குத் தெற்குப் பகுதி வடவெல்லையாகவும் அமைந்தன.

இந்த நான்கு எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பில் நீர், நிலம், புன்செய் நிலம், குடியேற்றம், கூட்டம் நிகழ் பகுதி, மேய்ச்சல் நிலம், குழி, கிணறு, சோலை, கால்வாய், புற்று, மேடு ஆகியவை அடங்கும். சுருங்கக் கூறின், பிரமதேயமாக மேலிருஞ்செரு ஊரவைக்கு உயர் மற்றும் தாழ் நிலங்கள் கொடையாகத் தரப்பட்டன.

இக்கொடைக்குத் தரப்பட்ட விலக்குகள் :

| | |
|---|---|
| நெல்வரி | ஊடுபோக்கு |
| பொன்வரி | பிதாநாழி |
| ஊர்கழஞ்சு | தரகு |
| ஊர்பால்காடி | தறி |
| நல்லா | இலப்பூட்சி |
| நல்லெருது | இடைப்பூட்சி |
| நாடாட்சி | தட்டுக்கலம் |

இந்த வரிகளும் அரசனுக்குச் செலுத்தப் பெறும் பிற வரிகளும் இந்த ஊர்களிலிருந்து வசூலிக்கப் பெற மாட்டா.

சுட்ட செங்கல்லைக் கொண்டு அடுக்கமைந்த கட்டடங்களைக் கட்ட அனுமதி அளிக்கப்படுகிறது.

தென்னந் தோப்புகளை வளர்க்க அனுமதி யளிக்கப்படுகிறது.

இருவேலி தாமநாகம் உள்ளிட்ட எல்லாப் பூக்களையும் வளர்க்க அனுமதி அளிக்கப்படுகிறது.

கரை எழுப்பவும் ஏரி நீரைப் பயன்படுத்தவும் அனுமதி அளிக்கப்படுகிறது.

ஆற்றிலிருந்து நீர் செல்லும் வழியில் பாசனத்திற்காகக் கால்வாய் வெட்ட அனுமதி அளிக்கப்படுகிறது.

முதன்மை அல்லது துணைக் கால்வாயிலிருந்து வெளியார் வாய்க்கால் வெட்டத் தடை விதிக்கப்படுகிறது. அன்றியும் பறி அல்லது ஏற்றம் வாயிலாகப் பாசனத்திற்குக் கொண்டு செல்லவும் தடை விதிக்கப்படுகிறது.

மேலே காட்டப்பட்ட விலக்குகளுடன் தெய்வ பக்தியும் பெருந்தன்மையும் நிறைந்த அந்தணர்கள் உள்ள மேலிருஞ்செரு ஊரோடு மூன்று ஊர்கள் சேர்க்கப்பட்டன. அவர்கள் ஆண்டுதோறும் 3000 காடி நெல்லும் 9 கழஞ்சுப் பொன்னும் செலுத்தி ஏனைய விளைச்சல்களை அவர்களே துய்க்கலாம்.

இது ஒரு பரதத்தம் ஆகும்.

## செப்பேடுகளின் தமிழ்ப் பகுதித் தொகுப்பு

### 1. அபராஜிதவர்மனின் வேலஞ்சேரி செப்பேடுகள்

**3 ஆம் ஆண்டு 103 வது நாள்.**

“கோன் ஓலை, குன்றவத்தன கோட்டத்து, மேன்மலை தணியல் நாட்டார் கண்டு, தங்கள் நாட்டு பூதூர், முன் பெற்றுரை மாற்றி, மேலிருஞ் செற்றுடன் கலந்து ஒன்றுக்கி, திருத்தணியல் திருமலையில் நின்ற நளின சுப்பிரமணியருக்குச் சூரிய சந்திரர் உள்ளளவும் 1000 காடி நெல் பஞ்சவாரமட்டி உண்பதாக வாமநய்யன் விண்ணப்பத்தால், பிரமாதிராசன் ஆணத்தியால், மேலிருஞ்செற்று சபையார்க்கே காணியாய்த் தேவதான பிரமதேயமாகப் பணித்தோம். தாங்களும் தங்கள் நாட்டு பூதூர் படாகை நடந்து, கல்லும் கள்ளியும் நாட்டி அறையோலை செய்து விடுக” என்று திருமுகம் வர, நாட்டாரும் திருமுகம் தொழுது தலைமேற்கொண்டு, கல்லும் கள்ளியும் நாட்டி, அறையோலை செய்து, படாகை நடந்து, சாசனம் கொடுத்தனர். கொடுக்கப்பட்ட நிலத்திற்குக் கீழெல்லை, மேலிருஞ்செற்று எல்லையின் மேற்கு; தென்னெல்லை, திருத்தணியல் எல்லையின் வடக்கு; மேல் எல்லை, திருத்தணியலும் ஒவியூரும் இருகனூரும் உள்ள எல்லைகளுக்குக் கிழக்கு; வட எல்லை, பொன்பதி நாடு மேலிருஞ்செற்று எல்லைகளுக்குத் தெற்கு.

இவ் இசைந்த பெருநான்கு எல்லையுள்ளும் அகப்பட்ட நீரும், நிலமும், புன்செயும், ஊரிருக்கையும், மன்றும், கன்று மேய்பாழும், கிடங்கும், கேணியும், காடும் களரும், தெற்றியுமாக, நீர்பூசி நெடும்பரம்பெறிந்து துடும்போடி இன்னபிற, தேவதான பிரமதேயமாக ஆமைதவழ்ந்ததெல்லாம் மேலிருஞ்செற்று சபையார்க்குத் தேவதான பிரமதேயமாகக் கொடுக்கப் பட்டது. இதற்குப் பரிகாரமாக,

| | |
|---|---|
| நெல் இறை | ஊடுபோக்கு |
| பொன்றிறை | பிதாநாழி |

| | |
|---|---|
| ஊர்க் கழஞ்சு | தரகு |
| ஊர்ப்பதின்காடி | தறி |
| நல்லா | கலம் |
| நல்லெருது | ஈழப் பூட்சி |
| நாடாட்சி | இடைப் பூட்சி |
| | தட்டுக் காயமும் |

மற்றும் எப்பேர்ப்பட்ட கோத்தொட்டு உண்ணற்பாலது எல்லாம் கொள்ள மாட்டோம்.

இப் பிரமதேயம், ஊரில் சுட்டு ஓட்டால் மாட மாளிகைகள் எடுக்கவும், காவு தெங்கு நடவும், இருவேலி, தமநக முள்ளிட்டு எப்பேர்ப்பட்டனவும் இடவும் இப் பிரமதேயத்துக்கு ஏரிநீர்க்கு ஈய்ந்தவாறு உள்ளூர்க் கரை அட்டி நீர் கோக்கும் அளவும் கோக்க அடைக்கவும், இப் பிரமதேயத்து ஆற்றுக்கால் நீர்க்கு நறுகுத்திக்கொள்ளவும் பெறலாம். இவ் வாய்க்கால் அன்னியர் குறுங்கறுத்து விடவும், கூடைநீர் இறைக்கவும், குற்றேத்தம் எடுக்கவும் கூடாது.

இங்குச் சொல்லப்பட்ட பரிகாரத்தோடு நல்கூர் நல் அந்தணர்கள் மேலிருஞ்செற்றுச் சபையார்க்கு தங்கள் ஊரோடு கலந்து ஏற்றி ஒன்றுக்கி, திருத்தணியல் திருமலைப் பிரானுர் சுப்பிரமணியருக்கு ஆண்டாண்டுதோறும் பஞ்சவாரம் ஆயிரக்காடி அட்டி உண்பதாக!

## 2. பராந்தக சோழனின் வேலஞ்சேரி செப்பேடுகள்

25ஆம் ஆண்டு.

193ஆம் நாள்.

கோனேரின்மை கொண்டான்.

"குன்றவத்தன கோட்டத்தைச் சார்ந்த நடுவின் மலையிலுள்ள இலத்தூர் நாட்டார்களும், மேன்மலை திருத்தணியில் நாட்டார்களும் தங்கள் நாட்டுத் தாழைவேடு, மயங்காறு, கீழகல் என்னும் மூன்று ஊர்களையும் முன் பெற்றுரை மாற்றி, மேலிருஞ்செற்றோடும் கலந்து ஒன்றுக்கி, ஆண்டுதோறும் சந்திர சூரியர் உள்ளளவும் 3000 காடி நெல்லைப் பஞ்சவாரமாகவும், 9 கழஞ்சு பொன்னையும் கொடுக்க! இதனை பிரம வன்வாதி ராசன் விண்ணபத்தால் கிளிநல்லூர் சர்வதேவன், இரணசிம்மன் என்னும் இருவர் ஆணத்தியால் மேலிருஞ்செற்று சபைக்குக் காணியாகக் கொடுத்தோம்.

தாங்களும் தங்கள் நாட்டுத் தாழைவேடும் மயங்காறும் கீழகலும் படாகை நடந்து, கல்லும் கள்ளியும் நாட்டி அறையோலை செய்து விடுக,"

என்று திருமுகம் வர, நாட்டார்களும் அத் திருமுகம் தொழுது, தலைமேற்கொண்டு, கல்லும் கள்ளியும் நாட்டி, அறையோலை செய்து, படாகை நடந்து, சாசனம் கொடுத்தனர்.

கொடுக்கப்பட்ட நிலத்துக்குக் கீழ் எல்லை, பூண்டி, நென்மலி, அருங்களம் ஆகிய மூன்று ஊர்களின் மேற்கு; தென் எல்லை, மேலிருஞ்செற்றுவின் வடக்குப் பகுதி; மேல் எல்லை, பாற்பாக்கம், நெடுங்குன்றம், முடிப்பலி, மதிரை ஆகிய நான்கு ஊர்களின் கிழக்குப் பகுதி; வட எல்லை, உழையூர், நல்லாற்றூர் ஆகிய இரு ஊர்களின் தென் பகுதி.

இவ் இசைந்த பெருநான்கு எல்லையுள்ளும் அகப்பட்ட நீரும், நிலமும், புன்செயும், ஊரிருக்கையும், மன்றும், கன்றுமேய் பாழும், கிடங்கும், கேணியும், காடுகாலும், புற்றும், தெற்றியும் ஆக நீர்பூசி, நெடும் பரம்பெறிந்து, உடும்போடி, ஆமை தவழ்ந்த தெப்பேர்பட்டதும் மேலிருஞ்செற்று சபை யார்க்கே பிரமதேயமாகக் கொடுக்கப்பட்டது. இதற்குப் பரிகாரமாக,

| | |
|---|---|
| நெல் இறை | ஊடுபோக்கு |
| பொன்னிறை | பிதாநாழி |
| ஊர்க் கழஞ்சு | தரகு |
| ஊர்பன்காடி | நறி |
| நல்லா | ஈழப் பூட்சி |
| நல்லெருது | இடைப் பூட்சி |
| நாடாட்சி | தட்டுக் காயமும் |

மற்றும் எப்பேர்ப்பட்ட கோத்தொட்டு உண்ணப்படுவது எல்லாம் பெற மாட்டோம்.

இப் பிரமதேயம், சுட்டு ஒட்டால் மாட மாளிகை எடுக்கவும் காவும் தெங்கும் நடவும், இருவேலி தமனகம் உள்ளிட்டு எப்பேர்ப்பட்டனவும் நடவும், இப்பிரமதேயத்துக்கு ஏரி நீர்க்கு ஈந்தவாறு உள்ளூர் கரையட்டி நீர் கோக்கும் அளவும் கொள்ள அடைக்கவும் இப் பிரமதேயத்து ஆற்றுக்கால் நீர்க்கு இயைந்தவாறு கால்குத்திக்கொள்ளவும் பெறலாம். இவ் வாய்க்கால் அன்னியர் குறங்கறுத்து விடவும், கூடைநீர் இறைக்கவும், குற்றேத்தம் எடுக்கவும் கூடாது.

இங்குச் சொல்லப்பட்ட பரிகாரத்தோடு நல்லூர் நல் அந்தணரான மேலிருஞ்செற்றுச் சபையார்க்குத் தங்களுரோடே கலந்தேற்றி, ஒன்றுக்கி ஆண்டாண்டுதோறும் 3000 காடி நெல்லையும், 9 கழஞ்சு பொன்னையும் அட்டி உண்பதாக ! பரதத்தி சென்றது.

## 11. வீரட்டானர் கோயிலை நம்பியப்பி கட்டிய கல்வெட்டும் வேறு சில செய்திகளும்

No. 94 (A.R. No. 433 of 1905)

ஸ்வஸ்திஸ்ரீ

> திருந்து திருத்தணியில் செஞ்சடை ஈசர்க்குக்
> கருங்கல்லால் கற்றளியா நிற்க — விரும்பியே
> நற்கலைக ளெல்லாம் நவின்றசீர் நம்பிஅப்பி
> பொற்பமையச் செய்தான் புரிந்து.

— இ வெண்பா பெருமானடிகள் தாம் பாடி அருளுத்து.

திருத்தணிகைக் கல்வெட்டுகள் — காலவரிசையில் வருமாறு :

**(1905) 433, 435, 438, 432, 439, 449, 441, 430, 429, 436, 434, 445, 446, 444, 431, (1942 - 43) 140, 141, 139, 138, 142, 433, 437.**

**விஜய - அபராஜித விக்ரவர்மனின் 18 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு**
No. 95 (A.R. No. 435 of 1905.)

ஸ்வஸ்திஸ்ரீ கோவிசைய அபராஜித விக்ரவர்மர்க்கு யாண்டு பதினெட்டாவது திருத்தணியில் திருவீரட்டானத்துத் தேவர்க்கு நம்பி அப்பி இவ்வூர்க் குடிமக்களிடை விலைக்குக் கொண்ட பூமி. ஸ்ரீ கோயிலின் வடபாலைச் செறுவு ஆயிரங்குழியாலும் வந்த இறைமுதல் விற்று ஆசந்திர காலத்துக்கும் சாஸ்வதமாக திருத்தணியல் சபையார்க்கு இறையிலி யாவதற்குப் பொன்குடுத்துக் கொண்டமையில் சபையோமும் இவ் ஆயிரங் குழியாலும் எப்பேர்ப்பட்ட இறையுங் கட்டாதோமானோம். இ பூமி தேவர் போகமாக்கி இதனுக்கு நிசதி நாழுழி அரிசி இரண்டு திருவமிர்தும் இரண்டு சந்தி விளக்கினுக்கும் உழக்கெண்ணெயும் இவ்வூர் தம்முகளோம் சபையார் கடைக்காட்சியாக இப்பரிசு செய்து கொண்டுடையோமானோம். இது செய்யோமாயில் அன்றுள் கோவுக்கு நிசதி காற்பொன் தண்டப்படுவோ மானோம். இத் தண்டம் பட்டும் இப்பரிசே செய்வோமானோம். சபையோமும் இப்படி ஆராயயோமாயில் கங்கையிடை குமரியிடைச் செய்தார் செய்த பாவம் கொள்வோமானோம். அல்லது இத்தர்மத்தினை இரக்ஷிக்கின்ற திருத்தணியல் சபையார் ஸ்ரீபாதம் என் தலைமேலனவாகவும்.

திருத்தணிகைக் கோயில் நிர்வாகம் முன்னுளில் சித்தூர் மாவட்ட கார்வேட் ஜமீன்தார் வசம் இருந்துவந்தது. இந்து சமய அறநிலைய இலாகா நிர்வாகத்தை

மேற்கொள்ளும் வரையில் வழிவழி இந்த ஜமீன் மேற்பார்வையிலேயே இக் கோயிலின் நிர்வாகம் நடைபெற்றது.

கோயில் சிவாசாரியர்கள் கோயிலில் பூசகராயிருக்கும் உரிமை, இங்குள்ள குருக்கள்மார்களின் 15 குடும்பங்களுடையதாகும். இவர்கள் திருக்கழுக்குன்ற இனத்தார் ஆவர். இவர்கள் தங்களுக்குள் முறை வைத்தும் பூசை செய்து, அதன்வழி வாழ்க்கை நடத்துவோராவர்.

### திருத்தணிகையில் உள்ள மற்றச் சிறு கோயில்கள்

1. வீரட்டகாசர் கோயில். 2. ஆறுமுகசுவாமி கோயில். 3. விஜய ராகவப் பெருமாள் கோயில் — இவை மூன்றும் ரயில் நிலையத்திற்கு அரை கி.மீ. தொலைவில் நந்தியாற்றின் கரையில் உள்ளன; மிகவும் பழமை யானவை; பல்லவர் காலத்தைச் சேர்ந்தவை. இவற்றில் பழமையான கல்வெட்டுகள் சில காணப்படுகின்றன. 4. சகஸ்சிரேசுவரர் கோயில்: திருக்குளத்தின் கீழ்க்கரையில் உள்ள மேற்குப் பார்த்த சந்நிதி, தேவி - ஞானம்பிகை. 5. வீரபத்திரசுவாமி கோயில்: திருக்குளத்துக்கும் கிழக்கே பழைய சந்நிதி வீதியில் வீதிக்கு வடக்கே இருக்கிறது. 6. சரசுவதீசுவரர்: பிரம்மேசுரர், செங்கழுநீர் விநாயகர், ஏகாத்தம்மன், படைவீட்டம்மன் சந்நிதிகள் மலைமேல் உள்ளன. 7. திரு ஆலங்காடு: வட ஆரண்யர். 8. திருப்பாசூர்: பாசூர் நாதர். 9. நெடும்பரம் கோதண்டராமர். 10. கரும்பேடு நாதாதீசுவரர். 11. பெரிய நாகபூடி - நாதயீஸ்வரர். 12. வேப்ப குண்ட பாளையம் - சந்தான வேணுகோபாலர் திருக்கோயில், மற்றும் இதனைச் சார்ந்த கோயில்கள் பல உள. இக் கோயில்கள் எல்லாம் திருத்தணிக் கோயிலின் வருமானத்திலிருந்து பரிபாலிக்கப்படுகின்றன.

## 12. கந்தபுராணச் சுருக்கம், தட்ச காண்டம்

(சம்பந்த சரணாலயர்)

ஏவை முனிந்து ஒளிர் எஃக நெடும்படை
என்ன இலங்கிய கண்
பூவையை வேடுவர் ஆனவர் ஏனல்
புரந்திட வைத்திடலும்,
காவல் புரிந்து இதணத்து உறுநாள், உயர்
கந்த விலங்கல் ஒரீஇச்
சேவல் நெடுங்கொடி அண்ணல் பெருத்த
செருத்தணி உற்றனனே.

வந்து செருத்தணி அற்புத வெற்பிடை
வள்ளல் இருந்தருள,
சுந்தர வள்ளியை நாரதன் ஆகிய
தொன்மை கொள் மாமுனி கண்டு
எந்தை குகன்கண் இணங்கி வணங்கி
இசைத்திட மாமயல் கொண்டு
உந்திய வேலவன் வேடுவர் போல
உருக்கொடு சென்றனனே. 186

அருத்தி பொருந்திய உன்தன் இயற்கை
அனைத்தும் இயற்றுபு இங்கு
இருத்தி எனக் கடிது அங்கண் நிறுத்தி
இலங்கு எழில் வள்ளியொடும்
பெருத்திடு மன்ன சிலம்பை அகன்று
பிறங்கு வளம் குலவும்
செருத்தணி மால்வரை வந்தனன் உந்திய
சேவல் உயர்த்த பிரான். 214

செந்தேன் நறும் பொழில் மருத்தரு
செருத்தணி வரைக்கண்
பந்தே பொருந்திய கரத்தாய்!
இருந்து ஒளி பரப்பும்
இந்தே புரிந்த முக இன்னமட
மங்கையொடும் இங்ஙன்
வந்தேம் யாம்என மகிழ்ந்தாள்
மருத்துவன் மடந்தை. 222

சீர் ஆர் அடல்குலிச பாணிமகள்
ஆன திரு மாதும்,
வார் ஆர் மலைக் குறவர் மாதும் இரு
பாலும் வயங்க,
போர் ஆர் அரித்தவிசின் மீமிசை
இளம் பரிதி போல
ஏர் ஆர் ஆடல் குமர நாயகன்
உவப்புடன் இருந்தான். 223

### முருகர் அந்தாதி

**இரண்டாம் பட்டம் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்**

நல் நெஞ்சர்பாலினும், ஞானர்தம்
 பாலினும், நால்நிலத்தில்
எந் நெஞ்சர் பாலினும், என்பாலினும்
 இருந்தே அளிக்கும்
நின் நெஞ்சு இரங்கும்; நினக்கு இரங்காத
 என் நெஞ்சகம் நின் -
தன் நெஞ்சினும் பெரிதோ? அறியேன்,
 தணிகா சலனே! 13

தணிகாசலா! நின்தன் தாமரைத்தாள்
 தலைமேல் இருத்திப்
பணியாத நெஞ்சு எனக்கு ஏன் படைத்தாய்?
 பசுபாச முதல்
அணியாத நின்னை அடையாத பேர் இல்லை;
 யான் ஒருவன்
பிணியால் உலகில் இறத்தல் நன்றோ?
 எனைப் பெற்றவனே! 14

## 13. கந்தப்பையரின் குடும்ப வரலாறு

திருத்தணிகைக் கந்தப்பையர் குமாரர் சரவணப் பெருமாளையர் இயற்றிய 'கோளதீபிகை' என்னும் நூல் 1839ஆம் ஆண்டு அச்சில் வெளிவந்துள்ளது. இதில் சரவணப் பெருமாளையரின் வரலாறு தரப்பட்டிருக்கிறது. அதிலிருந்து கந்தப்பையரின் குடும்ப வரலாறு உரைக்கும் பகுதிமட்டும் இங்கு எடுத்துத் தரப்படுகிறது. இப் பகுதி அந்நாள் உரைநடைக்கும் ஒரு சான்றாக அமையும்.

"ஸ்ரீ கல்ஹாரகிரி யென்னுந் திருத்தணிகையில் நிகமாகமோக்த சிவாத்வைத சித்தாந்த ப்ரவர்த்தக வீரமாகேச்வரரும் ஏகவிம்சதி தீக்ஷா அஷ்டாவரண பஞ்சாச்சர சதுசஷ்டி சீலசம்பன்னரும் சச்சிதானந்த சொரூப ஏகலிங்க நிஷ்டாபரருமாகிய வீரூபாக்ஷி தேவர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருவருளினாலே மகிமையோடு மடாதிபராய் விளங்கியிருந்தனர்.

இவர் புத்திரர் — முத்தையர்.
இவர் தநயர் — சாம்பசிவையர்.
இவர் குமாரர் மஹா வித்வானாகிய கந்தப்பையர்.

இவருக்கு வள்ளியம்மாள் தெய்வயானையம்மாள் என்னும் மனைவியர் இருவர். மூத்தாளாகிய வள்ளியம்மாளுடைய புதல்வர் — விசாகப் பெருமாளையர். இவர் சாலிவாகன சகம் 1720 ஹு க்கு சரியான பிங்கள ஹு ஆனி மீ 24 உல் உதயஞ் செய்தனர். இளையாளாகிய தெய்வயானையம்மாளுடைய புத்திரர் வித்வச்சிரோமணியாகிய சரவணப்பெருமாளையர். இவர் ஷை ஹு பங்குனி மீ 2உல் உதயஞ்செய்தனர்."

டாக்டர் உ. வே. சாமிநாதையர் குறிப்பு

திருத்தணிகைப் புராணம் காப்பியமாகச் சிறந்து விளங்குவதற்குக் கந்தப்பையர் வேண்டுகோளே காரணம் என்றும், மேற்கூறிய நூலைக் கச்சியப்ப முனிவர் பாடுங்கால் மெல்லமெல்ல எழுதிப் போந்ததே இவர் சிறந்த கவியாவதற்குக் காரணமாயிற்று என்றும் பெரியோர்கள் கூறுவர்.

## 14. திருத்தணிகை பற்றிய பிற நூல்கள்

**அகிலேச பிள்ளை**
மயில் பத்து
வேல் பத்து

**அப்பாத்துரை முதலியார்**
திருத்தணிகை மாலை

**அம்பிகைபாகப் புலவர்**
தணிகைப் புராணம் — பொழிப்புரை

**அமிர்தலிங்கம் பிள்ளை சி. தா.**
திருத்தணிகேசர் மாலை

**அரசஞ் சண்முகனார்**
திருவடிப் பத்து

**ஆறுமுகன்**
தணிகை நாற்பா அலங்கல்
தமிழ்நாடு அரசாங்கச் சுவடி நிலையம் R. 977
Vol. IV PP. 1441, 1442, No. 1642

**இரத்தின முதலியார்**
தணிகாசலர் பஞ்சரத்தினக் கும்மி
தணிகாசலர் பஞ்சரத்தினம் - 1881

**இராமநாத பிள்ளை, சாணுங்குப்பம்**
முருகன் காவடிப் பதம்

**இராமலிங்க சுவாமிகள், வடலூர்**
திருத்தணிகைப் பதிகங்கள் - திரு அருட்பா 5ஆம் திருமுறை ஊரன் அடிகள் காலமுறைப் பதிப்பு - முதல் திருமுறை

**இராமாநுசம் பிள்ளை**
திருத்தணிகைத் தெய்வயானை அம்மை பதிகம்
திருத்தணிகை வள்ளி அம்மை பதிகம்
திருத்தணிகைப் பதிகம்

**கச்சியப்ப முனிவர்**
சாலிவாகன சகாப்தம் 1712 - சாதாரண வருடம் (1790) சித்திரை 11ஆம் நாள் செவ்வாய்க்கிழமை புனர்பூசம் வளர்பிறை சப்தமி கும்ப லக்கினத்தில் சிவசாயுச்சியம் பெற்றனர்.
தணிகைப் புராணம் - தாமோதரம் பிள்ளை பதிப்பு - 1883
திருத்தணிகை ஆற்றுப்படை
திருத்தணிகைப் பதிற்றுப்பத் தந்தாதி

**கந்தசாமிப் பிள்ளை, கவிராஜ, மதுரை**
திருத்தணிகைச் சுப்பிரமணியர் தோத்திரமாலை

**கந்தப்பையர்**
தணிகாசல புராணம் - டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பு, 1939
திருத்தணிகாசல அநுபூதி
முருகர் தாலாட்டு

கனகசபை முதலியார்
தணிகைப் பத்து

குமரகுருதாச சுவாமிகள், பாம்பன்
முதல் மண்டலம்: 12 திருத்தணிகை, 6 பாடல்: 1 பேசரிய, 2. நெஞ்சுழை, 3. ஆதிமுதலாக, 4 இருக்காதி, 5. நாடோறும், 6. என்னை நீ பணி.

இரண்டாம் மண்டலம் - முதல் கண்டம் - திரு அலங்கல் திரட்டு, 51. திருத்தணிகை மலை: 1. பொன்னுரங்க, 2. கூனிஆடி, 3. ஈழைச்சீர், 4. கண்கள், 5. கேசமெல்லாம், 6. மூளை குன்றி. 7. கால்கை ஓய்ந்து, 8 வெள்ளையாய் 9. பாய்கிடத்து, 10. உண்ணீர் அன்னர்.

குழந்தைவேலு ஆச்சாரி
திருத்தணிகை முருகர் போற்றித் திருப்பதிகம்
மயில் பதிகம்
வேல் பதிகம்

கோவிந்தராச கவிராயர், ப.
திருத்தணிகைச் சிங்காரமாலை

கோவிந்தராச செட்டியார்
தணிகை நிரோட்டக யமக வந்தாதி

சண்முகம் பிள்ளை, அட்டாவதானம், மயிலை
திருத்தணிகாசல மாலை (1874) வே. குமாரசாமி ஐயர் பதிப்பு

சண்முகம் பிள்ளை, வ. சு.
தணிகை நூற்றெட்டு வெண்பா அந்தாதி

18A

சண்முக முதலியார், பவழை
திருத்தணிகை வெண்பா அந்தாதி

சண்முகானந்த அடிகள். கு.
தணிகை ஆறுமுகக் கடவுள் பதிகம்

சண்முகானந்த சுவாமி, நீ.
திருத்தணிகைப் பதிற்றுப் பத்து - அந்தாதி (1950)

சபாபதி முதலியார், பு. அ.
திருத்தணிகை ஆற்றுப்படை உரை
திருத்தணிகை இரட்டைச் சொல் யமகமாலை - முழுமைக்கும் பதவுரை அமைந்துள்ளது.

சாமிநாத பிள்ளை, மு.
வேலாயுதக் கண்ணி

சிங்காரவேல் தேசிகர்
திருத்தணிகை மாலை

சிங்காரவேலு முதலியார், கூ.
திருத்தணிகைப் பத்திமாலை

சிங்காரவேலு முதலியார், மா.
மயில் பத்து
வேல் பத்து.

சுந்தர முதலியார், சே.
திருத்தணிகை நிரோட்டகப் பதிகம்
மயில் பதிகம்

சுப்பிரமணிய பண்டிதர்
தணிகைமலைக் கண்ணி

சுப்பிரமணியம், அருளிசை, சு வே.
தணிகை வேலவன் பதிகம்

செங்கல்வராய சுவாமி தோத்திரம்

செங்கல்வராய பிள்ளை, டாக்டர், வ. சு.
தணிகை ஆண்டவன் மாலை
தணிகை நாயகன் மாலை - 60ஆம் ஆண்டு நிறைவு வெளியீடு
தணிகை முப்பூ
திருத்தணிகேசன் தசாங்கம்
திருத்தணிகைக் கலி வெண்பா
திருத்தணிகைத் தல விளக்கம்

சொக்கலிங்க தேசிகர், ம.
திருத்தணிகாசல யமக அந்தாதி

சோமசுந்தர நாயகர்,
சித்தாந்த சண்டமாருதம்,
(6-8-1846—22-2-1901)
தணிகாசலஸ்தவம்
திருத்தணிகைப் பதிகம் - கழகப் பதிப்பு : (முருகன் புகழ்மாலை பார்க்க.)

தங்கவேற் பிள்ளை, ராஜா.
தணிகைப் பாமாலை

தண்டபாணி சுவாமிகள்,
திரு ஆமாத்தூர்
தணிகைச் சண்முகன் விண்ணப்பம்
திருத்தணிகைச் செவ்வேள் பதிகம்

1. சத்திவடி வேலா!, 2. பாடல் விருப்பம், 3. எத்துயரும் தீர்த்து, 4 மந்தக் கருத்துடையார், 5. பெண்ணுூர் மயல் நோய்ப், 6. மெய்த்தகையோன், 7. கண்டால் விரும்பு நலம், 8. காமக்குரோதம், 9. பாலரு வாயன், 10. ஈரமில்லா நெஞ்சகத்தேன், 11. மூவர் பெறும் வாழ்வும், 12. விற்குறவர் பேதையொடு.

தணிகாசல பஞ்சரத்நிளம் - 1842
தணிகாசலர் பஞ்சரத்தினம் - 1882
தணிகைப் பிள்ளைத்தமிழ்
சாத்தம்பாக்கம் - கிருஷ்ணசாமி முதலியார் பதிப்பு - 1878.

தாண்டவராய முதலியார்
திருத்தணிகை மாலை

திருத்தணிகைக் கீர்த்தனை
383 பக்கம் உள்ள பெருநூல்.

திருத்தணிகைக் குமரன் பதிகம்
திருத்தணிகை வெண்பா அந்தாதி
அந்தாதிக் கொத்து - 4 பார்க்க; பக். 49-58. 75 பாடல்கள் உள்ளன. முற்றுப் பெறுதது. குறைப்பிரதி

திருநாவுக்கரசு முதலியார் புழலை
திருத்தணிகை முருகன் திரு அருட் பதிகம் (1932)

துரைசாமி ஆசாரி
திருத்தணிகை சிவசுப்பிரமணியத் தெப்போற்சவக் கும்மியும் கீர்த்தனங்களும்

துரைசாமிப் பிள்ளை, தி.
திருத்தணிகைத் தலபுராணச் சுருக்கம்

துரைசாமிப் பிள்ளை, கொ.,
திரு ஒற்றியூர்
திருத்தணிகைத் தலமான்மியமும் பாமாலையும்
— தி : திருத்தணிகைப் பாமாலை

தேவராஜ பிள்ளை, வல்லூர்.
திருத்தணிகாசல மாலை - 1853

நமச்சிவாய முதலியார், கா.
(10-2-1876—1937)
தணிகைத் தவப்பயன் மாலை

நாகலிங்க முனிவர்,
வண்ணக்களஞ்சியம், காஞ்சி.
திருத்தணிகை வண்ண மஞ்சரி 30 வண்ணங்கள் (1894)

நீலகண்ட செட்டியார்
தணிகை இரட்டைமணி மாலை
திருத்தணிகை வெண்பா அந்தாதி

பரமசிவானந்தம் அ. மு. வித்துவான்
தணிகை அந்தாதி - 1938

பாநுகவி, ம. தி.
திருத்தணிகை மான்மியம்
திருத்தணிகை யாத்திரை

பாலசுந்தர முதலியார்
திருத்தணிகைப் பலராகத் திரட்டு

பொன்னுசாமிப் பிள்ளை, ஆ.
பண்டித வித்துவான்
திருத்தணிகைப் பதிற்றுப் பத்து அந்தாதி - குறிப்புரை

மணிவாசக சரணாலய அடிகள்
திருத்தணிகாசலப் பதிகம்

முத்துக் கறுப்பன் செட்டியார்
தணிகைமலை வடிவேலர் ஆசிரிய விருத்தம் - 1878

முத்துலிங்கம் பிள்ளை, பிராயங் குப்பம்
திருத்தணிகைச் சிங்காரச் சதகம் 1894. அகப்பொருள் துறை அமைந்த பாடல்கள்.

முத்துவேலுக் கவிராயர்
மயில்விடு தூது

முருகேச நாயகர், த. பு.
தணிகைப் புராண வசனம்

N. முருகேச முதலியார்,
திருத்தணிகைத் தல புராண வசனம்

முனுசாமி முதலியார், சி.
தணிகாசலக் கண்ணிகள்
தணிகைக் கொச்சகக் கலிப்பா
திருத்தணிகைச் சிவசுப்பிரமணியர் பேரில் வாரப் பதிகம், மாதப் பதிகம்
திருத்தணிகைப் பதிகம் - நெஞ்சொடு கிளத்தல்
திருத்தணிகை மாலை
தணிகை முருகன் வேலாயுதக் கண்ணிகள்

வடிவேல் பிள்ளை, சி.
திருத்தணிகைமலைக் கண்ணி (1890)

வீரபத்திர சுவாமி
வேலாயுத வெண்பா

வேங்கடசுப்பிரமணியம்
திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்

வேலாயுத முதலியார், தொழுவூர் (1832 - 1889)
அடைக்கல மாலை
திருத்தணிகை இரட்டைமணி மாலை
திருத்தணிகைக் கலம்பகம்
திருத்தணிகைச் சித்திர மாலை
திருத்தணிகை நான்மணி மாலை
திருத்தணிகைப் பதிற்றுப் பத்து அந்தாதி
திருத்தணிகை மும்மணிக் கோவை
திருத்தணிகை வெண்பா அந்தாதி

ஸ்ரீநிவாஸ முதலியார்
திருத்தணிகைக் கீர்த்தனம்

## அரும்பத விளக்கம்

அக்கம் - கண்
அக்குமாலையன் - எலும்பு மாலையையுடையவன், சிவன்
அகடு - வயிறு
அகண்ட ஞானம் - பேரறிவு
அகம் - நெஞ்சம், மனம்
அகரு - அகில்
அகவுதல் - ஆடுதல், தாவுதல்
அகி - பாம்பு
அகில் - மணமுள்ள ஒருவகை மரம்
அங்கசன் – மன்மதன்
அங்கனை - பெண்
அங்காரகன் - செவ்வாய்
அங்கி - தீ
அங்குச பாசன் - வியாயகன்
அங்குசம் - தோட்டி, யானையை அடக்கும் கருவி
அங்குலி - விரல்
அங்கை - அகங்கை, உள்ளங்கை
அச்சன் - தந்தை
அசம் - ஆடு
அசலம் - மலை
அசி - படைக்கலம், வாள்
அசுணத்திரள் - இசையறியும் ஒருவகைப் பறவைக் கூட்டம்
அசுணம் - இசையறிவிலங்கு
அசும்பு - அசைவு, சிந்துதல், சிறு திவலை
அசுரர் - இராக்கதர்
அஞ்சம் - அன்னப்பறவை
அஞ்சவாகனன் - அன்னத்தை வாகனமாக உடையவன், பிரமன்
அஞ்சனக்கோல் - மை தீட்டும் கோல்
அஞ்சனம் - கருமை
அஞ்சூராணி - தேரினகத்தில் செறிகதிர்
அஞ்செவி - உட்செவி
அஞர் - துன்பம்
அட்ட - சொரிய
அட்டமாசித்தி - எட்டு வகையான ஆற்றல். அவை யாவன: அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராந்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்
அட்டாங்க யோகம் - எட்டு வகையான யோகப் பயிற்சி, அவை யாவன: இயமம், நியமம், ஆதனம், பிராணுபாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி
அட்டுதல் - அழித்தல்
அடவி - காடு
அடுக்கல் - மலை
அடைக்காய் - வெற்றிலைபாக்கு
அண்டம் - உலகவுருண்டை, உலகம், பீசம்
அண்டர் - தேவர்
அண்டிலையோ - சேர்ந்திருக்கவில்லையா
அண்ணல் - சிறந்தோன், பெரியோன், கடவுள்
அணங்குதல் - வருத்துதல்
அத்தம் - அர்த்தம், பொருள், சொற் பொருள்
அத்தி - யானை
அத்திமுகத்தவன் - யானை முகமுடையவனை விநாயகன்
அத்திரம் - ஆயுதம், அம்பு

அத்திரதேவு - திருவிழாவில் சுவாமி புறப்படுவதற்குமுன் வீதியைச் சுற்றிக்கொண்டு வரும் ஆயுத வடிவான மூர்த்தி
அத்துவா - கர்ம நீக்கத்திற்குரிய வழி
அதள் - தோல்
அதிகாரன் - தலைவன்
அதிரசம் - பண்ணிகார வகை
அந்தகன் - யமன், யமன் போன்றவன்
அந்தணர் சொல் பொற்கவி - வேதம்
அந்தப்புரம் - அரசன் தேவி இருக்குமிடம்
அந்தம் - முடிவு
அந்தரங்கம் - மறைவு
அந்தரத்தவர் - வானுலக வாசிகளாகிய தேவர்
அந்தன் - யமன்
அந்தி - மாலைக்காலம்
அந்திமாலை - சந்தியாகாலம், மாலைப்பொழுது
அப்பு - நீர்
அபசாரம் - குற்றச் செயல்
அபயங்காத்தல் - அவயவங் காத்தல், அடைகாத்தல்
அபயம் - அடைக்கலம்
அபயன் - அடைக்கலம் தருவோன்
அபிமானம் - பற்று
அம்பகம் - கண்
அம்பர் - மேலுலகவாசிகள், தேவர்
அம்பலம் - பொதுவிடம், பொது மேடை, பொன்னம்பலம், சிதம்பரம்
அம்பி - தோணி, ஓடம்
அம்பு - நீர், ஆயுதம்
அம்பு ஐந்திஞேன் - ஐந்து மலர் அம்புகளையுடைய மன்மதன்
அம்புயன் - பிரமன்
அம்புலி - சந்திரன்
அம்பை - பார்வதி
அம்போதி - கடல்
அம்மை - வருபிறப்பு
அமர் - போர்
அமரர் - வானோர்
அமராபதி - தேவேந்திர நகரம்
அமலம் - அக்கில்லாமை
அமலன் - கடவுள்
அமலை - பார்வதி
அயம் - குதிரை
அயமாமகம் - அசுவமேத யாகம்
அயல் - வேறு
அயன் - பிரமன்
அயிராணி - இந்திராணி
அயில் - வேல், கூர்மை
அயில் வேல் - கூர்மையான வேல்
அயுதம் - பதினாயிரம்
அரக்காம்பல் - செவ்வாம்பல்
அரங்கு - மன்றம்
அரட்டு - கருவம்
அரணம் - காப்பு
அரணி - தீ
அரம்பை - தெய்வப்பெண்
அரம்பை முதல் நால்வர் - தேவ லோகத்து நடன மாதர் நால்வர்! அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை
அரம்பையர் - தெய்வப் பெண்டிர்
அரவப்பள்ளி - பாம்பணை
அரவம் - பாம்பு
அரவம் எட்டு - எட்டுப் பாம்புகள்: வாசுகி, அனந்தன், தக்கன், சங்க பாலன், குளிகன், பதுமன், மகா பதுமன், கார்க்கோடன்
அரவிந்தம் - தாமரை
அரா - பாம்பு
அரி - கோடு, செவ்வரி, சிங்கம், சூரியன், திருமால்

அரிமான் - இந்திரன்
அருகர் - சைனர்
அருச்சனை - மலரிட்டுச் செய்யும் வழிபாடு
அருச்சிக்கில் - பூசித்தால், வழிபட்டால்
அருணகிரிநாதன் - முருக பக்தராகிய பெரும்புலவர்
அருணன் - சூரியனின் தேர்ப்பாகன்
அல் - இரவு, கருமை, கருநிறம்
அல்குல்குழி - பெண்குறி
அல்நாயகன் - இரவுக்கு அதிபதியான சந்திரன்
அல்லகாத்திரி - நீலோற்பல மலர் மலரும் மலை; திருத்தணிகை
அல்லவர் - பகைவர்
அல்லிக்கமலம் - அகவிதழையுடைய தாமரை
அலது - எண்ணிக்கை, அளவு
அலகை - பேய்
அலங்கல் - பூமாலை
அலங்காரம் - கந்தர் அலங்காரம்
அலங்கு - தீங்கு, பாவம்
அலம் - துன்பம், அமைவு, வரையறை, கேடு
அலர் - பூ
அலரி - சூரியன்
அலவன் - ஆண் நண்டு
அவ்வித்து - பொருது
அவ்வியம் - அவிப்பலி
அவசுரம் - அபசுரம், இனிமையற்ற ஒலி
அவத்தம் - கேடு
அவத்தோர் - பயனற்றவர்
அவமதி - இழிவு
அவி - வேள்வித்தீயில் தேவர்க்குக் கொடுக்கும் உணவு
அவிகாரி - விகாரமற்றவன்
அவிதர - மடிய
அவிர்தல் - ஒளிவிடுதல், விளங்குதல்
அவுணக்குழு - அசுரர் கூட்டம்
அழல் - நெருப்பு
அழுக்காறு - பொறாமை
அழுக்கு - மலம், மாயை
அழுங்குதல் - மிகவருந்தல்
அள் - செறிவு, நெருக்கம்
அள்ளுறல் - பதித்தல், இருத்துதல்
அளக்கர் - கடல்
அளகம் - பெண்மயிர்
அளகைக்கு - அதிபதி - அளகாபுரிக்குத் தலைவனான குபேரன்
அளம் - உப்பங்கழி
அளற்று நோய் - நரகத் துன்பம்
அளி - வண்டு, அருள்
அளியார் - அருள்தன்மை நிறைந்தார், ஒன்றையும் பிறருக்குக் கொடுக்காதவர்
அளியின் சங்கம் - வண்டுக் கூட்டம்
அளை - வளை, புற்று
அற்புதம் - வியப்பு
அறிவு அழி பிதா - தக்கன்
அறுகு - அறுகம்புல்
அறுத்து - போக்கி
அறுபத்து நாலு கலை - அறுபத்து நான்கு வித்தைகள்
அறுபதம் - வண்டு
அறுமீன் - கார்த்திகை நட்சத்திரம், கார்த்திகை மாதர்
அறுவை - ஆடை
அறை - பாறை
அறைவேன் - சொல்வேன்
அன்னம் - சோறு
அனகன் - பாவமற்றவன், கடவுள்
அனங்கன் - மன்மதன்
அனத்தன் - அன்னவாகனமுடைய பிரமன்
அனந்தன் - ஆதிசேடன்

அனம் - அன்னம், சோறு
அனுதி - தொடக்கம் இல்லாதது
அனித்தம் - நிலையாமை
அனுதினமும் - நாள்தோறும்
அனுபூதி - கந்தர் அனுபூதி
அனுராகபோகம் - காமானுபவம், காமவின்பம்
அனே - அன்னை, தாய்
அனேமார் - அன்னைமார்
ஆ - ஆச்சாமரம்
ஆக்கை - உடம்பு
ஆகண்டலன் - இந்திரன்
ஆகமம் - முதல்வன் வாக்கு, வேத சாத்திரங்கள், தரும நூல்
ஆகருஷணம் - இழுக்கை
ஆகு - பெருச்சாளி
ஆகு வாகனன் - பெருச்சாளியை வாகனமாகக் கொண்ட விநாயகன்
ஆசார ஈனர் - ஒழுக்கம் இல்லாதவர்
ஆசான் - மூத்தோன், ஆசிரியன்
ஆசுரவெம்மை - கொடிய வெப்பம்
ஆட்டுக்கு - ஆடுதலுக்கு
ஆடகக்கிரி - பொன்மலை எனப்படும் மேருமலை
ஆடகம் - பொன்
ஆடி - கண்ணாடி
ஆணவம் - செருக்கு, அகங்காரம், ஆணவமலம்
ஆத்தர்கள் - அன்புடையவர்கள்
ஆத்தி - ஒரு மரவகை
ஆத்திரள் - பசுக்கூட்டம்
ஆதபன் - சூரியன்
ஆதர் - அறிவில்லார்
ஆதி - முதல்வன்
ஆதிசைவ மாசுரர் - சிவாலங்களில் பூசகராகிய சிவப் பிராமணர்
ஆதும் - எதுவும்
ஆபத்சகாயன் - துன்ப நீக்கத்திற்குத் துணையானவன்; திருத்தணிகையில் விளங்கும் விநாயகன் திருநாமம்
ஆம்பல் - மூங்கில்
ஆய் - தாய்
ஆயிரம் கதிரோன் - ஆயிரம் கிரணமுடைய சூரியன்
ஆயுள் - வாழ்நாள்
ஆர்கலி - கடல்
ஆர்த்திகை - விருப்பம்
ஆரத்தார் - சந்தன மாலை
ஆரம் - ஆபரணம், மாலை, சந்தனம், முத்து
ஆரணி - வேத வடிவினளான இறைவி, பார்வதி
ஆரல் - கார்த்திகை, கார்த்திகை மாதர்
ஆரவடம் - முத்துமாலை
ஆரியம் புகல்வோர் – சம்ஸ்கிருதம் சொல்வோர், முனிவர்
ஆல் உதரம் - ஆலிலை போன்ற வயிறு
ஆலகாலம் - பாற்கடலில் தோன்றிய நஞ்சு
ஆலம் - நீர்
ஆலித்தல் - ஒலித்தல்
ஆலை - கரும்பு
ஆலோலம் - பறவை ஓட்டும் குறிப்பு
ஆவணம் - கடைத்தெரு
ஆவல் - விருப்பம்
ஆவேதனை - அந்த வேதனை
ஆள் - ஆண்மகன், அடிமை
ஆள்வாய் - அடிமையாகக் கொண்டருள்வாய்
ஆளாகக் கொண்டான் - அடியவனுக்கிக் கொண்டான்
ஆளி - சிங்கம்

ஆறாறு தத்துவம் - முப்பத்தாறு சைவ சமய உண்மைகள்
ஆறு அத்துவா - ஆன்மவிடுதலைக்கான ஆறு வழி: மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா
ஆறு சுவை - கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு
ஆறுதலையான் - கங்காதரன், சிவன்
ஆறுமுடியோன் - கங்கையைத் தலையிலே கொண்ட சிவபெருமான், முருகக் கடவுள்
ஆன் - பசுமாடு
ஆனகம் - துந்துபி
ஆனா - அளவுபடாத, மிகுதியான
ஆனி - கேடு
ஆனில் ஐந்து - பசுவிலிருந்து பெறும் ஐந்து பொருள்கள்
இக்கு - கரும்பு
இக்கு வில் - கரும்பு வில்
இகல் - பகை
இங்கிதம் - இனிமை
இச்சா சத்தி - விருப்பாகிய சக்தி
இச்சை - விருப்பம்
இட்டம் - விருப்பம், அன்பு
இடர் - துன்பம், வருத்தம்
இடவிய - பரந்துள்ள
இடி - மாவு
இடை - சந்திரகலை, இட மூக்கு மூச்சு
இண்டை - தலையில் அணியும் மாலை வகை
இதண் - காவற்பரண்
இதழ் - உதடு, பூவிதழ்
இதிகாசம் - பழங்கதை
இதை - புதுக்கொல்லை
இதையகூடம் - நெஞ்சிடம் இதையக்கொட்டில்
இந்தனம் - விறகு
இந்திரஞால இரதம் - சூரனது தேர்
இந்திரஞாலம் - இந்திரசாலம், மாயவித்தை
இந்திர நீலம் - இந்திரன் அமைத்த சுனையில் மலர்ந்த நீலமலர்
இந்தீவரம் - கருங்குவளை, நீலோற்பலம்
இந்து - சந்திரன்
இந்துசேகரன் - பிறையைத் தலையில் சூடிய பெருமான், சிவன்
இபம் - யானை
இமில் - எருத்துத் திமில்
இமை - கண்ணிமை, கண்ணிமைப் பொழுது
இயம்புதல் - சொல்லுதல்
இயவர் - இசைகாரர், தோற் கருவியாளர்
இரட்டல் - மாறிமாறி வருகை
இரலை - கலைமான், ஆண்மான்
இரவி - சூரியன்
இரா - இரவு
இருக்கு - இருக்கு வேதம், மந்திரம்
இருசுடர் - சூரிய சந்திரர்
இருகோடு அச்சு - இருசு என்னும் உறுப்போடு கூடிய தேருருளை கோத்த மரம், இருசாவது அச்சு மரத்துக்கு வலுவாகச் செருகிய இரும்பு வட்டம்
இருடியர் - முனிவர்
இருவினை - நல்வினை, தீவினை
இரைத்தல் - ஒலித்தல்
இல் - வீடு, மனைவி
இல்லம் - வீடு
இலயம் - ஒடுக்குதல், அழித்தல்
இவர்தல் - செல்லுதல், ஏறுதல், ஏறி நடத்துதல்
இவுளி - குதிரை
இழிதகவு - தாழ்வு

இறவுளர் - குறிஞ்சி நில மாக்கள்
இறுங்கு - சோளவகை
இறும்பூது - வியப்பு, புதுமை
இறை - தலைவன், அரசன்
இறைக்குடி - அரசாட்சிக்கு உட்பட்ட குடிகள்
இறைஞ்சுதல் - வணங்குதல்
இறைவி - உமை
ஈசன் - கடவுள், சிவன்
ஈர்ங்கவுள் மா யானை - ஈரமான கன்னமுடைய யானை
ஈர்த்தல் - இழுத்தல்
ஈளை - கபம் என்னும் கோழை
ஈனம் - இழிவு, கேடு
உக்கிரன் - உக்கிரகுமார பாண்டியன்
உக அடித்தாமரை - இரண்டான பாத தாமரைகள்
உகந்து - உவந்து, மகிழ்ந்து, விரும்பி
உகம் - ஊழிக்காலம்
உங்காரம் - அச்சுறுத்தும் தொனி
உஞற்றுதல் - செய்தல்
உட்பகை - நண்பன்போல் பகைவனுயிருத்தல்
உடலம் - உடல்
உத்தரம் - வடக்கு
உததி - கடல்
உதரப்புழை - வயிற்றுத் துவாரமாகிய கொப்பூழ்
உதரபந்தனம் - அரைப்பட்டிகை
உந்தி - கொப்பூழ்
உபயபதம் - இருகால்கள்
உபாசனை - வழிபாடு
உம்பர் - தேவர்
உயிர்சூழ் பன்னிரண்டு வேதனை - பசி, தாகம் முதலியன, வேலாயுத சதகம் 86ஆம் பாடல் பார்க்க
உரகக் கன்னிமார் - நாக கன்னியர்
உரகபடம் - பாம்பின்படம்
உரகம் - பாம்பு
உரகர் - நாகர்
உரப்பு - பேரொலி
உரம் - மார்பு
உரு - வடிவம்
உருவிழாது - நிழல் படியாது
உலகு ஈரேழ் - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்னும் மேலேழ் உலகு; அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம் என்னும் கீழேழ் உலகு; ஆகப் பதின்னுன் உலகம்
உலகு உலா - பூவுலகில் வரும் பவனி
உலப்பு - அழிவு
உலம் - கலை - திரண்ட கல்லை
உலா - பவனி
உலாக்கவி - பவனிப் பாடல்
உலோபர் - பிசுனர்
உவணம் - கருடன்
உவாமதி பௌர்ணமிச் சந்திரன்
உழுவை - புலி
உழை - மான்
உளம் - உள்ளம்
உற்கை - கடைக்கொள்ளி
உற்பலம் - நீலமலர்
உற்பவம் - பிறப்பு
ஊகம் - குரங்கு
ஊசல் - ஊஞ்சல்
ஊர்தி - வாகனம்
ஊன் - தசை, உடல்
ஊனம் - குறை, கேடு, அழிவு
எகின்கொடி - அன்னக்கொடி
எங்கணும் - எங்கும், எல்லா இடங்களிலும்

எச்சன் - யாகாதிபதி
எட்டி - தாவி
எட்டிக்கனி - காஞ்சிரங்கனி
எட்டு உரு - நிலம், நீர், நெருப்பு, வளி, வான், மதி, அரி, உயிர்
எண்தோளி - துர்க்கை
எனும் - எண்ணும், குறுக்கல் விகாரம்
எய் - முட்பன்றி
எரி - நெருப்பு, கார்த்திகை
எரிகாரம் - காந்தச் செய்யும் இயல்புடைய காரமருந்து
எரிமுலை - கார்த்திகை மாதரின் முலை
எரிவிழி - நெருப்புக்கண்
எருமைப்போத்து - எருமைக்கடா
எல்லி - இரவு
எவ்வனம் - யௌவனம், இளமை
எழில் - அழகு
எழுத்து ஆறும் - குமரன் திருநாமம்
எழுபிறவி - தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்
எழு மாதர்கள் - அபிராமி, மகேசுவரி கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி
எழு மாதவர் - ஏழு முனிவர்: அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன்
எழுவகை லோகம் - பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், தரா, கஞ்சம்; மேலேழ் உலகம், கீழேழ் உலகம்
என்று - பகல், நாள்
ஏகத்துவம் - ஒன்றுயிருக்கும் தன்மை
ஏகாசம் - மேலாடை
ஏசுதல் – இகழ்தல்
ஏடணை - விருப்பம்
ஏணி - எல்லை, மான்
ஏத்தும் - துதிக்கும், புகழும்
ஏந்தல் - பெருமையில் சிறந்தோன்
ஏந்திரம் - கரும்பாலை, திரிகை
ஏமம் - இன்பம், பாதுகாப்பு
ஏமுறுதல் - மகிழ்வுறுதல்
ஏரை - அழகு, எழுச்சி
ஏழ் முனிவர் - அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன்
ஏற்றுக்கொடி - இடபக்கொடி
ஏனை - வேறு, மற்றை
ஏனோர் - பிறர், மற்றையோர்
ஐ அறிவு - ஐந்தறிவு, ஐம்பொறியால் உணரப்படுதல்
ஐ ஆனனத்தன் - ஐந்து திருமுகங்களையுடைய திருமால்
ஐங்கணை - ஐந்து மலரம்புகள்: தாமரை, முல்லை, மா, அசோகு, சண்பகம்
ஐங்கரன் - விநாயகன்
ஐங்கைக்களிறு - விநாயகன்
ஐந்தருநீழல் - தேவலோகம்
ஐந்து அவத்தை - சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்
ஐம்புலன் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளின் வழி உணரப்படும் ஐந்தறிவு. அவையாவன: ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஒலி என்பனவாம்
ஐம்பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து அறிகருவிகள்
ஐமுகன் - ஐம்முகன், சிவன்
ஒசிதல் - தளர்தல்
ஒட்டார் - பகைவர்

ஒட்டுகவிப்புலவன் - மதுரையில் பொற்கிழிபெற்ற தருமி
ஒருப்படுதல் - ஒன்றுபடுதல், ஒருமையாதல்
ஒருவு - நீங்குகை
ஒல்லே - விரைவு
ஒற்றுடை - ஈரம் போக்கத் துடைக்கும் துண்டு
ஒன்பதில்குரு - ஒன்பதாம் இடத்தில் வியாழன், நன்மைக்கு அறிகுறி
ஒன்மதின்மர் - உமையும்மையின் சிலம்பிலிருந்து தோன்றிய ஒன்பது பேர், பார்க்க : நவவீரர்
ஓங்கல் - உயர்ச்சி
ஓட்டும் - போக்கும்
ஓதிமம் - அன்னம்
ஓதிமன் சிகரி - பிரமன் மலே உச்சி
ஓதை - ஓசை
ஓர் அரி வைகும் தலம் - ஒப்பற்ற இந்திரன் வாழும் உலகு; வானுலகு
ஓரும் - ஆராய்ந்தறியும்
ஓலம் - அலங்கோலம், சீர்கேடு
ககம் - பறவை
கங்குல் - இருள், இரவு
கச்சபம் - ஆமை
கச்சி - காஞ்சிபுரம்
கச்சு - மகளிர் மார்புக் கச்சு
கசட்டன் - கசடன், கீழ் மகன்
கசடன் - குற்றமுள்ளவன்
கசிதல் - மனம் நெகிழ்தல்
கஞ்சக்கிழவன் - தாமரையிலிருக்கும் பிரமன்
கஞ்சம் - தாமரை
கஞ்சன் - பிரமன்
கஞலி - நெருங்கி
கஞலுதல் – விளங்குதல், மிகுதல்
கட்சி – கூடு, திரள், காடு
கட்செவி - பாம்பு
கட்செவி வைகும் தலம் - பாம்புகள் உலகமாகிய நாகலோகம்
கட்டாரி - குத்துவாள்
கட்டுரைசெய்தல் – பேசுதல்
கடகம் - காப்பு
கடம் - முறைமை
கடல் வண்ணன் - கடலின் நிறம் படைத்தவனான திருமால்
கடவுட்பிடி - தெய்வயானே
கடவுதல், கடாவுதல் - செலுத்துதல்
கடி - மணம், வாசனே, ஓசை
கடிசூத்திரம் - அரைஞாண்
கடு - நஞ்சு
கடுக்கை - கொன்றை
கடுவன் - ஆண் குரங்கு
கடை - வாயில்
கடைசியர் - பள்ளத்தியர், வயலில் பணிசெய்யும் உழத்தியர்
கண்ணுயிரவன் - இந்திரன்
கண்ணுளன் - கருணேயுடையவன் அன்புடையவன்
கண்ணுதல் - சிவன்
கணக்கு - முறைமை
கணம் - பொழுது
கணி - வேங்கைமரம்
கணிகம் - கணம், ஒரு நொடிப் பொழுது
கணிகையர் - பொதுமாதர்
கத்தல் - படித்தல்
கத்தான் - ஒலிபடைத்தவன்
கதலி - வாழை
கதி - முத்தி, வாழும் வழி
கதிர் - சூரிய சந்திரர்
கதிரவன் - சூரியன்
கதை - சரிதை
கந்தர் அந்தாதி - அருணகிரிநாதர் பாடிய துதி நூல்
கந்தரம் - மலேக்குகை, மேகம்

கந்தித்தல் - மணத்தல்
கந்து - தூண், தறி, பற்றுக்கோடு
கப்புரம் - கர்ப்பூரம்
கபம் - சளி
கம்பம் - நடுக்கம், அசைவு
கம்பலை - ஆரவாரம்
கம்பு - ஒளி
கம்பூதம் - பூவுலகம்
கமர் - வெடிப்பு, நிலப்பிளப்பு
கமலாசனர் - பிரமன்
கமை - பொறுமை
கயநோய் - என்புருக்கி வியாதி
கயவர் - கீழ்மக்கள்
கயவன் - கீழ்மகன், இழிந்த செயல் களையுடையவன்
கரகம் – கிண்ணம், கமண்டலம்
கரணம் - கூத்துவகை, சடங்கு
கரத்தல் - மறைத்தல்
கரம் - கை
கரவர் - வஞ்சகர்
கரா - முதலை, ஆண் முதலை
கரி - யானை
கரிகள் எட்டு - எட்டுத்திசை யானை கள் : ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், பட்பதந்தம், சரருவபூபம், சுப்பிர தீபம்
கரிணி - யானைக்கன்று
கரிமா - யானை
கரிமுகன் - யானை முகனாகிய விநாயகன்
கரியமதன் - கருநிறமுடைய மன்மதன்
கரியோன் - திருமால்
கருங்காரி - இந்திரன்
கரைவன் - சொல்லுவன்
கல் - மலை
கல்தவர் - மேருமலையாகிய வில்
கல்லகம் - மலை
கல்லாரகிரி - செங்கழுநீர் மலர் நித்தம் மலரும் மலை, திருத் தணிகை
கல்லார நெடுவரை - திருத்தணிகை
கல்லாரம் - செங்கழுநீர்
கலம் - பரத்திரம்
கலவி - சேர்க்கை
கலவித்தந்து - காம நூல்
கலாரகிரி - திருத்தணிகை
கலி - துன்பம், வறுமை, செருக்கு
கலித்தல் - ஒலித்தல்
கலில் - கல்லில், சாணைக்கல்
கலை - ஆடை
கவந்தம் - உறுப்பில்லாத முண்டம், உடற்குறை
கவரி - சாமரை
கவான் - மலைப்பக்கம், மலையின் அடிவாரம், சாரல்
கவி - சுக்கிரன், குரங்கு
கவிகை - குடை
கவியம் - பஞ்ச கவியம், பால், தயிர், நெய், கோமயம், கோசலம்
கவுணியன் - திருஞான சம்பந்தர்
கவுரி - பார்வதி
கவுள் - கன்னம்
கழங்கு - கழற்சிக்காய்
கழல்-காலில் அணியும் வீரகண்டை, திருவடி, கழற்சிக்காய்
கழறல் - சொல்லுகை
கழனி - வயல்
கழை, - கரும்பு, மூங்கில்
கள் - தேன்
கள்ளியான் - திருடியவன்
களபம் - கலவைச் சாந்து, வாசனைப்பொடி
களம் - கழுத்து
களி - மகிழ்ச்சி
கற்பனை - தானே கட்டிச் சொல்லுதல், வருணனை

கற்பூர தீபம் - கர்ப்பூர ஆராதனை
கறங்குதல் - ஒலித்தல்
கறித்தல் - கடித்தல்
கறுவுதல் - சினக் குறிப்புக் காட்டுதல்
கன்னல் - கரும்பு
கனகம் - பொன்
கனல் - நெருப்பு
கனை - ஒலி
கா - சோலை, கற்பகச்சோலை
காங்கெயன் - கங்கையில் பிறந்த முருகன்
காசினி - உலகம்
காசு - குற்றம், பொன்
காஞ்சி - மேகலையணி, காஞ்சிபுரம்
காடி - கூழ்
காடை விளக்கு - ஆராதனை செய் தற்குதவும் ஒருவகை விளக்கு
காத்திரம் - உடல், பருத்த உடல், சினம்
காத்திரி - படைக்கலம்
காத - பிரிவு செய்ய, கொல்ல
காதரம் - தீவினைத் தொடர்பு
காதல் - அன்பு, விருப்பம்
காதலித்து - விரும்பி
காதும் - பிரிக்கும்
காந்தன் - கணவன்
காந்தா - கணவனே
காந்தி - ஒளி
காந்துதல் - ஒளிர்தல்
காம சுரம் - காமக் காய்ச்சல்
காமர் நன்னூல் - காம சாத்திரம்
காமாதுரகர் - காமாதுரர், காம இச்சை மிக்கவர்
காயம் - உடம்பு
காயா அத்தி - யானை
கார் - மேகம், கருமை
கார் அரவம் - ராகு கேது என்னும் பாம்புகள்
கார் அரி வைகும் தலம் - கரிய திருமால் வீற்றிருக்கும் வைகுந்தம்
காரி - சனி, இந்திரன், வயிரவன்
காரிகை - பெண்
காரிகையார் - மகளிர்
காலாயுதம் - கோழி
காவி - நீலமலர், குவளைப்பூ
காவிக்கிரி - குவளை மலர் நித்தம் மலரும் திருத்தணிகை
காழி - சீகாழி
காளை - கட்டிளமையோன்
கான் - மணம்
கான்றல் - சிந்துதல், ஒளிவீசுதல்
கிடங்கு - அகழி, குளம்
கிடுகு - போதிகை என்னும் தூணின் மேலுறுப்பு
கிம்புரி - ஆபரணம்
கிழி - சீலைப்படம்
கிழிபட்டிட - பிளவுபட்டுப் போக
கிளியாய் இருந்த உத்தமன் - அருணகிரிநாதர்
கிளை - உறவு
கின்னரர் - யாழிசை வல்ல தேவ சாதியார்
கீரன் - நக்கீரன்
கீன்றல் - கீறுகை
குக்குடம் - கோழி
குகன் - முருகன்
குகைமேவும் புலவன் - நக்கீரன்
குசம் - கொங்கை
குஞ்சரம் - யானை
குஞ்சி - குடுமி, ஆண்மயிர்
குட்சி - வயிறு
குட்டம் - ஆழம், மடு
குடங்கை - உள்ளங்கை
குடந்தை - கும்பகோணம்
குடமுனிவன் - அகத்தியன்
குடி ஏற்றுதல் - குடிபுகச் செய்தல்

குடியாக்கி - குடியமர்த்தி, குடும்பத்துடன் வாழச் செய்து
குத்திரம் - தந்திரம், வஞ்சனை
குதட்டுதல் - மெல்லுதல், அசைபோடல்
குதம்பை - ஓலைச்சுருள். காதணி வகை
குதலை-மழலைச்சொல். இனிய மொழி
குதி - குதிங்கால்
கும்பமுனி - அகத்தியன்
கும்போதயமுனி - குடத்திலிருந்து பிறந்த முனிவனாகிய அகத்தியன்
குமாரதந்திரம் - முருகக் கடவுளின் வழிபாட்டுநெறியைத் தெரிவிக்கும் ஆகமம்
குமிழ் - குமிழ மலர்
குயம் - முலை
குரவன் - குரு
குரவை - மகளிர் கைகோத்து ஆடும் கூத்து
குரவோர் - தாய் தந்தையர் குரு முதலிய பெரியோர்
குரிசில் - தலைவன், பெருமையில் சிறந்தோன்
குருகு - பறவை
குருந்து - குருந்தமரம்
குருபரன் - குருக்களில் சிறந்தோன்
குருப்பி - புற்றுஞ்சோறு
குருமுலை - குருக்கண்ணை யுடைய முலை, அரும்பியமுலை
குரை - ஓசை
குவடு - திரட்சி, மரக்கொம்பு
குவால் - குவியல்
குவை - தொகுதி, குவியல்
குழல் - கூந்தல், மயிர்முடி
குழிசி - பானை
குளவன் - முருகக்கடவுள்
குற்குலு - குங்கிலியம்
குற்றி - மரக்கட்டை, தூண்
குறங்கு - தொடை, மடி
குறளி - குறளிப் பிசாசு
குறிச்சி - குறிஞ்சிநில ஊர், வேடர் வாழும் சிற்றூர்
குறிஞ்சிக்கிழவன் - முருகன்
குறுகும் - அடுக்கும், சேரும்
குறுமுனிவன் - அகத்தியன்
கூடலர் - பகைவர்
கூதாளா - கூதாளிச் செடியின் மலரை அணிந்தவனே
கூபம் - கிணறு
கூவிரம் - தேர், தேரின் தலையலங்காரம்
கூளிகள் - பூதகணங்கள்
கூற்றம் - யமன்
கூன் – வளைவு, உடற்கூன்
கெழுமுதல் - பொருந்துதல்
கேகயன் - மயில் வாகனனாகிய முருகன்
கேசரி - சிங்கம்
கேடகம் - பரிசை
கேதம் - துக்கம், இளைப்பு
கேயூசம் - தோளணிவகை
கேழ் - நிறம்
கேழ்ந்த - ஒளி படைத்த, நிறம் பொருந்திய
கேழல் - பன்றி
கேள் - உறவு
கைக்கிளி - முருகன் கையில் அமர்ந்துள்ள கிளி, அருணகிரிநாதர்
கைத்தாய் - வளர்ப்புத்தாய்
கைந்நாகம் - யானை
கைபுனைதல் - அலங்கரித்தல்
கைம்மலை - யானை
கைம்மாறு - பிரதியுபகாரம்
கையகன்று - விலகி, விட்டு நீங்கி
கையர் - மூடர்
கைலாகு - கைத்தாங்கல்

கொக்கரித்தல் - கூவுதல்
கொக்கு - மாமரம்
கொங்கு - தேன், மகரந்தம்
கொச்சை - இழிவு
கொட்புற - சுழற்ற
கொடி - காக்கை
கொடுங்கை - நீண்டு வளைந்த வீட்டு முன்னிலை
கொடுவரி - புலி
கொடுவளி - கொடிய முறைக் காற்று
கொந்து-பூங்கொத்து, கொத்து, திரள்
கொம்பு - மரக்கிளை
கொம்மை - வட்டம், திரட்சி
கொல்லிச் சிலம்பி - கொல்லி மலையில் வாழும் ஒரு பெண் தெய்வம், கொல்லிப் பாவை
கொவ்வை - கோவைக்கொடி
கொழித்தல் - தெள்ளுதல்
கொள்ளி - நெருப்பு
கொன்னை - பெருமை
கோகிலம் - குயில்
கோசாரம் - கிரகங்களின் நிலை
கோட்டுக்கு - கொம்புக்கு
கோட்பாடு - நடத்தை, செய்கை
கோடரம் - சோலை, குரங்கு
கோடல் - காந்தள்
கோடாய் - செவிலித்தாய்
கோடித்தல் - துதித்தல்
கோண் - மாறுபாடு
கோணுகழி - குழப்பமுண்டு பண்ணும் பேச்சு
கோது - குற்றம்
கோதை - மாலை
கோமளம் - இளமை, அழகு
கோல் - அம்பு
கோலம் - வடிவு, அழகு
கோவித்து - கோபித்து, சினந்து
கோவித்தேன் - கோபித்தேன், வெறுத்தேன்
கோவினம் - பசுக்கூட்டம்
கோவை இதழ் - கோவைக்கனி போன்ற உதடு
கோள் - கிரகம்
கௌபீனம் - கோவணம்
சக்கரவாகம்-இணைபிரியாது வாழும் ஒரு பறவை
சகம் - உலகம்
சகமயல் - உலகப்பற்றால் நேரும் மயக்கம்
சகாயம் - துணை
சகோரம் - நிலாமுகிப்புள்
சங்கம் - கைவளை
சங்கமம் - சிவனடியார் திருக் கூட்டம்
சங்கமர் - சிவனடியார் திருக் கூட்டத்தார், வீர சைவர் வகை
சங்கரன் - சிவன்
சங்கரி - துர்க்கை
சங்கிரகம் - சுருக்கம்
சங்கை - ஐயம்
சசி - இந்திராணி
சஞ்சிதம் - அனுபவித்தது போக எஞ்சியுள்ள கருமம்
சட்டப்புழுகு - புனுகுப் பூனையின் சட்டத்திலிருந்து வெளிப்படும் வாசனைப் பண்டம்
சடக்கரம் - ஆறு அட்சர மந்திரம், குமரனின் திருநாமம்
சடானன் - ஆறுமுகப் பெருமான்
சடை - பின்னிய கூந்தல்
சண்டம் - வலிமை
சண்டன் - யமன்
சத்தம் - ஓசை இனிய பாடல், சத்த சாத்திர இலக்கண நூல்
சத்த முனிவர் - ஏழு முனிவர்கள் : அத்திரி, ஆங்கிரசன், கௌதமன்,

சமதக்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன். அன்றியும் அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலித்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்னும் எழுவர் என்றும் உரைப்பர்.

சத்தி - சக்தி, உமை

சத்தி சமயம் - சக்தியையே வழிபடும் சாக்த மதம்

சத்தியம் - உண்மை

சத்தினி - சத்திநிபாதம், பக்குவமுடைய ஆன்மாவிலே திருவருள் பதிகை

சதங்கை - கிங்கிணி

சதிர் - பெருமை, சாதுரியம்

சதுமுகன் - பிரமன்

சதுரன் - ஆற்றலுள்ளோன்

சந்ததம் - எப்பொழுதும்

சந்ததி - குழந்தை

சந்தானம், கற்பகம், பாரிசாதம், மந்தாரம், தேவதாரம் - தேவலோகத்துள்ள ஐந்து மரம் (ஐங்கர மாலை 47)

சந்து - சந்தன மரம்

சப்பரம் - விக்கிரகந்தாங்கி

சப்பாணி - கைகொட்டுகை

சம்பராரி - மன்மதன்

சம்பு - நாவல் மரம் சிவன்

சமயம் ஒரு மூவிரண்டு - அறுவகைச் சமயம், சைவம், வைணவம், கௌமாரம், காணபத்தியம், சாக்தம், சௌரம்

சமர் - போர்

சமரபுரி - திருப்போரூர்

சமித்து - பொறுத்து

சமுசயம் - சந்தேகம்

சயந்தன் - இந்திரன் மகன்

சயித்தியம் - ஒருவகை நோய்

சயிலம் - மலை

சயிலேசர் - மலைக் கடவுள், குன்றுதோறாடும் குமரன்

சரசம் - காமச் சேட்டை, இன்பப் பேச்சு

சரணம் - பாதம்

சரணம்புயம் - திருவடித் தாமரை

சரபம் சிங்கத்தைக் கொல்லவல்லதாகக் கூறப்படும் எண்காற்புள்

சரம் - நீர்

சர்மாரி - அம்பு மழை

சரவணம் - சரவணப் பொய்கை, நாணற்காடு

சராசரம் - இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கள்

சரித்தல் - சஞ்சரித்தல்

சருமம் - தோல், தசை

சரோருகம் - தாமரை

சலசப்பொகுட்டு - தாமரைக் கொட்டை

சலசம் - தாமரை

சலசமுகை - தாமரை அரும்பு

சலதி - கடல்

சலித்தல் - சோர்தல்

சழுங்குதல் - சோர்தல்

சற்பத்தர் - மெய்யன்பர்

சன்னைகள் - சமிக்கை காட்டிக் குறிப்பாகப் பேசும் பேச்சு

சனனம் - பிறப்பு

சா - சாவு, இறப்பு

சாகரம் - கடல்

சாடுதல் - தாக்குதல்

சாத்திரங்கள் - வேதாங்கமாகிய ஆறு சாத்திரங்கள் : சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம்

சாந்தர் - சாந்தமுடையோர், அமைதியுடையோர்

சாந்தாற்றி - சிற்றாலவட்டம்

சாம்பூனதம் - மாற்றுயர்ந்த பொன்

சாமீபம் - கடவுள் அருகில் இருக்கும் நிலை
சாயகம் - அம்பு, வாள்
சாயுச்சியம் - ஆன்மா கடவுளிடம் ஐக்கியமாகும் நிலை
சாயை - நிழல்
சாரதர் - பூத கணத்தார்
சாரு - சார்பு, புகலிடம், அழகு
சாரு வடிவு - அழகிய உருவம்
சாரூபம் - கடவுளைப் போன்ற வடிவு பெறுகை
சால - மிகுதியாய்
சாலை - உணவளிக்கும் அறச்சாலை யாகசாலை
சாலோகம் - கடவுள் உலகில் உறைகை
சாற்றரிது - சொல்லுதற்கு அரியது
சாற்றுதல் - புகழ்தல், விளம்பரப் படுத்துதல்
சிகண்டி - மயில்
சிங்காரம் - அலங்காரம்
சிட்டி - சிருட்டி, படைப்பு
சிணுக்கம் - மூக்கால் அழுதல், கொஞ்சலான அழுகை
சித்தசனூர் - மன்மதன்
சித்தம் - மனம், எண்ணம்
சித்தி எட்டு - எட்டு வகையான ஆற்றல் அணிமா மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம் ஈசத்துவம், வசித்துவம்
சித்திபுத்தி - விநாயகரின் தேவியர்
சித்திரகுத்தன் - உயிர்களின் நற் செயல் தீச்செயல்களை எழுதி யமனுக்குப் படித்துக் காட்டுவோன்
சித்திரம் - அழகு, ஓவியம்
சித்து - அறிவு
சிதடர் - அறிவிலிகள்
சிந்தாகுலம் - மனக்கவலை
சிந்து - சிந்துரம், யானை
சிந்தூரன் - யானைமுக அசுரன்
சிந்தை செய்யாது - நினையாது
சிமை - மலை உச்சி
சிலை - கல்
சிவகதி - முத்தி
சிவம் - நன்மை, முத்தி
சிவிகை - பல்லக்கு
சிற்சுகம் - ஞான இன்பம்
சிற்சொருபன் - முற்றுணர் வினனான கடவுள்
சிற்பரன் - கடவுள்
சிற்பன் - சிற்பி, கட்டடக் கலை வல்லோன், ஓவியன்
சிற்றுடை - சிறிய பெண்களின் உடை, இளம் பெண்களின் ஆடை
சிற்றின்பம் - காமவின்பம்
சிறுவிதி - தக்கன்
சிறை - இறகு
சிறையெடுத்தல் - பெண்ணைச் சிறைப்படுத்திக்கொண்டு போதல்; மனைவியாகவோ காமக்கிழத்தி யாகவோ வைத்துகொள்ள ஒரு பெண்ணைக் கடத்திச் செல்லுதல்
சின்னம் - எக்காளம்
சினகரம் - திருக்கோயில்
சினை - மரக்கிளை
சீதரன் - திருமகளை மார்பில் கொண்டவனான திருமால்
சீபூரணகிரி - வளங்கள் எல்லாம் வந்து சேர்ந்த தணிகைமலை
சீபூரணப்பேர் - தெய்வலோகச் செல்வம் நிறையப் பெற்றது, திருத்தணிகை
சீமான் - செல்வமுள்ளவன்
சீர் - திருப்புகழ்
சீராளன் - சிறப்புற்றவன்
சீலன் - நல்லொழுக்கம் உடையவன்
சீவன் - உயிர்
சீறடி - சிறிய பாதம்

சுகி - சுகமாக வாழ்தல், இன்ப வாழ்வு வாழ்தல்
சுடிகை - நெற்றிச் சுட்டி
சுடிகைச் சிரத்தோன் - அக்கினி
சுந்தரம் - அழகு
சுந்தரன் - அழகன், முருகன்
சுந்தரி - இந்திராணி
சுரநதி - கங்கை
சுரபி - காமதேனு
சுரர் - தேவர்
சுருதி - எழுதாமறை, வேதம்
சுலவுதல் - சுழலுதல், சுற்றித் திரிதல்
சுவல் - தோள், முதுகு
சுவற்றுதல் - முற்றும் அழித்தல், வற்றச் செய்தல்
சுழுமுனை - இடைபிங்கலை யிடை நாடி
சுறவு - சுறுமீன்
சுனை முழுகு வண்கவி - நக்கீரர்
சூட்டு - உச்சி, உச்சிக்கொண்டை, பாம்பின் தலை
சூதம் - மாமரம்
சூது - உபாயம்
சூர் - சூரன்
சூழ்வளி - சூறுவளி, சுழல் காற்று
சூழிகை - மேலிடம்
சூனியங்கள் - மாரண வித்தை
செகச்சோதி - பேரொளி
செங்கதிர் - சூரியன்
செங்கீரை - கைகளையும் முழங்கால் களையும் ஊன்றிக்கொண்டு ஐந்தாம் திங்களில் பிள்ளைகள் தலை நிமிர்ந்தாடும் பருவம்
செங்கோல் - அரச சின்னம்
செச்சை - வெள்ளாட்டுக் கடா, வெட்சிமாலை
செந்தமிழ்த்தொடை - தமிழ்ப் பாட்டு
செந்தமிழைத் தந்த முனி - அகத்தியன்
செந்தில் - திருச்செந்தூர்
செந்தூர் - திருச்செந்தூர்
செப்பு - சிமிழ், சொல்
செம்பஞ்சி - மகளிர் காலுக்குப் பூசும் ஒருவகைக் குழம்பு
செம்படன் - மீன் வலைஞன்
செம்புலம் - போர்க்களம்
செய்குன்று - செயற்கை மலை
செருத்தணி - திருத்தணிகை
செருத்தல் - மாட்டுமடி
செல் - மேகம், ஆகாயம்
செல் நாயகன் - மேகாதிபதி, இந்திரன்
செவ்வழி - நெய்தல் நிலப்பண்
செவிலி - வளர்ப்புத்தாய்
செறுநர் - பகைவர்
சென்மம் - பிறப்பு
சென்னி - தலை
சேக்கை - படுக்கை
சேட்டை - குறும்பு
சேடன் - ஆதிசேடன்
சேண் - தூரம், உயரம், வான்
சேணுடர் - வானவர்
சேதாம்பல் - செவ்வாம்பல்
சேதித்தல் - அழித்தல்
சேந்தன் - முருகன்
சேந்தா - முருகா, விளி
சேமம் - காவல், நல்வாழ்வு
சேய் - செவ்வாய், குழந்தை, சேய்மை
சேய் உருவம் - சிவந்த வடிவம்
சேயிலை வேல் - சிவந்த இலை வடிவான வேல்
சேயோன் - முருகன், சேய்மையில் உள்ளவன்
சேராதவன் - நெருங்காதவன்
சேல் - கயல்மீன்
சேவித்தல் - தொழுதல், பணி செய்தல்

சேவுலக்கை - சேமரத்தாலான உலக்கை
சையம் - பொதியமலை
சைவலம் - கொடிப்பாசி
சொல் - மலர்கள், மந்திர புஷ்பங்கள்
சொன்னம் - சொர்னம், பொன்
சோகம் - துக்கம்
சோணம் - சிவப்பு
சோபம் - துக்கம்
சோபனம் - வாழ்த்துரை
சோபானம் - படிக்கட்டு
சோராமல் - தளராமல், விழிப்புடன்
சோருதல் - வடிதல்
ஞமலி - மயில்
ஞாலம் - உலகம்
ஞாளி - நாய்
ஞானசத்திதரன்-திருத்தணிகையில் கோயில் கொண்டுள்ள பெருமான்
ஞான விநோதன் - பரஞானத்திலே பொழுதுபோக்குபவன்
தகர் - ஆடு
தகுவர் - அசுரர்
தகுவியர் – அசுர மகளிர்
தசாங்கம் - ஓர் அரசனுக்குரிய பத்து உறுப்புகள்: நாடு, மலை, ஆறு, தார், யானை, குதிரை, முரசு, தார், கொடி. ஆணை
தசும்பு - விமான கலசம்
தஞ்சம் – பற்றுக்கோடு, புகலிடம், அடைக்கலம்
தஞ்சு - தஞ்சம்
தடி - தசை
தடித்து - மின்னல், மின்னி
தடிந்து – கொன்று
தண்டதரன் - யமன்
தண்டம் - தண்டாயுதம், கதாயுதம்
தண்டை - காலணி
தணந்தார் - பிரிந்தார்
தணவாது - நீங்காது
தணிகைப் புராணம் - கச்சியப்ப முனிவர் பாடிய காப்பியம்
தந்திரியாழ் – நரம்புக்கட்டினை யுடைய யாழ்
தப்பாது - தவறாமல்
தப்பி - தடுமாறி
தம்பம் - தூண்
தம்பலம் - எச்சில், தாம்பூல எச்சில்
தமர் - சுற்றத்தார்
தமரகத்தாய் - உறவாயிருப்பாய்
தமனியம் - பொன்
தமனியமலை – பொன் மலையாகிய மேரு
தமியேன் – தனியேன்
தமிழ்க்கு இறை ஆயினோன் - அகத்தியன்
தமிழ் செய் நன் முனிவன் - அகத்தியன்
தமிழ் வரை - பொதியமலை
தயாநிதி - அருளுக்கு இருப்பிட மானவன்
தயித்தியர் – அசுரர்
தராதலம் – பூமி
தரு – மரம்
தரு ஐந்து – தேவலோகத்திலுள்ள ஐந்து மரங்கள்: அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம்
தருமத்தன் - அறவடிவினன், தருமநெறி நிற்பவன்
தலை உவா - அமாவாசை
தவ்வுற்ற – குவிந்த
தவர் - வில்
தவளம் - வெண்மை
தவாது - தவறாது, வழுவாது
தழல் - நெருப்பு
தளை - பிணிப்பு, கயிறு

தற்பரன் - பரம்பொருள்
தறி - நடுதறி, தூண்
தறை - தரை
தனதன் – குபேரன்
தனம் - முலை
தனயன் - மகன்
தனு கரண போகம் - உடல், இந்திரியம், மன இன்பங்கள்
தா - வலிமை, வருத்தம், குற்றம், குறை
தாசரதி - இராமன்
தாண்டல் - தாவிக்குதித்தல்
தாணு - சிவன்
தாதி - அடியவள், செவிலித்தாய்
தாது - தேன், பூந்தாது, மகரந்தம்
தாமதம் - தாமதித்தல், காலம் பிந்துகை
தாயம் - சுற்றம், தோழிப் பெண்கள்
தாரகை - விண்மீன்
தாரம் - மனைவி
தாரு - தரு, மரம்
தாரை - கூர்மை
தாழி - பானை
தாள் - பாதம், முயற்சி
தாளாண்மை - விடாமுயற்சி
தானம் - இடம், கொடை
தானவர் - அசுரர்
தான விழுப்புனல் - தானம் கொடுக்கும் பொழுது பயன்படும் பெருமை வாய்ந்த நீர்
தானை - காலாட்படை
திக்கு - திசை
திகிரி - சக்கராயுதம்
திங்கள் - சந்திரன், பிறை
திங்கள் அம் குழவி - பிறைச் சந்திரன்
திசைகள் எட்டு - பெருந்திசை நான்கு, கோணத்திசை நான்கு ஆக எட்டுத் திசைகள்
திட்டி - திருஷ்டி, பார்வை
திடவிய - உறுதியான
திதலை - தேமல்
திதி - காத்தல், நிலைபெறச் செய்தல்
திமிரமலம் - இருள்மலம், ஆணவம்
தியங்கல் - சோரல்
திரம் - உறுதி
திரிகூடம் - மூன்று சிகரமுடையது, திருத்தணிகை
திரு - நல்வினை, செல்வம்
திருக்கு - குற்றம்
திருப்புகழ் - தெய்வப் புகழ்ச்சியான பாடல், அருணகிரியார் திருப்புகழ்
திருப்பூச்சு - அழகிய பூச்சு, திருநீறு
திருமால் மருமகள் - கலைமகள்
திருவாசிகை - ஒருவகை மாலை
திலகம் - நெற்றிப்பொட்டு
திலதம் - திலகம்
திவசம் - நாள்
திவவு - யாழ்த்தண்டின் நரம்புக்கட்டு
திவளுதல் - விளங்குதல்
திவாகரன் - சூரியன்
தினகரன் - சூரியன்
தீங்கு - தீமை, துன்பம்
தீட்டினை - எழுதினாய்
துகள் - குற்றம்
துகிர் - பவளம்
துங்கம் - பெருமை
துட்டன் - தீயன்
துடக்குதல் - பிணித்தல்
துடர்தல் - தொடர்தல்
துடி - உடுக்கை
துண்டம் - பறவை மூக்கு
துணை - இரட்டை
துணிக்கை - இருகை
துணைவிழி - இரு கண்கள்
தும்பி - உயர்ந்த சாதி வண்டு, யானை

துயிலுதல் - நித்திரை செய்தல்
துரைத்தனம் - அரசு, அரசாட்சி
துய் – நுனி
துலே - தொலே, அழிவு
துலேயும் - தொலேயும், அழியும்
துவாதசம் - பன்னிரண்டு
துவிதவினே - இருவினே
துறக்கம் - சுவர்க்கம்
துன்பு - துன்பம்
துன்மை - தின்மை, தீமை
துன்னிடல் - பொருந்தியிருத்தல்
துனி - துன்பம்
தூ - வெண்மை, வலிமை, இறைச்சி
தூங்கல் - தொங்குதல்
தூதை - சிறுமரப்பாஜே
தூபம் - நறும்புகை
தூமம் - புகை
தூய் - பரிசுத்தம்
தூர்த்தன் - காமுகன்
தூரிகை - எழுதுகோல்
தூலம் - உத்திரம்
தூள் ஆக்கி - இல்லாமற் செய்து, போக்கி
தெங்கு - தென்னே
தெண்டன் - தண்டன், வணக்கம்
தெவ் - பகை
தெளிதல் - அறிதல்
தெற்றி - மாடம், தெற்றி யம்பலம், கோயில் முதலியவற்றில் அமைந்த சித்திரகூடம், திண்ணே
தென் - இசை
தென்கால் - தென்றல் காற்று
தென்மலே - பொதியமலே, அழகியமலே
தே - தெய்வம்
தேக்கெறிதல் - தெவிட்டுதல், ஏப்பமிடல்
தேகாபிமானம் - உடலிடத்து வைக்கும் பற்று
தேசிகர், தேசிகன் - குரு
தேசு - ஒளி, அழகு
தேர்தல் - தெளிதல்
தேற்றுவித்து - தேற்ரு மரத்தின் விதை
தேறு - தெளிவு
தையலர் - பெண்கள்
தையலார் - பெண்டிர்
தைவருதல் - தடவுதல்
தொடுத்தவர் - தொகுத்துப் போற்றியவர், பாடியவர்
தொடுத்தாலும் - பாடினுலும்
தொடை - பாட்டு, மாலே
தொந்தி - பெருவயிறு
தொய்யில் - மகளிர் மேலிடு சந்தனக்கோடு
தொழுவர் - தொழில் செய்வோர்
தொனி - ஒலி
தோகை - பெண், மயில்
தோம் - குற்றம்
தோலடிப்பறவை - தோலால் இணேக் கப்பட்ட பாதமுள்ள பறவை; அன்னம், வாத்து முதலியன
தோன்றல் - தலேவன்
நக்கன் - சிவபெருமான்
நகம் - மலே
நகை - பல், முத்து
நச்சு - விருப்பம்
நசிதல் - அழிதல்
நடம் - கூத்து
நண்ணுது - பொருந்தாது
நத்தன் - சங்கேந்திய திருமால்
நத்தான் - நத்தன்
நந்தவனம் - பூந்தோட்டம்
நந்தி - மிகுந்து
நந்தினே - விளங்கினே
நந்து - சங்கு, ஆக்கம்
நந்து இனம் - சங்குக் கூட்டம்

நந்துதல் - மிகுதல், கெடுதல்
நம்பி - விரும்பி
நமர் - நம்மவர்
நமன் - யமன்
நமோ - வணக்கம்
நயம் - நன்மை
நயனம் - கண்
நரர் - மனிதர்
நரலை - கடல், ஒலி
நல்குரவு - வறுமை
நலம் - நன்மை, இன்பம்
நலம் ஆர்கதி - நன்மை நிறைந்த சிவகதி
நலிதல் - வருந்துதல்
நவ்வி - பெண்மான்
நவகோள் - ஒன்பது கிரகங்கள் : ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது
நவரசம் : ஒன்பது சுவைகள்; நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, சாந்தம்
நவவீரர் : உமையின் சிலம்பிலிருந்து பிறந்த முருகக் கடவுளுக்குத் துணைவரான ஒன்பது வீரர் : வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரன், மகேச்சுரன், வீரபுரந்தரன், வீரமார்த்தாண்டன், வீரராட்சதன், வீராந்தகன், வீரதீரன்
நவிகாரி - நல்ல விகாரத்தை உண்டாக்குபவள்
நவிலுதல் - பழகுதல்
நள் இருள் - நடு இரா, மிகுந்த இருட்டு
நள்ளார் - பகைவர்
நள்ளி - விரும்பி
நள்ளுதல் - அடைதல், பெறுதல்
நளி - குளிர்ச்சி
நற்கீரர் - நக்கீரர்
நற்றாய் - பெற்றதாய்
நறவம் - தேன்
நறவு - மது, தேன்
நாகதலம் - நாகலோகம்
நாகம் - நல்ல பாம்பு
நாசி - மூக்கு
நாடி மூன்று - வாத நரம்பு, பித்த நரம்பு, சிலேட்டும நரம்பு
நாந்தகம் - வாள்
நாமம் - பேர்
நாமான் - நாமகள், சரசுவதி
நாரி - வில்நாண், பெண்
நாரியர் - பெண்கள்
நால் ஆம் சிரத்தான் - நான்முகன்
நாவி - கத்தூரி, மயிர்ச் சாந்து
நாவின் மகள் - கலைமகள்
நாள் - காலம்
நான்முகன் - பிரமன்
நானம் - கத்தூரி
நானிலம் - பூமி; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு பகுதியாய் அமைந்தது
நிகர் - ஒப்பு, சமானம்
நிசாசரர் - அசுரர், இராக்கதர்
நிணம் - மாமிசம், கொழுப்பு
நித்தம் - அழியாநிலை
நித்தர் - நிலையாக வாழும் முத்தர்
நித்தலும் - நாள்தோறும்
நித்தன் - அழியாதவன், சிவன்
நிதம்பம் - தோள், காதணி வகை, அல்குல்
நிதி - சங்கநிதி, பதுமநிதி
நிமலன் - மாசில்லாதவன், கடவுள்
நிர்மூடன் - முழுமூடன்
நிரப்பு - வறுமை
நிலாமுக்கி - நிலாமுகி சகோரப்புள்
நிலைகுலைதல் - நிலைமை தளர்தல்
நிழல் - ஒளி

நீசர் - இழிந்தவர்
நீசன் - இழிந்தோன்
நீபம் - கடப்ப மரம்
நீபன் - செங்கடம்பு மாலை அணிந்த முருகன்
நீலவரை - நீலமலர் மலரும் மலை, திருத்தணிகை
நீலோற்பலம் - கருங்குவளை
நீறும்படி - சாம்பலாகும்படி
நுதல் - நெற்றி
நுதல்விழி - நெற்றிக்கண்
நூபுரம் - சிலம்பு
நூறியிடாய் - அழிப்பாய்
நெடுமை - நீட்சி
நேமிப்புள் - சக்கரவாகப்புள்
நேமிவரை - சக்கரவாள மலை
நேயம் - அன்பு
நேயர் - அன்பர்
நைதல் - வருந்துதல்
நைந்து - வருந்தி
நையா - குறையாத, மனம் கசிந்து
நொடி - காலநுட்பம், ஒரு கணப் பொழுது: கண்ணிமைக்கும் நேரம் அல்லது கைநொடிக்கும் நேரம்
நொடிப்பளவு - கைநொடிக்கும் கால அளவு, கணப்பொழுது
நோ - நோய், வருத்தம்
பகம் - யானை, பெண்குறி
பகையாளி - பகைவன்
பங்கயத்தோன் - தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட பிரமன்
பங்கயன் - பிரமன்
பங்கயாதனன் - பிரமன்
பங்கன் - முடவன்
பங்கேருகன் - பிரமன்
பசாசு - பிசாசு, பேய்,
பசு - உயிர், ஆன்மா
பஞ்சடைதல் - பார்வை மங்குதல்
பஞ்சப்புலன் - ஐந்து பொறிகளுக்கான உணர்வு; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
பஞ்ச பாதகங்கள் - ஐந்து தீச் செயல்கள் : பொய், கொலை, களவு, கள், காமம்
பஞ்சபாதகம் - பஞ்சபாதங்கள்
பஞ்சானனம் - சிங்கம்
பஞ்சு - செம்பஞ்சுக் குழம்பு
பட்டாங்கு - உண்மை போலப் பேசும் கேலிப்பேச்சு
பட்டிக்கடா - அடங்காமல் திரிகின்ற எருமைக்கடா
பட்டிமண்டபம் - திருவோலக்க மண்டபம்
படி - உலகம்
படிற்று ஒழுக்கர் - வஞ்சனையானவர், கள்ளர்
படிறு - பொய்
படைப்பள்ளிகொள் அறை - பள்ளியறை, தூங்கும் படுக்கையறை
பண் - இசை
பண்டம் - பழம்
பண்ணவர் - தேவர்
பண்ணவன் - கடவுள்
பண்ணை - வயல், தோட்டம்
பணப்பாய் - பாம்பின் படமாகிய படுக்கை
பணம் - பாம்பின் படம்
பணி - நாகம்
பணிமணி - நாகரத்தினம்
பணிலம் - முத்து
பத்தி - பக்தி, அன்பு
பத்தித் திருப்புகழ் - அருணகிரிநாதர் பாடிய பக்திச் சுவைப் பனுவலாகிய திருப்புகழ்
பத்திரம் - இலை
பதம் - கால், பதவி, பேறு
பதலை - ஒரு கண்ணுடைய பெரிய பறை

பதி - ஊர், கடவுள்
பந்தம் கட்டு. பற்று, பந்தபாசங்கள்
பந்தி - வரிசை, ஒழுங்கு
பந்திப்பேன - கட்டுக்குள் ளாக்குவேன்
பம்புதல் - நிறைதல்
பயோதரம் - மேகம்
பரகதி - மேலான பேறு, முத்தி
பரகிரி - திருப்பரங்குன்று
பரம்பு அடித்தல் - உழுத கழனியைச் சமப்படுத்துதல்
பரமன் - சிவன்
பரமாதர் - அயலான பெண்கள், வேசையர்
பரன் - கடவுள்
பரி - குதிரை
பரிகாரம் - போக்கும் உபாயம்
பரிபாகம் - முதிர்ச்சி, பக்குவம்
பரிபுரம் - சிலம்பு
பரிமா - குதிரை
பரியாசகம் - கேலிப்பேச்சு
பரியும் - நீங்கும்
பருதி - சக்கராயுதம், சூரியன்
பரை – சிவசக்தி
பலம் - பழம்
பலாலக் குவை - வைக்கோல் போர்
பவம் - பாவம், பிறப்பு
பவனி - உலாவருகை
பழி - குறை
பழிச்சுதல் - வாழ்த்துதல்
பற்று - விருப்பு
பறம்பு - மலை
பறவாக்குளவி - காட்டுமல்லிகை
பறிகொடுத்தல் - களவுகொடுத்தல், அழியக்கொடுத்தல்
பன்னிரண்டு உயர்வேதனை - பசி, தாகம், அக்கினி, மந்தம், நீர், படர், சீதம், நஞ்சு, தீவிடம், அசி, வாதம், சனி
பன்னுதல் - புகழ்தல்
பனசம் - பலா
பனத்தி - பார்ப்பனத்தி, கலைமகள்
பனையின் ஏடு - பனை ஓலை
பா - கைமரம் பரவியிருக்கும் தன்மை
பாகசாதனன் - இந்திரன்
பாகீரதி - கங்கை
பாகு - வெல்லப்பாகு
பாங்கர் - பக்கம்
பாசம் - கயிறு, தளை, கட்டு
பாசறை - படை வீடு
பாஞ்சாலர் - தோற்றப் பொலிவுள்ளவர்
பாணி - கை
பாத்திரம் - தக்கவன்
பாதாதிகேசம் - அடிமுதல் முடிவரை
பாதாரவிந்தம் - திருவடித் தாமரை
பாந்தள் - பாம்பு
பாயாவேங்கை - வேங்கைமரம்
பார் - பூமி
பாலன் - பிள்ளை
பாலிப்பையோ - கொடுப்பையோ
பாவாது - நிலைத்து நில்லாது
பாற்றுக்கொடி - கருடக்கொடி
பாற்றுங்கோள் - நீக்குங்கள்
பாறு - பருந்து, கருடன்
பாறுதல் - நீங்குதல், வற்றுதல்
பான்மை - தன்மை
பானல் - கருங்குவளை
பிங்கலை - வலமூக்குவழிவரும் மூச்சு
பிச்சம் - பீலிக்குஞ்சம், குடைத் தொங்கல்
பிடி - பெண்யானை
பிண்டி - அசோகம்
பிணி - நோய்
பிணிமுகம் - மயில்
பித்தி - சுவர்
பித்து - பைத்தியம்

பிதா - தந்தை
பிதாமசி - தந்தையைப் பெற்ற பாட்டி
பிரகாரம் - பிராகாரம், கோயிலின் திருச்சுற்று
பிரசம் - தேன்
பில்லி சூனியம் - சூனிய வித்தை
பிலம் - குகை
பிழி - தேன்
பிள்ளைமதி - பிறைச்சந்திரன்
பின்தோன்றல் - தம்பி
பின்றுதல் - பின்னிடுதல்
பீதாம்பரம் - பொன்னுடை
புகலுதல் - சொல்லுதல்
புகழ்வெண்பா - திருத்தணிகை வெண்பா
புடவி - பூமி
புடை - பக்கம்
புண்டரம் - நெற்றிக் குறி
புணரி - கடல்
புணரி ஏழ் - ஏழு கடல், உவர் நீர்: நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன்
புணை - தெப்பம்
புயல் - மேகம்
புரணவித்தை - நிறைந்த கல்வி ஞானம்
புரந்தரன் - இந்திரன்
புரப்பாய் - காப்பாய்
புராணம் - பழைய வரலாறு
புராரி - சிவன்
புரை - குற்றம்
புல்லர் - இழிந்தோர்
புல்லி - தழுவி, சேர்ந்து
புல்வாய் - மான்
புலரிக்காலை - விடியற்காலம்
புலவர் - தேவர்
புலையேன் - இழிந்தவனாகிய நான்
புவி - உலகம், உலகத்தவர்
புழுகு - ஒருவகை வாசனைப் பொருள்
புழை- துளை, சிறுவாயில், ஒடுக்க வழி
புழைக்கை - துதிக்கை
புள் - பறவை
புள் அரசு - கருடன்
புள்ளிருக்கு வேளூர் - வைத்தீசுவரன் கோயில் என வழங்கும் திருத்தலம்
புள்ளின் தனிப்பெயர் கொள் வெற்பு- கிரவுஞ்சமலை
புனல் - நீர், கடல்
புனல் ஏழ்கள் - ஏழு கடல், புணரி ஏழ் பார்க்க
பூ - பூமி, தாமரைப்பூ
பூசல் - வருத்தம்
பூசனை - வழிபாடு
பூசுரர் - அந்தணர்
பூதம் - பூதகணம், பிசாசம்
பூதம் ஐந்து - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்
பூதரம் - மலை
பூதி - விபூதி, திருநீறு
பூமான் - கணவன், ஆண் மகன், ஆடவர் திலகன், அரசன், பெண்
பூவரசன் - பிரமன்
பூவாளி - மன்மதன்
பூவேரி - பூத்தேன்
பூவை - காயாமரம், நாகணவாய்ப்புள்
பூனதம் - பொன், பொன்னுபரணம்
பெண்டு - பெண், மனைவி
பெம்மான் - கடவுள், பெரியோன்
பெற்றி - உபாயம்
பேய்த்தேர் - கானல் நீர்
பேரின்பம் - நிறைவான ஆனந்தம்
பை - அரவின் படம்
பைந்தமிழ் - அழகிய தமிழ்
பைந்தொடி - பெண்

பொகுட்டு - தாமரைக் கொட்டை
பொடி - திருநீறு
பொந்து - துளை
பொய்தல் - விளையாட்டு
பொய்யாமொழிப் புலவோன் - பொய்யாமொழிப் புலவர், முருகனை முட்டை என வைத்துப் பாடியவர்
பொருப்பர் - மலைவாழ் வேடர்
பொருப்பு - மலை
பொல்லாங்கு - தீமை
பொழில் - சோலை, உலகம்
பொழில் ஏழு – ஏழு உலகம்
பொற்கூடம் - பொன்னம்பலம்
பொற்சிலை - பொன்மலை, மேருமலை
பொறி - விதி, ஊழ்
பொறி ஐந்து - மெய், வாய், கண், மூக்கு, செவி
பொன்மலை - பொன்னிறமாய்த் தோன்றும் மேருமலை
பொன்மாது - இலக்குமி
பொன்னவன் - வியாழன்
பொன்னுலகு - தேவலோகம்
போத்து - எருமைக்கடா
போதன் - பிரமன்
போதிகை - தூணின் மேற்பகுதி உறுப்பு
மக - குழந்தை
மகத்துவம் - மேன்மை, பெருமை
மகபதி - இந்திரன்
மகம் - யாகம்
மகரகுண்டலம் - காதணி வகை
மகரமீன் - சுறு
மகவான் - இந்திரன்
மகவு - குழந்தை
மகிமை - பெருமை
மகுடநிரை - மணிமுடிகள்
மங்கலம் - பொலிவு, கலியாணம்
மங்குல் - இருட்டு, மேகம்
மசானம் - சுடுகாடு
மஞ்சம் - கட்டில்
மஞ்சனம் - நீர், முழுக்கு, நீராட்டு,
மஞ்சான் - மேக நிறத்தவனான திருமால்
மஞ்சு - மேகம், யானை முதுகு
மஞ்சு இறை - மேகங்களுக்கு அரசனான இந்திரன்
மஞ்ஞை - மயில்
மட்டு - அளவு, தேன்
மடங்கல் - சிங்கம்
மடங்கல் தவிசு - சிங்காதனம்
மடநடை - மெல்லிய நடை
மடம் - அறியாமை
மடல்மா - பனைமடல் குதிரை
மடவார் - பெண்கள்
மடைக்கலம் - சமையல் பாத்திரம்
மடைப்பள்ளி - அடுக்களை
மண் - பூவுலகம்
மண்டிக்கொண்டு - கலந்து திரண்டு
மண்ணடிப்பார் - இல்லாமல் செய்துவிடுவார்
மணவாளன் - நாயகன்
மணி - சிந்தாமணி
மதங்கி - பாண்மகள்
மதன் - மதனன், மன்மதன்
மதன நூல் - காம சாத்திரம்
மதாணி - பதக்கம்
மதி - அறிவு, சந்திரன்
மதிக்குழவி - பிறைச்சந்திரன்
மது - தேன்
மந்தம் - உணவு செரிக்காமை
மந்தமாருதம் - தென்றற் காற்று
மந்தாகினி - கங்கை
மந்தி - பெண் குரங்கு
மயல் - மையல், ஆசை, காம இச்சை
மயல் மருந்து - மயக்கம் உண்டு பண்ணும் மருந்து வகை, வசிய மருந்து

மர்க்கடம் - குரங்கு
மரா - வெண்கடம்பு
மரித்தல் - சாதல்
மரு - மணம்
மருவுதல் - கலத்தல், தழுவுதல்
மருகன் - மருமகன்
மருத்துவர் - அசுவினி தேவர்
மருமம் - மார்பு
மருவலர் - பகைவர்
மருவார் - பகைவர்
மருவேர் - மணமுள்ள வேர், வெட்டிவேர், இலாமிச்சை
மருள் - மயக்கம்
மலபரிபாகம் - மலங்கள் தேய்தற்குரிய நிலை
மலயம் - பொதிய மலை
மலரோன் - பிரமன்
மலயசம் - தென்றல் காற்று
மழவிடை - இளமையான இடபம்
மறலி - யமன்
மறு - குற்றம்
மறுகு - தெரு
மறுகுதல் - சுழலுதல், வருந்துதல், மனம் கலங்குதல்
மறை - வேதம்
மன்பதை - மக்கட்பரப்பு
மன்றல் - திருமணம், வாசனை
மன்னுதல் - நிலைபெறுதல்
மன்னும் - சேரும், நிலைபெறும்
மனு - மந்திரம்
மனை - மனையாள்
மா - மாமரம், மிகுதி
மாகம் - விண்ணுலகு
மாகாதிபர் - சுவர்க்கலோகம் ஆளுபவர்
மாங்கிசம் - மாமிசம்
மாடகம் - யாழின் முறுக்காணி
மாடு - செல்வம்
மாத்திரை - கணப்போது
மாதங்கம் - யானை
மாதவர் - முனிவர்
மாதா - தாய்
மாதாமகீ - தாய்வழிப் பாட்டி
மாதிரம் - திக்கு
மாப்பி(ள்)ளை - கணவன்
மாமி - மாமி முறையினள்
மாமுகவன் - யானைமுகமுடைய அசுரன்
மாமுகன் - மாமுகவன்
மாயன் - திருமால்
மாயாத - அழியாத
மாயை - பொய்த்தோற்றம்
மாரகம் - துன்பம்
மாரன் - மன்மதன்
மால் - மயக்கம், ஆசை, பெருவிருப்பம்
மாலிகை - மாலை
மாழை - அழகு
மாற்றம் - மறுமொழி
மாறு - எதிர்
மானவர் - மனிதர்
மானிடர் - மனிதர்
மானுர் - மகளிர்
மிடி - வறுமை
மிடியன் - வறியவன்
மிண்டர் - வலியோர்
மிருதி - தரும நூல்
மின்னுர் - மகளிர்
மீசுரர் - மேலுலகத் தேவர்
மீனக் கொடியவன் - மன்மதன்
மீனச்சனி - மீன ராசியில் வரும் சனிக்கோள். இது மிகத் துன்பம் தருவதாகும்
மீனம் - மீன்
முகமன் - உபசாரம், துதி
முகில் - மேகம்
முகிழ் - அரும்பு

முகுந்தன் - திருமால்
முசுக்கலை - கருங்குரங்கு
முட்டை என வைத்து வெண்பாச் செய்தோன் - புகழேந்திப் புலவர்
முடுக்கர் - மலைக்குகை
முடுக்குதல் - நெருக்குதல்
முடுகல் - மிகுதல், விரைதல்
முண்டகத்தாள் - தாமரை மலர் போன்ற திருவடி
முண்டக வல்லி - தாமரைக் கொடி
முத்தர் - மலம் நீங்கினவர்
முத்தலைவேல் - சூலம்
முத்தி நெறி - மோட்ச வழி
முதை - பழங்கொல்லை
முந்திரி - ஒரு சிறு இலக்கம்
முந்துதல் - முற்பட்டுச் செல்லுதல்
முந்தை - முன், பழமை
முப்பத்து முக்கோடி தேவர் - பன்னிரு ஆதித்தர், பதினொரு உருத்திரர், அஷ்டவசுக்கள், அசுவினி தேவர் இருவர் ஆக முப்பத்து மூவர். முப்பத்து மூன்று கோடியாக இத் தேவர்கள் கணக்கிடப் படுவர்
முப்புடைய தெங்கம் பழம் - மூன்று புடைப்புக் கொண்ட தேங்காய் நெற்று
மும்மதம்-யானையிடமிருந்து வெளிப் படும் மூவகை மதநீர், கன்னமதம், கைம்மதம், பீசமதம்
மும்மலம் - ஆணவம், மாயை, கன்மம்
முராரி - திருமால்
முருக்குதல் - வருத்துதல்
முருக்கும் - வருத்தும்
முருகாற்றுப்படை - நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை
முருகு - முருகன்
முருடர் - மரியாதை தெரியாத மூர்க்கர், அநாகரிகர்
முருந்து - மயில் இறகு
முலைக்காம்பு - முலைமுகம்
முழவம் - முரசு
முழவு - முரசு
முழை - குகை
முற்றுது - முடிவுறுது, எஞ்சி நிற்கும்
முற்றில் - சிறுமுறம்
முறி - பத்திரம், ஆவண ஓலை, தளிர், தளிர் போன்ற திருவடி
முறுவல் - பல், புன்சிரிப்பு
முன்தோன்றல் - தமையன்
முன்னவன் - தமையன், விநாயகன்
முன்னும் - முதலான
முன்றில் - வீட்டு முன் இடம், வாசல்
முன்னோன் - முன் பிறந்தவன், தமையன்
முனம் - முன்னம்
முனிவு - சினம், வெறுப்பு
மூசலம் - கேடு அடையோம்
மூடிக ஊர்தி - பெருச்சாளி வாகனம்
மூடிகம் - பெருச்சாளி, அறியாமை
மூர்த்தி - தலைவன், கடவுள்
மூலாத்திரி - திருத்தணிகையின் வேறு பெயர்களுள் ஒன்று
மூறு - முறுக்கு
மூஷிக வாகனன் - பெருச்சாளியை ஊர்தியாக உடையவன், விநாயகன்
மெத்துதல் - மிகுதல்
மெய்ம்மை - உண்மை
மெல்லினம் - மெல்லிதாய் உச்சரிக்கும் எழுத்தின் கூட்டம்
மேக நிறத்தவன் - திருமால்
மேகலை - அரைஞாண், இடையணி வகை
மேடம் - ஆடு
மேதிக்கடா - எருமைக்கடா

மேதினி - உலகம், பூமி
மேவார் - பகைவர்
மேனை - மலையரையன் தேவி
மை - கருமை
மைத்துனன் - மைத்துன முறை யானவன், முருகன் மைத்துனன் மன்மதன்
மைவேள் - கருவேள், கருநிறம் பொருந்திய மன்மதன்
மொக்குள் - நீர்க்குமிழி, கொப்புளம்
மொட்டு - பூ அரும்பு, தாமரை மொட்டு
மொய்த்தல் - நெருங்குதல்
மோகம் - காமமயக்கம், ஆசை
மோட்டு எருமை - உயர்ந்த முதுகுடைய எருமை
மோத்தல் - மூக்கால் நுகர்தல்
மோந்து - மூக்கால் நுகர்ந்து
யாசகர் - இரப்போர்
யாணர் - வளப்பம், அழகு
யாழ்முனி - நாரதன்
ராக்ஷதர் - அரக்கர்
லோபி - பிசுனன், பிறர்க்கு ஒன்றும் கொடாதவன்
வச்சிரதரன் - இந்திரன்
வச்சிரபாணி - வச்சிராயுதத்தைக் கையில் தாங்கியவன், இந்திரன்
வசை - பழிப்பு, குற்றம்
வட்டு - சூதாடு கருவி
வட்டுடை - அரைக்கவசம், முழந் தாள் அளவாக உடுக்கும் ஒரு வகை உடை
வடபத்திரம் - ஆலிலை, ஆலிலை போன்ற வயிறு
வடம் - கயிறு, தேர்வடம்
வடவரை - மகாமேரு
வடவை - வடவாமுகாக்கினி
வடி - மாவடு
வண்டர் - கீழோர், தீயோர், குள்ளர்
வண்டு - பறவை வகை, கைவளை
வண்மை - கொடை
வதனம் - முகம்
வதனமதி - முகமாகிய சந்திரன்
வந்தித்தல் - வணங்குதல்
வந்திப்போர் - வணங்குவோர், புகழ்வோர்
வம்பு - முலைக்கச்சு, வாசனை, வீண் பேச்சு
வய - வலிமை
வயம் - வேட்கை, வெற்றி
வயமா - புலி
வயவரி - சிங்கம்
வயா - ஈனும் நோய், பிரசவ வேதனை
வயிராகம் - வைராக்கியம், விடாப்பிடி
வரதம் - அருளல்
வரதன் - வரமளிப்பவன், காப்பவன்
வரநதி - கங்கை
வரம் - தெய்வம் முதலியவரிட மிருந்து பெறும்பேறு
வரால் - கெண்டைமீன்
வருடை - மலை ஆடு
வரேணி - வீடுபேற்றிற்கு ஏதுவான நல்ஞானம்
வல் - சூதாடுகருவி, சூதாடு கருவி போன்ற முலை
வல்லபம் - திறமை
வல்லபை - விநாயகரின் தேவி
வல்லி - கொடி
வல்லினம் - வலிதாய் உச்சரிக்கும் எழுத்தின் கூட்டம்
வல்லை - விரைவு
வலாரி - இந்திரன்
வலையம் - காது வளையம்
வழுத்திய - துதித்த

வழுத்திவிடும் - துதிக்கும்
வழுத்துதல் - துதித்தல்
வழுவை - யானை
வழை - சுரபுன்னை
வள்ளல் - வரையாது கொடுப்போன்
வள்ளியான் - கொடையான்
வள்ளை - ஒருவகைக் கொடி
வளமை - செழிப்பு, வருவாய்
வளர்த்திடல் - கிடத்தல், குழந்தையைத் தூங்கவிடுதல்
வளி - காற்று
வற்கடம் - பஞ்சம்
வறிஞோர் - தரித்திரர்
வறிது - வீண்
வன்னம் - அழகு
வனசம் - தாமரை
வனசரர் - வேடர்
வாகு - அழகு, ஒழுங்கு, தோள்
வாகுவலையம் - தோள்வளை
வாசவன் - இந்திரன்
வாசுகி - அட்ட நாகத்துள் ஒன்று
வாட்டுதல் - வருத்துதல்
வாணி - சரசுவதி
வாதனை - துன்பம்
வாதை - துன்பம், வருத்தம்
வாரணம் - யானை
வாரம் - அன்பு, இசைப் பாட்டு
வாரி - கடல்
வாரிதி - கடல்
வாலிபம் - இளமைப் பருவம்
வான் - ஆகாயம், முத்தி வாழ்வு
வானதி - ஆகாய கங்கை
வானவர் - விண்ணில் வாழ்வோர்
வானரம் - குரங்கு
விக்கிரமன் - வீரன்
விகாதம் - இடையூறு, கேடு
விகிர்தன் - கடவுள்
விசாகன் - முருகக் கடவுள்
விசு ஆகத்தான் - விசுவரூபன், சராசரங்களை உடம்பாக உடையவன்
விசையம் - வெற்றி
விஞ்சவே - நிறைவாக
விஞ்சை - வித்தை, கலைமகள், வித்தியாதரர்
விஞ்சை மாதரார் - வித்தியாதரப் பெண்டிர்
விஞ்சையர் - வித்தியாதரர், இசையில்வல்ல ஓர் இனத்தார்
விடர் - காமுகர்
விடாய் - தண்ணீர்த் தாகம்
விடை - இடபம், எருது
விடையேறி - எருதின்மேல் ஏறிவரும் சிவபெருமான்
விண் - வானுலகாகிய தேவர் உலகம்
விண்டார் - பகைவர்
விண்டு - திருமால்
விண்டேன் - நீங்கினேன்
விண்ணப்பம் - வேண்டுகோள்
விண்ணவர் - வானோர்
விண்மகள் - தெய்வயானை
விணுடர் - தேவர்
வித்தகன் - திறம்படைத்தவன், அறிஞன், ஞானி
விதனம் - வேதனை
விதி - பிரமன்
விதுரன் - அறிஞன்
விந்தை - விந்தியமலை, விந்தை, விநோதம்
விமலம் - தெளிவு
விமலன் - அழுக்கில்லாதவன், சிவன்
விமலை - தூய்மையானவள், பார்வதி
வியர்த்தல் - அதிசயித்தல், பாராட்டுதல்
வியம் - விரிவு
விரகம் - காம இச்சை, காமம்
விருது - வெற்றிச் சின்னம்
விரும்பார் - பகைவர்

விரை - வாசனை
விரைப்பூ - மணமுள்ள மலர்
வில் - ஒளி
வில்லவர் - வில்லில் வல்ல வேடுவர்
விழி - கண்
விழி ஆயிரம் உடையான் - ஆயிரம் கண் படைத்தவன், இந்திரன்
விழி கூரினும் - கண் உறங்கினாலும்
விள் - விடுபடு, பேசு
விள்ளுதல் - பேசுதல்
விள்ளும் - மலரும்
விளம்பல் - சொல்லல்
விளம்பாய் – சொல்லாய்
வினை இரண்டு - நல்வினை, தீவினை
வீடு - முத்திப்பேறு
வீணாள் - பயனற்ற நாள்
வீரமகேசுரர் - வீரசைவ முனிவர்
வீரை - கடல்
வீரையிறை - வீரபத்திர தேவர்
வீழிக்கனி - விழுதிச் செடியின் பழம்
வீறி - மேம்பட்டு, மிகுந்து
வீறியது - மேம்பட்டது
வீறுதல் - கீறுதல், பிளவுபடல்
வெட்சி - செடி வகையுள் ஒன்று
வெண்கரி - வெள்ளையானை, ஐராவதம்
வெண்டேர் - கானல்
வெம்பு - வெப்பம்
வெய்யோன் - சூரியன்
வெரிந் - முதுகு
வெருண்டு - அச்சங்கொண்டு
வெள்ளம் - ஒரு பேரெண்
வெள்ளில் - விளாமரம்
வெள்ளில்கனி - விளாங்கனி
வெள்ளிவரை - கயிலைமலை
வெளி - ஆகாயம்
வெற்பு - மலை
வெறியாட்டு - முருகன் பூசை
வெறுவியர் - ஒன்றுமில்லாதவர் ஆற்றல் அற்றவர்
வேங்கடாசலம் - திருவேங்கட மலை
வேங்கை - புலி, மரம்
வேசை - விலைமகள், பொது மகள்
வேட்டல் - விரும்புதல்
வேடச்சி-வேடர்குலப் பெண், வள்ளி
வேண்டாதவர் - பகைவர்
வேணி - சடை
வேதன் - பிரமன்
வேதனை - துயரம்
வேதா - பிரமன்
வேதாந்தன் - வேதங்களின் முடிவாய் விளங்குபவன், முருகன்
வேய் - மூங்கில்
வேர் ஆட - வேர்வை அரும்ப
வேர்வு – வியர்வை
வேரல் - சிறுமூங்கில்
வேலை - கடல், பொழுது
வேழம் - யானை
வேள் - மன்மதன், கந்தன்
வேள்விமாமலை - முருகன் கோயில் கொண்டு விளங்கும் கன்னியா குமரி மாவட்டத்தில் உள்ள ஒரு மலை; குமார கோவில் என இப்பொழுது வழங்குவர்
வேளாண்மை - உபகாரம்
வேளை - காலம், சமயம்
வேளைக்காரன் - பணியாளன்
வேற்றார் - பகைவர்
வை - கூர்மை
வைகல் - நாள்
வைகறை – விடியல்
வையம் - பூமி
வையாளி - குதிரை செல் வழி

செங்கமல மலர் ஏய்க்கும் ஒரு திருக்கை
குறங்கு அமைத்து, செம் பொன் மேருத்
துங்க வரிச் சிலைக் கடவுள் அருள் ஞான
சத்தி ஒரு தொடிக் கை ஏந்தி,
பொங்கும் அருட் கருணை விழிக்கடை ஒழுக,
மலர்ந்த முகப் பொலிவினோடும்
அங்கண் அமர் **ஞானசத்தி தரனை** அகத்து
உற நினைப்போர் அவனே ஆவர். (45)

— தணிகைப் புராணம் - குமரேசப்

இச்சா ஞானக் கிரியை எனும்
இவை மூன்று இலையாய்க் கிளைத்து எழுந்திட்டு
அச்சான் ஆழி அறச் சுவற்றும்
அயில் வேல் ஒரு கை வலத்து அமைத்து,
நச்சாதவரைத் தெறும் ஒருகை
நளினம் குறங்கின் அமைத்து, இமையோர்
விச்சாதரர் சூழ் **ஞானசத்தி**
**தரனது உருவம்** விதிப்போரும். (64)

— தணிகைப் புராணம் - அகத்தியன் அருள்

வரதம் மணிக்குண்டிகை இரண்டும்
வாமத்து இருக்கைத் தலம் ஆக்கி,
புரவு புரியும் அபயமொடு
புரை தீர் அக்கவடம் வலப்பால்
இரவை இரிக்கும் வலத்து அமைத்திட்டு,
எல்லா உலகும் இனிது அளித்து,
**பிரம சாத்தன்** எனப் பொலிந்த
பெருமான் உருவம் பிறக்குநரும். (75)

— தணிகைப் புராணம் - அகத்தியன் அருள்

---

குறிப்பு : கந்தர் அலங்காரம் 76, 79, 105; கந்தர் அந்தாதி 9, 29, 56, 59, 91, 92; வேல் விருத்தம் 3; மயில் விருத்தம் 2 - 11: இவ் இருபது பாடல்களும் திருத்தணிகைப் பெருமானைப் போற்றுவனவாம்.

# திருத்தணி வட்டம் - ஒன்றியங்கள்-3

(அகர வரிசையில் கிராமப் பஞ்சாயத்துகளும் அதன் அஞ்சல் நிலையங்களும்)

விளக்கம் : (1) *இக்குறி, கிளை அஞ்சல் நிலையம் (B.O.) உள்ள ஊர் ; (2) துணை அஞ்சல் நிலையங் (S.O.) களுக்கு PIN CODE கொடுத்திருக்கிறது. (3) ஊர்ப் பெயரின் முடிவில் உள்ள எண், அந்த எண் பெற்ற ஒன்றியத்தில் இந்த எண் பெற்ற ஊரே, அதன் அஞ்சல் (தபால்) நிலையம் ஆகும். (4) ஊர்ப் பெயர் மட்டும் இருந்தால் அந்த ஊர், வேறு ஒன்றியத்தில் உள்ளது என்று கொள்க.

## I திருத்தணி-631 209 (நகர பஞ்சாயத்து)

1 அலமேலு மங்கா புரம் III/28 631 213
2 ஆகூர்*
3 கஞ்சி குருவராஜ கண்டிகை-19
4 கன்னிகா புரம் - திருத்தணி
5 கார்த்திகேய புரம் - திருத்தணி
6 கிருஷ்ண சமுத்திரம் - புச்சிரெட்டி பள்ளி
7 கோர மங்கலம்-2
8 சத்துருஞ்ஜெய புரம்-26
9 சிறுகுமி-25
10 சின்ன கடம்பூர்-கேசவராஜு பேட்டை
11 சூரிய நகரம்*
12 செங்களத்தூர்-அக்ரகாரம்*
13 செருக்கானூர்*
14 தரணி வராக புரம்*
15 தாடூர்*
16 திருவேங்கலநாத ராஜ புரம்-15
17 தும்மலசெருவு கண்டிகை-26
18 பட்டாபி ராம புரம்-கீழண்டூர்
19 பீரக் குப்பம்*
20 பெரிய கடம்பூர் - கேசவராஜு பேட்டை
21 மத்தூர்*
22 மாம்பாக்கம் - கேசவராஜு பேட்டை
23 முருக்கம் பட்டு - திருத்தணி
24 வீரக நல்லூர்-15
25 வீரகாவேரி ராஜ புரம்*
26 வேலஞ் சேரி*
27 வேலூர் கிருஷ்ணம நாயடு (V.K.N.) கண்டிகை*

## II திரு ஆலங்காடு*-631 210

1 அத்திப் பட்டு-11
2 அருங்குளம்-631 201
3 அரும் பாக்கம்-ஜம்பேடா
4 ஆர்க்காட்டுக் குப்பம்*
5 இலுப்பூர் - 4
6 ஒரத்தூர்-பெத்த களத்தூர்
7 கஞ்சிப் பாடி*
8 கல்லாம் பாக்கம்-பேரம் பாக்கம்
9 கனகராஜு குப்பம்-மட்டவலம்
10 காவேரிராஜ புரம்*
11 கூர்மவிலாச புரம்*
12 கூளூர்-7
13 கோபால கிருஷ்ணபுரம்- பெத்த நாகபூடி*
14 சிவேடா*
15 சின்னம்மா பேட்டை*
16 சின்ன மண்டலி - பெத்த நாகபூடி
17 தாளவேடு I/26

## திருத்தணி வட்டம் - ஒன்றியங்கள்-3

18 திருஆலங்காடு-631 210
19 தொழுதாவூர்-15
20 நல்லாத்தூர்*
21 நாப்பாளூர்*
22 நாயக்கன் பேட்டை-18
23 நார்த்வாடா-18
24 நெடும்பரம்*
25 நெமிலி*
26 பனப் பாக்கம்-24
27 மகங்காளி புரம்-37
28 மகமாம்பா புரம்-37
29 மங்களூர்*
30 மீசரகண்ட புரம்-31
31 மைலர்வாடா*
32 ராமகிருஷ்ண (R.K.) ராஜு பேட்டை-III/631 303
33 ராகவநாயடு குப்பம் - III/1-631 301
34 ராஜா நகரம்*
35 வீரநத்தூர்*
36 வெங்கட பெருமாள்ராஜ புரம் - நரசிம்ம பேட்டா
37 வீர மங்கலம்*
38 வெங்கனூர்-631 304
39 வெடியங் காடு*
40 வெலாத்தூர்-III/4

## III ராமகிருஷ்ண (R.K.) ராஜு பேட்டை-631 303

1 அம்மவாரி குப்பம்-631 301
2 அம்மனேரி - ராமகிருஷ்ண (R.K.) ராஜு பேட்டை
3 அய்யனேரி-II/35
4 ஆதிவராக புரம்*
5 இறும்பி-அஸ்வரேவந்த புரம்
6 கவுணிபுரம் - சின்ன சுப்பராஜு கண்டிகை-II/38
7 கடா நகரம்-மட்டவலம்
8 காந்தா புரம் - ராமகிருஷ்ணு (R.K.) ராஜு பேட்டை
9 கோபால புரம்-32
10 சகஸ்ர பத்மா புரம்-சோளிங்க புரம்
11 சந்தான வேணுகோபால புரம் – S.P. கண்டிகை
12 சந்திரவிலாச புரம்-39
13 சானூர் மல்லா புரம் II/31
14 சின்ன நாகபூடி-25
15 தாமனேரி–II/37
16 திருநாத ராஜ புரம்-II/37
17 தேவலாம்பா புரம்-18
18 நரசம்மா பேட்டா*
19 நாராயண புரம் - ராமகிருஷ்ணு (R.K.) ராஜு பேட்டை
20 நீலோத் பால புரம்–II/31
21 பழையனூர்-II/18
22 பாகசாலே-பெத்த களத்தூர்
23 பாலா புரம்-39
24 பூனி மாங்காடு-631 212
25 பெத்த நாகபூடி*
26 பெத்த ராமா புரம்*
27 பைவலசா*
28 பொன் பாடி-631 213
29 மணவூர்*
30 மாமண்டூர்-II/2
31 முத்துகொண்டா புரம் - கனகம்மா சத்திரம்-631 204
32 ராமா புரம்*
33 லட்சுமி புரம்-II/18
34 வியாசா புரம்-II/18
35 வேணுகோபால புரம்-II/18
36 வீரராகவ புரம்*
37 ஹரிச்சந்திர புரம்-பெத்த களத்தூர்
38 ஜாகீர் மங்கலம்-II/18
39 ஸ்ரீ காளிகா புரம்*



இந்நூலை வெளியிடும் தி. கி. நா. தவத்திரு ஞானியார் அடிகளாரின் மணி விழா, அவர் பட்டம் ஏற்று 50 ஆண்டுகள் நிறைந்த நாள் விழா ஆகியவற்றின் செயலாளர். அடிகள் மறைந்த முதல் ஆண்டு - நிறைவு நாளில் அடிகளார் படத்தை மடத்தில் அமைத்தவர். திருப் பாதிரிப்புலியூர் - தோன்றுத் துணைநாதர் கோயில், வடலூர் - இராமலிங்க அடிக ளாரின் தெய்வ நிலையங்கள் ஆகியவற்றின் அறங்காவலராக இருந்தவர். இன்று சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் தலைவர். சமாஜ வெள்ளி விழா, இவர் திருமணத்தில் திரு. வி. க. தலைமையில் நடந்தது.

இவர் உதவியால் வெளிவந்த நூல்கள்: கா. சு. பிள்ளையின் தமிழ் இலக்கிய வரலாறு, பண்டித மணியின் திருவாசகத் திருச்சதகம் – கதிர்மணி விளக்கம், மு. வ.வின் திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், சமாஜத்தின் சங்க இலக்கியம், சீவக சிந்தாமணி, பண்டித வித்வான் - புருஷோத்தம நாயடுவின் ஸ்ரீ வசன பூஷண மணவாள மாமுனிகள் வியாக்கியான தமிழாக்கம் ந. சிவப்பிரகாச தேசிகரது ஸ்ரீ மிருத்யுஞ்சய ஆயுள் ஓம சாந்தி பத்ததி பாரதிதாசன் கவிதைகள் முதலிய நூல்களின் முதல் பதிப்பு.

சைவ சித்தாந்தக் கட்டளைகள், தத்துவ விளக்கம் (1959), திருநெறி விளக்கம் (1960), ஞான சாரம் (1961) முதலிய நூல்களைச் 'சித்தாந்தம்' இதழ்களில் முதன் முதலாக அச்சு ஏற்றியவர். மெய்மொழிச் சரிதையைத் 'தமிழாய்'வில் வெளியிடத் துணை நின்றவர்.

தன் 'ஆழ்வார்கள் தமிழில் அக்காரக்கனிகள்' நூலில் சிறந்த பாடல் களைத் திரட்டிச் சந்தி பிரித்துச் சொல்முறைப் பதிப்பாக எளியவர்களும் படிக்க வெளியிட்டவர். பண் மரபுகளைத் தொகுத்துத் 'தேவாரத் திருமுறை அமைப்பு' என்னும் நூலை வெளியிட்டவர். சமாஜத்தின் தொடக்க காலத்தில் அதன் அடக்க விலைப் பதிப்பு நூல்களை விற்கவும், பரப்பவும் பாடுபட்டவர்.

தி. கி. நா.'வின் கலைவேட்கை, நல்ஒழுக்கம், வெற்றுரை ஆடாமை செயல்நோக்கு, நிர்வாகத்திறம், ஒழுங்கில் உறுதி, தக்க சமயத்தில் வீரங் கூர்ந்து எழல் முதலிய நறுங் குணங்கள் நாட்டுக்கு நல்வழி காட்டும் என்று யான் நினைப்பது உண்டு; வாழ்த்துவது உண்டு.' —திரு. வி. க.

அவரது 75ஆம் பிறந்த நாள் நினைவாக இவ்வெளியீடு வெளிவருகிறது.